# பிரெடெரிக் எங்கெல்ஸ்

## குடும்பம், தனிச் சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம்



அயல் மொழிப் பதிப்பகம்

உலகத் தொழிலாளர்களே ஒன்றுசேருங்கள்!

# குடும்பம், தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம்




அயல் மொழிப் பதிப்பகம்

மாஸ்கோ

## பொருளடக்கம்

## முதற் பதிப்புக்கு 1884ல் எழுதிய முன்னுரை

ஓர் அர்த்தத்தில் பார்த்தால் பின்வரும் அத்தியாயங்கள் மார்க்ஸ் விட்டுச் சென்ற ஒரு பணியைச் செய்து முடிக்கும் வகையிலே அமைந்தவைதாம். வரலாறு பற்றிய தமது— எமது என்று, சில வரம்புகளுக்குட்பட்டு, நான் சொல்லக் கூடும்— சொந்த லோகாயதவாதப் பரிசீலனையின் மூலம் தாம் கண்ட முடிவுகளின் தொடர்பில் மார்கனின் ஆராய்ச்சி விளைவுகளை மக்கள் முன் வைப்பதென்றும், அதன் வழியாக அவற்றின் அர்த்த முக்கியத்துவம் முழுவதையும் தெளிவாக்குவதென்றும் மார்க்ஸ் தான் திட்டமிட்டிருந்தார். ஏனெனில், நாற்பது ஆண்டுகளுக்கு முன் மார்க்ஸ் கண்டுபிடித்திருந்த, வரலாறு பற்றிய அதே லோகாயதவாதக் கருத்தோட்டத்தைத்தான் மார்கன் தமது சொந்த வழியிலே அமெரிக்காவில் மீண்டும் கண்டுபிடித்தார்; அநாகரிகத்தையும் நாகரிகத்தையும் மார்கன் ஒப்பு நோக்குகையில், மார்க்ஸ் எந்த முடிவுகளுக்கு வந்திருந்தாரோ அதே முடிவுகளுக்கு வந்துசேரும்படி, பிரதான விஷயங்களில், அந்தக் கருத்தோட்டம் மார்கனையும் கொண்டுவந்துவிட்டது. மேலும் ஜெர்மனியில் அதிகாரவர்க்கச் சார்புள்ள பொருளாதார

வாதிகள் எப்படி ''மூலதனம்'' என்ற நூலிலிருந்து உற்சாகமிகுதியோடு இலக்கியக்களவு நடத்தியும் அந்த நூலைப்பற்றி விடாப்பிடியாக மௌனம் சாதித்து அமுக்கியும் வந்தார்களோ, அதே மாதிரி தான் இங்கிலாந்தில் ''வரலாற்றுக்கு முந்திய'' விஞ்ஞானத்தின் சார்பாகப் பேசியவர்கள் மார்கன் எழுதிய ''பண்டைக்கால சமுதாயம்''[1] என்ற நூல் விஷயத்தில் நடந்துகொண்டார்கள். காலஞ்சென்ற எனது நண்பர் ஆற்ற முடியாமல் போன பணிக்குப் பர்த்தியாக நான் ஆற்றும் பணி அற்பமாகத்தான் இருக்கமுடியும். இருந்தாலும் பரவாயில்லை. மார்கனுடைய நூலிலிருந்து விரிந்த அளவில் விஷயப் பகுதிகளை[2] எடுத்துவைத்துக்கொண்டு அவற்றின் மீது மார்க்ஸ் விமர்சனக்குறிப்புகள் வரைந்துள்ளார்; அவை என் முன்னேதான் உள்ளன; இந்நூலில் சாத்தியமான இடங்களிலெல்லாம் அவற்றை அப்படியே தருகிறேன்.

லோகாயதவாதக் கருத்தோட்டத்தின்படி கடைசிக்கும் கடைசியிலே வரலாற்றில் நிர்ணயமான காரணப்பொருளாக விளங்குவது, உடனடி வாழ்க்

---

[1] "Ancient Society or Researches in the Lines of Human Progress from Savagery through Barbarism to Civilization", by Lewis H. Morgan. London. Macmillan and Co., 1877. இந்தப் புத்தகம் அமெரிக்காவில் அச்சடிக்கப்பட்டது, லண்டனில் கிடைப்பது மிகவும் கஷ்டமாயிருக்கிறது. இதன் ஆசிரியர் சில ஆண்டுகளுக்கு முன்னர் தான் இறந்தார். (எங்கெல்ஸ் குறிப்பு.)

[2] கார்ல் மார்க்ஸ் எழுதிய மார்கனுடைய ''பண்டைக் கால சமுதாயம்'' என்ற நூலின் சுருக்கத்தை இது குறிக்கிறது. —**பதிப்பாசிரியர்கள்.**

கையின் உற்பத்தியும் மறு உற்பத்தியும்தான். ஆனால் இதுவே இருவகைப்பட்ட தன்மை கொண்டது. ஒரு பக்கத்தில், வாழ்க்கைக்கு வேண்டிய சாதனங்களை உற்பத்தி செய்வது—அதாவது, உணவு, உடை, வீடு ஆகியவற்றையும் அவற்றைப் பெறுவதற்குத் தேவையான கருவிகளையும் உற்பத்தி செய்வது; மற்றொரு பக்கத்தில், மனிதர்களையே உற்பத்தி செய்வது—அதாவது மனித இனத்தைப் பெருக்கிவருவது. ஒரு திட்டவட்டமான சரித்திர சகாப்தத்தைச் சேர்ந்த, ஒரு திட்டவட்டமான நாட்டைச் சேர்ந்த மக்கள் எந்தச் சமுதாய ஸ்தாபனங்களின் கீழ் வாழ்ந்து வருகிறார்களோ, அந்த ஸ்தாபனங்களை உற்பத்தியின் இவ்விரு வகைகளும் கட்டுப்படுத்துகின்றன. உழைப்பின் வளர்ச்சி எந்தக் கட்டத்திலிருக்கிறது என்ற விஷயம் ஒரு பக்கத்திலும், குடும்பத்தின் வளர்ச்சி எந்தக் கட்டத்திலிருக்கிறது என்ற விஷயம் மற்றொரு பக்கத்திலும் இருந்து இந்த ஸ்தாபனங்களைக் கட்டுப்படுத்துகின்றன. எந்த அளவுக்கு உழைப்பின் வளர்ச்சி குறைவாயிருக்கிறதோ, எந்த அளவுக்கு உழைப்பின் உற்பத்தியளவு குறுகியதாகவும் அதன் காரணமாகச் சமுதாயத்தின் செல்வமும் குறுகியதாகவும் இருக்கிறதோ, அந்த அளவுக்குப் பெரியதாக அந்தச் சமுதாய அமைப்பு முறையின் மீது இரத்த உறவுகள் ஆதிக்கம் பெற்றிருப்பதாகத் தோன்றும். இருந்த போதிலும், இரத்த உறவுகள் அடிப்படையில் அமைந்த இந்தச் சமுதாயக் கட்டுக் கோப்புக்குள்ளிருந்தே உழைப்பின் உற்பத்தித் திறன் மேலும் மேலும் வளர்கிறது; அத்துடன் கூடவே தனிச்சொத்தும் பண்டமாற்றமும் வளர்கின்றன,

செல்வத்தில் வேற்றுமைகளும், மற்றவர்களின் உழைப்புச் சக்தியைப் பயன்படுத்திக்கொள்வதற்குரிய வாய்ப்பும், அதன்மூலம் வர்க்க முரண்பாடுகளின் அடிப்படையும் வளர்கின்றன; இவையெல்லாம் புதிய சமுதாய அம்சங்களாகும்; தலைமுறைக்குப் பின் தலைமுறையாக இந்தப் புதிய சமுதாய அம்சங்கள் பழைய சமுதாயத்தின் கட்டுக்கோப்பைப் புதிய நிலைமைகளுக்கேற்பத் திருத்தியமைக்க முயல்கின்றன; கடைசியிலே, அவ்விரண்டிற்கும் இடையிலுள்ள பொருந்தா நிலை ஒரு பூர்ணமான புரட்சிக்குக் கொண்டுபோய்விடுகிறது. புதிதாக வளர்ந்த சமுதாய வர்க்கங்களின் மோதலிலே கண உறவுகளின் அடிப்படையில் அமைந்திருந்த பழைய சமுதாயம் வெடித்துச் சிதறி விடுகிறது, அந்தப் பழைய சமுதாயத்தின் இடத்தில் ஒரு புதிய சமுதாயம் தோன்றுகிறது; அதுவே ஓர் அரசாக அமைகிறது. இந்த அரசின் கீழ்த்தர அங்கங்களாக இப்பொழுது இருப்பவை கணக் குழுக்கள் அல்ல, வட்டார அடிப்படையில் அமைந்த குழுக்களே. இந்தப் புதிய சமுதாயத்தில் குடும்ப அமைப்பின்மீது சொத்துடைமை முறை முழுக்கமுழுக்க ஆதிக்கம் செலுத்துகிறது. மேலும் இந்தச் சமுதாயத்தில் வர்க்க முரண்பாடுகளும் வர்க்கப் போராட்டங்களும் இப்போது சுதந்திரமாக வளர்கின்றன. இந்த வர்க்க முரண்பாடுகளும் வர்க்கப் போராட்டங்களும்தான் இது வரைக்கும் **ஏடறிந்த** எல்லா வரலாற்றிற்கும் உள்ளடக்கமாக அமைந்துள்ளன.

ஏடறிந்த நமது வரலாற்றின் இந்த வரலாற்றுக்கு முந்திய அடிப்படையை அதன் முக்கியமான

குணும்சங்களிலே கண்டுபிடித்து மறுபடியும் நிர்மாணித்துக்கொடுத்ததுதான் மார்கனின் மகத்தான சிறப்பாகும்; மேலும் மிகத்தொன்மையான கிரேக்க, ரோமானிய, ஜெர்மானிய வரலாற்றில் இது வரை விடுவிக்கமுடியாதிருந்த அதிமுக்கியமான புதிர்களை விடுவிப்பதற்குரிய வழியை வட அமெரிக்க இந்தியர்களின் கண உறவுகளில் கண்டுபிடித்ததும் மார்கனின் மகத்தான சிறப்பாகும். ஆனபோதிலும், அவரது நூல் ஒரு நாளைய வேலையல்ல. சுமார் நாற்பது வருடங்களாக அவர் தமது விஷயாதாரங்களைப் புரிந்துகொள்ளப் போராடி, முடிவில் முழு வெற்றி பெற்ருர். அதனுல்தான் நம் காலத்தைச் சேர்ந்த சகாப்த சிருஷ்டிகரமான நூல்களில் அவரது நூலும் ஒன்ருகும்.

பின்வரும் விளக்கவுரையில் மார்கனிடமிருந்து நான் எடுத்துக் கையாண்டிருப்பது எது, நானுகச் சேர்த்துக்கொண்டது எது என்று மொத்தத்திலே வாசகர் சுலபமாக வேறுபடுத்திக் காணமுடியும். கிரீஸ், ரோம் பற்றிப் பேசுகிற வரலாற்றுப் பகுதிகளில் மார்கன் தந்துள்ள விஷயாதாரங்களோடு நான் நின்றுவிடவில்லை, என்னிடமிருந்தவற்றையும் சேர்த்திருக்கிறேன். கெல்டுகள், ஜெர்மானியர்கள் பற்றிப் பேசும் பகுதிகள் பெருமளவுக்கு எனது சொந்தச் சரக்கேயாகும்; இவை சம்பந்தமாக மார்கனிடம் இருந்தவை அநேகமாக ஏற்கனவே கையாளப்பட்டிருந்த விஷயமூலங்கள்தாம், ஜெர்மானிய நிலைமைகளைப் பொறுத்தவரை மார்கனிடமிருந்ததெல்லாம் டாஸிடஸ் எழுதிய நூலைத் தவிர திரு. பிரீமான் எழுதிய மோசமான மிதவாதப்

புரட்டுகள் மட்டுமே. பொருளாதார வகைப்பட்ட வாதங்கள் மார்கனுடைய காரியத்துக்குப் போதிய தாயிருந்தன, ஆனல் என் காரியத்துக்கு அவை கொஞ்சங்கூடப் போதவில்லை. அவற்றை நானே புதிதாக விளக்கி விவரித்து வைத்திருக்கிறேன். கடைசியாக ஒன்று: மார்கனைத் திட்டமாக மேற் கோள் காட்டாமல் அமைந்துள்ள முடிவுகளுக்கெல் லாம் நான் தான் பொறுப்பாளியாவேன்.

''குடும்பம், தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம்'' என்ற தமது நூலின் முதற் பதிப்புக்கு எங்கெல்ஸால் எழுதப்பட்டது. அது ஜூரிச்சில் 1884ல் வெளியிடப்பெற்றது

## நான்காம் பதிப்புக்கு 1891ல் எழுதிய முன்னுரை

இந்த நூலின் இதற்கு முந்திய பெரிய அளவுப் பதிப்புகளெல்லாம் சென்ற சுமார் ஆறு மாதங்களுக்கு முன்பே விலையாகிவிட்டன. ஒரு புதிய பதிப்பை நான் தயாரிக்கவேண்டுமென்று பதிப்பாளர் வெகு காலமாக விரும்பிவந்தார். அதைவிட அவசரமான அலுவல்கள் வந்து இது வரை அவ்வாறு செய்யவொட்டாமல் தடுத்துவிட்டன. முதல் பதிப்பு தோன்றி ஏழாண்டுகள் கழிந்துவிட்டன. இந்த ஏழாண்டுகளில் குடும்பத்தின் மூல வடிவங்களைப் பற்றிய நமது அறிவில் முக்கியமான முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. எனவே, நூல் விஷயத்தை மேலும் விவரித்து மேம்படுத்தும் காரியத்தில் மும்முரமாக ஈடுபடுவது அவசியமாயிற்று. குறிப்பாக இன்னொரு காரணமும் உண்டு. பதிப்பாளர் யோசனைப்பிரகாரம் இந்த நூல் வாசகத்தை இருக்கிற படியே அச்சிட்டுவிட்டால் பிறகு நான் மேற்கொண்டு மாறுதல்கள் செய்வது கொஞ்ச காலத்துக்கு முடியாமலே போய்விடும்.

ஆகவேதான் நான் நூலின் முழு வாசகத்தைக் கவனத்தோடு மீண்டும் படித்துத் திருத்தினேன், விஷயங்கள் பலவற்றைப் புதிதாகச் சேர்த்தேன். அவை இன்றைய விஞ்ஞான நிலையில் தகுந்த சிரத்தை

செலுத்தியுள்ளன என்றே நம்புகிறேன். மேலும், குடும்பத்தின் வரலாறு பாகோபெனிலிருந்து மார்கன் வரை பெற்ற வளர்ச்சியைக்குறித்து இந்த முன்னுரையினூடே ஒரு சுருக்கமான விமர்சனத்தைத் தருகிறேன். இதற்குப் பிரதான காரணம் ஒன்று உண்டு. ஏடறியா வரலாற்று விஞ்ஞானத்தைப் பற்றிய ஒரு கருத்துப் பிரிவினர் இங்கிலாந்தில் உள்ளனர். அவர்களிடம் கொஞ்சம் இனவெறி படிந்துள்ளது. இந்தக் கருத்துப் பிரிவினர் மார்கனின் முடிவுகளைத் திருடித் தமதாக்கிக் கொள்ளக் கொஞ்சமேனும் தயங்கவில்லை. இருந்தாலும், புராதனச் சமுதாய வரலாற்றைப் பற்றிய கருத்தோட்டங்களில் மார்கனின் கண்டுபிடிப்புகள் விளைவித்த புரட்சியை மௌனம் சாதிப்பதின் மூலம் கொன்று விடலாம் என்று இந்தக் கருத்துப் பிரிவினர் தம்மால் ஆனமட்டும் தொடர்ந்து முயன்று வருகின்றனர். மற்ற நாடுகளிலும் இந்த ஆங்கிலேய உதாரணம் மிக அடிக்கடி பின்பற்றப்படுகிறது.

எனது நூல் பல்வேறு மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. முதலில் இத்தாலிய மொழியில் ("L'origine della famiglia, della proprieta privata e dello stato, versione riveduta dall'autore, di Pasquale Martignetti", Benevento, 1885) வெளியிடப் பெற்றது. பிறகு ருமேனிய மொழியில் யாஸி நகரிலிருந்து வெளிவந்த "Contemporanul" என்ற சஞ்சிகையில் 1885 செப்டம்பரிலிருந்து 1886 மே வரை வெளியாயிற்று. ("Origina familei, proprietatei private si a statului, traducere de Joan Nadejde"). மேலும், டேனிஷ் மொழியில் வெளிவந்தது ("Familjens, Privatejendommens og Statens Oprin-

delse, Dansk af Forfatteren gennemgaaet Udgave, besorget af Gerson Trier", Köbenhavn, 1888). இன்றைய ஜெர்மன் பதிப்பை ஆதாரமாகக்கொண்டு அன்ரி ரவே மொழி பெயர்த்த பிரெஞ்சு மொழிபெயர்ப்பு அச்சிலுள்ளது.

* * *

1850-60ம் ஆண்டுகளின் காலப்பகுதி தொடங்கும்வரை குடும்பத்தைப் பற்றிய வரலாறு என்று ஒன்றுமே இருக்கவில்லை. இந்தத் துறையில் வரலாற்றியல் மோஸஸ் அருளிய ஐந்து நூல்களின் செல்வாக்கின்கீழ் பூர்ணமாக இருந்து வந்தது. வேறெந்த நூலையும் விட இவற்றில்தான் தந்தைவழிக் குடும்பத்தின் வடிவம் மிக விபரமாக வர்ணிக்கப்பட்டுள்ளது. அந்தத் தந்தைவழிக் குடும்ப வடிவம்தான் குடும்பத்தின் மிகத் தொன்மையான வடிவமென்று முழு நம்பிக்கையோடு ஏற்றுக்கொள்ளப்பட்டது. அது மட்டுமல்லாமல், பலதார மணம் ஒன்று மட்டும் நீங்கலாக, மற்றப்படி குடும்பம் என்பது சரித்திரப் போக்கில் கொஞ்சமேனும் வளர்ச்சி பெறவேயில்லை என்ற ரீதியிலே அந்தத் தந்தைவழிக் குடும்பமும் தற்காலத்திய பூர்ஷ்வா குடும்பமும் ஒன்றென்றே குறிக்கப்பட்டது. அதிகமாகப் போனால், ஆதிமனித சகாப்த காலத்தில் வரைமுறையற்ற பால் உறவுகள் நிலவிய காலப்பகுதி இருந்திருக்கலாம் என்று மட்டும் ஒப்புக் கொள்ளப்பட்டது. நிச்சயமாகச் சொல்லப் போனால் ஒருதார மணம் மட்டுமன்றி, கீழ்த்திசை நாடுகளைச் சேர்ந்த பலதார மணமும் இந்திய-திபெத் வகைப்பட்ட பலபுருஷ மணமும் நமக்குத் தெரிந்ததுதான்; ஆனால் இம்மூன்று வடிவங்

களையும் எந்த விதமான சரித்திர கால வரிசையிலேயும் வைக்கமுடியாமலிருந்தது; ஒன்றுக்கொன்று தொடர்பில்லாமல் ஒன்றின் பக்கத்தில் இன்னென்று இருக்கிற மாதிரி அவை காட்சியளித்தன. பண்டைக் காலத்தைச் சேர்ந்த சில மக்கள் சமூகங்கள் [peoples], மத்தியிலும், தற்காலத்திலும் இருந்து வருகிற சில காட்டுமிராண்டிகள் மத்தியிலும், வம்சாவளியைத் தந்தை வழியாகக் கொள்ளாமல் தாய் வழியாகக் கொண்டு அதனுல் தாய்வழி கணக்கிட்ட வம்சாவளிதான் செல்லத் தக்கது என்று கருதப் பட்டது என்ற விஷயமும் சரி; தற்காலத்தைச் சேர்ந்த பல மக்கள் சமூகங்களிடையே சில திட்ட வட்டமான பெருங்குழுக்களுக்குள் கல்யாணம் பண்ணுவது (அந்தக் காலத்தில் அக்குழுக்கள் நெருங்கிப் பரிசீலிக்கப்பட வில்லை) தடை செய்யப்பட்டிருக்கிறது என்ற விஷயமும் சரி; இந்த வழக்கத்தை உலகின் எல்லாப் பகுதிகளிலும் காணலாம் என்ற விஷயமும் சரி; இவையெல்லாம் தெரிந்திருக்கத் தான் செய்தன, மேலும் புதிய உதாரணங்கள் வேறு இடையருது வெளிப்படுத்தப்பட்டு வந்தன. ஆனுல் அவற்றை வைத்துக்கொண்டு என்ன செய்வது என்று யாருக்குமே தெரியவில்லை. எ.ப. டெய்லர் எழுதிய ''மனித குலத்தின் ஆரம்ப வரலாற்றைப் பற்றிய ஆராய்ச்சிகள்'', (1865) என்ற நூலிலும்[1] கூட அவை ''விசித்திரமான பழக்க வழக்கங்களாகவே'' காணப்படுகின்றன. எரியும்

[1] Tylor E.B., "Researches into the Early History of Mankind and the Development of Civilization", London, 1865. — **பதிப்பாசிரியர்கள்.**

விறகை இரும்புக் கருவிகளால் தொடக் கூடாது என்று சில காட்டுமிராண்டிகளிடையே அமுலி லிருந்துவரும் தடை, இன்னும் அது போன்ற மதச் சம்பந்தமான அபத்தங்களின் வரிசையில் அவையும் வைக்கப்பட்டு ''விசித்திரமான பழக்க வழக்கங் களாக''த் தோற்றமளிக்கின்றன.

1861ம் ஆண்டிலிருந்து, பாகோபென் எழுதிய ''தாய் உரிமை'' என்ற நூல் வெளிவந்ததிலிருந்து தான், குடும்ப வரலாறு பற்றிய ஆராய்ச்சி ஆரம்பிக் கிறது. இந்த நூலில் அதன் ஆசிரியர் பின்வரும் கருத்துக்களை முன்வைக்கிறார்: 1) ஆரம்பத்தில் மனித குலம் வரைமுறையற்ற பால் உறவுகளில் ஈடுபட்டிருந்த நிலையில்தான் இருந்தது. இந்நிலைக்கு ''பொது மகளிர் முறை'' [hetaerism] என்று ஆசிரியர் பெயரிட்டழைக்கிறார். இந்தப் பெயர் நன்றாயில்லைதான்; 2) இந்த வரைமுறையற்ற பால் உறவு யார் தந்தை என்று நிச்சயிப்பதற்கிடமே யில்லாதபடி செய்துவிடுகிறது; ஆகவே, வம்சாவளி யைத் தாய் வழியாகத்தான்—தாய் உரிமைப் பிரகாரம் தான்—கணக்கிட முடியும்; மேலும், இப் படித்தான் ஆரம்பத்தில் பண்டைக்கால மக்கள் எல் லோரிடமும் இருந்தது; 3) எனவே, தாய்மார்கள் என்ற வகையில் இளஞ்சந்ததியாரின் பெற்றோர் கள் என்று பெண்கள் மட்டுமே திட்டமாக நிச் சயிக்கப்படமுடிந்த காரண விசேஷத்தால், மிக உயர் வான பரிவுடனும் மதிப்புடனும் பெண்கள் நடத் தப்பட்டார்கள்; பாகோபென் கருத்தோட்டத்தின் படி, பெண்களின் பரிபூர்ண ஆட்சி ஏற்படும் அள வுக்கு இந்த மதிப்பு உயர்வாயிருந்தது[gynecocracy];

4) ஒரு பெண் ஓர் ஆணுக்கு மட்டுமே உரியவள் என்கிற ஒருதார மணத்துக்கு மாறிச் சென்ற நிலை ஓர் ஆதிகாலத்திய மதக் கட்டளையை மீறியதையே குறித்தது (அதாவது, அதே பெண்ணிடம் மற்ற ஆண்களுக்கும் உரிமையுண்டு என்கிற பண்டைக்காலத்திய பரம்பரை உரிமையை மீறியதைத்தான் இது குறித்தது); இந்த மதக் கட்டளையை மீறியதற்குப் பிராயச்சித்தம் செய்தாகவேண்டும், அல்லது அதைப் பொறுத்து அனுமதிக்கத் தட்சிணை செலுத்தவேண்டும். அதற்கு வழி அந்தப் பெண்ணை ஒரு வரையறைக்குட்பட்ட காலத்துக்கு மற்ற ஆண்கள் அனுபவிக்க விடவேண்டும்.

இந்தக் கருத்துக்களுக்கு ஆதரவான சாட்சியங்களைப் பண்டைக்கால சாஸ்திரிய இலக்கியத்தின் பல பகுதிகளில் பாகோபென் காண்கிருர். அசாதாரணமான கடும் உழைப்புடன் அவர் அவற்றைச் சேகரித்தார். ''பொது மகளிர் முறை'' யிலிருந்து ஒருதார மணத்திற்கு மாறிச் செல்லும் பரிணும வளர்ச்சி, தாய் உரிமையிலிருந்து தந்தை உரிமைக்கு மாறிச் செல்லும் பரிணும வளர்ச்சி, எப்படி நடக்கிறதென்ருல் — குறிப்பாக கிரேக்க மக்களிடையே எப்படி நடக்கிறதென்ருல்—மத சம்பந்தப்பட்ட கருத்துக்களிடையே நிகழ்கிற பரிணும வளர்ச்சியின் ஒரு விளைவாகத்தான், புதிய கண்ணேட்டத்தைப் பிரதிநிதித்துவப்படுத்தும் புதிய தெய்வங்கள் பழைய கண்ணேட்டத்தைப் பிரதிநிதித்துவப்படுத்தும் பழைய பரம்பரைத் தெய்வங்களின் குழுவில் பலவந்தமாக நுழைவதின் ஒரு விளைவாகத்தான், நடக்கிறது என்பது அவர் அபிப்பிராயம்.

புதிய தெய்வங்களால் பழைய தெய்வங்கள் மேலும் மேலும் பின்னுக்குத் தள்ளப்படுகின்றன. ஆக, பாகோபென் கருத்தின்படி, ஆணும் பெண்ணும் வகிக்கிற பரஸ்பர சமுதாய அந்தஸ்தில் சரித்திர ரீதியான மாறுதல்களை உண்டாக்குவது மக்கள் வாழ்ந்துவருகிற யதார்த்த நிலைமைகளின் வளர்ச்சி அல்ல, அதற்குப் பதிலாக இந்த நிலைமைகள் மக்களின் மனத்திலே காட்டுகிற மத வகைப்பட்ட பிரதிபிம்பம்தான் அந்த மாறுதல்களை உண்டாக்கு கிறது. அதற்குப் பொருத்தமாக எஷ்கிலஸ் எழுதிய ''ஒரெஸ்தேயா'' என்ற நாடகத்தை பாகோபென் சுட்டிக் காட்டுகிறார்; கிரேக்க மாவீரர் சகாப்தத்தில் நலிந்துவருகிற தாய் உரிமைக்கும் வளர்ந்து வெற்றி பெற்றுவருகிற தந்தை உரிமைக்கும் இடையே நடக்கிற போராட்டத்தை நாடகப் பண்புடன் வர்ணிப்பதுதான் அந்த நாடகம் என்கிறார். தனது காதலன் எகிஸ்தஸ் பொருட்டு, அப்பொழுதுதான் ட்ரோஜன் யுத்தத்திலிருந்து திரும்பி வந்திருந்த அகமெம்னன் என்ற தன் கணவனை கிளிதெம்னெஸ்த்ரா கொன்றுவிட்டாள். ஆனால் அகமெம்னன் மூலம் அவள் பெற்ற மகனாகிய ஒரெஸ்தஸ் தந்தையின் கொலைக்குத் தனது தாயைக் கொன்று வஞ்சம் தீர்த்துக் கொள்கிறான். இதற்காக எரீனியேக்கள்[1] இவனைத் துரத்திச்செல்கின்றன. அவை தாய் உரிமையைப் பாதுகாத்துவரும் பைசாச கணங்களாகும். தாய் உரிமைப்படி தாய்க்

---

[1] **எரீனியேக்கள்:** (கிரேக்கப் புராணம்) பழிதீர்க்கும் ஆவிகள்; பாம்புகளைக் கேசமாக உடையவையாக இவை வர்ணிக்கப்பட்டுள்ளன.—**பதிப்பாசிரியர்கள்.**

கொலை என்பதுதான் எல்லாக் குற்றங்களையும் விட மிக மிக பாபகரமான, பிரயாச்சித்தத்திற்கிடமில்லாத குற்றமாகும். ஆனால் இந்தக் குற்றத்தைப் புரியும்படி தனது தெய்வ வாக்கால் ஒரெஸ்தஸைத் தூண்டிவிட்டது அபோல்லோ என்ற தெய்வம்தான். இந்த அபோல்லோவும், மத்தியஸ்தம் செய்து வைக்க அழைக்கப்பட்டிருந்த அதீனா என்ற தெய்வமும்— இந்த இரு தெய்வங்களும் தந்தை உரிமை அடிப்படையில் அமைந்த புதிய அமைப்புக்கு இங்கே பிரதிநிதிகளாயுள்ளனர் — ஒரெஸ்தஸைப் பாதுகாக்கின்றனர். இரு தரப்பினரையும் அதீனா விசாரிக்கிறாள். ஒரெஸ்தஸுக்கும் எரீனியேக்களுக்கும் இடையே இப்போது வாதப் போர் நடக்கிறது; அதில் சர்ச்சை முழுவதும் சுருக்கித் தரப்படுகிறது. ''கிளிதெம்னெஸ்த்ரா தனது கணவனைக் கொன்றது ஒரு குற்றம், எனது தகப்பனரைக் கொன்றது மற்றொரு குற்றம்'' என்று கிளிதெம்னெஸ்த்ரா இரு குற்றங்களைப் புரிந்தவள் என்று ஒரெஸ்தஸ் பிரகடனம் செய்கிறான். கிளிதெம்னெஸ்த்ரா தன்னைவிடப் பெரிய குற்றவாளியாயிருக்க, அவளை விட்டுவிட்டுத் தன்னை ஏன் இந்த எரீனியேக்கள் துன்புறுத்தவேண்டும் என்று கேட்கிறான். இதற்குப் பளிச்சென்று பின்வரும் பதில் கிடைக்கிறது:

''அவள் யாரைக் கொன்றாளோ, அந்த ஆணுடன் அவளுக்கு இரத்த உறவு எதுவுமில்லை.''

கொலைகாரியின் கணவனாக ஒருவன் இருந்த போதிலும் கூட இரத்த உறவு இல்லாத அந்த ஆணைக் கொல்வது பிராயச்சித்தத்திற்குரியதே;

அதற்கும் எரீனியேக்களுக்கும் சம்பந்தம் எதுவும் கிடையாது. இரத்தக் கலப்புள்ள உறவினர்களிடையே நடக்கும் கொலைகளுக்குப் பழிவாங்குவது தான் எரீனியேக்களின் வேலை; இப்படிப்பட்ட கொலைகளில் தாய் உரிமைப்படி மிக மிக பாபகரமான கொலை தாய்க்கொலையே யாகும். இப்போது ஒரெஸ்தஸுக்கு ஆதரவாக அபோல்லோ குறுக்கிடுகிறான். இந்தப் பிரச்சினையின் மீது வாக்கு அளிக்குமாறு ஆதென்ஸ் ஜூரர்களாகிய ஏரியோபகைட்ஸ் என்பவர்களை அதீனா கேட்டுக்கொள்ளுகிறாள். விடுதலை செய்யவேண்டும் என்பதற்காக விழுந்த வாக்குகளும் தண்டிக்கவேண்டும் என்பதற்காக விழுந்த வாக்குகளும் சமமாக இருக்கின்றன. அப்போது அதீனா நீதிமன்றத்தின் தலைவி என்கிற தோரணையில் ஒரெஸ்தஸுக்கு ஆதரவாக வாக்கு அளித்து விடுதலை செய்துவிடுகிறாள். தாய் உரிமையைத் தந்தை உரிமை வென்றுவிடுகிறது. ''இளைய வம்சாவளி அந்தஸ்தைச் சேர்ந்த தெய்வங்கள்'' என்று எரீனியேக்களால் வர்ணிக்கப்படுகிற அபோல்லோவும் அதீனாவும் எரீனியேக்களை வென்றுவிடுகின்றனர். புதிய அமைப்புமுறைக்குச் சேவை செய்வதற்காக ஒரு புதிய பதவியை எரீனியேக்கள் ஏற்க ஒப்புக்கொள்ளும்படி செய்யப்படுகிறார்கள்.

''ஒரெஸ்தேயா'' நாடகத்தைப் பற்றிய இந்தப் புதிதான, ஆனால் முற்றிலும் சரியான வியாக்கியானம் இந்த நூலிலுள்ள சிறந்த, அழகான பகுதிகளிலேயே மிக மிகச் சிறந்த, மிக மிக அழகான பகுதியாகும். ஆனால் அதே சமயத்தில் தம் காலத்தில் எஷ்கிலஸ் எந்த அளவுக்கு நம்பிவந்தாரோ,

குறைந்தபட்சம் அதே அளவுக்கு பாகோபெனும் எரீலியேக்கள் மீதும், அபோல்லோ, அநீஞு மீதும் நம்பிக்கை கொண்டிருந்தார் என்பதை இது காட்டு கிறது. நிஜமாகச் சொன்னால், கிரேக்க நாட்டின் மாவீரர் சகாப்தத்தில் தாய் உரிமையைத் தூக்கி யெறிந்துவிட்டு அதன் ஸ்தானத்தில் தந்தை உரிமையை ஸ்தாபித்த அதிசயச்செயலை அந்தத் தெய்வங்கள்தான் செய்தன என்று பாகோபென் நம்புகிறார். உலக வரலாற்றை முன்னுக்கு நகர்த்திச் செல்லும் சாதனம் மதமே என்று கருதுகிற இப்படிப்பட்ட கருத்தோட்டம் கடைசியிலே அப்பட்டமான மாயாவாதத்தில்தான் போய் முடியும் என்பது தெளிவு. ஆகவே, பாகோபென் எழுதிய இந்தப் பெரிய அளவு நூலை முழுக்கப் படித்து முடிப்பது என்பது ஒரு சிரமமான வேலையாகும், அது எல்லாப் பொழுதிலும் லாபந்தரக்கூடிய வேலையும் அல்ல. ஆனால் இதெல்லாம் அவர் ஒரு முன்னோடி என்ற சிறப்பைக் குறைப்பதாயில்லை. காரணம், வரைமுறையற்ற புணர்ச்சி நிகழ்ந்து வந்த, யாருக்கும் தெரியாத, ஒரு புராதன நிலைமையைப்பற்றி வெறும் வார்த்தையளப்பு நடந்து வந்த காலத்தில் அந்த வார்த்தையளப்புக்குப் பதிலாக முதன் முதலில் நிரூபணம் தந்தவர் அவர் தான். கிரேக்கர்களிடையேயும் ஆசிய மக்களிடையேயும் ஒருதார மணத்திற்கு முன்பு நிஜமாகவே இருந்து வந்த ஒரு நிலைமை சம்பந்தமான அடையாளங்கள் பண்டைக்கால சாஸ்திரீய இலக்கியத்தில் மண்டிக்கிடக்கின்றன என்று அவர் நிரூபித்தார். ஒருதார மணத்திற்கு முந்திய அந்த நிலைமையில் ஓர் ஆண் ஒருத்திக்கு

மேற்பட்ட பெண்களைப் புணர்ந்தது மட்டுமல்ல, ஒரு பெண்ணும் ஒருவனுக்கு மேற்பட்ட ஆண்களைப் புணர்ந்தாள்; இது அன்று நிலைபெற்றிருந்த வழக்கத்தை மீறியதல்ல. இந்த வழக்கம் மறையும்போது தனது அடையாளங்களை அது விட்டுச்செல்லாமல் போய்விடவில்லை. அவை வரம்புக்குட்பட்ட ஒப்புக்கொடுப்பு என்ற வடிவம் பெற்றிருந்தன. இதன்படி, ஒரு வரம்புக்குட்பட்ட காலத்திற்கு ஆண்களுக்குத் தன்னை ஒப்புக்கொடுத்தபின்பே பெண்ணுக்கு ஒரேயொரு புருஷனை மணந்துகொள்ள உரிமை உண்டு என்று பெண்கள் நிர்ப்பந்திக்கப்பட்டார்கள். ஆகவே, வம்சாவளியை ஆதியில் தாய்க்குப்பின் தாய் என்ற ரீதியில் பெண்வழியே மட்டுந்தான் கணக்கிட முடிந்தது. இன்னார்தான் தந்தை என்பது நிச்சயப்பட்ட அல்லது குறைந்தபட்சம் ஒப்புக்கொள்ளப்பட்ட, ஒருதார மணம் வழக்கிற்கு வந்த பின்னருங்கூட, பெண்வழி வரையறுப்பு மட்டுமே செல்லத்தக்கது என்ற இந்த நிலை வெகுகாலம் இருந்துவந்தது. மேலும் தனது குழந்தைகளைப் பெற்றவள் என்று நிச்சயமாகக் குறிப்பிடப்படக்கூடியவள் தாய் ஒருத்தியே என்ற இந்த மூலநிலை அந்தத் தாய்க்கும், அதன் மூலம் பொதுவாக எல்லாப் பெண்களுக்கும், அதற்குப்பின் என்றுமே அவர்கள் அனுபவித்திராத அளவுக்கு, மற்றவர்களைவிட மிக உயர்வான சமுதாய அந்தஸ்தை உறுதிப்படுத்தி வைத்தது. இவற்றிற்கெல்லாம் பாகோபென் நிரூபணம் தந்தார். இந்தக் கருத்துக்களை பாகோபென் இவ்வளவு தெளிவாகச் சொல்லவில்லைதான்—அவரது மாயாவாதக் கண்ணோட்டம் அப்படிச் செய்யமுடி

யாதபடி அவரைத் தடுத்துவிட்டது. ஆனபோதி லும் அவை சரியே என்று அவர் நிரூபித்தார். 1861ம் ஆண்டில் இது ஒரு பூர்ணப் புரட்சியையே குறித்தது.

பாகோபெனின் பெரிய அளவுள்ள நூல் ஜெர் மன் மொழியில் எழுதப்பட்டது. அதாவது, தற் காலத்திய குடும்பத்தின் வரலாற்றுக்கு முந்திய நிலையைப்பற்றி மற்ற நாடுகளைவிட அதிகக்குறை வாக அந்தக் காலத்தில் அக்கறை காட்டிவந்த நாட் டின் மொழியிலே எழுதப்பட்டது. எனவே, யாரும் அறிந்துகொள்ளாத நிலையிலேயே அவர் இருந்துவிட் டார். இந்தத் துறையில் அவருக்கு அடுத்தபடி 1865ம் ஆண்டில் ஒருவர் தோன்றினார். அவர் பாகோபெனின் பெயரைக் கேள்விப்படடதேயில்லை.

அவருக்குப்பின் வந்தவர் ஜா. பெ. மாக்லென் னன் என்பவர்; முந்தியவருக்கு நேர்மாறான தன் மை படைத்தவர் இவர். ஆற்றல் மிக்க மாயாவா திக்குப் பதிலாக வந்திருப்பவர் வறட்டுத்தனமான வக்கீல்; கொடிகொடியாய்ப் படரும் கவிதாகற் பனைக்குப்பதிலாக நமக்கு இப்பொழுது வழக்காடும் வக்கீலின் மெய்போல் தொனிக்கும் வாதங்கள் தாம் கிடைக்கின்றன. காட்டுமிராண்டி மக்களிடையே யும், அநாகரிக மக்களிடையேயும், பண்டைக்காலத் தில் இருந்த நவீனகாலத்திலும் இருந்து வருகிற நாகரிகமடைந்துள்ள மக்களிடையேயும் கூட, திரு மணத்தின் ஒரு வடிவத்தை அவர் காண்கிறார். அந்தத் திருமணத்தின்படி மணமகன் தனியாகவோ அல்லது தனது நண்பர்களுடனே சென்று கல்யாணப் பெண்ணை உறவினர்களிடமிருந்து பலவந்தமாக

அபகரித்து வருவதுபோல் பாவனை செய்யவேண்டும். இந்த வழக்கம் அதற்கு முந்தியதொரு வழக்கத்தின் மிச்ச சொச்சமாகத்தான் இருக்க வேண்டும். அந்த முந்திய வழக்கத்தின் படி, ஒரு குலத்தைச் [tribe] சேர்ந்த ஆண்கள் தமது குலத்துக்கு வெளியேயிருந்து, இதர குலங்களிலிருந்து, பலாத்காரமாகக் கடத்திச்செல்வதின் மூலமாகத்தான் மனைவிமார்களை அடைந்தார்கள். இந்தக் ''களவுத் திருமணம்'' எப்படி உதித்தது? தமது குலங்களுக்குள்ளேயே போதிய எண்ணிக்கையில் பெண்கள் கிடைத்துக் கொண்டிருந்தவரை இந்த விதமான மணமுறைக்கு அவசியமெதுவும் இல்லாமலிருந்தது. ஆனல், இது எவ்வளவு சகஜமாக இருந்ததோ, அதே அளவுக்குச் சகஜமாக இன்றென்றும் இருக்கக் காண்கிறேம். அதாவது, வளர்ச்சியடையாத மக்கள் சமுதாயங்களிடையே சில குழுக்கள் இருக்கின்றன (1865ம் ஆண்டுவரைக்கும் இந்தக் குழுக்களும் குலங்களும் ஒன்றென்றே கருதப்பட்டன);. இந்தக் குழுக்களுக்குள்ளேயே கொள்வினை கொடுப்பினை கூடாது என்று தடையிருக்கிறது; எனவே அந்தக் குழுவுக்கு வெளியேயிருந்துதான் ஆண் தனது மனைவியையோ, பெண் தனது கணவனையோ தேடிக் கொள்ளவேண்டியிருக்கிறது; இதர குழுக்களில் ஒரு குறிப்பிட்ட குழுவைச் சேர்ந்த ஆண் தனது சொந்தக் குழுவைச் சேர்ந்த பெண் ஒருத்தியைத் தான் மனைவியாகக் கொள்ளவேண்டும் என்று நிர்ப்பந்திக்கப்படும் வழக்கம் இருந்து வருகிறது. முதல் வகையைச் சேர்ந்த குழுவை விகோத்திர மண முறைக் குழு [exogamous group] என்றும், இரண்

டாம் வகையைச் சேர்ந்த குழுவை சகோத்திர மணமுறைக் குழு [endogamous group] என்றும் மாக்லென்னன் அழைக்கிறார். அதற்கு மேலாகக் கொஞ்சங்கூடக் கஷ்டப்படாமல் அவர் விகோத்திர மணமுறைக் ''குலங்களுக்கும்'' சகோத்திர மணமுறைக் ''குலங்களுக்கும்'' இடையே கண்டிப்புள்ள முரண்பாட்டை ஸ்தாபிக்கிறார். விகோத்திர மணமுறையைக் குறித்து அவரே சொந்தத்தில் நடத்திய ஆராய்ச்சிகள் இந்த முரண்பாடு அவரது கற்பனையில்தானுள்ளது என்ற உண்மையை எல்லா உதாரணங்களிலும், அல்லது எல்லா உதாரணங்களிலும் இல்லாவிட்டாலும் பல உதாரணங்களில், கண்ணெதிரே கொண்டு வந்து காட்டியபோதிலும், அவர் அந்த முரண்பாட்டையே தமது தத்துவம் முழுவதற்கும் அஸ்திவாரமாகக் கொள்ளுகிறார். ஆக அதன்படி விகோத்திர மணமுறைக் குலங்கள் தமது மனைவியரை இதர குலங்களிடையிலிருந்துதான் கொள்ளக்கூடும்; ஆனால் குலங்களுக்கிடையே எப்பொழுதும் போர் நிகழ்ந்து கொண்டிருப்பதுதான் காட்டுமிராண்டித்தனத்தின் குண விசேஷம்; ஆகவே, இதர குலங்களிடையேயிருந்து மனைவியரைப் பெறுவதென்றால் அதற்குப் பலாத்காரமாகக் கடத்திச்செல்வது ஒன்று தான் வழி.

இதற்கு மேலும் மாக்லென்னன் வாதிப்பதாவது: விகோத்திர மணமுறை என்ற வழக்கம் எங்கிருந்து வந்தது? இரத்த உறவு முறை [consanguinity] என்ற கருத்தோட்டத்துக்கும், முறைக்கேடான புணர்ச்சி [incest] என்ற கருத்தோட்டத்துக்கும் அதற்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது; ஏனெ

னில் அவை ரொம்பவும் பின்னால் வளர்ச்சி பெற்ற விஷயங்களாகும். ஆனால், பெண் குழந்தைகளைப் பிறந்தவுடனே கொன்றுவிடும் வழக்கம் காட்டுமிராண்டிகளிடையே பரவலாயிருக்கிறது; இந்த வழக்கத்துக்கும் அதற்கும் (விகோத்திர மணமுறை வழக்கத்துக்கும்) சம்பந்தம் இருக்கக்கூடும். இந்த வழக்கம் ஒவ்வொரு தனித்தனிக் குலத்திலும் ஆண்கள் தேவைக்கதிகமாயிருக்கிற நிலைமையச் சிருஷ்டித்தது. இந்நிலையின் அவசியகரமான, உடனடியான பின் விளைவுதான் ஒரு பெண்ணைப் பல ஆண்கள் பொது வில் அனுபவிப்பது—அதாவது, பலபுருஷ மணமுறை என்பது. இதன் ஒரு விளைவு என்னவெனில் குழந்தையின் தாய் யாரென்று தெரிந்ததே தவிரத் தந்தை யாரென்று தெரியவில்லை. எனவே ஆணை அறவே விலக்கிவிட்டுப் பெண் வழியாக மட்டுமே இரத்த உறவு கணக்கிடப்பட்டது—இதுதான் தாய் உரிமையாகும். மேலும், ஒரு குலத்தில் பெண்களுக்குப் பஞ்சம் ஏற்பட்டுப் போனதின்—இந்தப் பஞ்சத்தைப் பலபுருஷ மணமுறை தணித்ததே தவிரத் தீர்க்கவில்லை— மற்றொரு விளைவு என்னவென்றால் பிற குலங்களைச் சேர்ந்த பெண்களை வழக்கத்திட்டமாக, பலாத்காரமாகக் கடத்திச் செல்வதுதான்.

''ஆணும் பெண்ணும் சம எண்ணிக்கையிலில்லாத நிலை என்ற ஒரே காரணத்தைத்தான் விகோத்திர மணமுறையும் பலபுருஷ மணமுறையும் குறிப்பிட முடியும் என்பதினால் விகோத்திர மணமுறை இனங்கள் அனைத்துமே ஆதியில் பலபுருஷ மணமுறைக்குட்பட்டவையாயிருந்தன என்று நினைக்க வேண்டிய நிர்ப்பந்தத்தில் நாமிருக்கிறோம்... ஆக

வே, விகோத்திர மணமுறை இனங்களிடையே தாய் வழியாக மட்டுமே இரத்த உறவுகளை அங்கீகரிக்கும் முறைதான் முதன்முதலான இரத்த உறவு முறையாக இருந்ததென்பதில் சர்ச்சைக்கிடமில்லை என்று தான் நாம் சொல்லவேண்டும்''. (மாக்லென்னன் எழுதிய ''பண்டைக்கால வரலாறு பற்றிய ஆய்வுகள்'', 1886. ஆதிகாலத்திய மணமுறை[1], 124ம் பக்கம் பார்க்க).

விகோத்திர மணமுறை என்று அவர் பெயரிட்டழைத்தாரே, அது பொதுவாகப் பரவி நிலவுவதையும், அதன் பெரிய முக்கியத்துவத்தையும் கவனத்திற்குக் கொண்டு வந்ததுதான் மாக்லென்னனின் சிறப்பாகும். ஆனால், விகோத்திர மணமுறைக் குழுக்கள் இருப்பதைக் கண்டுபிடித்தது நிச்சயமாக அவர் இல்லை. கண்டுபிடிக்காதது மட்டுமல்ல, அவர் அதைப் புரிந்துகொள்ளவுமில்லை. மாக்லென்னனுக்கு விஷய மூலங்களாகப் பயன்பட்ட பல பார்வையாளர்களின் முந்தைய தனித்தனிக் குறிப்புகள் ஒரு பக்கமிருக்க, இந்திய மகார்களிடையே இருக்கிற இந்த ஸ்தாபனத்தைக் கறாராகவும் சரியாகவும் (1859ல் வெளியான ''விவர இனவியல்'' என்ற நூலில்[2]) லாதாம் வர்ணித்திருக்கிறார்; மேலும், அது பொதுவாக வழக்கத்திலிருப்பது, உலகத்தின் எல்லாப் பகுதிகளிலும் அது இருந்துவருகிறது என்று

[1] **Mac-Lennan J.F.**, "Studies in Ancient History", comprising a reprint of "Primitive Marriage", London 1886.—**பதிப்பாசிரியர்கள்.**

[2] **Latham R.G.**, "Descriptive Ethnology", vols I-II, London, 1859. — **பதிப்பாசிரியர்கள்.**

லாதாம் பிரகடனப்படுத்தினர். அவரது நூலின் இந்தப் பகுதியை மாக்லென்னனே மேற்கோள் காட்டுகிறார். மேலும், நமது மார்கனும்கூட ஏற்கனவே 1847ம் ஆண்டிலேயே, ("American Review" என்ற சஞ்சிகையில்) இரோகுவாய்களைப் பற்றி எழுதிய கடிதங்களிலும், 1851ல் எழுதிய "இரோகுவாய்களின் சங்கம்"[1] என்ற நூலிலும், அது இந்தக் குலத்தில் இருப்பதாக நிரூபித்துச் சரியாகவும் வர்ணித்தார்; ஆனால், நான் பின்னால் பார்க்கப்போகிறபடி, மாக்லென்னனின் வக்கீல்வாத மனப்பான்மை இவ்விஷயத்தில் ஏற்படுத்திய குழப்பம், தாய் உரிமை விஷயத்துறையில் பாகோபெனின் மாயாவாத கற்பனை சஞ்சாரம் ஏற்படுத்திய குழப்பத்தைவிட எவ்வளவோ பெரியதாகும். வம்சாவளியைத் தாய் வழியாகப் பின்பற்றியறியும் முறைதான் ஆதிமுறை என்று அவர் அங்கீகரித்தது —பின்னால் அவரே ஒப்புக் கொண்டபடி இதில் பாகோபென் அவரை முந்திக்கொண்டு சொல்லிவிட்டார் என்ற போதிலும்—மாக்லென்னனின் மற்றொரு சிறப்பாகும். ஆனால் இங்கேயும் அவர் மிகவும் தெளிவில்லாமலே இருக்கிறார். "பெண் வழியாக மட்டுமே கணக்கிட்ட இரத்த உறவு முறை" (kinship through females only) என்பதைப் பற்றியே அவர் இடைவிடாமல் பேசுகிறார்; முந்தியிருந்த கட்டத்துக்குச் சரியாயிருந்த இந்தச் சொற்றொடரைப் பிந்திய வளர்ச்சிக் கட்டங்களுக்கும் பிரயோகிக்கிறார்; இந்தப் பிந்திய வளர்ச்சிக்

[1] Morgan L.H., "League of the Ho-dé-no-sau-nee, or Iroquois", Rochester, 1851.—பதிப்பாசிரியர்கள்.

கட்டங்களில் வம்சாவளியும் சரி, வாரிசுரிமையும் சரி, பெண்வழியே மட்டுமே கணக்கிடப்பட்டு வருகிறபோதிலும் ஆண்வழியேயும் இரத்த உறவு முறை அங்கீகரிக்கப்பட்டு, குறிப்பிடப்பட்டு வருகிறது. சட்டப் பண்டிதரின் குறுகிய வரம்புக்குட்பட்ட கண்ணோட்டம் இது; அவர் தனக்கென்று வளைந்து கொடுக்காத ஒரு சட்டச் சொற்றொடரைச் சிருஷ்டித்துக்கொண்டு இடையிலே அதைப் பிரயோகிக்க முடியாதபடி செய்து விட்ட நிலைமைகளுக்குத் தக்கவாறு அதைத் திருத்தாமலே பிரயோகித்துவருகிறார்.

மாக்லென்னனின் தத்துவம் ஏற்கத்தக்கது போல் தோன்றினாலும் அவருக்கே அது அவ்வளவு பலமான அஸ்திவாரம் கொண்டிருப்பதாகத் தெரியவில்லை என்பது வெளிப்படை. ''குறிப்பாக **ஆண் வழி** இரத்த உறவு முறை [அதாவது ஆண் வழியாக வம்சாவளியைக் குறிப்பிடும் முறை] இருக்கிற இனங்களிடையேதான் பெண்ணை [பாவனைக்காக] அபகரித்துச் செல்லும் திருமண வடிவம் மிக மிகத் தெளிவாகப் பதிந்தும், அழுத்தமாகப் பதிந்தும் விளங்குகிறது என்பதைப் பார்க்க முடியும்'' (140ம் பக்கம்) என்ற உண்மையாவது அவருக்கே பட்டிருக்கிறது என்று சொல்லலாம். மேலும்: ''விகோத்திர மணமுறையும் ஆதிகால இரத்த உறவு முறையும் அடுத்தடுத்து நிலவி வருகிற இடங்களில் எங்குமே, நாமறிந்த வரைக்கும், இப்பொழுது சிசுவதை **அநுஷ்டான முறையாக** இருக்கவில்லை என்பது விநோதமான உண்மைதான்'' (146ம் பக்கம்). இவ்விரண்டு உண்மைகளும் அவரது வியாக்கியானத்தைப் பொய்ப்பிக்கின்றன. புதிதான, முன்

னைவிடச் சிக்கலான ஊகங்களைத்தான் அவற்றிற்கு எதிராக அவரால் நிறுத்தமுடியும்.

இருந்தபோதிலும், இங்கிலாந்தில் அவரது தத்துவம் மிகவும் பாராட்டப் பெற்றது, அதிகமாக வரவேற்கப்பட்டது. குடும்பத்தைப் பற்றிய வரலாற்றின் ஸ்தாபகர் என்றும் அந்தத் துறையில் அவரே தலைசிறந்த நிபுணர் என்றும் மாக்லென்னன் அங்கே பொதுவாக ஏற்கப்பட்டார். விகோத்திர மணமுறைக் ''குலங்களுக்கும்'' சகோத்திர மணமுறைக் ''குலங்களுக்கும்'' இடையே அவர் கண்ட முரண்பாடுதான் — அதில் சில விலக்குகளும், திருத்தங்களும் ஏற்கப்பட்டபோதிலும்கூட — அன்று நிலவி நின்ற கருத்துக்கு அங்கீகாரம் பெற்ற அஸ்திவாரமாக இருந்துவந்தது. அதுவே பார்வையை மறைக்கும் திரையாக அமைந்து, பரிசீலனைக்கெடுத்துக் கொண்டிருக்கிற விஷயத்துறையைச் சுதந்திரமாக விரிவாராய்ச்சி எதுவும் செய்யமுடியாததாக்கி விட்டது, அதன் மூலம் திட்டமான முன்னேற்றம் எதுவும் சாத்தியமில்லாததாக்கிவிட்டது. மாக்லென்னனை மிகையாக மதிப்பிடுவது இங்கிலாந்தில் வழக்கமாகி விட்டது; இந்த ஆங்கிலேய மோஸ்தரைப் பின்பற்றி அது மற்ற நாடுகளிலும் வழக்கமாகி விட்டது. இதனால், இந்த மிகையான மதிப்புக்கு எதிர்நிலையாக, விகோத்திர மணமுறைக் ''குலங்களுக்கும்'' சகோத்திர மணமுறைக் ''குலங்களுக்கும்'' இடையே கண்ட முற்றிலும் தவறான முரண்பாட்டினால் அவர் விளைத்த தீமை தமது ஆராய்ச்சிகளால் விளைத்த நன்மையை மிஞ்சியிருந்தது என்பதைச் சுட்டிக் காட்டுவது நம் கடமை.

இடையில், மேலும் மேலும் பல உண்மைகள் தெரியவந்தன; அவை அவரது நேர்த்தியான சட்டத்தினுள் பொருந்தி யமையவில்லை. பலதார மணம், பலபுருஷமணம், ஒருதார மணம் என்ற மூன்று மண வடிவங்கள் மட்டுந்தான் மாக்லென்னனுக்குத் தெரியும். ஆனால் ஒரு தடவை இதன்பால் கவனம் திருப்பப்பட்டதோ இல்லையோ, வளர்ச்சி பெற்றிராத மக்கள் சமூகங்களிலே ஆண்களின் குழு ஒன்று பெண்களின் ஒரு குழுவைப் பொதுவிலே அனுபவிக்கிற மண வடிவங்கள் இருக்கின்றன என்ற உண்மைக்கு மேலும் மேலும் பல ருஜுக்கள் கண்டுபிடிக்கப்பட்டன. மேலும், **லப்பாக்** *(1870ல் அவர் எழுதிய "நாகரிகத்தின் தோற்றுவாய்" என்ற நூலில்*[1]*)* இந்தக் குழுமணம் (communal marriage) என்பது ஒரு சரித்திர உண்மையே என்று அங்கீகரித்தார்.

அதை உடனடியாகத் தொடர்ந்து, 1871ம் ஆண்டில், புதிதாயும் பல அம்சங்களில் நிர்ணயமாயுமுள்ள விஷயாதாரங்களுடன் **மார்கன்** தோன்றினர். இரோகுவாய் மக்களிடையே நிலவிவந்த அலாதியான இரத்த உறவு முறை அமெரிக்க ஐக்கிய நாடுகளைச் சேர்ந்த எல்லா பூர்வீகக் குடிகளுக்கும் பொதுவானது என்றும் எனவே அது அங்குள்ள மணமுறையிலிருந்து யதார்த்தத்தில் உண்டாகும் இரத்த உறவு முறையின் வரையறைகளுடன் நேரிடையாக முரண்பட்டிருந்தபோதிலும் அது ஒரு

[1] **Lubbock J.**, "The Origin of Civilization and the Primitive Condition of Man. Mental and Social Condition of Savages", London, 1870. —**பதிப்பாசிரியர்கள்.**

கண்டம் முழுவதிலும் பரவிக்கிடக்கிறது என்றும் மார்கன் திடமான முடிவுக்கு வந்திருந்தார். எனவே, அவர் வினுக்குறிப்புகளையும் பட்டியல்களையும் தாமே தயாரித்து அவற்றின் அடிப்படையில் மற்ற மக்களிடையே நிலவும் இரத்த உறவு முறைகளைப் பற்றிச் செய்திவிபரங்களைச் சேகரிக்குமாறு அமெரிக்க சமஷ்டி சர்க்காரை வற்புறுத்திக் கேட்டுக் கொண்டார். கிடைக்கப் பெற்ற விடைகளிலிருந்து மார்கன் பின்வருவனவற்றைக் கண்டுபிடித்தார்: 1) அமெரிக்க இந்தியர்களிடையேயுள்ள இரத்த உறவு முறை ஆசியாவிலும் பல குலங்களிடையே பரவிக் கிடக்கிறது, அதனின்று சிறிது மாறுபட்ட வடிவத்தில் ஆப்பிரிக்காவிலும், ஆஸ்திரேலியாவிலும் பரவிக் கிடக்கிறது; 2) ஹவாயி தீவுகளிலும் இதர ஆஸ்திரேலியத் தீவுகளிலும் இன்று நசித்து வரும் தறுவாயிலிருக்கிற குழுமண வடிவம் ஒன்று இதைப் பூர்ணமாக விளக்குகிறது; 3) இருந்த போதிலும், இந்தத் திருமண வடிவத்தோடு கூடவே ஓர் இரத்த உறவு முறையும் இதே தீவுகளில் நிலவிவருகின்றது; அதற்கும் முந்தியதாயிருந்து இப்பொழுது நசித்துப் போய்விட்ட ஒரு குழுமண வடிவத்தைக் கொண்டுதான் இந்த இரத்த உறவு முறையை விளக்கமுடியும். சேகரித்த விஷய விபரங்களையும் அவற்றிலிருந்து தாம் பெற்ற முடிவுகளையும் ''இரத்த உறவு முறைகளும் பிற உறவு முறைகளும்'' என்ற நூலில்[1] 1871ம் ஆண்டில் மார்கன் வெளியிட்டார். அதன் மூலம் விவாதத்தை மிக

[1] **Morgan L.H.**, "Systems of Consanguinity and Affinity of the Human Family" Washington, 1871.—**பதிப்பாசிரியர்கள்.**

விரிவான துறையில் செலுத்தினர். இரத்த உறவு முறைகளைத் தமது தொடக்கப் புள்ளியாகக் கொண்டு அவற்றிற்குப் பொருத்தமாயுள்ள குடும்ப வடிவங்களை மறு நிர்மாணம் செய்து தந்தார்; அதன் மூலம் ஒரு புதிய ஆராய்ச்சிப் பாதையையும், மனித குலத்தின் ஏடறிந்த வரலாற்றுக்கு முந்திய வரலாற்றைப் பற்றி முன்னைவிடத் தூரமாகப் பார்க்கும் பின்-நோக்கு நிலையையும் வகுத்துத் தந்தார். இந்த ஆராய்ச்சி முறை செல்லத் தக்கது என்று ஏற்கப்படுமேயானால் மாக்லென்னன் நிர்மாணித்த நேர்த்தியான அமைப்பு வெறுங்காற்றெனக் கரைந்து போகும்.

''ஆதிகாலத்திய மண முறை'' (''பண்டைக் கால வரலாறு பற்றிய ஆய்வுகள்'', 1876) என்ற தமது நூலின் புதிய பதிப்பில் மாக்லென்னன் தமது தத்துவத்தைத் தாங்கிப்பேசினார். தம்மைப் பொறுத்த வரையில் வெறும் ஊகங்களைக் கொண்டு குடும்பத்தைப் பற்றிய ஒரு வரலாற்றைச் செயற்கையாக நிர்மாணிக்கிற இவர், லப்பாக், மார்கன் விஷயத்தில் மட்டும் அவர்களுடைய ஒவ்வொரு கூற்றுக்கும் ருஜுக்கள் சமர்ப்பித்தாக வேண்டும் என்பதோடு, ஒரு ஸ்காட்லந்து நீதிமன்றத்தில் அனுமதிக்கப்படக் கூடியவை போன்ற மறுக்க முடியாத ருஜுக்களைத் தான் சமர்ப்பிக்கவேண்டும் என்று வேறு கேட்கிறார். ஒருவருடைய தாயின் சகோதரனுக்கும் சகோதரியின் மகனுக்கும் இடையேயுள்ள நெருங்கிய உறவு முறையை (டாஸிடஸ் எழுதிய ''ஜெர்மானியா'', 20ம் அத்தியாயம் பார்க்க) வைத்துக்கொண்டும், பிரிட்டனில் வாழ்ந்த மக்கள் பத்து அல்லது

பன்னிரண்டு பேர்களைக்கொண்ட குழுக்களாயமைந்து தமது மனைவியரைப் பொதுவில் அனுபவித்து வந்தார்கள் என்கிற பீஸனின் அறிக்கையை வைத்துக் கொண்டும், அநாகரிக மக்களிடையே பெண்கள் பொதுவில் இருப்பது பற்றிப் பண்டைக்கால ஆசிரியர்கள் தந்த இதரச் செய்திகள் யாவையும் வைத்துக் கொண்டும், இந்த எல்லா மக்கள் சமூகங்களிடையேயும் பலபுருஷ மணம் விதியாக இருந்துவந்தது என்று தயங்காமல் முடிவு கட்டுகிற இவர்தான் இப்படிக் கேட்கிறார். வாதியின் வக்கீல் வழக்கை நடத்துவதற்குத் தன்னைப் பொறுத்தமட்டில் தன்னிஷ்டம் போன போக்கில் தயாரித்துக்கொண்டு வரலாம், ஆனால் பிரதிவாதியின் வக்கீல் மட்டும் தாம் சொல்லும் ஒவ்வொரு வார்த்தைக்கும் மிகவும் சாஸ்திரோக்தமான, சட்டப்படி மிகவும் செல்லுபடியான ருஜுக்களைத் தரவேண்டும் என்று கோருவதைக் கேட்கிறமாதிரி இது இருக்கிறது.

குழு மணம் என்பது வெறும் கற்பனை என்று மாக்லென்னன் சாதிக்கிறார்; ஆனால் அவர் பாகோபெனுக்கும் வெகு தூரம் பின்தங்கிவிடுகிறார். மார்கன் குறிப்பிட்ட இரத்த உறவு முறைகள் சமுதாயக் கண்ணியத்தைச் சுட்டிக்காட்டும் உரைகளே தவிர வேறொன்றுமில்லை என்கிறார் அவர். முன் பின் தெரியாதவர்களைக் கூடத் தான், வெள்ளைக்காரர்களைக் கூடத்தான், அமெரிக்க இந்தியர்கள் ''சகோதரன்'' என்றும், ''தந்தை'' என்றும் அழைத்துப் பேசுகிறார்கள்; இந்த உண்மையே அதற்கு ருஜு என்கிறார். இது எப்படி இருக்கிறது தெரியுமா? கத்தோலிக்கப் பாதிரிகளும் மடத் தலைவிகளும்

''தந்தையே'' என்றும் ''தாயே'' என்றும் அழைக்கப் படுவதினுல்—மடாலயத்தைச் சேர்ந்த ஆண்களும், பெண்களும், 'பிரீமேஸன்' [ freemason] மன்றங்களைச் சேர்ந்தவர்களும், ஆங்கிலேய தனித்தொழில் சங்கங்களின் அங்கத்தினர்களும் கூட, மகாசபையில் கூடியிருக்கும் போது, ''சகோதரர்களே'' என்றும், ''சகோதரிகளே'' என்றும் அழைக்கப்படுவதினுல் தந்தை, தாய், சகோதரன், சகோதரி என்பவையெல்லாம் வெறும் விளிச் சொற்களே என்று ஒருவன் வாதிப்பதற்கொப்பாகும். சுருங்கச் சொன்னுல் மாக்லென்னனின் தற்காப்பு மிகவும் பலவீனமாயிருந்தது.

ஒரேயொரு விஷயத்தில் மட்டும் அவரை யாரும் மறுத்துரைக்கவில்லை. அவரது கருத்தமைப்புக்கு அஸ்திவாரமாக இருந்தது, விகோத்திர, சகோத்திர மணமுறைக் ''குலங்களிடையே'' அவர் ஸ்தாபித்த முரண்பாடேயாகும். அந்த முரண்பாட்டை யாரும் அசைக்கவில்லை என்பதோடல்லாமல் குடும்பத்தின் வரலாறு முழுவதற்கும் அதுவே அச்சாணி என்றும் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. இந்த முரண்பாட்டை விளக்க மாக்லென்னன் செய்த முயற்சி போதாதுதான் என்னும், அது அவரே விவரித்துத் தந்த உண்மைகளுக்கு மாறுபாடாக இருக்கிறது என்றும் சொன்னுர்கள். ஆனுல் அவர் சொன்ன முரண்பாடு இருக்கிறதே — ஒன்றையொன்று விலக்கி வைக்கிற ரீதியிலமைந்த, வேருன சுயேச்சையான குலங்கள் இரண்டு வகையுண்டு, அதில் ஒரு குலம் தன் குலத்துக்குள்ளேயே மனைவியரைத் தேடிக் கொண்டது, இன்னெரு குலம் இந்த முறை

யை அறவே தடை செய்திருந்தது என்ற முரண்பாடு இருக்கிறதே—அது சர்ச்சைக்கிடமற்ற வேத வாக்காகவே கொள்ளப்பட்டு வந்தது. உதாரணமாக, ழிரோ-தெய்லோன் எழுதிய "குடும்பத்தின் தோற்றம்" (1874)[1] என்ற நூலையும் லப்பாக் எழுதிய "நாகரிகத்தின் தோற்றுவாய்" (நான்காம் பதிப்பு, 1882) என்ற நூலையும் ஒப்பிட்டுப் பாருங்கள்.

இந்த இடத்தில்தான் மார்கனின் பிரதான நூலாகிய "பண்டைக்கால சமுதாயம்" (1877) பிரவேசிக்கிறது. எனது இந்த நூலுக்கு ஆதாரமாயிருப்பதுவும் அதுவே. 1871ம் ஆண்டில் மார்கன் எதை மங்கலாக ஊகித்துவைத்திருந்தாரோ, அது இங்கே பூர்ண ஞானத்துடன் வளர்க்கப்பட்டிருக்கிறது. சகோத்திர மண முறையும் விகோத்திர மண முறையும் ஒன்றுக்கொன்று எதிரானவையல்ல. இதுநாள் வரை விகோத்திர மணமுறைக் "குலங்கள்" எவையும் எங்குமே கண்டுபிடித்துச் சொல்லப்படவில்லை. ஆனால் குழு மணம் நிலவி வந்த காலத்தில்—அநேகமாக அது எல்லா விடங்களிலும் ஏதாவது ஒரு காலத்தில் இருந்திருக்கத்தான் செய்தது—ஒரு குலம் என்பது பல குழுக்களை, கணங்களை [gens] கொண்டு அமைந்திருந்தது; அவை தாய்வழியே இரத்த உறவுகள் கொண்டிருந்தன. இந்தக் கணங்கள் ஒவ்வொன்றும் தனக்குள்ளேயே மணம் செய்துகொள்ளாதபடி திட்டமாகத் தடை செய்யப்

[1] **Giraud-Teulon A.**, "Les origines de la famille", Genève, Paris, 1874.—**பதிப்பாசிரியர்கள்.**

பட்டிருந்தது; இதன் விளைவாக, ஒரு கணத்தைச் சேர்ந்த ஆண்கள் தமது குலத்துக்குள்ளேயே பெண்களை மனைவியராகக் கொள்ளமுடிந்தது, கொள்ளவும் செய்தார்கள் என்றாலும், அந்த ஆண்கள் தமது கணத்துக்கு வெளியேயிருந்துதான் மனைவியரைக் கொள்ள வேண்டியிருந்தது. ஆக, கணத்தைப் பொறுத்தமட்டில் அது திட்டமாக விகோத்திர மண முறையைக் கொண்டிருந்தது; ஆனால் இந்தக் கணங்களைத் தன்னுள் கொண்டிருந்த குலம் என்னவோ சகோத்திர மண முறையைத் திட்டமாகக் கொண்டிருந்தது. இத்துடன் மாக்லென்னன் நிர்மாணித்திருந்த செயற்கையான அமைப்பில் கடைசி மிச்ச மீதங்களும் சரிந்துவிட்டன.

மார்கன் இத்துடன் திருப்தியடைந்து சும்மா விருந்துவிடவில்லை. அவர் பரிசீலனைக்கு எடுத்துக் கொண்ட துறையில் இரண்டாவது நிர்ணயமான முன்னேற்றத்தைச் சாதிப்பதற்கு அமெரிக்க இந்தியர்களின் கணங்கள் ஒரு சாதனமாக அவருக்குப் பயன்பட்டன. தாய் உரிமை அடிப்படையில் அமைக்கப்பட்டிருந்த கணங்களே ஆதி மூல வடிவம் என்றும், அதிலிருந்துதான் பின்னால் தந்தை உரிமையை அடிப்படையாகக் கொண்ட கணங்கள் வளர்ந்தன என்றும் மார்கன் கண்டுபிடித்தார். இப்படித் தந்தை உரிமை அடிப்படையிலமைந்தவையே, பண்டைக்காலத்திய நாகரிகத்தைச் சேர்ந்த மக்களிடையே நாம் பார்க்கும் கணங்களாகும். முந்தைய சரித்திராசிரியர்களுக்கெல்லாம் கிரேக்க, ரோமானிய கணங்கள் ஒரு புதிராக இருந்துவந்தன;

அவை இப்போது அமெரிக்க இந்திய கணங்களைக் கொண்டு விளக்கப்பட்டன; ஆக, ஆதிகால சமுதாயத்தின் வரலாறு முழுவதற்கும் ஒரு புதிய அடிப்படை கண்டுபிடிக்கப்பட்டது.

பரிணாம வளர்ச்சி பற்றிய டார்வினின் தத்துவம் உயிரியல் துறையில் எத்தனை அர்த்தமுக்கியத்துவம் கொண்டிருக்கிறதோ, உபரி மதிப்பு பற்றிய மார்க்ஸின் தத்துவம் அரசியல் பொருளாதாரத் துறையில் எத்தனை அர்த்தமுக்கியத்துவம் கொண்டிருக்கிறதோ—அதே அளவுக்கு, நாகரிகமடைந்த மக்கள் சமூகங்களின் தந்தை உரிமைக் கணத்துக்குப் பூர்வாங்கமான கட்டமாக ஆதிகாலத் தாய் உரிமைக் கணம் இருந்தது என்ற மறுகண்டுபிடிப்பும் ஆதிகாலச் சமுதாய வரலாற்றுத் துறையில் அர்த்தமுக்கியத்துவம் கொண்டதாகும். அதைக் கொண்டு குடும்பத்தைப் பற்றிய ஒரு வரலாற்றை முதல் தடவையாக மார்கன் வரைந்து காட்ட முடிந்தது. தற்சமயம் கிடைக்கும் விஷயாதாரங்கள் அனுமதிக்கிற அளவுக்கு, குறைந்தபட்சம் சாஸ்திரீயமான வளர்ச்சிக் கட்டங்களாவது மொத்தத்தில் அந்த வரலாற்றில் தாற்காலிகமாக ஸ்தாபிக்கப்பட்டுள்ளன. ஆதிகாலச் சமுதாயத்தின் வரலாற்றை அமைப்பாக வரைவதில் ஒரு புதிய சகாப்தத்தை இது திறந்து வைக்கிறது என்பது தெளிவு. தாய் உரிமைக் கணம்தான் அச்சாணி, அதைச் சுற்றித்தான் இந்த விஞ்ஞானம் முழுவதும் வந்து கொண்டிருக்கிறது — அது கண்டுபிடிக்கப்பட்ட பிறகு நாம் எந்தத் திசையில் ஆராய்ச்சிகளை நடத்திச் செல்வது என்பது தெரிந்துவிட்டது, எதைப் பரிசீலிப்பது,

பரிசீலனைகளின் முடிவுகளை எப்படி வகைப்படுத்துவது என்பது தெரிந்துவிட்டது. எனவே, மார்கனின் நூல் வெளிவருவதற்கு முந்தியிருந்ததைவிட இப்போது இந்தத் துறையில் முன்னேற்றம் துரிதமாயிருக்கிறது.

இங்கிலாந்திலுள்ள ஏடறியா வரலாற்றுத் துறை வல்லுநர்கள் மார்கனின் கண்டுபிடிப்புகளை இப்போது பொதுவாகவே அங்கீகரிக்கிறார்கள் — இல்லை, களவாடித் தமதாக்கிக் கொள்ளுகிறார்கள். ஆனாலுங்கூட, கண்ணோட்டத்தில் ஏற்பட்டுள்ள இந்தப் புரட்சிக்கு மார்கனே காரணபுருஷர் என்று அவர்களில் ஒருவராவது பகிரங்கமாக ஒத்துக் கொள்வது குதிரைக் கொம்பு. இங்கிலாந்தில் இந்தப் புத்தகத்தைப் பற்றி முடிந்தவரைக்கும் மௌனம் சாதிக்கப்படுகிறது. அவரது முந்திய நூலைமட்டும் பெரிய மனிதர்கள்போல் புகழ்வதோடு அவரை அறவே விலக்கிவிடுகிறார்கள். மார்கனின் விளக்கவுரையிலுள்ள விபரங்களை மட்டும் விமர்சிக்கும்பொருட்டு ஆவலோடு பொறுக்குகிறார்கள்; ஆனால் நிஜமாகவே மகத்தானவையாகிய அவரது கண்டுபிடிப்புகளைப்பற்றிப் பிடிவாதமாக மௌனம் சாதிக்கிறார்கள். ''பண்டைக்கால சமுதாயம்'' என்ற அந்நூலின் மூலப்பதிப்பு இப்போது விலைக்குக் கிடைப்பதில்லை. இப்படிப்பட்ட நூல்களுக்கு அமெரிக்காவில் லாபகரமான சந்தை கிடையாது. இங்கிலாந்தில் இந்நூல் திட்டமாக அமுக்கப்பட்டுவிட்டது என்றே தெரிகிறது. சகாப்த சிருஷ்டிகரமான இந்த நூலின் ஜெர்மன் மொழி

பெயர்ப்பு ஒன்றுதான் புத்தகச் சந்தையில் இன்னும் கிடைத்துவரும் இதன் ஒரே பதிப்பாகும்.

எங்கிருந்து வருவது இந்த ஒட்டாமை? இதை ஒரு மௌனச்சதி என்று கருதாமலிருப்பது கஷ்டம். குறிப்பாக, பல நூல்களிலிருந்து வெறுமனே தாட்சண்யத்திற்காக நிறைய மேற்கோள்கள் தருகிறபோது, தோழமையுணர்ச்சியைக் காட்டுவதற்கு இதர ருஜுக்களும் தருகிறபோது—அங்கீகார முத்திரை பெற்றுள்ள நமது ஏடறியா வரலாற்றுத் துறை வல்லுநர்களின் நூல்களில் இவை மண்டிக் கிடக்கின்றன—எங்கிருந்து வருகிறது இந்த ஒட்டாமை? ஒரு வேளை மார்கன் அமெரிக்காக்காரர் என்பதினுல் இருக்குமா? விஷயாதாரங்களைச் சேகரிப்பதில் ஏடறியா வரலாற்றுத் துறையைச் சேர்ந்த ஆங்கிலேய வல்லுநர்களிடையே மிகவும் பாராட்டத்தக்க விடாமுயற்சி இருந்துங்கூட, இந்த விஷயாதாரங்களை வரிசைப் படுத்துவதையும் வகைதொகுப்பதையும் நிர்ணயிக்கிற பொதுவான நோக்குக்கு, சுருங்கச் சொன்னுல் அவர்களின் கருத்துக்களுக்கு, ஆற்றல் மிக்க இரண்டு விதேசிகளை—மார்கனையும், பாகோபெனையும்—அண்டிக்கிடக்க வேண்டியிருக்கிறதே என்பதினுல் இருக்குமோ? ஜெர்மானியனையாவது சகித்துக் கொள்ளலாம், அமெரிக்கனையோ? அமெரிக்க நாட்டானை நேருக்கு நேர் சந்திக்கிறபோதெல்லாம் ஒவ்வோர் ஆங்கிலேயனுக்கும் தேசபக்தி பொத்துக் கொண்டுவருகிறது. நான் அமெரிக்காவில் இருக்கும்போது இதற்கு வேடிக்கையான உதாரணங்களைப் பார்த்தேன். இத்துடன் இன்னொரு விஷயத்தை

யும் சேர்க்கவேண்டும். ஏடறியாத வரலாற்றுத் துறையின் ஆங்கிலேயக் கருத்துப் பிரிவினருக்கு மாக்லென்னன் அதிகாரபூர்வமாகப் பிரகடனம் பண்ணப்பட்ட ஸ்தாபகர் மாதிரி, தலைவர் மாதிரி; சிசுவதையிலிருந்து தொடங்கி, பலபுருஷ மணமுறை மூலமாகவும் கடத்திச்செல்லும் மணமுறை மூலமாகவும் தாய் உரிமைக் குடும்பத்துக்குக் கொண்டு வந்துசேர்க்கும் மாக்லென்னன் செயற்கையாக நிர்மாணித்த வரலாற்றுத் தத்துவத்தை மிகுந்த பயபக்தியுடன் குறிப்பிடுவதுதான் பண்புடைமை என்று அவர்கள் கொண்டிருந்தனர்; ஒன்றையொன்று அறவே விலக்கிவைக்கிறதாயிருக்கிற விகோத்திர மணமுறைக் "குலங்களும்" சகோத்திர மணமுறைக் "குலங்களும்" குறித்துக் கடுகளவேனும் சந்தேகம் கிளப்புவது அப்பட்டமான அனாசாரமாகக் கருதப்பட்டது; ஆகவே இந்தப் புனிதமான சூத்திரங்களை இப்படி மார்கன் வெறும் காற்றாகக் கரைந்துபோகச் செய்ததால் ஒரு வகையான மாபாவம் செய்த குற்றத்திற்காளானார். அதுமட்டுமல்ல. சொன்னமாத்திரத்திலேயே விஷயம் வெளிப்படையாகப் புலப்பட்டுவிடுகிற ரீதியிலே மார்கன் சூத்திரங்களைப் பரிகசித்து விட்டார். விகோத்திர மணமுறைக்கும் சகோத்திர மணமுறைக்கும் இடையே மூளை குழம்பிப்போய் இதுவரை தடுமாறித் தள்ளாடித் திரிந்துகொண்டிருந்த மாக்லென்னனின் பக்தர்கள் மண்டையைப் போட்டு உடைத்துக் கொண்டு, "இதையெல்லாம் வெகு காலத்துக்கு முன்பே நாமே கண்டு பிடிக்காமல் போகிற

அளவுக்கு முட்டாள்களாக இருந்துவிட்டோமே!''
என்று ஆச்சரியக் கூக்குரல் எழுப்பும்படியாயிற்று.
அதிகாரவர்க்கத்தாரப்புள்ள கருத்துப் பிரி
வினர் மார்கனை மிகுந்த உதாசீனத்துடன் நடத்து
வதன்றி வேறெவ்விதமாகவும் நடத்தாமலிருப்
பதற்கு அவர் புரிந்த இந்தக் குற்றம் ஒன்றே போ
தாதா? இருந்தாலும், அதுவும் போதாததுபோல்,
நாகரிகத்தை, பண்டை உற்பத்தி செய்யும் சமுதாயத்
தை, தற்காலச் சமுதாயத்தின் அடிப்படை வடி
வத்தை, பூரியேயை நினைவூட்டும் வகையில் வேறு
மார்கன் விமர்சித்தார்; அதுமட்டுமல்ல; கார்ல்
மார்க்ஸ் உபயோகித்திருக்கக்கூடிய சொற்களில்
சமுதாயத்தின் எதிர்கால மாற்றத்தைப் பற்றியும்
மார்கன் பேசினார்; இது அளவுக்கு மீறிச் சோதிப்ப
தாக இருந்தது அவர்களுக்கு. ஆகவே, மார்கனுக்
குச் ''சரித்திரரீதியான ஆராய்ச்சிமுறை என்றாலே
மகா வெறுப்பு'' என்று மாக்லென்னன் அவர் மீது
கோபத்துடன் குற்றஞ் சாட்டினார்; 1884ம்
ஆண்டில்கூட, அந்த அபிப்பிராயத்தைப் பேரா
சிரியர் ழிரோ-தெய்லோன் ஆமோதித்தார்;
அத்துடன் மார்கனுக்குத் தகுந்த தண்டனை கிடைத்
துவிட்டது. 1874ம் ஆண்டில் (''குடும்பத்தின்
தோற்றம்'' என்ற நூலைப் பார்க்க) மாக்லென்
னனின் விகோத்திர மணமுறை என்ற மாயச்சிக்
கலில் வழி தெரியாமல் நாதியற்றுத் திரிந்து
கொண்டிருந்தவரும், மார்கன் வந்து விடுதலை
தர வேண்டியிருந்த நிலையிலிருந்தவரும் இதே
ழிரோ-தெய்லோன்தானே?

ஆதிச் சமுதாய வரலாறு மார்கனுக்குக் கடன்பட்டுள்ள வகையில் பெற்ற மற்ற முன்னேற்றங்களை இங்கே நான் கவனிக்கவேண்டிய அவசியமில்லை. தேவைக்கு வேண்டியவை இந்நூலினூடே போகப் போகக் குறிப்பிடப்படுகின்றன. அவருடைய இந்தப் பிரதான நூல் வெளியாகிப் பதினான்கு ஆண்டுகள் கழிந்துள்ளன. இந்தக் காலத்தில் ஆதிச் சமுதாயங்களின் வரலாறு சம்பந்தமான நமது விஷயாதாரங்கள் மிகவும் பெருகியுள்ளன. மனித இயல் விஞ்ஞானிகளும், பிரயாணிகளும், ஏடறியா வரலாற்றைப் பயில்வதையே தொழிலாகக் கொண்டவர்களும் மட்டுமன்றி ஒப்புநோக்குச் சட்டத்துறை நிபுணர்களும் இத்துறையில் இறங்கி, புதிய விஷயாதாரங்களையும் புதிய அபிப்பிராயங்களையும் வழங்கியுள்ளனர். அதன் விளைவாக, மார்கனின் சில தனிப்பட்ட ஊகங்கள் குலுக்கப்பட்டுவிட்டன, அல்லது நிலை பெயர்ந்து போய் விட்டன என்று கூடச் சொல்லலாம். ஆனால் ஒன்று. புதிதாகச் சேகரிக்கப்பட்டுள்ள விஷயாதாரங்கள் அவருடைய பிரதானக் கருத்தோட்டங்களை விலக்கி அவற்றின் ஸ்தானத்தில் இதரக் கருத்தோட்டங்களை வைக்கும் நிலைக்கு எங்குமே கொண்டுபோகவில்லை. ஆதிச் சமுதாய வரலாற்றைப் பயில்வதில் அவர் ஏற்படுத்திய ஒழுங்கு முறை, அதன் பிரதான அமைப்பு அம்சங்களில், இன்றைய நாள் வரைக்கும் சரியாகவே இருந்து வருகிறது. இந்த மகத்தான முன்னேற்றத்துக்கு அவர்தான் ஆரம்பகர்த்தா என்ற விஷயம் எந்த

அளவுக்கு மூடிமறைக்கப்பட்டு வருகிறதோ[1], அதே அளவுக்கு அதைப் பொதுவாக ஏற்றுக்கொள்வதும் அதிகமாகிவருகிறது என்று கூட நாம் சொல்ல முடியும்.

பிரெடெரிக் எங்கெல்ஸ்

லண்டன், 1891, ஜூன் 16.
''ஆதி காலத்திய குடும்பத்தின் வரலாறு'' என்ற தலைப்பிட்ட ஒரு கட்டுரை வடிவத்தில், "Neue zeit" (''தற்காலம்'') என்ற சஞ்சிகையில் முதன்முதலில் 1891ல் வெளியிடப்பட்டது

[1] 1888 செப்டம்பரில் நான் கப்பலேறி நியூயார்க்கிலிருந்து திரும்பும் வழியில் அமெரிக்கச் சட்டசபையில் ராசெஸ்டருக்குப் பிரதிநிதியாயிருந்த ஒரு மாஜி அங்கத்தினரைச் சந்தித்தேன். அவருக்கு ஓரவிஸ் மார்கனைத் தெரியும். ஆனால் துரதிர்ஷ்டவசமாக அவரைப் பற்றி இவரால் கொடுக்க முடிந்த தகவல் மிகச் சொற்பமே. அவர் சொன்னதாவது: ஓரவிஸ் மார்கன் ராசெஸ்டர் நகரில் தமது ஆராய்ச்சிகளில் கவனஞ்செலுத்துவதோடு நின்றுவிட்ட ஒரு சாதாரணப் பிரஜையாக வாழ்ந்து வந்தார். அவருடைய சகோதரர் ராணுவத்தில் கர்னல் பதவியிலிருந்தார்; வாஷிங்டன் நகரில் யுத்த இலாகாவில் பதவி வகித்திருந்தார். சகோதரரின் சிபார்சுகளைக் கொண்டு தமது ஆராய்ச்சிகளில் சர்க்கார் அக்கறை காட்டும்படி செய்வதிலும், பொதுச்செலவில் தமது பல நூல்களை வெளியிடச் செய்வதிலும் வெற்றிபெற்றார். இந்த மாஜி அங்கத்தினர் சட்டசபையிலிருந்தபோது இதில் தாமும் உதவி செய்ததாகச் சொன்னார். (எங்கெல்ஸ் குறிப்பு.)

# குடும்பம், தனிச்சொத்து, அரசு
# ஆகியவற்றின்
# தோற்றம்

I

# பண்பாட்டின் ஏடறிந்த வரலாற்றுக்கு முந்திய கட்டங்கள்

மனித குலத்தின் ஏடறியாவரலாற்றுத் துறையில் ஒரு திட்டவட்டமான ஒழுங்கு முறையைத் திறன்மிகுதியுள்ள அறிவுடன் புகுத்த முயன்றவர்களில் மார்கனே முதல்வராவார். மேற்கொண்டு முக்கியமான விஷயாதாரங்கள் கிடைத்துத் திருத்தங்களுக்கு அவசியமுண்டாக்கிளுலொழிய அவரது வகைதொகுப்புமுறை தொடர்ந்து அமுலிலிருந்து வரும் என்று எதிர்பார்க்கலாம்.

காட்டுமிராண்டி நிலை, அநாகரிக நிலை, நாகரிக நிலை என்ற மூன்று பிரதான சகாப்தங்களில் முதலிரண்டு நிலைகளைப் பற்றியும் மூன்றுவது நிலைக்கு மாறிச்செல்வது பற்றியும் அவர் அக்கறை கொண்டிருந்தார் என்பது இயல்பே. இவ்விரு சகாப்தங்கள் ஒவ்வொன்றையும் கடைக்கட்டம், இடைக்கட்டம், தலைக்கட்டம் என்று மூன்று கட்டங்களாக அவர் உட்பிரிவுகள் செய்திருக்கிருர்; உயிர் வாழ்வதற்குரிய பொருட்சாதனங்களை உற்பத்தி செய்வதில் பெற்ற முன்னேற்றத்துக்குத் தக்கபடி அந்த உட்பிரிவுகளைச் செய்திருக்கிருர். ஏனெனில், அவர் சொல்வதுபோல்: ''புவிமேல் மனிதன் தலையாய நிலை ஏற்படுத்திக்கொள்ளும் பிரச்சினை முழுவதும் இந்தத் துறையில் அவன்

அடைந்துள்ள திறனைப் பொறுத்துத் தானிருந்தது. ஜீவராசிகளில் மனிதகுலம் ஒன்றுதான் உணவு உற்பத்தியில் பரமமான கட்டுப்பாடு பெற்றிருந்தது என்று சொல்லலாம். உயிர்வாழ்வதற்குரிய மூலாதாரங்களின் பெருக்கத்தை வைத்துத்தான் மனிதகுல முன்னேற்றத்தின் மகத்தான சகாப்தங்கள் ஏறத்தாழ நேரடியாக அடையாளங்கண்டுகொள்ளப்பட்டிருக்கின்றன''. குடும்பத்தின் பரிணாமம் இதோடு சேர்ந்தே நடைபெறுகிறது; ஆனால் இந்தப் பரிணாமத்தின் கட்டங்களை வரம்பு செய்து காட்டுவதற்கு மேற்சொன்னபடி நிர்ணயமாயிருக்கக்கூடிய ஆதாரக் கோல்களை அது தரவில்லை.

## 1. காட்டுமிராண்டி நிலை

1. **கடைக்கட்டம்.** இது மனிதகுலத்தின் குழந்தைப் பருவமாகும். மனிதன் தனது ஆரம்ப இருப்பிடமான உஷ்ணப் பிரதேச அல்லது அரை உஷ்ணப் பிரதேசக் காடுகளிலேதான் இன்னும் வசித்துவந்தான்; குறைந்தபட்சம் அரைகுறையாகவாவது மரங்களில்தான் குடியிருந்து வந்தான். கொன்று தின்னும் பெரிய மிருகங்களின் எதிரே அவன் தொடர்ந்து தப்பிவாழ்வதை இது ஒன்றுதான் விளக்குகிறது. பழங்கள், கொட்டைகள், கிழங்குகள் அவனுக்கு உணவாகப் பயன்பட்டன. ஓசைச்சீருள்ள பேச்சு அமையப் பெற்றதுதான் இந்தக் கட்டத்தின் பிரதான சாதனையாகும். வரலாற்றுக் காலத்தில் தெரியவந்திருக்கிற மக்கள் சமூகங்கள் எதுவுமே இந்த ஆதிமனித நிலையில்

இருக்கவில்லை. இந்தக் காலப்பகுதி பல்லாயிரக் கணக்கான வருடங்களுக்கு நீடித்திருக்கக்கூடும் என்றாலும் அது இருந்ததைக்குறித்து நேரடியான ருஜு எதுவுமில்லை; ஆனால், மிருக ராசியிலிருந்து மனிதன் தோன்றினான் என்பதை ஒத்துக்கொண்டால் இந்த மாற்றக் காலகட்டத்தை ஒத்துக்கொள்வதைத் தவிர்க்கமுடியாது.

2. **இடைக்கட்டம்.** உணவுக்காக மீன்களை (இதன் வகையில் நண்டுகள், சங்குகள், நீரில் வாழும் இதர ஜீவராசிகளையும் சேர்த்தே நாம் பேசுகிறோம்) உபயோகித்துக்கொள்வது, நெருப்பைப் பயன்படுத்திக்கொள்வது ஆகியவற்றுடன் இந்தக் கட்டம் தொடங்குகிறது. இவ்விரண்டும் ஒன்றையொன்று சார்ந்துள்ளன; ஏனெனில் நெருப்பை உபயோகிப்பதால் மட்டுமே மீனுணவு பூர்ணமாகக் கிடைக்கப்பெறும். இருந்தபோதிலும், இந்தப் புதிய உணவு மனிதனைச் சீதோஷ்ண நிலையிலிருந்தும் வட்டாரத்திலிருந்தும் சுதந்திரமடையச் செய்தது. நதிகளையும், கரையோரங்களையும் பின்பற்றிச் செல்வதின் வழியாக, காட்டு மிராண்டி நிலையிலும்கூட மனிதன் உலக நிலப்பரப்பின் பெரும் பகுதியில் பரவிப்படரமுடிந்தது. பாலியோலிதிக் யுகம் என்று அழைக்கப்படுகிற ஆரம்பக் கற்காலத்தைச் சேர்ந்த கரடுமுரடான, பட்டை தீட்டப்படாத கற்கருவிகள் முழுவதாகவோ மிகப்பெரும் பான்மையாகவோ இந்தக் கட்டத்துக்குத் தான் உரியவை. அந்தக் கற்கருவிகள் எல்லாக் கண்டங்களிலும் சிதறிக்கிடக்கின்றன. இந்த மனித குடிமாற்றங்களுக்கு இவை ருஜுவாகும். புதிதாக வசப்

படுத்தப்பட்ட பிரதேசங்களும் சரி, கண்டுப்பிடிப்பில் காட்டிவந்த இடையருத செயல்பூர்வமான வேட்கையும் சரி, இத்துடன் இணைந்தாற்போலுள்ள உரைசல்மூலம் தீயுண்டாக்கும் கலையில் ஆட்சியும் சரி இவையனைத்தும் மாவு தரத்தக்க கிழங்கு வகைகள் போன்ற புதிய உணவுப்பொருட்களையும் —வெப்பமுள்ள சாம்பலிலோ அல்லது குழி அடுப்புகளிலோ இவை வேகவைக்கப்பட்டன, இறைச்சியையும்—சிலம்பம், ஈட்டி ஆகிய முதல் முதல் தோன்றிய ஆயுதங்களைச் சிருஷ்டித்தபிறகு அவ்வப்பொழுது இது உணவோடு சேர்த்துக்கொள்ளப்பட்டது—கிடைக்கச் செய்தன. வேட்டைத்தொழில் **ஒன்றைமட்டும்** கொண்டு உயிர் வாழ்கின்ற மக்கள் சமூகங்கள் என்று புத்தகங்களில் குறிக்கப்படுகின்றனவே, அவை என்றைக்கும் இருந்ததில்லை; ஏனெனில் வேட்டையால் பலன்கள் கிடைக்கும் என்பது ரொம்பவும் நிச்சயமற்றது; எனவே அது சாத்தியமில்லை. உணவுப்பொருட்களுக்குரிய மூலாதாரங்கள் தொடர்ந்து நிச்சயமற்றிருந்து வந்ததின் விளைவாக இந்தக் கட்டத்தில் மனிதனைத் தின்னும் முறை உண்டாகி அது ரொம்ப காலத்துக்கு நீடித்ததுபோல் தெரிகிறது. ஆஸ்திரேலியர்களும் பொலினீசியர்களும் இந்நாளிலுங்கூடக் காட்டுமிராண்டி நிலையின் இந்த இடைக்கட்டத்திலேயே இருந்துவருகின்றனர்.

3. **தலைக்கட்டம்.** வில்லும் அம்பும் கண்டுபிடிக்கப்பட்டதிலிருந்து இது தொடங்குகிறது. இதனால் காட்டுமிருக இறைச்சி ஒழுங்காகச் சாப்பாட்டுக்குக் கிடைக்கிற உணவுப்பொருளாக அமைந்

தது, வேட்டையாடுதலும் ஒரு சகஜமான தொழி லாயிற்று. வில், நாண், அம்பு ஆகியவை கூட்டா யமைந்த ஒரு கருவியின் தொகையாகும்; அதைச் சிருஷ்டிக்கிறதென்ருல் அதற்குமுந்தி வெகுகால மாகச் சேகரித்துவந்த அனுபவமும் கூர்மைப்படுத் தப்பட்ட புத்தி பலமும் இருந்திருக்க வேண்டும், அதன் விளைவாக இதர பல புதுப்படைப்புகளும் அதே சமயத்தில் அறிந்துவைத்திருக்கவேண்டும். வில்லம்புகளோடு பழக்கப்பட்டிருந்த போதிலும் மண்பாண்டங்களைச் செய்யும் கலையை இன்னும் அறிந்திராத (இந்தக் கலை அநாகரிக நிலைக்கு மாறிச்செல்வதின் ஆரம்பத்தைக் குறிக்கிறது என்று மார்கன் கருதுகிருர். மக்கள் சமூகங் களை ஒப்புநோக்கினல், இந்த ஆரம்பக் கட்டத் தில் கூட, கிராமம் கிராமமாகக் குடியமைத்துத் தங்குவதின் ஆரம்ப நிலைகளைப் பார்க்கிருேம், மரத் தால் செய்த கலயங்கள், சாமான்கள், நாரிலிருந்து (தறியில்லாமல்) கைவிரல்களால் துணிநெய்தல், நாரைக் கொண்டோ அல்லது நாணல் புல்லைக் கொண்டோ கூடைகளை முடைதல், பட்டை தீட்டப் பட்ட(புதிய கற்காலத்தைச் சேர்ந்த) கற்கருவிகள் ஆகிய ஜீவனேபாயத்திற்குரிய சாதனங்களை உற் பத்தி செய்வதில் ஓரளவுக்குத் தேர்ச்சியடைந் திருப்பதையும் பார்க்கிருேம். மேலும், பெரும்பா லான இடங்களில் நெருப்பும் கற்கோடாலியும் கொண்டு மரத்தைக் குடைந்து ஓடம் செய்யப்பட் டுவிட்டது; சில இடங்களில் வீடுகட்டுவதற்கு மரக் கட்டைகளும் பலகைகளும் செய்யப்பட்டுவிட் டன. உதாரணமாக, இந்த முன்னேற்றங்களை எல்

லாம் வடமேற்கு அமெரிக்க இந்தியர்களிடையே காணலாம். இவர்களுக்கு வில்லும் அம்பும் பழக்க மானவைதான்; ஆனல் மண்பாண்டக் கலையைப்பற் றித் தெரியாது. அநாகரிக நிலைக்கு எப்படி இரும்பு வாள் நிர்ணயமான ஆயுதமாக விளங்கியதோ, நா கரிக நிலைக்குத் துப்பாக்கி வகையறு எப்படி நிர்ணய மான ஆயுதமாக விளங்கியதோ அதுபோலத்தான் காட்டுமிராண்டி நிலைக்கு வில்லும் அம்பும் நிர் ணயமான ஆயுதமாக விளங்கின.

## 2. அநாகரிக நிலை

1. **கடைக்கட்டம்.** மண்பாண்டங்கள் புகுந்த காலத்திலிருந்து இது தொடங்குகிறது. கூடைகளும் மரக்கலயங்களும் நெருப்பு படுவதால் எரிந்து போகாமல் இருப்பதற்காக அவற்றின் மீது களிமண் ணைப் பூசுவதிலிருந்து இந்தக் கலை தோன்றி யிருக்கிறது. இதைப் பல இடங்களில் கண்கூடாகக் காட்டலாம்; அநேகமாக எல்லா இடங்களிலும் இப்படித் தான் நடந்திருக்கும். அப்படிக் களி மண்ணைப் பூசப் போய், உள்ளே கலயம் இல் லாமலே உருவமமைந்த களிமண்ணே பாண்ட மாகப் பயன்பட முடியும் என்பது சீக்கிரத்தில் கண்டுபிடிக்கப்பட்டது.

இந்த முனை வரைக்கும் பரிணமம் சென்ற போக்கு ஒரு திட்டவட்டமான காலப்பகுதிக்குப் பிரதேச வித்தியாசம் எதுவுமின்றி எல்லா மக்களுக் கும் பொதுவாகச் செல்லத்தக்கதாகும் என்று நாம் கருதமுடியும். ஆனல் அநாகரிக நிலை தொடங்கிய பிறகு, நாம் ஒரு கட்டத்தை எட்டுகிறோம்; அந்தக்

கட்டத்தில் இரண்டு மாபெரும் கண்டங்களுக்கிடை யே யிருக்கிற இயற்கை நிலைகளின் வித்தியாசம் செயல்படத் தொடங்குகிறது. மிருகங்களைப் பழக் குவது, வளர்ப்பது, பயிர் சாகுபடி செய்வது— இவை அநாகரிக நிலையின் காலப்பகுதியின் விசேஷத் தன்மைபெற்ற குணம்சமாகும். பழைய உலகம் என்று சொல்லப்படுகிற இந்தக் கிழக்குக் கண்டத் தில் வீட்டில் பழக்குவதற்கு ஏற்ற அநேகமாக எல்லா மிருகங்களும், ஒரு தானியத்தைத்தவிர மற்றப்படி சாகுபடி செய்யத்தக்க எல்லாத் தானிய ராசிகளும் இருந்தன. ஆனால் மேற்குக் கண்டமாகிய அமெரிக்க கண்டத்திலோ லாமா என்கிற ஒரு மிருகம் தான் வீட்டில் பழக்கக்கூடியதாய் இருந்தது; அது வும் அக்கண்டத்தின் தெற்கிலுள்ள ஒரு பகுதியில் தான் இருந்தது. மேலும், அக்கண்டத்தில் சாகு படி செய்வதற்கும் ஒரேயொரு தானியம்தான் இருந்தது; ஆனால் அது எல்லாத் தானியங்களிலும் தலைசிறந்ததாகும். அது தான் மக்காச்சோளம். வேறுபட்ட இயற்கை நிலைமைகளின் இந்த விளைவு என்னவென்றால் அன்றிலிருந்து அந்த ஒவ்வொரு கோளத்தைச் சேர்ந்த ஜனத்தொகையும் தனக் குரிய விசேஷமான பாதையிலே சென்றுவிட்டது, மே லும், பல்வேறு கட்டங்களின் எல்லைக்கோடுகளில் அமைந்துள்ள ஸ்தல அடையாளக்குறிகளும் அவ் விரு கோளங்கள் விஷயத்திலும் ஒன்றுக்கொன்று வித்தியாசப்பட்டிருக்கின்றன.

2. **இடைக்கட்டம்.** கிழக்குக் கண்டத்தில் இது மிருகங்களைப் பழக்குவதிலிருந்து தொடங்கு கிறது; மேற்குக் கண்டத்தில், உணவுக்குரிய பயிர்

களை நீர்ப் பாசனத்தைக்கொண்டு சாகுபடி செய்வது, கட்டிடங்கள் கட்டுவதற்கு அடோபுகளையும் (சூரிய வெப்பத்தில் காய்ந்த செங்கற்கள்) கல்லையும் உபயோகிப்பது ஆகியவற்றிலிருந்து தொடங்கியது.

மேற்குக் கண்டத்திலிருந்து நாம் ஆரம்பிப்போம்; ஏனெனில் அங்கேதான் ஐரோப்பியர் ஆட்சி வரும்வரை இந்தக் கட்டம் எங்கேயும் மீறி வளரவில்லை.

அநாகரிக நிலையின் கடைக்கட்டத்தில் இந்தியர்கள் இருந்தார்கள் (மிஸ்ஸிஸிபி நதிக்குக் கிழக்கில் காணப்பட்ட மக்கள் அனைவரும் இதைச் சேர்ந்தவர்களாவர்); அவர்களைக் கண்டுபிடித்த காலத்தில் அவர்கள் ஏற்கனவே ஓரளவுக்கு மக்காச்சோளத்தைத் தோட்டச் சாகுபடி செய்து கொண்டும், ஒருவேளை பூசனிக்காய், முலாம்பழம் முதலான இதர தோட்டக் காய்கறிகளையும் பயிர் செய்து கொண்டும் இருந்தார்கள்; அவர்களின் உணவில் பெரும்பகுதியை அவையே தந்துகொண்டிருந்தன. மரத்தாலாகிய வீடுகளில் அவர்கள் வாழ்ந்தனர். சுற்றிலும் மரக்கழிகளால் அரண்செய்யப்பட்டிருந்த கிராமங்களில் குடியிருந்தார்கள். வடமேற்கிலிருந்த குலங்கள், குறிப்பாகக் கொலம்பியா நதிப் பிரதேசத்தில் வாழ்ந்துவந்தவர்கள், இன்னும் காட்டுமிராண்டி நிலையின் மேல்கட்டத்திலேயே இருந்து வந்தனர்; அவர்களுக்கு மண்பாண்டக் கலையும் பழக்கமில்லை, எவ்வகைப்பட்ட பயிர் சாகுபடியும் செய்து பழக்கமில்லை. இன்னொரு புறத்தில், நியூ மெக்ஸிகோவைச் சேர்ந்த பூயிப்ளோ-இந்தியர்கள்

எனப்பட்டவர்களும், மெக்ஸிகர்களும், மத்திய அமெரிக்கர்களும், பெருவியர்களும் ஐரோப்பிய ஆட்சி தொடங்கும் காலத்தில் அநாகரிக நிலையின் மத்திய கட்டத்திலே இருந்தனர். அடோபுகளாலும், கற்களாலும் கோட்டைபோல் கட்டப்பட்ட வீடுகளில் அவர்கள் வாழ்ந்தனர்; செயற்கைப்பாசனமுள்ள தோட்டங்களில் மக்காச்சோளத்தையும், சீதோஷ்ண நிலைக்கும், இடத்துக்கும் தக்கபடி வேறுபட்டிருந்த உண்ணத்தக்க இதர பயிர் வகைகளையும் சாகுபடி செய்தனர்; அவைதான் அவர்களின் உணவுக்குப் பிரதானமான மூலமாகும். மேலும், அவர்கள் ஒரு சில மிருகங்களைப் பழக்கி வைத்துங்கூட இருந்தனர்; வான்கோழியையும் இதர பறவைகளையும் மெக்ஸிகர்கள் பழக்கிவைத்திருந்தனர்; லாமா என்ற மிருகத்தை பெருவியர்கள் பழக்கிவைத்திருந்தனர். அதுவுமல்லாமல், அவர்கள் உலோகங்களைப் பண்படுத்தவும் தெரிந்து வைத்திருந்தார்கள். இரும்புமட்டும் இதற்கு விலக்காகும். அதனால்தான் அவர்களால் கல் ஆயுதங்களையும் கற்கருவிகளையும் இன்னும் விட்டொழிக்க முடியவில்லை. மேற்கொண்டு சுதந்திரமாக வளர்வதையெல்லாம் ஸ்பெயின் நாட்டாரின் ஆட்சி வந்து நிறுத்திவிட்டது.

கிழக்குக் கோளத்தில், பாலும் இறைச்சியும் தரக் கூடிய மிருகங்களைப் பழக்குவதிலிருந்து அநாகரிக நிலையின் இடைக்கட்டம் துவங்கியது. பயிர்ச்சாகுபடியைப் பொறுத்தவரையில், இந்தக் கட்டத்தில் ரொம்ப காலம் கழியும் வரையில் அது யாருக்கும் தெரியாமலே இருந்தது. கால்

நடைகளைப் பழக்குவது, வளர்ப்பது, பெரிய மந்தைகளாகத் திரட்டியமைப்பது—இதுதான் ஆரியர்களையும் செமைட்டுகளையும் பாக்கி அநாகரிக ஜனத்திரளிலிருந்து வேறுபடுத்திக்காட்டுவதற்குக் காரணமாயிருந்திருக்கும் போல் தோற்றுகிறது. கால்நடைகளின் பெயர்கள் ஐரோப்பிய ஆரியர்களுக்கும் ஆசிய ஆரியர்களுக்கும் இடையே இன்னும் பொதுவாகவே இருந்து வருகின்றன; ஆனால் சாகுபடி செய்யத்தக்க பயிர்களின் பெயர்கள் பொதுவாகவிருப்பது மிகவும் அரிதே.

கால்நடை மந்தைகளைத் திரட்டுவது, சௌகரியமான இடங்களில் மேய்ச்சல் வாழ்க்கைக்குக் கொண்டுபோய் விட்டது. செமைட்டுகளிடையே இவ்வாழ்க்கை யூப்ரைடீஸ், டைக்ரிஸ் நதிகளின் புல்வளமிக்க சமவெளிப் பிரதேசங்களில் ஏற்பட்டது; ஆரியர்களிடையே இது இந்தியா, ஆக்ஸஸ் நதி,[1] ஜகார்தஸ் நதி,[2] டான் நதி, நீப்பர் நதி ஆகியவற்றின் புல்வளமிக்க சமவெளிப் பிரதேசங்களிலும் ஏற்பட்டது. இப்படிப்பட்ட மேய்ச்சல் நிலங்களின் எல்லையோரங்களில் தான் மிருகங்களைப் பழக்குவது முதன் முதலாகச் சாதிக்கப்பட்டிருக்க வேண்டும். ஆகவேதான், மேய்ச்சல் வாழ்வு கொண்டுள்ள மக்கள் சமூகங்கள் உண்டான பிரதேசங்கள் மனித குலத்தின் தொட்டிலாக இருப்பதற்குப்பதிலாக, தங்களின் காட்டுமிராண்டி மூதாதையர்களுக்

[1] ஆக்ஸஸ்: இப்போது இதற்கு அமூ-தரியா என்று பெயர்.—பதிப்பாசிரியர்கள்.

[2] ஜகார்தஸ்: இதற்கு சிர்-தரியா என்று பெயர்.—பதிப்பாசிரியர்கள்.

கும், அநாகரிக நிலையின் கடைக்கட்டத்திலிருந்த மக்களுக்கும் கூட, அநேகமாக வாழ்வதற்கு லாயக்கற்ற பிரதேசங்களாகவே இருந்தன என்று பிற்காலத் தலைமுறைகளுக்குத் தென்படுகிறது. இதையே மாற்றிச் சொல்வதென்றால், அநாகரிக நிலையின் இடைக்கட்டத்தைச் சேர்ந்தவர்கள் ஒரு தரம் மேய்ச்சல் வாழ்க்கையில் ஈடுபட்டார்களோ இல்லையோ, பிறகு புல்லும் நீரும் நிறைந்த சமவெளிப் பிரதேசங்களைத் தாமாகவே விட்டுவிட்டுத் தமது மூதாதையர்களின் வாசஸ்தலமாயிருந்த காட்டுப் பிரதேசங்களுக்குத் திரும்பிச் சென்றுவிடவேண்டுமென்று என்றைக்குமே அவர்களுக்குத் தோன்றியிருக்காது. ஆரியர்களும் செமைட்டுகளும் மேலும் வடக்கேயும் மேற்கேயும் துரத்தப்பட்ட போதுங் கூட மேற்கு ஆசிய, ஐரோப்பிய காட்டுப் பிரதேசங்களில் நிலையாகக் குடிதங்குவதற்கு முடியாமலிருந்தது. தானிய வகைகளைச் சாகுபடி செய்வதின் வழியாகத் தமது கால்நடைகளுக்கு இந்தச் சௌகரியக்குறைவான மண்ணில் தீவனம் போட முடிந்த பிறகுதான், குறிப்பாக அங்கு குளிர்காலத்தைக் கழிக்க முடிந்தபிறகுதான், அவர்கள் அந்தப் பிரதேசங்களில் நிலையாகக் குடி தங்கி வாழமுடிந்தது. கால்நடைகளுக்குத் தீவனம் போடவேண்டிய அவசியத்தை முக்கியமாக முன்னிட்டுத்தான் இங்கே தானிய வகைகளைச் சாகுபடி செய்வது கொண்டுவரப்பட்டது, கொஞ்சகாலங்கழிந்த பிறகுதான் அது மனித ஊட்டத்துக்கு முக்கியமானதாயிற்று என்பதே அனேகமாக உண்மையாகவிருக்கும்.

ஆரியர்களிடையேயும் செமைட்டுகளிடையே

யும் உணவுத்திட்டத்தில் இறைச்சியும் பாலும் நிறைய இருந்தன என்ற விஷயமும், குறிப்பாகக் குழந்தைகள் வளர்ப்பில் இந்த உணவு வகைகளால் உண்டான அனுகூலகரமான விளைவுகளும், இவ்விரு இனங்களின் மேலான வளர்ச்சியை ஒருவேளை விளக்கக் கூடும். உண்மையிலே பார்த்தால், அநேகமாகத் தாவர உணவு மட்டும் உட்கொள்ளும் நிலைக்கு வந்துவிட்டிருக்கிற நியூ மெக்ஸிகோவைச் சேர்ந்த பியூப்ளோ இந்தியர்களுக்கு இருக்கிற மூளை, அநாகரிக நிலையின் கடைக்கட்டத்திலிருக்கும், இறைச்சியையும் மீனையும் அதிகமாகச் சாப்பிடும் இந்தியர்களுக்கு இருக்கிற மூளையை விடச் சிறியதாகும். இது எப்படி இருந்தபோதிலும், இந்தக் கட்டத்தில் மனித மாமிசத்தை யுண்ணும் முறை கொஞ்சங்கொஞ்சமாக மறைந்தொழிகிறது; ஒரு மதச்சம்பந்தப்பட்ட சடங்காகவோ அல்லது இவ்விஷயத்தில் அநேகமாக அத்துடன் ஒன்றுபோலிருக்கிற பில்லிசூனியமாகவோ தான் அது மிஞ்சியிருந்துவருகிறது.

**3. தலைக்கட்டம்.** இரும்புக்கனியம் உருக்கப்படுவதிலிருந்து இது தொடங்குகிறது. வரிவடிவத்தில் எழுதுவதைப் புனைந்தது, இலக்கியச் சாசனங்களுக்காக அதைப் பயன்படுத்தியது ஆகியவற்றின் வழியாக இந்தக் கட்டம் நாகரிக நிலைக்கு மாறிச் செல்கிறது. ஏற்கனவே நாம் கவனித்துள்ளபடி, இந்தக் கட்டம் கிழக்குக் கோளம் ஒன்றில்தான் சுதந்திரமாகக் கடக்கப்பட்டது; இந்தக் கட்டத்தில் கண்ட உற்பத்தியின் முன்னேற்றம் அதற்குமுந்திய கட்டங்களனைத்தின் மொத்த உற்பத்தியைவிட

அதிகமாகும். 'மாவீரர் சகாப்தத்தைச் சேர்ந்த கிரேக்கர்களும், ரோமாபுரி ஸ்தாபிக்கப்படுவதற்குச் சற்று முன்னர் இருந்த இத்தாலியக் குலங்களும், டாஸிடஸ் காலத்திய ஜெர்மானியர்களும், வைகிங்குகளின் காலத்திய நார்மன்களும் இந்தக் கட்டத்தைச் சேர்ந்தவர்களாவர்.

எல்லாவற்றிற்கும் மேலாக, மாடுகள் இழுத்துச்செல்லும் இரும்புக்கலப்பைக் கொழுவை இங்கேதான் முதல் முதலில் சந்திக்கிறோம். விரிந்த அளவில் நிலத்தை உழுது பண்படுத்துவதை இது சாத்தியமாக்கிற்று; மேலும், அன்றைய நிலைமைகளில், உயிர்வாழ்வதற்குரிய சாதனங்கள் நடைமுறையில் வரம்பற்ற விதத்தில் பெருகுவதையும் சாத்தியமாக்கிற்று. இது சம்பந்தமாக, காடுகள் வெட்டித் திருத்தப்பட்டு வயல்களாகவும் மேய்ச்சல் நிலங்களாகவும் மாற்றப்படுவதையும் நாம் பார்க்கிறோம். இரும்புக் கோடாலியும் மண்வெட்டியும் இல்லாமல் இதுவும் விரிந்த அளவில் சாத்தியமாயிருந்திருக்காது. ஆனால் இத்துடன் ஜனத்தொகையும் துரிதமாகப் பெருகிற்று, சிறு சிறு வட்டாரங்களில் அடர்த்தியான ஜனத்தொகைப் பெருக்கமும் ஏற்பட்டது. நிலத்தை உழுது பண்படுத்தும் காலத்துக்கு முன்னால், மிகவும் அசாதாரணமான சூழ்நிலைமைகள்தான் ஒரே மத்தியத் தலைமையின் கீழ் ஐந்து லட்சம் மக்களை ஒன்றாய்த் திரட்டியிருக்கமுடியும். அநேகமாக இப்படி என்றைக்குமே நடந்ததில்லை.

ஹோமரின் கவிதைகளில், குறிப்பாக ''இலியாத்''தில், அநாகரிக நிலையின் தலைக்கட்டம் உச்சி

யிலிருப்பதைக் காண்கிறோம். மேம்படுத்தப்பட்ட இரும்புக்கருவிகள், துருத்திகள், மாவரைக்கும் திரிகை, குயவனின் சக்கரம், எண்ணெய், திராட்சை ரச மது தயாரிப்பு, ஒரு கலையாக வளர்ச்சிபெற்ற உலோகத் தயாரிப்பு, பாரவண்டிகள், யுத்தரதங்கள், மரப்பலகைகளும் மரச்சட்டங்களும் கொண்டு கப்பல் கட்டுதல், கட்டிடச்சிற்பம் கலையாக வளரத் தொடங்கிய நிலை, கோபுரங்களும், கொத்தளங்களும் அமைந்த மதில் சுவர்கள் சூழ்ந்த நகரங்கள், ஹோமரின் இதிகாசம், கிரேக்க புராணம் முழுமையும்—இவைதான் கிரேக்கர்கள் அநாகரிக நிலையிலிருந்து நாகரிக நிலைக்கு மாறிவந்த இடைக்காலத்தில் கொண்டுவந்த பூர்வீகச்சம்பத்துக்களாகும். ஹோமர் சித்திரித்த கிரேக்கர்கள் எந்தக் கலாச்சாரக் கட்டத்திலிருந்து அதைவிட மேலான கட்டத்துக்கு முன்னேறுவதற்குத் தயாராகிக்கொண்டிருந்தார்களோ, அந்தக் கலாச்சாரக் கட்டத்தின் வாயிற்படியில் கால் வைக்கத் தொடங்கியிருந்த ஜெர்மானியர்களைப்பற்றி சீஸரும் டாஸிடஸும் வர்ணித்து இருக்கிறார்கள். கிரேக்கர்களின் மேற்குறிப்பிட்ட பூர்வீகச் சம்பத்துகளுடன் இந்த வர்ணனைகளை ஒப்புநோக்கினால், அநாகரிக நிலையின் தலைக்கட்டத்தில் உற்பத்தி எவ்வளவு செழிப்பாக வளர்ந்திருந்தது என்று நாம் பார்க்கலாம்.

காட்டுமிராண்டி நிலை, அநாகரிக நிலை இவற்றின் வழியே மனிதகுலம் நாகரிக நிலையின் ஆரம்பத்துக்கு எட்டியுள்ள பரிணாமத்தை இங்கு நான் மார்கனைப் பின்பற்றிச் சித்திரித்திருக்கிறேன். இந்தச் சித்திரத்தில் புதிதான, இன்னும் முக்கியமாக,

சர்ச்சைக்கிடமற்ற குணவிசேஷங்கள் ஏற்கனவே மண்டிக்கிடக்கின்றன. சர்ச்சைக்கிடமற்றவை என்று சொல்வதற்குக் காரணம் அவையெல்லாம் நேரடியாக உற்பத்தியிலிருந்து பெறப்பெற்றவை. இருந்த போதிலும் நமது பயணத்தின் முடிவில் காணப் போகும் சித்திரத்துடன் ஒப்புநோக்கும் போது இது மங்கலாகவும், அற்பசொற்பமாகவும் தோன்றும். அப்போதுதான், அநாகரிக நிலையிலிருந்து நாகரிக நிலைக்கு மாறிவந்த இடைக்கால மாற்றத்தைப் பற்றியும் அவ்விரண்டுக்குமிடையேயுள்ள பெருத்த வேறுபாட்டைப்பற்றியும் ஒரு முழுத் தோற்றத்தைக் காட்டுவது சாத்தியப்படும். தற்சமயத்துக்கு மார்கனின் காலவரிசைமுறையைப் பின்வருமாறு நாம் பொதுமைப்படுத்தமுடியும்: காட்டுமிராண்டி நிலை—உபயோகத்துக்குத் தயாராகவிருந்த இயற்கைப் பொருட்களை உபயோகிப்பதே மிகப்பெரும் பான்மையாயிருந்த ஒரு நிலை; மனிதன் உற்பத்தி செய்த பொருட்கள், பிரதானமாக, இப்படி உபயோகிப்பதற்கு வசதி செய்துகொடுக்க அமைந்த கருவிகளே யாகும். அநாகரிக நிலை—கால்நடை வளர்ப்பு, நிலச்சாகுபடி பற்றிய அறிவு பெறப்பட்ட நிலை இது; மனித நடவடிக்கைகளின் மூலமாக இயற்கையின் உற்பத்தித் திறனை அதிகரிக்கச் செய்யும் வழிமுறைகள் கற்றுக்கொள்ளப்பட்ட நிலை இது. நாகரிக நிலை—இயற்கைப் பொருட்களை மேலும் பண்படுத்திக்கொள்வதுபற்றியும், கம்மியத் தொழிலையே பற்றியும், கலையைப்பற்றியும் அறிவு பெறப்பட்ட நிலை இது.

## II

## குடும்பம்

மார்கன் தமது வாழ்க்கையில் பெரும்பகுதியை இரோகுவாய்களிடையே கழித்தார். அவர்கள் நியூயார்க் மாகாணத்தில் இன்னும் வாழ்ந்துவருகிறார்கள். அவர்களில் (செனீகா என்ற) ஒரு குலத்தினர் அவரைச் சுவீகரித்து ஏற்றுக் கொண்டிருந்தார்கள். அவர்களிடையே அவர் ஒரு ரத்த உறவு முறையைக் கண்டார்; அது அவர்களுடைய யதார்த்தக் குடும்ப உறவுமுறைகளுக்கு முரண்பட்டிருந்தது. திருமணம் ஒவ்வொரு ஜோடிக்கிடையே நடைபெற்றது; இரு தரப்பினரும் மண உறவைச் சுலபமாக ரத்து செய்துவிடலாம். இதை ''இணைக் குடும்பம்'' என்று மார்கன் குறிப்பிட்டார். இந்த மணமுறைதான் அவர்களிடையே விதியாயிருந்தது. இந்தத் திருமண ஜோடியின் குழந்தைகளை எல்லோரும் அறிந்திருந்தார்கள், எல்லோரும் அடையாளங்கண்டு கொண்டிருந்தார்கள். தகப்பனார், தாயார், மகன், மகள், சகோதரன், சகோதரி என்று யார் யாரைக் குறிப்பிடுவது என்பது பற்றிச் சந்தேகம் எதுவும் எழமுடியாது. ஆனால் அந்தச் சொற்களை யதார்த்தத்தில் பிரயோகித்ததோ நேரெதிராக இருந்தது. ஓர் இரோகுவாய் தனது சொந்தக் குழந்தைகளை மட்டும் தனது குமாரர்கள், குமாரத்திகள் என்றழைப்பதில்லை, தனது சகோதரனின் குழந்தைகளையும் தனது குமாரர்கள், குமாரத்திகள் என்றே அழைக்கிறான். அவர்களும் அவனை அப்பா என்றே அழைக்கிறார்கள்.

இன்ெனாரு பக்கத்தில் பார்த்தால், அவன் தனது சகோதரியின் குழந்தைகளை மருமகன், மருமகள் என்று அழைக்கிறான்; அவர்கள் அவனை மாமா என்று அழைக்கிறார்கள். இதற்கு எதிரிடையாக, ஓர் இரோகுவாய் பெண் தனது சகோதரிகளின் குழந்தைகளைத் தனது சொந்தக் குழந்தைகளோடு சேர்த்துத் தன் குமாரர்கள், குமாரத்திகள் என்றே அழைக்கிறாள்; அவர்களும் அவளை அம்மா என்றே அழைக்கிறார்கள். இன்னொரு பக்கத்தில் அவள் தன் சகோதரர்களின் குழந்தைகளை மருமகன், மருமகள் என்று அழைக்கிறாள்; அவர்கள் அவளை மாமி என்று அழைக்கிறார்கள். இதேபோலத்தான் சகோதரர்களின் குழந்தைகள் ஒருவரையொருவர் அண்ணன் தம்பி, அக்கா தங்கை என்றே அழைக்கிறார்கள்; சகோதரிகளின் குழந்தைகளும் அப்படியேதான் ஒருவரையொருவர் அழைத்துக்கொள்கிறார்கள். இதற்கு எதிரிடையாக, ஒரு பெண்ணின் குழந்தைகளும் அவளுடைய சகோதரனின் குழந்தைகளும் ஒருவரையொருவர் தாயாதி என்று அழைக்கிறார்கள். இவையெல்லாம் அர்த்தமில்லாத வெறும் சொற்களல்ல; இரத்த உறவு முறையிலிருக்கிற நெருங்கின தன்மையையும் விலகிய தன்மையையும், சமத்துவத்தையும் சமத்துவமின்மையையும் பற்றி நடைமுறையில் அமுலிலிருந்துவருகிற கருத்துக்களைக் குறிக்கும் சொற்களாகும். இந்தக் கருத்துக்கள் முழுமையாக உருவாக்கப்பட்ட ஒரு ரத்த உறவு முறைக்கு அடிப்படையாகப் பயன்படுகின்றன. ஒரேயொரு தனிநபரின் நூற்றுக்கணக்கிலே வேறுபட்ட உறவுமுறைகளை இது குறிப்பிட்டுச்

சொல்லமுடியும். மேலும், இது அமெரிக்க இந்தியர்களிடையில் முழு சக்தியுடன் அமுலிலிருக்கிறதோடுமட்டுமல்ல (இதற்கு விதிவிலக்காக ஒன்றேனும் இதுவரை கண்டுபிடிக்கப்படவில்லை), இந்தியாவின் பூர்வீகக் குடிகளிடையேயும், தக்ஷிணப் பிரதேசத்திலுள்ள திராவிடக் குலங்களிடையேயும், ஹிந்துஸ்தானத்திலுள்ள கௌரா குலங்களிடையேயும் இது அநேகமாக மேனியழியாது அப்படியே நிலவிவருகிறது. தென்னிந்தியாவிலுள்ள தமிழர்களின் இரத்த உறவுகளைக் குறிக்கும் சொற்களும் நியூயார்க் மாகாணத்திலுள்ள செனீகா-இரோகுவாய்களின் இரத்த உறவுமுறைகளைக் குறிக்கும் சொற்களும் இரு நூற்றுக்கும் மேற்பட்ட உறவுகள் விஷயத்தில் ஒன்றுகவே இன்று வரைக்கும் கூட இருந்துவருகின்றன. எல்லா அமெரிக்க இந்தியர்களிடையேயும் இருக்கிறதுபோலவே இந்தியாவிலுள்ள இந்தக் குலங்களிடையேயும் இருந்துவருகிற குடும்பவடிவத்திலிருந்து தோன்றும் உறவுமுறைகள் ரத்த உறவு முறைக்கு முரண்பாடாக அமைந்துள்ளன.

இதை விளக்குவது எப்படி? காட்டுமிராண்டி நிலையிலும் அநாகரிக நிலையிலும் எல்லா மக்கள் சமூகங்களின் சமுதாய ஏற்பாட்டிலும் இரத்த உறவு முறை நிர்ணயமான பாத்திரம் வகிக்கிறது; அதைக் கவனிக்கும்போது, அவ்வளவு விரிந்து பரந்துகிடக்கும் ஓர் அமைப்பை வெறும் சொற்றொடர்களை வீசி விளக்கிவிட்டதாகத் தட்டிக்கழிக்கமுடியாது. பொதுவாக அமெரிக்கா முழுவதிலும் இருந்துவருகிற ஓர் அமைப்பு அது; ஆசியாவில் அறவே மாறுபட்ட

இனத்தைச் சேர்ந்த மக்கள் சமூகங்களிடையேயும் அது இருக்கிறது; மேலும், அதன் ஏறத்தாழ வித்தியாசப்பட்ட வடிவங்கள் ஆப்பிரிக்கா முழுவதிலும் ஆஸ்திரேலியா முழுவதிலும் மண்டிக்கிடக்கின்றன. அப்படிப்பட்ட அமைப்பைச் சரித்திர ரீதியாக விளக்குவது அவசியம்; மாக்லென்னன் முயன்றதுபோல் அதைத் தட்டிக்கழிக்கமுடியாது. தகப்பன், தாய், சகோதரன், சகோதரி என்ற சொற்கள் வெறும் மரியாதையைக் குறிக்கும் பட்டப்பெயர்களல்ல; அவை பரமதிட்டமான, மிகக் கடுமையான பரஸ்பரக் கடமைகளைத் தாங்கிச்செல்கின்றன; அந்தக் கடமைகளின் முழுமை இந்த மக்கள் சமூகங்களின் சமுதாய அமைப்புத்திட்டத்தில் ஒரு முக்கியப் பகுதியாயமைந்துள்ளது. அதற்குரிய விளக்கமும் கண்டுபிடிக்கப்பட்டது. இன்றைய நூற்றாண்டின் முதற்பாதியிலுங்கூட சான்ட்விச் (ஹவாயி) தீவுகளில் ஒரு குடும்ப வடிவம் இருந்து வந்தது; அமெரிக்க ரத்த உறவு முறையும் பண்டைக்கால இந்திய ரத்த உறவு முறையும் கோருகிற அதே மாதிரியான தாய் தகப்பன்மார்களையும், சகோதர சகோதரிகளையும், குமார குமாரத்திகளையும், மாமா அத்தைமார்களையும், மருமகன் மருமகள்களையும் அது கொண்டிருந்தது. ஆனால் இதில் அதிசயமென்னவெனில், ஹவாயியில் நிலவிய ரத்த உறவு முறையும் அங்கு யதார்த்தத்தில் இருந்த குடும்ப வடிவத்தோடு முரண்பட்டுக் கிடந்ததுதான். அங்கே, ஒன்றுவிட்ட சகோதர சகோதரிகள் எல்லோரும் விதி விலக்கென்பதின்றி சகோதர சகோதரிகளாகவும், தங்களுடைய தாயாருடையவும்

அல்லது பெரியம்மா சின்னம்மாக்களுடையவும் பொதுவான குழந்தைகளாகவும் மட்டுமின்றி, அல்லது தங்களுடைய தகப்பனுருடையவும் பெரியப் பாசிற்றப்பாக்களுடையவும் பொதுவான குழந்தைகளாகவும் மட்டு மின்றி, வேறுபாடெதுவும் பாராட்டாத வகையில் நமது பெற்ருேர்களின் எல்லாச் சகோதர சகோதரிகளுடைய பொதுவான குழந்தைகளாகவும் கருதப்பட்டனர். அமெரிக்க வகைப்பட்ட ரத்த உறவுமுறைக்கு முன்னல் ஒரு மிகவும் ஆதிகாலக் குடும்ப வடிவம் இருந்திருக்க வேண்டும் என்று சொன்னல்—இது அமெரிக்காவில் இப்போதில்லை, ஆனல் ஹவாயியில் இன்னும் நிஜமாகவே இருந்துவருகிறது—மற்ெருரு புறத்தில், ஹவாயி வகைப்பட்ட ரத்த உறவுமுறை முன்னல் அதைவிட மிகவும் பூர்வீகமான ஆதிமனிதக் குடும்ப வடிவத்தைச் சுட்டிக்காட்டுகிறது; எங்கேயாவது அது இன்னும் நிலவுவதாக நிரூபிக்கமுடியாதாயினும், அது அப்படி இருந்திருக்க **வேண்டும்**; ஏனெனில், அதின்றி அதற்குப் பொருத்தமாயுள்ள ஒரு ரத்த உறவுமுறை தோன்றியிருக்கமுடியாது. ''குடும்பம் என்பது இயக்கமுள்ள சித்தாந்தத்தையே குறிக்கிறது. அது என்றைக்கும் இயங்காதிருப்பதில்லை; சமுதாயம் கீழ்நிலையிலிருந்து மேல்நிலைக்கு முன்னேற முன்னேற, அதுவும் கீழான வடிவத்திலிருந்து மேலான வடிவத்துக்கு முன்னேறிச்செல்கிறது. ஆனல், ரத்த உறவு முறைகளோ இயக்கமற்றவை; குடும்பம் அடைகிற முன்னேற்றத்தை நீண்ட இடைவேளைகள் விட்டு விட்டு அவை குறித்து வைக்கின்றன; குடும்பம் தீவிரமாக மாறுதலடைந்துவிட்டபோது மட்டுமே

அவையும் தீவிரமாக மாறுகின்றன'' என்று மார்கன் சொல்கிறார். ''மேலும், இது அரசியல், சட்டம், மதம், தத்துவஞானம் ஆகிய அமைப்புகளுக்கும் பொதுவாகவே பொருந்தும்'' என்று மார்க்ஸ் இத்துடன் கூட்டிச்சொல்கிறார். குடும்பம் நீடித்து இருந்து வருகையில் ரத்த உறவுமுறை கட்டிதட்டிப்போகிறது; பின்சொன்னது வழக்கமான வடிவத்தில் தொடர்ந்து இருந்து வருகையில் குடும்பம் அதை மீறி வளர்ச்சியடைகிறது. அதிருக்கட்டும். பாரிஸ் மாநகருக்கருகில் கண்டெடுத்த ஒரு மிருகத்தின் எலும்புக்கூட்டின் வளர்ப்புப் பை எலும்புகளைக் கொண்டு அது வளர்ப்புப் பையில் குட்டிகளை வைத்துப் பாலிக்கும் ஒரு மிருகத்துக்குச் சொந்தமான எலும்புக்கூடு என்றும், தற்காலத்தில் ஜீவித்திராத வளர்ப்புப் பையுறுப்புள்ள அந்த மிருகராசி ஒரு காலத்தில் அங்கு ஜீவித்திருக்கவேண்டும் என்றும் குவியே எப்படித் திண்ணமாக முடிவு செய்ய முடிந்ததோ, அப்படியே நாமும் வரலாற்றுவழியே வந்துசேர்ந்த ஒரு ரத்த உறவுமுறையைக் கொண்டு அதற்குப் பொருத்தமாயுள்ள, இன்று வழக்கொழிந்த ஒரு குடும்ப வடிவம் ஒரு காலத்தில் இருந்திருந்தது என்று அதே நிச்சயத்துடன் முடிவு கட்டமுடியும்.

ரத்த உறவுமுறைகள் என்றும் குடும்ப வடிவங்கள் என்றும் மேலே குறிப்பிட்டோமே, அவை இக்காலத்தில் இருந்து வருவனவற்றிலிருந்து மாறுபட்டுள்ளன. எப்படி என்றால் ஒவ்வொரு குழந்தைக்கும் சில தகப்பனார்களும் தாயார்களும் உண்டு. ஹவாயிக் குடும்பத்தோடு பொருந்துவதாயமைந்துள்ள அமெரிக்க ரத்த உறவுமுறைப் படி சகோதரனும்

சகோதரியும் ஒரே குழந்தைக்குத் தகப்பனும் தாயுமாக இருக்கமுடியாது. மாருக ஹவாயி ரத்த உறவுமுறைப் படி பார்த்தாலோ இதுவே விதியா யிருந்திருக்கிற ஒரு குடும்பம் இருந்திருக்க வேண்டும். குடும்ப வடிவங்களின் ஒரு வரிசை நம்முன்னே எதிர்ப்படு கின்றது; நிலவிவந்தவையாக இதுவரை பொது வாக ஒப்புக் கொள்ளப்பட்டிருந்த குடும்ப வடிவங் களுக்கு நேர்முரணுக இவை இருக்கின்றன. சம்பிர தாயக் கருத்தோட்டத்துக்குத் தெரிந்திருக்கிறது ஒருதார மண முறையும், அத்துடன் தனிப்பட்ட ஆண்களிடம் பலதார மண முறையும், ஒருவேளை தனிப்பட்ட பெண்களிடம் பலபுருஷ மண முறை யும் கூட மட்டுமே. அதிகார வர்க்கச்சார்புள்ள சமுதாயம் சுமத்தியுள்ள வரம்புகள் நடைமுறையில் சந்தடியில்லாமல், வெட்கமில்லாமல் மீறப்படுகின் றன என்ற உண்மையை அது பேசாமல் அமுக்கி வைக்கிறது; ஒழுக்கம்பேசும் பிலிஸ்டைன்களின் வழக்கம் இப்படித்தான். இதற்குமாருக, ஆதிகால சமுதாயத்தின் வரலாறு பற்றிய ஆராய்ச்சி நமக் குக் காட்டுவதென்ன? ஆண்கள் பலதார மண முறையிலும் அதே சமயத்தில் பெண்கள் பலபுருஷ மணமுறையிலும் வாழ்கிற நிலைமைகளை இது வெளிப் படுத்துகிறது. ஆகவே, பொதுவான குழந்தைகள் எல்லாம் அவர்கள் எல்லோருக்கும் பொதுவானவர் களே என்று கருதப்படுகிறது; இந்த நிலைமைகளும் தம் முறைக்கு ஒரு முழுவரிசையான மாற்றங்களுக்கு ஆளாகி, கடைசியிலே ஒருதார மண முறையிலே வந்து முடிகின்றன. இந்த மாற்றங்களின் தன்மை எப்படிப்பட்டதென்ருல், பொது மணம் என்ற

பந்தத்துக்குள் அடங்கிய மக்களின் வட்டம்—ஆதியில் இது மிக விரிவாயிருந்தது—மேலும் மேலும் குறுகிக் கொண்டே வந்து, கடைசியில் ஒரு ஜோடி தம்பதிகள் மட்டுமே மிஞ்சுகிருர்கள். இன்று மேலோங்கியிருக்கும் நிலை இதுதான்.

இவ்வாறு பின்நோக்கிச்சென்று குடும்பத்தின் வரலாற்றை நிர்மாணித்த மார்கன், நமது சக ஊழியர்களில் பெரும்பான்மையோருடைய கருத்துக்கிணங்கவே, ஓர் ஆதிகால கட்டத்துக்கு வந்து சேர்ந்தார்; அதில் ஒரு குலத்திற்குள் வரைமுறையற்ற புணர்ச்சி நிலவியது; ஆக, ஒவ்வொரு பெண்ணும் சமதையாக ஒவ்வோர் ஆணுக்கும் சொந்தமாயிருந்தாள்; அதேபோல் ஒவ்வோர் ஆணும் ஒவ்வொரு பெண்ணுக்கும் சொந்தமாயிருந்தான். இப்படிப்பட்ட ஆதிகால நிலைமைபற்றிச் சென்ற நூற்ருண்டிலிருந்தே பேச்சு இருந்து வந்திருக்கிறது; ஆனுல் அது மிகவும் பொதுப்படையான பேச்சாகவே இருந்திருக்கிறது. இந்த நிலைமையை நிஜமாகவே பொருட்படுத்தி அதன் அடையாளக் குறிகளைச் சரித்திரப் பரம்பரைக் கதைகளிலும் சமயப் பரம்பரைக் கதைகளிலும் முதல் முதலில் தேடினவர் பாகோபென் என்பவரே. இது அவர் ஆற்றிய மாபெரும் பணிகளில் ஒன்ருகும். அவர் கண்டுபிடித்த அடையாளக் குறிகள் வரைமுறையற்ற புணர்ச்சி நிலவிய ஒரு சமுதாயக் கட்டத்துக்கு நம்மைக் கொண்டுபோய்விடவில்லை என்பதையும், அதை மிகவும் பின்னிட்டு வந்த குழு மணம் என்ற வடிவத்துக்குத்தான் நம்மைக் கொண்டு போய் விட்டன என்பதையும் இன்று நாம் அறிவோம்.

அந்த ஆதிகாலச் சமுதாயக் கட்டம் நிஜமாகவே இருந்திருக்கிறதென்றால், அது முன்னர் இருந்து வந்ததற்குரிய நேரடி சாட்சியங்கள் சமுதாயத் தொல் பொருள் மிச்சங்களில் பிற்பட்ட காட்டு மிராண்டிகளிடையே காணக் கிடைக்கும் என்று சிறிதேனும் எதிர்பார்க்கமுடியாதபடி அது அவ்வளவு தொன்மையான சகாப்தத்தைச் சேர்ந்ததாகும். இந்தப் பிரச்சினையைப் பரிசீலனையின் முன் வரிசையில் வைத்த பெருமை பாகோபெனையே சேர்ந்ததாகும்.[1]

மனிதவர்க்கத்தின் பால்வாழ்வில் இந்த ஆரம்பக் கட்டம் இருந்ததை மறுப்பது சமீபகாலத்தில் ஒரு பாஷன் ஆகிவிட்டது. இதன் நோக்கம் மனித வர்க்கத்தை இந்த ''அவமானத்திலிருந்து'' பாது காப்பதாகும். நேரடி சாட்சியங்கள் இல்லை என்று சொல்லிக் காட்டுவதோடல்லாமல் மற்ற மிருக ராசிகளின் உதாரணத்தையும் குறிப்பிடுகிறார்கள்.

---

[1] தாம் கண்டுபிடித்த, அல்லது அனுமானித்த விஷயத்தை பாகோபென் எவ்வளவு குறைவாகப் புரிந்துகொண்டார் என்பதற்கு, இந்த ஆதிகால நிலையை அவர் பொது மகளிர் முறை என வருணித்ததே சான்றாகும். பொது மகளிர் முறை ('ஹெதெரிஸம்') என்பது கிரேக்கச் சொல். மணமாகாத, அல்லது ஒருதார மணம் புரிந்துகொண்ட ஆண்களுக்கும், மணமாகாத பெண்களுக்கும் நடந்த கலவியைக் குறிப்பதற்காக கிரேக்கர்கள் இந்தச் சொல்லைக் கையாள ஆரம்பித்தார்கள். சமூகத்தில் நிச்சயமான மணமுறை ஒன்று வழக்கிலிருப்பதாகவும் அதற்குப் புறம்பாகவே இத்தகைய கலவி நிகழ்வதாகவும் இந்தச் சொல் எப்போதும் உணர்த்தி வந்திருக்கிறது. விலைமாதர் முறையும், குறைந்தபட்சம் நடப்பில் சாத்திய

அதிலிருந்து லெதூர்னோ ("திருமணம், குடும்பம் ஆகியவற்றின் பரிணாமம்" என்ற நூல், 1888[1]) எண்ணிறைந்த விபரங்களைச் சேகரித்தார்; மிருக ராசியிலும் கூடப் பூர்ணமாக வரைமுறையற்ற புணர்ச்சி என்பது அதன் கீழ்த்தரக் கட்டத்துக்குத் தான் உரியது என்று காட்டுவதாய் அந்த விபரங்கள் உள்ளனவாம். என்றாலும், இந்த விபரங்களனைத்தையும் கொண்டு நான் வரக்கூடிய ஒரே முடிவு இதுதான்: மனிதனையும் அவனது ஆதிகால வாழ்க்கை நிலைமைகளையும் பொறுத்த வரையில் இந்த விபரங்கள் அறவே எதையும் நிரூபிக்கவில்லை. முதுகெலும்பு படைத்த மிருகங்களிடையே நீண்ட காலப் பகுதிகளில் ஜோடியாக இணைசேர்ந்திருப்பதை உடலியல் காரணங்களைக் கொண்டு விளக்க முடியும், உதாரணமாக, பறவைகளிடையே, பெண் பறவைக்கு அடைகாக்கும் காலத்தில் துணை தேவைப்

மானது என்ற அளவிலாவது, இந்த வார்த்தையின் பொருளில் அடங்கும். இச்சொல் வேறு எந்த அர்த்தத்திலும் ஒரு போதும் உபயோகிக்கப்படவில்லை. மார்கனைப் போலவே நானும் இந்த அர்த்தத்தில் தான் இதை உபயோகிக்கிறேன். பாகோபெனின் மிக முக்கியத்துவம் வாய்ந்த கண்டுபிடிப்புகள், வரலாற்றின் பல்வேறு கட்டங்களில் ஏற்பட்ட ஆண் பெண் உறவுகள் அவ்வக்காலத்தில் மக்களது வாழ்க்கையின் யதார்த்த நிலைமைகளிலிருந்து அல்ல, அவர்களுடைய மதக் கருத்துக்களிலிருந்தே எழுந்தன என்ற அவரது விசித்திரமான எண்ணத்தால் எங்குமே நம்பமுடியாத அளவுக்கு மாய மாய்க் குழப்பப்பட்டிருக்கின்றன. (எங்கெல்ஸ் குறிப்பு.)

[1]Letourneau Ch., "L'evolution du mariage et de la famille", Paris, 1888. — **பதிப்பாசிரியர்கள்.**

படுகிறது; கண்டிப்புள்ள ஒருதார மணத்துக்குப் பறவையினத்திடையேயிருந்து உதாரணங்கள் காட்டுவது மனிதர்களைப் பொறுத்த விஷயத்தில் எதையும் நிரூபிக்காது. ஏனெனில் மனிதர்கள் பறவையினத்தின் வழிவந்தவர்களல்ல. கண்டிப்புள்ள ஒருதார மணம்தான் நன்னெறியின் உச்சியைக் குறிக்கும் என்று கருதுவதென்றால் அப்பொழுது நாடாப் புழுவுக்குத் தான் [tape worm] முதல் பரிசு வழங்கவேண்டும். அதன் உடம்பு முழுவதும் ஐம்பதிலிருந்து இருநூறு வரை பகுதிகளாக அமைந்துள்ளது; அந்த ஒவ்வொரு பகுதியும் தனித்தனியே ஆண் பிறப்புறுப்புக்களும் பெண் பிறப்புறுப்புக்களும் முழு ஐதையாகப் பெற்றிருக்கிறது; இந்த ஒவ்வொரு பகுதியிலும் தனக்குள்ளேயே புணர்ச்சி செய்தவாறே நாடாப்புழு தன் வாழ்நாள் முழுவதையும் கழிக்கிறது. அதுபோக, பாலூட்டி வளர்க்கும் மிருக இனத்தோடு மட்டும் நின்று கொண்டு நாம் கவனிப்பதானல், அவற்றிடையே வரைமுறையற்ற புணர்ச்சி, குழு மணத்தின் சூசகங்கள், பலதார மணம், ஒருதார மணம் ஆகிய பால் வாழ்வு சம்பந்தப்பட்ட எல்லா வடிவங்களையும் காண்கிறோம். பலபுருஷ மணம் ஒன்றுமட்டுந்தான் கிடையாது. இதை மனித இனம் ஒன்றுதான் சாதிக்கமுடிந்தது. நமது மிக நெருங்கின உறவினர்களாகிய நான்குகைக் குரங்குகளும் கூட [Quadrumana] ஆணும் பெண்ணும் குழு குழுவாக இணைவதில் சாத்தியமான சகல வேறுபாடுகளையும் புலப்படுத்துகின்றன. மேலும் இன்னும் நெருங்கி வந்து நான்கு மனிதக் குரங்கு வகைகளைமட்டும் கவனிக்கிறதென்றால்,

அவை சில சமயங்களில் ஒருதார மண வகையி லும் சில சமயங்களில் பலதார மண வகையிலும்[1] வாழ்கின்றன என்று மட்டுந்தான் லெதூர்னோவுக் குச் சொல்லமுடிகிறது; ஆனால் ழிரோ-தெய்லோன் மேற்கோள் காட்டிய சோஸ்யூர் அவை ஒருதார மண வாழ்க்கையில் தானுள்ளன என்று சாதிக் கிறார். வெஸ்டர்மார்க் என்பவர் தாம் எழுதிய "மானிட மணத்தின் வரலாறு" (லண்டன், 1891) என்ற நூலில்[2] மனிதக் குரங்குகளிடையே ஒருதார மணமுறை இருப்பதுபற்றிச் சமீபத்தில் அடித்துப் பேசிய பேச்சுக்களும் எவ்விதத்திலும் நிரூபணம் ஆகா. சுருங்கச் சொன்னால், "மற்றப்படி, பாலூட்டி வளர்க்கும் பிராணிகளிடையே அறிவு வளர்ச்சி யின் அளவுக்கும் பால் உறவு வடிவத்துக்கும் நடுவே கறாரான சம்பந்தம் எதுவும் அறவே கிடையாது" என்று நேர்மையுள்ள லெதூர்னோ ஒப்புக் கொள் கிற தினுசில்தான் அந்தச் செய்திகள் உள்ளன. மேலும் எஸ்பினாஸ் என்பவர் ("மிருக சமுதாயங் கள்", 1877[3]) "மிருகங்களிடையே காணக்கூடிய உன்னதமான சமுதாயக் குழு மந்தை என்பதுதான். அந்த மந்தை என்பது குடும்பங்களைத் தன்னுள் கொண்டதாய் அமைந்திருப்பதாகத் தோன்றுகிறது;

[1] பலதார மணமுறை (polygamy)—ஒருவன் பல மனைவியரைக் கொண்டிருக்கும் வழக்கத்தைத் தான் இது சகஜமாகக் குறிப்பிடுகிறது.—பதிப்பாசிரியர்கள்.

[2] Westermark E.A., The History of Human Marriage". London, 1891.—பதிப்பாசிரியர்கள்.

[3] Espinas A., "Des sociétés animales. Étude de psychologie comparée". Paris, 1877, p.p. 303-304.—பதிப்பாசிரியர்கள்.

ஆனல் ஆரம்பத்திலிருந்தே குடும்பமும் மந்தையும் ஒன்றுக்கொன்று பகையுள்ளதாகத்தான் இருக்கின்றன; குடும்பம் வளர்ந்தால் அந்த அளவுக்கு மந்தை சுருங்குகிறது; மந்தை வளர்ந்தால் அந்த அளவுக்குக் குடும்பம் சுருங்குகிறது'' என்று நேர்முகமாகச் சொல்லிவிடுகிருர்.

மேற்சொன்னவை தெளிவாக்குவது இது தான்: மனிதக் குரங்குகளின் குடும்பங்கள், இதர சமுதாயக் குழுக்கள் சம்பந்தமாக நமக்கு முடிந்த முடிபாக எதுவுமே தெரியாது. செய்திகளெல்லாம் ஒன்றுக்கொன்று நேர்முரணுயிருக்கின்றன. இதில் ஆச்சரியப்படுவதற்குமில்லை. காட்டுமிராண்டி நிலையிலுள்ள குலங்களைப்பற்றியுங்கூட நம்மிடமுள்ள செய்திகள் எவ்வளவு முரண்பாடாயும், விமர்சனக் கண்கொண்டு பரிசீலிக்க வேண்டியவையாயும் சலித்துப் பார்க்க வேண்டியவையாயும் இருக்கின்றன! ஆனல் குரங்குச் சமுதாயங்களைப் பார்வையிடுவது மனிதச் சமுதாயங்களைப் பார்வையிடுவதைவிட அதிகக் கஷ்டமாகும். ஆகவே, இப்படிப்பட்ட அறவே நம்பமுடியாத செய்திகளிலிருந்து பெறப்படும் ஒவ்வொரு முடிவையும் நாம் தற்சமயத்துக்கு நிராகரித்துத் தீரவேண்டியதுதான்.

என்ருலும், மேலே எஸ்பிஞஸிடமிருந்து காட்டிய மேற்கோள் இவற்றைவிட நல்ல புலன் ஒன்று கிடைக்கச் செய்கிறது. உயர்தர மிருகங்களிடையே மந்தையும் குடும்பமும் ஒன்றுக்கொன்று அனுசரணையாயிருப்பவையல்ல, ஒன்றுக்கொன்று பகையாயிருப்பவை. புணர்ச்சி வேட்கைக் காலத்தில் ஆண் மிருகங்களிடையே ஏற்படுகிற பொருமை

கூடிவாழும் ஒவ்வொரு மந்தையையும் எப்படிக் கட்டுத்தளரச் செய்கிறது அல்லது தாற்காலிகமாகக் கலைத்துவிடுகிறது என்று எஸ்பினுஸ் மிகத் துல்லியமாக வர்ணிக்கிறார். ''எங்கெல்லாம் குடும்பம் என்பது நெருக்கமாகப் பிணைக்கப்பட்டிருந்து வருகிறதோ, அங்கே மந்தைகள் அபூர்வமான விதிவிலக்குகள்தாம். இன்னொரு பக்கத்தில், எங்கெல்லாம் சுயேச்சையான புணர்ச்சி அல்லது பலதார மணம் நிகழ்வதுதான் விதியாயிருக்கிறதோ, அங்கெல்லாம் அநேகமாக இயல்பாகவே மந்தை சேர்கிறது.... மந்தையாகச் சேர்ந்து உருப்பெறவேண்டுமென்றால் அதற்குக் குடும்ப உறவுகள் தளர்த்தப்பட்டிருக்கவேண்டும், தனிநபர் மீண்டும் சுதந்திரமளிக்கப் பட்டிருக்கவேண்டும். அதனால்தான் நாம் பறவைகளிடையே ஒன்றாய்த் திரண்ட கூட்டங்களைப் பார்ப்பது அபூர்வம்.... இன்னொரு புறத்தில், பாலூட்டி வளர்க்கும் மிருகங்களிடையே ஏறத்தாழ ஒன்றாய்த் திரண்ட சமுதாயங்களைப் பார்க்கிறோம்; இதற்குக் காரணம், இங்கே தனிநபர் குடும்பத்தினுள்ளே ஐக்கியமாகிவிடுவதில்லை என்பதுதான்.... ஆக, அது தொடங்கும்பொழுது மந்தையின் கூட்டு உணர்ச்சிக்குக் குடும்பத்தின் கூட்டு உணர்ச்சியைக் காட்டிலும் பெரிய எதிரி வேறொன்றுமிருக்க முடியாது. பின்வருமாறு சொல்வதற்கு நாம் தயங்க வேண்டியதில்லை: குடும்பத்தை விட உயர்தரமான ஒரு சமுதாய வடிவம் பரிணமித்திருக்கிறதென்றால் அதற்கு ஒரே காரணம் அடிப்படையான மாறுதலையப் பெற்ற குடும்பங்களை அது தன்னுள் சேர்த்துக் கொண்டிருக்கிறது என்ற விஷயம்தான்;

இதே காரணத்தினுல் தான் இந்தக் குடும்பங்கள் முன்னை விட எவ்வளவோ சாதகமான சூழ்நிலைமை களில் பின்பு தம்மைத் திருத்தியமைத்துக்கொள்ள முடிந்ததும் சாத்தியமாயிற்று''. (எஸ்பினுஸ் எழுதிய முன் குறிப்பிட்ட நூலின் முதலாவது அத்தியாயம்; இதை ழிரோ-தெய்லோன் தாம் எழுதிய, 1884ல் வெளிவந்த, ''திருமணம், குடும்பம் ஆகியவற்றின் தோற்றுவாய்'' என்ற நூலில்[1] 518-520ம் பக்கங் களில் மேற்கோள் காட்டுகிருர்.)

மனிதச் சமுதாயங்களைப் பற்றி முடிவுகள் எடுப்பதில் மிருகச் சமுதாயங்களுக்கும் ஏதோ கொஞ்சம் மதிப்பு இருக்கத்தான் செய்கிறது என்று இதிலிருந்து வெளியாகிறதல்லவா? ஆனுல் இது எதிர்மறைப் பொருளில்தான் கொள்ளப்பட வேண் டும். நாம் தெரிந்துகொண்டுள்ளவரைக்கும் முது கெலும்புள்ள மிருக இனத்தைச் சேர்ந்த உயர் தரப் பிராணிகளிடையே பலதார மணம், இணை மணம் ஆகிய இரண்டு குடும்ப வடிவங்கள் மட்டுந் தாம் வழங்கி வந்துள்ளன. அவ்விரண்டு வடிவங் களிலும் ஒரே ஆண்தான், ஒரே புருஷன்தான் அனு மதிக்கப்பட முடியும். ஆணின் பொருமை குடும்பத் தின் பந்தத்தையும் வரம்புகளையும் குறிக்கிறது; அது மிருகக் குடும்பத்தை மந்தையுடன் சச்சரவிட்டுக் கொள்ளும்படி செய்கிறது. மந்தை என்கிற உயர் தர சமுதாய வடிவம் சில இடங்களில் சாத்தியமில் லாதபடி செய்யப்படுகிறது, வேறு சில இடங்களில்

[1] Giraud-Teulon A., "Les origines du mariage et de la famille". Genève, 1884. —பதிப்பாசிரியர்கள்.

தளர்த்தப்பட்டு விடுகிறது, அல்லது புணர்ச்சி வேட்கைக் காலத்தில் அறவே கலைக்கப்பட்டுவிடுகிறது. மிகவும் சிறப்பித்துச் சொல்வதானுல், ஆணின் பொருமை மந்தை தொடர்ச்சியாக வளர்வதைத் தடுக்கிறது. மிருகக் குடும்பமும் ஆதி காலத்திய மனித சமுதாயமும் ஒன்றுக்கொன்று பொருந்தாதவை என்று நிரூபிக்க இது ஒன்றே போதுமானது. மிருக நிலையிலிருந்து மேலேறி வந்து கொண்டிருந்த ஆதிகால மனிதனுக்குக் குடும்பம் என்பதே தெரியாது என்றே அல்லது அதிகபட்சமாகச் சொன்னுல், மிருகங்களிடையே இருந்திராத குடும்பம் ஒன்றைப் பற்றி மட்டுமே தெரியும் என்றே நிரூபிக்கவும் இது ஒன்றே போதும். மனிதனுக மாறிக்கொண்டு வந்த மிருகம்—ஆயுதமெதுவும் இல்லாத மிருகம்—தனிமையில் சிறிய எண்ணிக்கையில் மந்தை வாழ்க்கையின் உச்ச நிலை வடிவமாகிய தனித்தனி தம்பதி வடிவத்தில் உயிர் தப்பி வாழமுடிந்தது; கொரில்லாக்கள், சிம்பன்ஜீக்களும் இவ்வாறு வாழ்வதாக வேடர்களின் செய்திகளை அடிப்படையாகக் கொண்டு வெஸ்டர்மார்க் கற்பித்துப் பேசுகிருர். மிருக நிலையிலிருந்து வெளிப்பட்டுப் பரிணும வளர்ச்சியடைவதற்கு, இயற்கை கண்ட அதியுன்னதமான முன்னேற்றத்தைச் சாதிப்பதற்கு, கூடுதலாக இன்னுெர் அம்சமும் தேவைப்பட்டது: அதாவது, தனி மனிதனின் போதாக்குறையான தற்காப்புத் திறனுக்குப் பதிலாக மனிதக் கூட்டத்தின் ஒன்றுபட்ட பலமும் கூட்டுமுயற்சியும் அமையவேண்டியிருந்தது. இந்நாளில் மனிதக் குரங்குகள் வாழ்ந்துவருகிறவை போன்ற சூழ்நிலைமைகளிலிருந்து மனிதக்கட்டத்துக்கு

மாறிச்செல்வதை விளக்குவது அறவே அசாத்தியமா யிருக்கும். படிப்படியாக மறைவை நெருங்கிக் கொண் டிருக்கிறவையாயும், எப்படியும் சீரழியும் போக்கி லுள்ளவையாயும் இங்கொன்றும் அங்கொன்று மாக ஓரத்தொதுங்கிநின்று போனவைபோல் இந்த மனிதக் குரங்குகள் தோன்றுகின்றன. அவற்றின் குடும்ப வடிவங்களுக்கும் ஆதிகால மனிதனின் குடும்ப வடிவங்களுக்கும் இடையே ஒப்புமை காட்டி அதன் அடிப்படையில் எடுக்கிற முடிவுகளையெல் லாம் நிராகரிப்பதற்கு இது ஒன்றே போதிய காரண மாகும். எப்படியிருந்தாலும், வயது வந்த ஆண் களிடையே பரஸ்பர சகிப்புத் தன்மையும், பொறா மையொழித்த மனோநிலையும், பெரிதாயும் நிரந்தர மாயுமுள்ள மனிதக் குழுக்களை நிறுவுவதற்கு முதல் நிபந்தனையாயிருந்தன; இந்தப் பெரிய, நிரந்தர மான குழுக்களிடையே யிருந்து தான், மிருக நிலையிலிருந்து மனித நிலைக்குச் செல்லும் மாற் றத்தைச் சாதிக்க முடிந்தது. வரலாற்றின் மறுக்க முடியாத ருஜுக்களைக் காணமுடிகிறதாயும் இக்காலத் திலுங்கூட இங்கும் அங்குமாகக் கண்டு பரிசீலிக்க முடிகிறதாயும் உள்ள மிகமிகத் தொன்மையான, மிகமிகப் புராதனமான குடும்ப வடிவமாக நாம் பார்ப்பது எது? குழு மணம் என்பதுதான். இந்த வடிவத்தில் முழுக் குழுக்களாக ஆண்களும் முழுக் குழுக்களாகப் பெண்களும் ஒருவர்க் கொருவர் சொந்தமாயுள்ளனர்; பொறாமை ஏற்படுவதற்கு இது கொஞ்சமேனும் இடமில்லாமற் செய்கிறது. மேலும் பின்னல் வந்த வளர்ச்சிக் கட்டத்தில் பல புருஷ மணம் என்கிற, மற்றவற்றிலிருந்து வேறுபட்ட வடி

வத்தையும் பார்க்கிறோம்; இது பொறாமையுணர்ச்சிக்கு இன்னும் அதிகப் பாதகமாயுள்ளது; ஆகவே, மிருகங்களிடையே இது அறவே கிடையாது. இருந்த போதிலும் நமக்குத் தெரிந்திருக்கிற குழு மண வடிவங்களைத் தொடர்ந்து அதற்கேயுரித்தான சிக்கலான சூழ்நிலைமைகள் வருவதால் அவை அதற்கு முந்திய, இன்னும் எளிமையான பால் உறவுகள் சம்பந்தப்பட்ட வடிவங்களைக் கட்டாயமாகச் சுட்டிக் காட்டுகின்றன; மேலும் கடைசிப் பரிசீலனையின்படி, மிருக நிலையிலிருந்து மனித நிலைக்கு மாறிச்சென்ற கட்டத்துக்குப் பொருத்தமான, வரைமுறையற்ற புணர்ச்சி நிலவிய காலகட்டத்தையும் அவை சுட்டிக் காட்டுகின்றன. ஆகவே மிருகங்களிடையேயுள்ள மணவடிவங்களைக் குறித்துப் பேசுவது அவை எங்கிருந்து நம்மை நிரந்தரமாக இட்டுச் சென்றுவிட்டதாகக் கருதப்பட்டதோ, அதே இடத்துக்கு நம்மை திரும்பக் கொண்டு வந்து சேர்க்கிறது.

ஆக, வரைமுறையற்ற புணர்ச்சி என்பதற்கு அர்த்தமென்ன? இக்காலத்திலோ அல்லது இதற்கு முந்திய காலங்களிலோ அமுலிலிருந்து வந்த கட்டுத்தளைகள் இருக்கவில்லை என்பதுதான் அதற்கு அர்த்தம். பொறாமை என்கிற தடுப்பு தகர்ந்து விட்டதை நாம் ஏற்கனவே பார்த்தோம். நிச்சயம் என்று எதையாவது சொல்லுவதென்றால் பொறாமை என்பது ஒப்புநோக்கில் பிற்காலத்தில் தோன்றிய ஓர் உணர்ச்சியே என்பதுதான். இது முறைக் கேடான புணர்ச்சி பற்றிய கருத்தோட்டத்திற்கும் பொருந்தும். ஆதியில் சகோதரனும் சகோதரியும் கணவன் மனைவியாக வாழ்ந்தது மட்டுமல்ல, பெற்

ற்றோர்களுக்கும் அவர்களின் பிள்ளைகளுக்குமிடையே பால் உறவுகள் இருப்பது பல மக்கள் சமூகங்களிலே இன்றைய நாளிலும்கூட அனுமதிக்கப்பட்டு வருகிறது. பேரிங் ஜலசந்தியைச் சேர்ந்த கவியாட்டுகள் மத்தியிலும், அலாஸ்காவுக்கு அருகேயுள்ள கடியாக்குகள் மத்தியிலும், பிரிட்டிஷ் வட அமெரிக்காவின் உள்பிரதேசங்களில் வாழும் டின்னேக்கள் மத்தியிலும் இது இருப்பதாக பான்கிராப்ட் ("வட அமெரிக்காவின் பசிபிக் பிராந்திய மாகாணங்களைச் சேர்ந்த சுதேச இனங்கள்", 1875, முதல் தொகுதி[1]) சாட்சியமளிக்கிறார். சிப்பேவா-இந்தியர்களிடையிலும், சிலி நாட்டிலுள்ள கூகூக்கள் இடையிலும், கரீபியர்களிடையிலும், இந்தோ-சைனுவைச் சேர்ந்த கரேன்களிடையிலும் இதே விஷயத்தைப்பற்றி லெதூர்னே அறிக்கைகளைத் திரட்டியிருக்கிறார். பார்த்தியர்கள், பாரசீகர்கள், ஸ்கிதியர்கள், ஹூணர்கள், முதலானோரைப் பற்றிப் பண்டைக்கால கிரேக்கர்களும் ரோமானியர்களும் தந்துள்ள செய்திகளைப்பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. முறைக்கேடான புணர்ச்சி என்ற புதுப் புனைவு வருவதற்கு முன்னால் (அது நிச்சயமாக ஒரு புதுப்புனைவுதான்; மதிப்பு மிகுந்த புதுப்புனைவாகும் அது) பெற்றோர்களுக்கும் அவர்கள் பிள்ளைகளுக்குமிடையே நிகழும் புணர்ச்சி வெவ்வேறு தலைமுறைகளைச் சேர்ந்தவர்களிடையே நிகழும் புணர்ச்சியை

[1] **Bancroft H.H.,** "The Native Races of the Pacific States of North America." Vol. I—V, New York, 1875-1876 — **பதிப்பாசிரியர்கள்.**

விட—மிகவும் போலிப்பண்புள்ள நாடுகளிலும்கூடப் பெரும் பீதியை உண்டாக்காமலே இன்றைக்கும் இது நடக்கிறது—அதிக அருவருப்பானதாக இருக்க முடியாது; உண்மையில், அறுபதுக்குமேல் வயதான ''கன்னிகைகளும்'' போதிய செல்வம் படைத்திருந்தால் சுமார் முப்பது வயதுள்ள வாலிபர்களை மணந்து கொள்வது அவ்வப்பொழுது நடப்பதுண்டு. இருந்த போதிலும், நமக்குத் தெரிந்திருக்கிற குடும்பத்தின் புராதன வடிவங்களோடு சேர்த்துச் சொல்லப்படும் முறைக்கேடான புணர்ச்சி பற்றிய கருத்தோட்டங்களை நீக்கிவிடுவோமானால் அவை நமது கருத்தோட்டங்களோடு முற்றிலும் வேறாயிருப்பதோடன்றி அடிக்கடி நேர்மாறாயும் இருக்கின்றன; நமக்குக் கிடைக்கிற புணர்ச்சி வடிவம் இருக்கிறதே, அதை வரைமுறையற்ற புணர்ச்சி என்று மட்டுமே வர்ணிக்கமுடியும். பிற்காலத்தில் வழக்கத்தால் நிலைநிறுத்தப்பட்ட கட்டுத்தளைகள் இன்னும் அமைந்திருக்க வில்லை என்ற அளவுக்கு அது வரைமுறையற்றது. இதைக்கொண்டு விதரணையற்ற ஏதோ ஒருவகை வரைமுறையற்ற புணர்ச்சி அன்றாட நடைமுறையாக இருந்து வந்தது என்று முடிவு கட்டுவது அவசியமே அல்ல. ஒரு வரம்புக்குட்பட்ட காலத்தில் தனித்தனி ஜோடிகள் அமைவது விலக்கப்படவில்லை; சொல்லப்போனால் குழுத் திருமணத்திலுங் கூட அவைதான் பெரும்பான்மையாயுள்ளன. இந்த ஆதிகால நிலையை மறுப்பவர்களில் கடைசியாக வந்திருப்பவர் வெஸ்டர்மார்க். குழந்தை பிறக்கும்வரை ஆணும் பெண்ணும் கூடி வாழ்ந்திருக்கும் நிகழ்ச்சி ஒவ்வொன்றையும் திருமணம் என்று அவர் வரை

யறுத்தால் அப்பொழுது இவ்வகைப்பட்ட திரு மணம் வரைமுறையற்ற புணர்ச்சி நிகழும் நிலைமை களிலும் தாராளமாக ஏற்படமுடியும்; அது வரை முறையற்ற புணர்ச்சிக்கு—அதாவது பழக்க வழக் கங்களால் புணர்ச்சிக்கு ஏற்படுத்தப்பட்ட கட்டுத் தளைகள் இல்லாதிருந்த நிலைக்கு—முரணும் இருக் காது. ''வரைமுறையற்ற புணர்ச்சியில் தனிநபர் களின் விருப்பு/வெறுப்புக்கள் நசுக்கப்படுகின்றன'', ஆகவே ''விபசாரம்தான் அதன் மிக உண்மையான வடிவமாகும்'' என்ற கருத்திலிருந்து வெஸ்டர் மார்க் தொடங்குகிறார் என்பது உறுதி. எனக்கோ, ஆதிகால நிலைமைகளை விபசார விடுதி என்ற கண் ணுடியைப் போட்டுக்கொண்டு பார்க்கும்வரை அவற் றைப் புரிந்து கொள்வது என்பது முடியாத காரிய மாய்த்தான் இருக்கும் என்று தோன்றுகிறது. குழு மணத்தைப்பற்றி விவாதிக்கையில் இந்த விஷயத் துக்கு மீண்டும் வருவோம்.

மார்கனின் அபிப்பிராயத்தில், இந்த வரை முறையற்ற புணர்ச்சி என்ற ஆதி நிலையிலிருந்து, அநேகமாக மிகவும் முந்திய ஒரு கட்டத்திலேயே, வளர்ந்தவை என்னவென்றால்:

1. **ரத்த உறவுக் குடும்பம்** — இது குடும்பத் தின் முதல் கட்டமாகும். இங்கே மணம் புரியும் குழுக்கள் தலைமுறை வரிசையிலே வைக்கப்பட்டுள் ளன. குடும்பம் என்ற வரம்புக்குள் அடங்கிய எல் லாப் பாட்டன்மார்களும் பாட்டிமார்களும் பரஸ் பரம் கணவன் மனைவியராவார்கள்; அவர்களின் குழந்தைகளும்—தகப்பன்மார்களும் தாய்மார்களும்— அதே போல் பரஸ்பரம் கணவன் மனைவியராவார்கள்;

இவர்களின் குழந்தைகள்—முதல் சொல்லப்பட்டவர் களின் பேரன் பேத்திகள்—ஒருவருக்கொருவர் கணவன் மனைவியராயுள்ள மூன்றும் வட்டமாக அமைவார் கள், அவர்களுக்குப் பிறந்த குழந்தைகள்—அதா வது முதலில் சொல்லப்பட்டவர்களின் கொள் ளுப்பேரர்கள் கொள்ளுப்பேத்திகள்—தம் முறைக்கு ஒரு நான்காம் வட்டமாக அமைவார்கள். ஆக, இந்தக் குடும்ப வடிவத்தில், முந்தையோரும் வழி வந்தோரும், பெற்றோர்களும் குழந்தைகளும் மட்டு மே (தற்பொழுதைய பரிபாஷையில் சொல்வதானால்) ஒருவர்க்கொருவர் திருமணத்தின் உரிமைகள், கடமை களினின்று விலக்கப்பட்டுள்ளனர். சகோதரர்க ளும் சகோதரிகளும், ஒன்றுவிட்ட, இரண்டுவிட்ட, மூன்றுவிட்ட சகோதர சகோதரிகள் எல்லோரும் பரஸ்பரம் சகோதர சகோதரிகளாவார்கள்; **அந்த ஒரே காரணத்தை வைத்துத்தான்** அவர்கள் பரஸ்பரம் கணவன் மனைவியரும் ஆவார்கள். இந்தக் கட்டத் தில் சகோதரன், சகோதரி என்ற உறவில் புணர்ச்சி செய்வதும் சகஜமாகவே அடங்கியிருந்தது.[1] இப்

---

[1] வாக்னரின் ''நிபலுங்'' என்னும் இசை நாடக வாசனத் தில் ஆதிகாலத்தைப் பற்றி வெளிவந்த முழுப்புரட்டுகளை 1882ம் ஆண்டின் வசந்த காலத்தில் தாம் எழுதிய ஒரு கடிதத் தில் மார்க்ஸ் மிகவும் கடுமையாக எதிர்த்தார். ''தன் சகோ தரியைத் தன் மனைவி என்று கூறிக்கொண்டு ஒரு சகோதரன் தழுவிக்கொள்வதைப்பற்றி யாராவது கேள்விப்பட்டதுண் டா?'' வாக்னர் சிருஷ்டித்த ''காமப் பித்தேறிய கடவுளர் கள்'' இவர்கள். நவீன காலத்திய பாணியிலேயே வாக்னர் இந்தக் கடவுளர்களின் காதல் லீலைகளில் முறைக்கேடான புணர்ச்சி என்ற மசாலாவையும் கொஞ்சம் சேர்த்துக் கொடுத்

படிப்பட்ட குடும்பத்தை அதன் பிரதிநிதித்துவ வடிவத்தில் எடுத்துக்கொண்டு பார்த்தால் அதில் ஒரு ஜோடியின் சந்ததியார்கள் அடங்கியிருப்பார்கள்; அந்தச் சந்ததியார்களிடையேயும் ஒவ்வொரு தலைமுறையைச் சேர்ந்த சந்ததியார்களும் சகோதர சகோதரிகளாக இருக்கிறார்கள்; அந்தக் காரணத்திற்காகவே அவர்கள் எல்லோரும் பரஸ்பரம் கணவன் மனைவியராகவும் இருக்கிறார்கள்.

ரத்த உறவுக் குடும்பம் என்பது அழிந்துபோய் விட்டிருக்கிறது. வரலாற்றுக்குத் தெரிந்த மிக மிகப் பண்பாடறியாத மக்கள் சமூகங்களுங்கூட இந்தக் குடும்ப வடிவத்துக்கு ஊர்ஜிதப்படுத்தக்கூடிய உதாரணங்களைத் தருவனவாயில்லை. என்றாலும், அது இருந்திருக்க **வேண்டும்** என்ற முடிவுக்கு வரும்படி ஹவாயி வகைப்பட்ட ரத்த உறவுக் குடும்பமுறை நம்மை நிர்ப்பந்திக்கத்தான் செய்கிறது; இந்தக் குடும்ப முறை பாலினீசியா முழுவதிலும் இன்றைக்

---

தார். இவர்களுக்கு மார்க்ஸ் தந்த பதில் இதுதான்: ''ஆதிகாலத்தில் சகோதரி தான் மனைவியாக இருந்தாள்; **அதுதான் அன்று தர்மமாயுமிருந்தது.'' (எங்கெல்ஸ் குறிப்பு).**

வாக்னரின் நண்பரும் ஆதரவாளருமான ஒரு பிரெஞ்சுக்காரர் இந்தக் குறிப்பை ஏற்கவில்லை. வாக்னர் தமக்கு முன்மாதிரியாக எடுத்துக்கொண்ட, காலத்தால் முற்பட்ட ''எட்டா'' வாகிய ''ஒகிஸ்ட்ரெக்கா''விலேயே பிரேயாவை லோகி பின்வருமாறு நிந்திப்பதை அவர் சுட்டிக் காட்டுகிறார்: ''தேவர்களின் முன்னிலையிலே உன் சொந்த சகோதரனையே நீ தழுவினாய்''. ஏற்கனவே அந்தக் காலத்திலேயே சகோதரன் சகோதரிக்கிடையே திருமணம் தடை செய்யப்பட்டிருக்கிறது என்று அவர் வழக்காடுகிறார். பண்டைக்காலத்திய புராணங்களில் நம்பிக்கை அறவே உடைந்துபோயிருந்த ஒரு

கும் நிலவி வருகிறது; அது வெளியிடுகிற ரத்த உறவு முறைகள் இப்படிப்பட்ட குடும்ப வடிவம் ஒன்றிலிருந்துதான் தோன்றமுடியும். மேலும், குடும்பத்தின் பிந்திய வளர்ச்சி முழுவதும் நம்மை இதே முடிவுக்கு வந்து சேரும்படி நிர்ப்பந்தப்படுத்து

---

காலத்தின் வெளியீடுதான் ''ஒகிஸ்ட்ரெக்கா'' என்பது. தெய்வங்களை லூரஸியேனிய வகையில் நையாண்டி செய்வது அது. மெபிஸ்டொபீலஸ் போல லோகி பிரேயாவை அப்படி நிந்திக்கிருன் என்ருல் அது வாக்னருக்கும் பாதகமான வாதமேயாகும். சில பாடல்களுக்கு அப்பால் நியோர்டுக்கு லோகி மேலும் சொல்லுவதாவது:''நமது சகோதரி மூலம் நீ[இந்தக்]குழந்தையைப் பெற்ருய்'' என்று [vidh systur thinni gaztu slikan mog]. இங்கே, நியோர்ட் ஓர் அசா அல்ல, அவன் ஒரு வானு. வானு நாட்டில் சகோதர சகோதரிகளுக்கிடையே திருமணமாவது வழக்கமானதுதான், ஆனுல் அது அசாக்களிடையே வழக்கமில்லை என்று அவன் இங்லிங்கா புராணத்தில் சொல்கிருன். இது, அசாக்களை விட வானுக்கள் காலத்தால் முற்பட்ட தெய்வங்கள் என்பதைக் குறிப்பதாகவே தோன்றக் கூடும். எப்படியிருந்தாலும், அசாக்களிடையே அவர்களுக்குச் சமதையாகவே நியோர்ட் வாழ்ந்தான். எனவே, குறைந்த பட்சம் தெய்வங்கள் மத்தியிலாவது சகோதர சகோதரிகளிடையே திருமணம் நிகழ்வது நார்வே நாட்டு தெய்வீகப் புராணங்கள் தோன்றிய காலத்தில் இன்னும் வெறுப்புண்டாக்கவில்லை என்பதற்கு ''ஒகிஸ்ட்ரெக்கா'' ஒரு சான்ருகும். வாக்னரை மன்னிக்க விரும்புகிறவர்கள் ''எட்டா''வைக் குறிப்பிட்டுக் காட்டுவதைவிட கதேயைக் குறிப்பிட்டுக் காட்டுவதே மேலாகும்; ஏனெனில் கடவுளும் தேவதாசியும் பற்றிய தமது பாடலில் பெண்கள் மதரீதியான ஆத்மசமர்ப்பணத்தைப் பற்றி கதேயும் அதே மாதிரி தவறு செய்கிருர். அதை அவர் நவீனக் காலத்திய விபசாரத்துடன் மிகவும் நெருங்கிய வகையில் ஒப்பிடுகிருர். **(நான்காம் பதிப்புக்கு எங்கெல்ஸ் குறிப்பு.)**

கிறது; இந்தக் குடும்ப வடிவம் அவசியகரமான ஆரம்பக் கட்டமாக உத்தேசித்துக்கொள்ளச் செய்கிறது.

2. **பூனலுவா குடும்பம்.** பெற்றோர்களும் குழந்தைகளும் பரஸ்பரம் புணர்ச்சி செய்வதை விலக்கியது குடும்பம் உருப்பெறுவதில் முதல் முன்னேற்றமாயிருந்தால் சகோதர சகோதரிகள் பரஸ்பரப் புணர்ச்சி செய்வதை விலக்கியது இரண்டாவது முன்னேற்றமாயிருந்தது. இங்கு புணர்ச்சியில் ஈடுபடுபவர்களின் வயது முன்னை விட அதிகமாக ஒன்று போலிருப்பதைப் பார்க்கும் போது இந்த முன்னேற்றம் முந்தியதைவிட எவ்வளவோ முக்கியமானதாயும், ஆனல் எவ்வளவோ கஷ்டமானதாயும் இருந்தது. படிப்படியாகத் தான் அது செய்து முடிக்கப்பட்டது. இயற்கையான—அதாவது, ஒரு தாய் வயிற்றில் பிறந்த—சகோதர சகோதரிகள் புணர்வது விலக்கப்பட்டதிலிருந்து இது அனேகமாக ஆரம்பித்திருக்கவேண்டும்; முதலில் இங்கொன்றும் அங்கொன்றுமாகத் தனித்தனிச் சந்தர்ப்பங்களில் அது விலக்கப்பட்டு, பிறகு படிப்படியாகப் பொது விதியாக ஆகியிருக்க வேண்டும். (இந்த நூற்றுண்டில் ஹவாயியில் இந்த விதிக்கு இன்னும் விலக்குகள் இருந்து வந்துள்ளன.) கடைசியில், தூர சகோதர சகோதரிகளிடையே—அதாவது நம் வழக்கப்படி கூப்பிடுகிற முறையில் ஒன்றுவிட்ட, இரண்டுவிட்ட, மூன்றுவிட்ட சகோதர சகோதரிகளிடையேயுங்கூடத் திருமணம் நடப்பது தடை செய்யப்படுவதில் வந்து முடிந்து இருக்க வேண்டும். மார்கனின் அபிப்பிராயத்தில் அது ''இயற்கையான தேர்வு என்ற கோட்பாடு செயல்படுவதற்கு ஒரு

நல்ல உதாரணமாக இருக்கிறது''. இந்த முன்னேற்றத்தின் மூலமாக ஒரு ரத்தத்தைக் கொண்டே வம்ச விருத்தி செய்வது தடை செய்யப்பட்ட குலங்கள், சகோதர சகோதரிகளிடையே திருமணம் நடப்பது விதியாகவும் கடமையாகவும் இருந்து வந்த குலங்களைவிட அதிக வேகமாகவும் முழுவதாகவும் நிச்சயமாக வளர்ச்சி பெற்றிருந்திருக்கும் என்பதில் கேள்விக்கே இடமில்லை. இந்த முன்னேற்றத்தின் விளைவு எவ்வளவு பலமாக இருந்தது என்பதை அதிலிருந்து நேரடியாக உதித்து உத்தேசித்ததற்கு மேலாகவே சென்றுவிட்ட கணம் என்ற ஸ்தாபனம் நிரூபிக்கிறது. உலகத்தின் அநாகரிக மக்கள் சமூகங்கள் அனைத்தின் இல்லாவிட்டாலும் அவற்றில் மிகப் பெரும்பான்மையானவற்றின், சமுதாய அமைப்புக்குக் கணம்தான் அஸ்திவாரமாயிருந்தது. கிரீசிலும் ரோமிலும் அதிலிருந்து நேரடியாக நாம் நாகரிகத்துக்குச் செல்கிறோம்.

குறைந்தபட்சம் சில தலைமுறைகளில் ஒவ்வோர் ஆதிகாலத்திய குடும்பமும் பிளவுபடவேண்டியிருந்தது. ஆதிப் பொதுவுடைமை வகைப்பட்ட பொதுக் குடும்ப நிர்வாகம் அநாகரிகத்தின் இடைக்கட்டத்தின் கடைசிப்பகுதி வரை விலக்கெதுவுமின்றி நிலவியிருந்தது; அது, குடும்பச் சமூகத்திற்கு ஒரு குறிப்பிட்ட அதிகபட்ச அளவை நிர்ணயித்திருந்தது; அந்த அளவு, சூழ்நிலைமைகளுக்குத் தக்கவாறு மாறுபட்டாலும், ஒவ்வொரு ஸ்தல வட்டாரத்திலும் ஏறத்தாழத் திட்டமாகவேஇருந்தது. ஒரு தாய் வயிற்றுக் குழந்தைகளிடையே புணர்ச்சி நிகழ்வது முறையல்ல என்று கருத்தோட்டம் தோன்றியவுடன் இப்படிப்பட்ட

பழைய குடும்பச் சமூகங்கள் பிரிவுபட்டு, புதிய குடும்பச் சமூகங்கள் தோன்றுவதைப் பாதிக்கத்தான் வேண்டியிருந்தது. (இந்தக் குடும்பச் சமூகங்களும் குடும்பக் குழுக்களும் அவசியமாக ஒன்ருகவே தானிருக்க வேண்டுமென்றிருக்கவில்லை); சகோதரிகளைக்கொண்ட ஒரு குழுவோ அல்லது அதற்கு மேற்பட்ட குழுக்களோ ஒரு குடும்பச் சமூகத்துக்கு மூலக் கருவாக அமைந்தனர். அவர்களின் இயற்கையான சகோதரர்கள் இன்ஞெரு குடும்பச் சமூகத்துக்கு மூலக் கருவாக அமைந்தனர். இந்த வழியாகவோ அல்லது இதுமாதிரியான வழியாகவோ பூனலுவா குடும்பம் என்று மார்கன் அழைக்கிற குடும்பத்தின் வடிவம் ரத்த உறவுக் குடும்பத்திலிருந்து வளர்ந்தது. ஹவாயி வழக்கத்தின் படி சில சகோதரிகள்—அவர்கள் ஒரு தாய் வயிற்றுக் குழந்தைகளாகவோ அல்லது ரத்த சம்பந்தமுள்ள பல தாய் வயிற்றுக் குழந்தைகளாகவோ (அதாவது ஒன்றுவிட்ட, இரண்டுவிட்ட அல்லது இன்னும் தூரச் சகோதரிகளாக) இருக்கலாம்—தமது பொதுவான கணவன்மார்களின் பொதுவான மனைவிகளாக இருந்தனர்; ஆனுல் இந்தப் பால் உறவிலிருந்து அவர்களுடைய சகோதரர்கள் விலக்கப்பட்டனர். இந்தக் கணவன்மார்கள் ஒருவரையொருவர் சகோதரன் என்று அழைத்துக்கொள்ளாமல்—அவர்கள் சகோதரர்களாயும் இனிமேல் இருக்க வேண்டியதுமில்லை — ஒருவரை யொருவர் 'பூனலுவா' என்று, அதாவது அந்தரங்கக் கூட்டாளி, பங்காளி என்று, அழைத்துக்கொண்டார்கள். அதைப் போலவே இயற்கையான சகோதரர்களையோ அல்லது ரத்த சம்பந்தமுள்ள பல தாய் வயிற்றுப் பிள்ளை

களான சகோதரர்களையோ கொண்ட ஒரு குழு வினர் பல பெண்களைப் பொது மணம் செய்துகொண் டனர்; அவர்கள் இவர்களுடைய சகோதரிகள் அல்ல; இந்தப் பெண்கள் ஒருவரையொருவர் 'பூனலுவா' என்று அழைத்துக்கொண்டார்கள். இதுதான் குடும்ப அமைப்பின் சாஸ்திரீய வடிவமாகும்; பின்னல் வரி சையாகப் பல திரிபுகள் இதிலிருந்து உண்டாயின. அதன் முக்கியமான குணும்சம் இது தான்: ஒரு குறிப்பிட்ட குடும்ப வட்டத்திற்குள் இருக்கிற எல்லாக் கணவர்கள், மனைவியர்களுக்குமிடையே பொது உறவு. ஆனல் அதிலிருந்து அந்த மனைவிய ரின் சகோதரர்கள்—முதலில் கூடப்பிறந்த சகோ தரர்களும் பின்னல் ரத்த சம்பந்தமுள்ள பிற தாய் வயிற்றில் பிறந்த சகோதரர்களும்—விலக்கப்பட் டனர்; மறுபுறத்தில், அந்தக் கணவன்மார்களின் சகோதரிகளுக்கும் இந்த விலக்கு உண்டு.

இந்தக் குடும்ப வடிவம் அமெரிக்க அமைப்பில் வெளிப்படுத்தப்பட்டுள்ள இரத்த உறவு முறைகளை மிகவும் கணக்காகக் காட்டுகிறது. எனது தாயின் சகோதரிகளுடைய குழந்தைகள் இன்னும் அவளது குழந்தைகளாகவே இருந்து வருகிறுர்கள்; அதே போல் எனது தகப்பனுரின் சகோதரர்களுடைய குழந்தைகளும் அவரது குழந்தைகளாகவே இருந்து வருகிறுர்கள். அந்தக் குழந்தைகள் எல்லோ ரும் எனக்குச் சகோதர சகோதரிகளாவார்கள். ஆனல் எனது தாயின் சகோதரர்களுடைய குழந் தைகளோ இப்போது அவளுக்கு மருமான் மருமக்க ளாக இருக்கிறுர்கள்; எனது தகப்பனுரின் சகோதரி களுடைய குழந்தைகளும் அவரது மருமான் மருமக்க

ளாக இருக்கிறார்கள். அந்தக் குழந்தைகள் எல்லோரும் எனக்கு ஒன்றுவிட்ட சகோதர சகோதரிகளாவார்கள். ஏனென்றால், எனது தாயின் சகோதரிகளுடைய கணவர்கள் எல்லோரும் எனது தாயின் கணவர்களாக இன்னும் இருந்துகொண்டிருக்க, எனது தகப்பனாரின் சகோதரர்களுடைய மனைவிகளெல்லாம் எனது தகப்பனாரின் மனைவிகளாகவே (நடைமுறையில் இல்லாமற்போனாலும், உரிமைப்படி) இருந்துகொண்டிருக்க, சகோதர சகோதரிகளுக்கிடையே புணர்ச்சி நிகழ்வதைத் தடுக்கும் சமுதாயத் தடையானது இதுவரை வர்ஜாவர்ஜமின்றி சகோதர சகோதரிகளாகக் கருதப்பட்டுவந்த ஒன்றுவிட்ட சகோதர சகோதரிகளை இரண்டு வகுப்புகளாகப் பிரித்தது: சிலர் (தூர) சகோதர சகோதரிகளாக முன்போலவே இருந்துவருகிறார்கள்; மற்றவர்கள்—அதாவது, ஒரு பக்கத்தில் சகோதரர்களுடைய குழந்தைகளும், இன்னொரு பக்கத்தில் சகோதரிகளுடைய குழந்தைகளும்— இனிமேல் சகோதர சகோதரிகளாக இருக்கவே **முடியாது;** தாயாகவோ, தந்தையாகவோ அன்றி இரண்டு பேருமாகவோ அவர்களுக்குப் பொதுவான பெற்றோர்கள் இனிமேல் இருக்கமுடியாது; எனவே மருமான், மருமகள் என்ற, ஆண் பெண் தாயாதிகள் என்ற வகுப்பு முதல் தடவையாக அவசியப்படுகிறது; முந்திய குடும்ப அமைப்பில் இதற்கு அர்த்தமேயிருந்திருக்காது. ஏதாவது ஒரு வகைத் தனிப்பட்ட திருமணத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கும் ஒவ்வொரு குடும்பத்தை வைத்துப் பார்த்தால் அமெரிக்க ரத்த உறவுக் குடும்ப அமைப்பு என்பது

சுத்த அபத்தமாகவே தோன்றுகிறது; ஆனால் பூனலுவா குடும்பமோ, அதை அதன் கடைசி நுண்ணிய விபரங்கள் வரைக்கும் பகுத்தறிவு பூர்வமாக விளக்கவும் இயல்பானதென்று நியாயப்படுத்தவும் செய்கிறது. எந்த அளவுக்கு இந்த ரத்த உறவுக் குடும்ப முறை நிலவியிருந்ததோ, குறைந்தபட்சம் அதே அளவுக்கு இந்தப் பூனலுவா குடும்பமோ அல்லது அதைப் போன்றதொரு வடிவமோ இருந்திருக்கவேண்டும்.

இந்தக் குடும்ப வடிவம் ஹவாயியில் உண்மையிலே இருந்திருக்கிறதென்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது. ஸ்பெயினிலிருந்து அமெரிக்கா சென்ற பாதிரிகளைப் போன்ற புனித மதப் பிரசாரகர்கள் கிறிஸ்தவ மதத்துக்கொவ்வாத இந்த உறவுகளில் ''அருவருப்பு'' ஒன்றை மட்டும் காணாமல் கூடுதலாகக் கொஞ்சம் பார்க்க முடிந்திருந்தால் பாலினீசியா முழுவதிலும் இந்தக் குடும்ப வடிவம் நிலவுவதை அநேகமாகக் காட்டியிருக்க முடிந்திருக்கும்.[1]

[1] பாகோபென் தாம் கண்டுபிடித்ததாக நினைத்துக் கொள்ளும் வரைமுறையற்ற புணர்ச்சி என்ற உறவின் அடையாளங்கள் குழு மணத்துக்குத்தான் பின்னோக்கிக்கொண்டு போய்விடுகின்றன என்பதில் இனிமேல் யாதொரு சந்தேகமும் இருக்கமுடியாது. ''இந்தப் பூனலுவா திருமணங்களைச் 'சட்டத்திற்குட்படாதவை' என்று பாகோபென் கருதினால் அந்தக் காலப் பகுதியைச் சேர்ந்த மனிதனும் அதே மாதிரி தற்காலத்தில் தகப்பன் வழியிலோ, தாய் வழியிலோ வந்த ஒன்றுவிட்ட அல்லது அதைவிடத் தூர உறவுள்ள சகோதர சகோதரிகளிடையே நடக்கும் திருமணங்களை முறைக்கேடானவை என்றே கருதுவான், அதாவது ரத்த

சீஸர், அந்தக் காலத்தில் அநாகரிகத்தின் இடைக் கட்டத்திலிருந்த பிரிட்டன் நாட்டு மக்கள் ''பத்து பேர்களாகவோ பன்னிரண்டு பேர்களாகவோ சேர்ந்து தமது மனைவியர்களைப் பொதுவிலே அனுபவித்துவந்தனர்; மிகப் பெரும்பாலும் சகோதரர்கள் சகோதரர்களுடன் சேர்ந்தோ, அல்லது பெற்றோர்களும் அவர்களுடைய குழந்தைகளும் சேர்ந்தோ இப்படிப் பொதுவிலே அனுபவித்தனர்'' என்று சொல்கிறபொழுது அது குழு மணம் என்று விளக்குவதுதான் மிகச் சிறப்பான விளக்கமாகும். மனைவிகளைப் பொதுமையிலே வைத்துக்கொள்ள முடிகிற அளவுக்கு வயதுவந்த பத்து அல்லது பன்னிரண்டு மகன்கள் அநாகரிக காலத்திய தாய்மார்களுக்குக் கிடையாது; ஆனால் பூனலுவா குடும்பத்துடன் பொருந்தியிருக்கக்கூடிய அமெரிக்க ரத்த உறவுக் குடும்பமுறையில் பல சகோதரர்கள் இருக்க வாய்ப்புண்டு, ஏனெனில் ஒருவனுடைய நெருங்கிய தாயாதிகளும் தூர தாயாதிகளும் அவனுக்குச் சகோதரர்களாவார்கள். ''பெற்றோர்களும் குழந்தைகளும் சேர்ந்து'' என்ற கூற்று சீஸர் நிலைமையைத் தவறாகப் புரிந்துகொண்டதைக் குறிக்கிறது என்று கருத இடமிருக்கிறது. இருந்தாலும், இந்தக் குடும்ப முறை, தகப்பனும் மகளும் அல்லது தாயும் மகனும் ஒரே திருமணக் குழுவில் இருப்பதை விலக்குகிறதென்றாலும், தகப்பனும் மகனும் அல்லது தாயும் மகளும் அதிலிருப்பதை அறவே

உறவுக் குடும்பத்தைச் சேர்ந்த சகோதர சகோதரிகளிடையே நடக்கும் திருமணங்களாகவே கருதுவான்'' (மார்க்ஸ்). **(எங்கெல்ஸ் குறிப்பு.)**

விலக்கவில்லை. காட்டுமிராண்டி மக்கள் சமூகங்களிடையேயும் அநாகரிக மக்கள் சமூகங்களிடையேயும் மனைவியரைப் பொதுவில் வைத்திருப்பது பற்றி ஹெரடோடஸ், இன்னும் இதர பண்டைக் கால எழுத்தாளர்கள் எழுதியுள்ள விவரங்களுக்கு இந்தக் குழு மண வடிவமோ அல்லது இதுபோன்றதொரு குழு மண வடிவமோ மிக எளிதான விளக்கம் தருகிறது. (கங்கை நதிக்கு வடக்கிலுள்ள) அயோத்தியைச் சேர்ந்த நிகூர்களைப்பற்றி வாட்ஸனும் கேயும் எழுதியுள்ள "இந்திய மக்கள்"[1] என்ற நூலில் தரும் வர்ணனைக்கும் இது பொருந்தும். அவர்கள் வர்ணிப்பதாவது: "அவர்கள் ஒன்றாகவே (அதாவது, ஆண் பெண் உறவில்) கூடி வாழ்கிறார்கள்; பெரிய பெரிய குழுக்களாக வர்ஜாவர்ஜமின்றிக் கூடிவாழ்கிறார்கள்; அவர்களில் இருவர் மணமானவர்களாகக் கருதப்பட்டாலும் அந்த பந்தம் வெறும் பெயரளவில் தான்."

மிகப் பெரும்பான்மையான இடங்களில் கணம் என்கிற ஸ்தாபனம் பூனலுவா குடும்பத்திலிருந்துதான் நேரடியாகத் தோன்றியதாகத் தெரிகிறது: ஆஸ்திரேலிய வகுப்பு முறையும்[2] அதற்கு ஒரு மூல ஸ்தானமாயிருக்கலாமென்பது உண்மையே; ஆஸ்திரேலியர்களுக்குக் கணங்கள் உண்டு; ஆனால் இன்னும் பூனலுவா குடும்பம் அவர்களிடையே

[1] Watson J.F. and Kaye J.W., "People of India", vols I-VI, London, 1868-72.—**பதிப்பாசிரியர்கள்.**

[2] இங்கேயும் இதைத் தொடர்ந்தும் ஆசிரியர் குறிப்பிடுவது ஆஸ்திரேலிய பூர்வீகக் குடிகளின் பெரிய திருமணக் குழுக்களைத்தான்.—**பதிப்பாசிரியர்கள்.**

கிடையாது; அதைவிடப் பண்படையாத குழு மண வடிவமே அவர்கள் பெற்றுள்ளனர்.

குழுக் குடும்பத்தின் எல்லா வடிவங்களிலும் ஒரு குழந்தையின் தகப்பன் யார் என்பதை அறுதியிட்டுச் சொல்வதற்கில்லை, ஆனால் அந்தக் குழந்தையின் தாய் யார் என்பதை உறுதியாகச் சொல்லலாம். அந்தக் குடும்பத்தொகை பூராவிலுமுள்ள குழந்தைகள் அனைத்தையும் அவள் தனது குழந்தைகள் என்றே அழைக்கின்றபோதிலும், அக்குழந்தைகளின்பால் ஒரு தாய்க்குரிய கடமைகளை அவள் செய்து தீரவேண்டியதாயிருக்கிறபோதிலும், தனது சொந்தக் குழந்தைகளைப் பிற குழந்தைகளிடையேயிருந்து வேறாக அறிந்துதான் வைத்திருக்கிறாள். ஆக, இதிலிருந்து தெளிவாகிறது என்ன? குழு மணங்கள் இருக்கிற இடங்களிலெல்லாம் **தாய்** தரப்பிலிருந்து மட்டுமே வம்சாவளியைக் கண்டுகொள்ள முடியும் என்றும், ஆகவே **பெண்வழி** ஒன்றுதான் ஒப்புக்கொள்ளப்பட்டது என்றும் தெளிவாகிறது. உண்மையிலேயே பார்த்தால், காட்டுமிராண்டி நிலையிலுள்ள மக்கள் சமூகங்கள் அனைத்திலும், அநாகரிக நிலையின் கடைக்கட்டத்தைச் சேர்ந்த மக்கள் சமூகங்களிடையிலும் இப்படித்தான் இருக்கிறது. இதை முதன் முதலில் கண்டுபிடித்தவர் பாகோபென்தான்; அது அவரது இரண்டாவது மகத்தான சாதனையாகும். மற்றவையனைத்தும் நீங்கலாகத் தாய் மூலமாக மட்டுமே வம்சாவளியை அங்கீகரிப்பதையும், அதிலிருந்து காலப்போக்கில் வெளிவந்த வாரிசு உறவுகளையும் அவர் தாயுரிமை என்ற சொல்லால் குறிப்பிட்டார். சுருக்கத்தைக் கருதி நான்

இந்தச் சொல்லை வைத்துக்கொள்கிறேன். இருந்தாலும் இது ஒரு நயமற்ற சொல்தான்; ஏனெனில், சட்டரீதியான அர்த்தத்தில் உரிமை என்று குறிப்பிடக்கூடியது எதுவும் இந்தச் சமுதாயக் கட்டத்தில் இன்னும் ஏற்பட்டிருக்கவில்லை.

பூனலுவா குடும்பத்தில் பொது இலக்கணவகைப்பட்ட குழுக்கள் இரண்டு உள்ளன. அவற்றில் ஒன்றை எடுத்துக்கொள்ளலாம்; அதாவது, ஒரு தாய் வயிற்றில் பிறந்த சகோதரிகள், கிளை வயிற்றுச் சகோதரிகள் (அதாவது, ஒரு தாய் வயிற்றில் பிறந்த சகோதரிகளின் வழியே வந்த ஒன்றுவிட்ட, இரண்டு விட்ட, அல்லது அதைவிடத் தூரமான உறவுள்ள சகோதரிகள்) ஆகியோரையும் அவர்களின் குழந்தைகளையும், அவர்களின் தாய்த் தரப்பிலிருந்து உதித்த இயற்கைச் சகோதரர்களையும் கிளை வயிற்றுச் சகோதரர்களையும் (நமது அனுமானக் கூற்றின்படி இவர்கள் அவர்களுடைய கணவன்மார்கள் அல்ல) கொண்டமைந்த குழுவை எடுத்துக் கொண்டு பார்ப்போம். அதைப் பார்க்கும்பொழுது, ஓர் ஆதி வடிவத்துக் கண ஸ்தாபனத்தின் அங்கத்தினர்களாகப் பின்னல் வெளிப்பட்ட நபர்களின் குழு ஒன்று அப்படியே நமக்குக் கிடைக்கிறது. அவர்கள் அனைவருக்கும் ஒரு பொதுவான மூலத் தாய் உண்டு; அவள் மூலமாகத் தலைமுறை தலைமுறையாக வந்த பெண் சந்ததியார் அனைவரும், அவள் வழியே உதித்த காரண விசேஷத்தால், சகோதரிகள் ஆவார்கள். ஆனல், இந்தச் சகோதரிகளின் கணவர்கள் அவர்களின் சகோதரர்களாக இனிமேல் இருக்கமுடியாது; அதாவது, அந்த மூலத்

தாயிடமிருந்து வம்சபரம்பரையாக வந்தவர்களாக இருக்கமுடியாது; எனவே, அவர்கள் இந்த ரத்த உறவுக் குழுவை, பின்னால் அமைந்த கணத்தைச் சேர்ந்தவர்களல்ல; ஆனால் இவர்களின் குழந்தைகள் இந்தக் குழுவைச் சேர்ந்தவர்களேயாவர்; ஏனெனில் தாய்வழி வம்சாவளி ஒன்றே நிர்ணயமானது, ஏனெனில் அது ஒன்றே நிச்சயமானது. தாய்த் தரப்பிலிருந்து வந்த மிகவும் தூரமான தாயாதி உறவுள்ளவர்களையும் உள்ளிட்டுள்ள எல்லாச் சகோதர சகோதரிகளிடையேயும் புணர்ச்சி தடை செய்யப்படுவது நிலைநாட்டப்பட்டுவிட்டால் போதும், அத்துடன் மேற்குறிப்பிட்ட குழு ஒரு கணமாக முழு மாற்றம் கண்டுவிடும். அதாவது, தமக்குள் மணம் புரிந்துகொள்ள அனுமதிக்கப்படாதிருக்கின்ற பெண்வழி ரத்த உறவினர்களைக் கொண்ட ஒரு குறுகிய வட்டமாக அது தன்னை அமைத்துக் கொள்ளுகிறது. அது முதல், சமுதாய-மதசம்பந்தப் பட்ட மற்றப் பொது ஸ்தாபனங்களைக் கொண்டு தன்னை அது மேலும் மேலும் கெட்டிப்படுத்திக் கொள்கிறது, அதே குலத்தைச் சேர்ந்த பிற கணங்களினின்றும் அது தன்னை வேறுபடுத்திக் காட்டிக் கொள்கிறது. இதைக்குறித்துப் பின்னர் நாம் விரிவாகப் பேசுவோம். அவசியத் தேவையாக மட்டுமன்றி, வெளிப்படையாகவுமே கணம் என்பது பூனலுவா குடும்பத்திலிருந்து பரிணமமடைந்தது என்று நாம் கண்டோமேயானால், கண ஸ்தாபனங்களைப் பெற்றிருந்தவைகளாக அடையாளங்கண்டு கொள்ளப்பட்ட எல்லா மக்களிடையேயும்—அதாவது, அநேகமாக, அநாகரிக நிலையிலிருக்கிற எல்லா

மக்களிடையேயும், நாகரிக நிலையிலுள்ள எல்லா மக்களிடையேயும்—இந்தக் குடும்ப வடிவம் முன்னால் இருந்து வந்தது என்று கற்பித்துக்கொள்வதற்கு நமக்கு நிச்சயம் ஆதாரமுண்டு.

மார்கன் தமது நூலை வரைந்த காலத்தில் குழு மணத்தைப்பற்றி நமக்கு இருந்த அறிவு மிகவும் குறுகியதாகவே இன்னும் இருந்தது. வகுப்புகளாகத் திரண்டிருந்த ஆஸ்திரேலியர்களிடையே நிலவிய குழு மணங்களைப்பற்றிக் கொஞ்சம் தெரிந்திருந்தது. அதோடு கூடுதலாக, 1871ம் ஆண்டிலேயே மார்கன் ஹவாயி மக்களின் பூனலுவா குடும்பத்தைப் பற்றித் தமக்கு எட்டியிருந்த செய்தியையும் பிரசுரித்திருந்தார். ஒரு பக்கத்தில், அமெரிக்க இந்தியர்களிடையே இருந்த ரத்தக் குடும்ப அமைப்பு முறைக்குப் பூனலுவா குடும்பம் முழுவிளக்கம் தந்தது; மார்கனின் எல்லா ஆராய்ச்சி விசாரணைகளுக்கும் இதுவே தொடக்கப் புள்ளியாயிருந்தது. இன்னொரு பக்கத்தில், தாயுரிமைக் கணம் அதிலிருந்து பெறப்படுவதற்கு அது தயாராயிருக்கிற கிளைபிரியுமிடமாகவும் அமைந்தது. கடைசியாக, ஆஸ்திரேலிய வகுப்புகளைவிட எவ்வளவோ மேலான வளர்ச்சித் தரத்தை அது பிரதிநிதித்துவப்படுத்தியது. எனவே, பூனலுவா குடும்பம் என்பது ஒரு வளர்ச்சிக் கட்டம், அந்த வளர்ச்சிக் கட்டம் இணைக் குடும்பத்துக்கு நிச்சயமாக முந்தியதாயிருக்க வேண்டும் என்று மார்கன் நினைத்துக் கொண்டதும், அது ஆதிகாலங்களில் பொதுவாக நிலவியிருந்தது என்று கற்பித்துக் கொண்டதும் நாம் புரிந்துகொள்ளக் கூடியதேயாகும். அதற்கும்

பின்னுல் குழு மணத்தின் இதர வடிவங்களின் வரி சைத்தொடரைப்பற்றி நாம் தெரிந்துள்ளோம்; இந்த விஷயத்தில் மார்கன் ரொம்ப தூரமாகவே சென்று விட்டார் என்று நாம் இன்று அறிகிருேம். இருந்த போதிலும், அவர் கண்ட பூனலுவா குடும்பத்தில் குழு மணத்தின் உச்சவடிவத்தை, சாஸ்திரீய வடிவத்தை, எதிர்கொண்டதில் அவர் அதிர்ஷ்டசாலி யே; இந்த வடிவத்திலிருந்துதான் அதைவிட மே லான கட்டத்துக்கு மாற்றம் ஏற்பட்டதை மிகச் சுலபமாக விளக்கமுடிந்தது.

குழு மணத்தைப் பற்றிய நமது அறிவு மிகச் சாரபூர்வமாக அதிகரித்ததற்கு லோரிமர் பைஸன் என்ற ஆங்கில மதபோதகருக்கு நாம் கடமைப்பட் டிருக்கிருேம். ஏனெனில், குடும்பத்தின் இந்த வடி வத்தை அதன் சாஸ்திரீய இருப்பிடமான ஆஸ்தி ரேலியாவில் அவர் பல ஆண்டுகளாக ஆராய்ந்தார். தெற்கு ஆஸ்திரேலியாவிலுள்ள மவுண்ட் காம்பி யேர் என்ற இடத்திலிருக்கிற நீக்ரோ மக்க ளிடையே வளர்ச்சியின் கீழ்க் கட்டத்தை அவர் கண்டார். இங்கே, குலம் முழுவதும் இரு பெரும் வகுப்புகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது — குரோகி என்றும், குமைட் என்றும். ஒவ்வொன்றுக்குள்ளே யும் புணர்ச்சி கண்டிப்புடன் தடைசெய்யப்பட்டுள் ளது; ஆனுல் மறுபக்கத்தில், ஒரு வகுப்பைச் சேர்ந்த ஒவ்வோர் ஆணும் மற்ெறுரு வகுப்பைச் சேர்ந்த ஒவ்வொரு பெண்ணுக்கும் பிறவிக் கணவனுக இருக்கிருன்; அவளும் அவனுக்குப் பிறவி மனே வியாக இருக்கிருள். தனித்தனி நபர்களல்ல; முழு முழுக் குழுக்கள் பரஸ்பரம் மணம் செய்விக்கப்படு

கின்றன; வகுப்புடன் வகுப்பு மணம் செய்துகொள்கிறது. மேலும் கவனியுங்கள்: இரு விகோத்திர வகுப்புக்களாகப் பிரிவு செய்யப்பட்டு நின்று நிர்ணயமாயிருக்கிற ஒதுக்கலைத்தவிர வயது வித்தியாசம் அல்லது நெருங்கிய இரத்த உறவு போன்றவற்றைக் குறித்து ஒதுக்கிவைத்தல் என்பது ஒன்றுமே கிடையாது. ஒரு குரோகிக்கு உரிமைப்படி ஒவ்வொரு குமைப் பெண்ணும் மனைவியாவாள். ஆனால் குமைப் பெண் வழியாக அவனுக்குப் பிறக்கிற மகளும், தாயுரிமைப்படி, ஒரு குமை ஆகிறதினால் அந்த மகளும் தனது தகப்பனார் உள்பட ஒவ்வொரு குரோகிக்கும் பிறவி மனைவியாகிறாள். எதுவாயினும், நமக்குத் தெரிந்திருக்கிறபடி இந்த வகுப்பு ஸ்தாபனம் இங்கே தங்குதடைகள் எதுவும் போடவில்லை. எனவே ஒன்று, உட்குடும்பப் புணர்ச்சிக்கு வரம்பு கட்டுவதற்கு இருந்துவந்த மங்கலான உணர்வுத் தூண்டுதல்கள் எல்லாவற்றையும் மீறி, பெற்றோர்கள் பிள்ளைகள் இடையே புணர்ச்சி நிகழ்தல் பயங்கரம் என்று அப்படியொன்றும் விசேஷமாகக் கருதப்படாமலிருந்த ஒரு காலத்தில் இந்த ஸ்தாபனம் ஏற்பட்டிருக்க வேண்டும்; அப்படியானால் இந்த வகுப்பு அமைப்பு முறை வரைமுறையற்ற புணர்ச்சி நிலவிய நிலையிலிருந்து நேரடியாகத் தோன்றியிருக்க வேண்டும். அல்லது, வகுப்புகள் ஏற்பட்டபோது பெற்றோர்களுக்கும் பிள்ளைகளுக்குமிடையே புணர்ச்சி நிகழ்வது வழக்கத்தால் ஏற்கனவே தடை செய்யப்பட்டிருக்க வேண்டும்; அப்படியானால் நடப்புநிலை, ரத்த உறவுக் குடும்ப முறை வந்த வழியைக் காட்டுகிறது; அதனின்று ஏற்பட்ட

முதல் முன்னேற்றத்தை இது குறிக்கிறது. பிந்திய உத்தேசம் தான் பெரிதும் சாத்தியமானதாகும். எனக்குத் தெரிந்தவரையில் பெற்ருேர்கள், பிள்ளைகள் இடையே திருமணத்தொடர்புகள் இருப்பது குறித்து ஆஸ்திரேலியாவிலிருந்து ஒன்றும் அறிவிக்கப்பட வில்லை. விகோத்திர மணத்தின் பின்வந்த வடிவம் அதாவது தாயுரிமை கொண்டாடும் கணம், அது ஸ்தாபனமாவதற்கு முன்பே பொதுவாகவே இப்படிப் பட்ட புணர்ச்சிக்குத் தடையிருந்தது என்பதை நியமப்படி உள்ளூற உணர்த்துகிறது.

தெற்கு ஆஸ்திரேலியாவின் மவுண்ட் காம்பியேர் தவிர, இரு வகுப்பு அமைப்பு முறை என்பது டார்லிங் நதி பாயும் இடங்களிலும், அதற்கு இன்னும் கிழக்கிலும், வடகிழக்குப் பிரதேசத்திலுள்ள குவின்ஸ்லாந்திலும், காணக் கிடக்கிறது. ஆக, அது மிகவும் பரவலாகப் படர்ந்திருந்தது. இந்த அமைப்பு முறை சகோதர சகோதரிகளிடையே மட்டுமே திருமணத்துக்குத் தடை செய்திருந்தது; தாய் தரப்பைச் சேர்ந்த சகோதரர்களின் குழந்தைகளுக்கிடையேயும், சகோதரிகளின் குழந்தைகளிடையேயும் திருமணத்திற்குத் தடை செய்திருந்தது. காரணம், இவர்கள் ஒரே வகுப்பைச் சேர்ந்தவர்களாவர். ஆனால், மறு பக்கத்தில், சகோதரனின் குழந்தைகளுக்கும் சகோதரிகளின் குழந்தைகளுக்கும் இடையே திருமணம் நடப்பது அனுமதிக்கப் பட்டது. உள் குடும்பப் புணர்ச்சிக்குத் தடை செய்வதில் இன்னேர் அடி எடுத்துவைத்ததற்கு காமிலராய் மக்களைப் பார்க்கலாம். இவர்கள் நியூ சவுத் வேல்ஸிலுள்ள டார்லிங் நதிப் பிரதேசத்தில் உள்ள

னர். இங்கே ஆதியிலிருந்த இரு வகுப்புக்கள் நான்காகப் பிரிக்கப்பட்டுள்ளன; இவற்றில் ஒவ்வொரு வகுப்பும் இன்னொரு திட்டமான வகுப்புடன் முழுதாக மணம் புரிந்துகொள்கிறது. முதல் இரண்டு வகுப்புக்களும் பரஸ்பரம் பிறவிக் கணவன் மனைவியராயுள்ளனர். தாய் முதலாவது வகுப்பைச் சேர்ந்தவளா அல்லது இரண்டாம் வகுப்பைச் சேர்ந்தவளா என்பதைப் பொறுத்துக் குழந்தைகள் மூன்றுவது வகுப்பிலோ நான்காவது வகுப்பிலோ அங்கம் வகிக்கிறுர்கள். மேலும், இந்த மூன்றுவது, நான்காவது வகுப்புக்களும் பரஸ்பரம் மணம் புரிந்துகொள்கின்றன; அவற்றின் குழந்தைகள் மீண்டும் முதலாவது, இரண்டாவது வகுப்பைச் சேர்ந்தவர்களாகிறுர்கள். ஆக, ஒரு தலைமுறை எப்போதும் முதலாவது, இரண்டாவது வகுப்புக்களைச் சேர்ந்ததாயிருக்கும்; அடுத்த தலைமுறை மூன்றுவது, நான்காவது வகுப்புக்களைச் சேர்ந்ததாயிருக்கும்; அதற்கும் அடுத்த தலைமுறை மீண்டும் முதலாவது, இரண்டாவது வகுப்புக்களைச் சேர்ந்ததாயிருக்கும். இந்த அமைப்பு முறைப்படி (தாய் தரப்பில் வந்த) சகோதர சகோதரிகளின் குழந்தைகள் கணவன் மனைவி ஆகமுடியாது; ஆனுல் அவர்களின் பேரக் குழந்தைகள் கணவன் மனைவி ஆகலாம். இது ஒரு விசித்ரமான சிக்கலுள்ள அமைப்பு முறை. இத்துடன் பின்னுல் தாயுரிமைக் கணங்களை ஒட்டச் செய்ததனுல் அது மேலும் சிக்கலாக்கப்பட்டது. ஆனுல் இங்கு இதைப் பற்றி ஆராயமுடியாது. ஆக, உட்குடும்பப் புணர்ச்சிக்குத் தடைபோடும் உணர்வுத் தூண்டுதல்கள் எப்படி அடிக்கடி தம்மை நிலைநாட்டிக் கொள்கின்

றன என்று பார்க்கிறோம்; இருந்தாலும் அவை வழி தெரியாமல் நடவிக் கொண்டு, போகிற ரீதியில், தன்னியல்பான ரீதியில், நோக்கத்தைப் பற்றித் தெளிவான உணர்வின்றியே செயல்படுகின்றன.

ஆஸ்திரேலியாவைப் பொறுத்தவரையில் குழு மணம் என்பது இன்னும் வகுப்பு மணமாகத்தான் இருக்கிறது; அதாவது ஆண்களின் ஒரு முழுவகுப்பின் மணமாகும்; அடிக்கடி அவர்கள் அந்தக் கண்டம் முழுவதிலும் பரவிக்கிடப்பார்கள்; பெண்களும் அப்படியே விரிந்த ரீதியில் பரவி இருப்பார்கள். நெருங்கிப் பரிசீலிக்கும்போது, இந்தக் குழு மணம் விபசார விடுதி பற்றிய எண்ணங்களால் கறைபடிந்த கற்பனையோடு பிலிஸ்டைன்கள் நினைத்துக் கொள்கிறமாதிரி அவ்வளவு ஒன்றும் பயங்கரமானதல்ல. அதற்குமாறாக, அது இருந்து வருவதாகச் சந்தேகப்படுவதற்குக்கூட நீண்டகாலம் பிடித்தது; மேலும், சமீபத்தில்தான் அதைப்பற்றிச் சர்ச்சையும் மறுபடியும் கிளம்பியுள்ளது. மேலோட்டமாகப் பார்க்கிறவனுக்கு அது தளர்ந்து நெகிழ்ந்துள்ள ஒரு தார மணத்தின் வகையைச் சேர்ந்ததாகத் தோன்றுகிறது; சில இடங்களில், அவ்வப்பொழுது சோரம் போய்க் கொண்டிருக்கிற போக்கிலிருக்கிற பலதார மணமாகவும் அது அவனுக்குத் தோன்றுகிறது. இந்த மண உறவுகளை—நடைமுறையில் இவை ஒரு சராசரி ஐரோப்பியனுக்குத் தனது மண வழக்கங்களைத் தான் நினைவூட்டுகின்றன—வழி செலுத்தி வருகிற விதியைக் கண்டுபிடிப்பதற்கு ஒருவன் பல ஆண்டுகள் செலவழிக்கவேண்டும். ஃபைஸனும் ஹோவிட்டும் அப்படித்தான் செலவழித்தார்கள். இந்த விதிப்

படி ஓர் ஆஸ்திரேலிய நீக்ரோ தன் வீட்டைவிட்டு ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பால் முகாமுக்கு முகாமாக, குலத்துக்குக் குலமாக வேற்று மக்க ளிடையே, அவர்களது மொழிகூடப் புரியாமல் அன் னியனாகச் சுற்றித்திரிகின்ற காலத்திலும், கபடு ஒன்று மில்லாமல், எதிர்க்கவும் செய்யாமல், அவனுக்குத் தம்மை ஒப்புக்கொடுக்கிற பெண்கள் மிக அடிக்கடி அவனுக்குக் கிடைக்கிறார்கள். அதே விதிப்படி சில மனைவிகளையுடைய ஒருவன் தனது விருந்தாளிக்கு அன்றைய இரவுக்கு தன் மனைவிகளில் ஒருத்தியைத் தருகிறான். ஒழுக்கக்கேட்டையும், சட்ட ஒழுங்கின் மையையும் மட்டுமே எங்கெல்லாம் ஐரோப்பியன் பார்க்க முடிகிறதோ, அங்கெல்லாம் கண்டிப்பான விதி ஒன்று ஆட்சிசெலுத்துகிறது. அந்தப் பெண் கள் அந்த அந்நியனின் மண வகுப்பைச் சேர்ந்த வர்கள், எனவே அவர்கள் அவனது பிறவி மனைவியரா வர். ஒருவனை ஒருத்திக்கு வழங்குகிற இதே அறவிதி தான் தமக்குரிய மணவகுப்புக்கு வெளியே புணர்ச்சி செய்வதைத் தடை செய்கிறது, மீறினால் குலத்தை விட்டு வெளியேற்றும் தண்டனை விதிக்கிறது. பெண் களைப் பலவந்தமாகக் கடத்திச் செல்வது அடிக்கடி நடக்கிறது. சில இடங்களில் இது பொது விதியுமா கும். இவ்விஷயத்திலும் இந்த வகுப்பு விதி கண்டிப் பாகப் பின்பற்றப்படுகிறது.

இங்கேயும் கூடப் பெண்களைக் கடத்திச் செல் லும் முறை தனிப்பட்ட மணமுறைக்கு —குறைந்த பட்சம் இணை மண வடிவத்தில்—மாற்றம் பெறுவ தின் அறிகுறியை ஏற்கனவே வெளிப்படுத்துகிறது. தனது நண்பர்களின் உதவியோடு ஒரு வாலிபன் ஒரு

பெண்ணைக் கடத்திக் கொண்டோ அல்லது பெண் ணோடு வீட்டைவிட்டு ஓடியோ போனபிறகு ஒருவர் பின் ஒருவராக அவர்கள் எல்லோரும் அந்தப் பெண் ணைப் புணர்கிறார்கள். ஆனால் அதன் பிறகு, அவளைக் கடத்திச் செல்வதற்கு முன்னின்றவனே, அவளுக் குக் கணவனாகக் கருதப்படுகிறான். திரும்பச் சொன் னால், கடத்திச் செல்லப்பட்ட அந்தப் பெண் அந்த ஆணை விட்டுவிட்டு ஓடிப்போய் இன்னொருவ னால் பிடிபட்டால் அவள் அவனுக்குத் தான் மனைவியாகிறாள், முன் வந்தவன் தனது உரிமையை இழக்கிறான். ஆக, ஒன்றையொன்று விலக்கி வைக் கிற உறவுகளும், நீண்ட காலத்துக்கோ குறுகிய காலத்துக்கோ தம்பதிகளாயிருப்பதும், அவற்றுடன் கூடப் பலதார மணமும், குழு மணத்தின் பக்கத் திலேயும் குழு மணத்திற்குள்ளேயும் கூடத் தம்மை நிலைநாட்டிக்கொள்கின்றன; இந்தக் குழு மணம் பொ துவாகவே தொடர்ந்து நீடிக்கிறது. ஆகவே, இங்கே யும்கூடக் குழு மணம் படிப்படியாக நசித்துவருகிறது. குழு மணமா அல்லது அதில் ஈடுபடுகிற ஆஸ்திரே லிய நீக்ரோக்களா, யார் முதலில் ஐரோப்பியர்களின் நிர்ப்பந்தத்தின் விளைவாக மறைந்துபோவார்கள் என் பது தான் கேள்வி.

எது எப்படி இருந்தாலும், ஆஸ்திரேலியாவிலிருக் கிற முழு வகுப்புக்களிடையே மணம் என்பது, குழு மணத்தின் மிகவும் கீழான, புராதனமான வடிவமாகும்; ஆனால் பூனலுவா குடும்பம் என்பதோ, நமக்குத் தெ ரிந்தவரையில், அதன் உச்ச வளர்ச்சிக்கட்டமாகும். சுற்றித்திரிகின்ற காட்டுமிராண்டிகளின் சமூக அந் தஸ்துக்குப் பொருத்தமான வடிவமாக முந்தியது

இருக்கிறதாகத் தென்படும்; பிந்தியது இருக்க வேண்டுமெனில் பொதுவுடைமை ரீதியில் அமைந்த சமூகங்களின் ஸ்திரமான வாழ்விடங்கள் முதலில் இருந்திருக்கவேண்டும். இது அதற்கடுத்த, மேலான வளர்ச்சிக் கட்டத்துக்கு நேரடியாகக் கொண்டு போகிறது. இவ்விரண்டுக்குமிடையே இடைத்தரக் கட்டங்கள் நிச்சயமாகக் காணக் கிடக்கும். இங்கே இப்பொழுதுதான் கண்டுபிடித்திருக்கிற, இன்னும் பரிசீலனை தொடங்கப்படாத ஆராய்ச்சிகளும் நம் முன் கிடக்கின்றன.

3. **இணைக் குடும்பம்.** குழு மணத்தின் போதோ அல்லது அதற்கு முன்னரோ, நீண்டகாலத்துக்கோ குறுகிய காலத்துக்கோ ஒருவகையான இணை வாழ்க்கை இருந்து வந்தது. ஆணுக்குள்ள பல மனைவியரில் ஒருத்தி அவனுக்குப் பிரதான மனைவியாக (அவனுக்கு மிகப் பிடித்தமான மனைவி என்று அவளைச் சொல்வதற்கு இடமில்லை) இருந்தாள்; அதேபோல் அவளுக்குள்ள பல கணவர்களில் அவனும் அவளது பிரதான கணவனாக இருந்தான். கிறிஸ்தவ மதபோதகர்களிடையே குழப்பம் உண்டாவதற்கு இந்த நிலைமை பெரும் அளவுக்கு உதவியது; குழு மணத்தில் அவர்கள் சில சமயங்களில் பெண்களை முறை கெட்ட வகையில் பொதுவில் அனுபவிப்பதையும், சில சமயங்களில் லச்சையற்ற பரஸ்திரீகமனத்தையும் பார்க்கிறார்கள். என்ற போதிலும், கணம் வளரவளர இப்படிப்பட்ட வழக்கப்பட்டுப்போன இணை முறை அவசியத்திலேயே மேலும் மேலும் நிலைபெற்றுப் போயிற்று; இப்போது பரஸ்பரம் மணம் புரிந்து கொள்ளமுடியாது போய்விட்ட ''சகோதரர்களின்''

வகுட்புக்களும் ''சகோதரிகளின்'' வகுப்புக்களும் எண்ணிக்கையில் பெருகப்பெருக இந்த இணைமுறை மேலும் மேலும் நிலைபெற்றுப்போயிற்று. இரத்த உறவினர்களிடையே மணம் புரிவதைத் தடை செய்வதற்குக் கணம் அளித்த தூண்டுதல்கள் விஷயங்களை மேலும் விரட்டின. இப்படித்தான் இரோகுவாய் மக்களிடையிலும், அநாகரிக நிலையின் கடைக்கட்டத்தைச் சேர்ந்த மிகப்பெரும்பாலான செவ்விந்தியக் குலங்களிடையிலும் அவர்கள் அமைப்புமுறை அங்கீகரிக்கிற உறவினர்கள் **எல்லோரிடையேயும்** திருமணம் தடை செய்யப்பட்டுள்ளது. இந்த உறவினர்கள் பல நூற்றுவகைப்பட்டவர்களாவர். இந்த மணத் தடைகளின் பெருகிவரும் சிக்கல்களினால் குழு மணங்கள் மேலும் மேலும் சாத்தியமில்லாமற்போயின. அவற்றுக்குப் பதிலாக **இணைக் குடும்பம்** வந்து சேர்ந்தது. இந்தக் கட்டத்தில் ஒருவன் ஒருத்தியுடன் வாழ்கிறான்; என்றாலும் பலதார மணமும் சமயங்களில் சோரம் போவதும் ஆணின் உரிமையாக இருந்துவரும் வகையில் அவ்வாழ்க்கை நடக்கிறது; பொருளாதாரக் காரணங்களுக்காகப் பலதார மணம் என்பது அநேகமாகக் கைக்கொள்ளப்படுவதில்லை தான். அதே சமயத்தில், இணைந்து வாழும் காலத்தில் பெண்ணிடம் மிகுந்த கண்டிப்புடன் கற்பு கோரப்படுகிறது; அவள் சோரம் போனால் குரூரமாகத் தண்டிக்கப்படுகிறாள். இரு தரப்பினரும் மண உறவைச் சுலபமாக ரத்து செய்து கொள்ளலாம்; முன்போலவே குழந்தைகள் தாய்க்கு மட்டுமே சொந்தமாவார்கள்.

இரத்த உறவினர்களிடையே மண விலக்கு

இடைவிடாது விரிவடைவதில் இயற்கைத் தேர்வும் தொடர்ந்து செயல்படுகிறது. ரத்த உறவில்லாத கணங்களிடையே நடக்கும் திருமணங்கள், மார்கனின் சொற்களிலே, ''உடலிலும் உள்ளத்திலும் மேலும் வீரியம் பொருந்திய மக்களை உண்டாக்கு வதில் கொண்டுபோய்விட்டன. முன்னேறிவருகிற இரு குலங்கள் ஒரு மக்கள் சமூகமாகக் கலக்கப்படும் பொழுது... புதிய கபாலமும் மூளையும் அவ்விரு குலங்களின் திறன்களின் தொகைக்கேற்ப விரிவடையவும் நீளவும் செய்யும்''. ஆகவே, கணங்கள் ரீதியிலமைந்த குலங்கள் பிற்பட்ட குலங்களை வென்றுவிடுவார்கள், அல்லது தமது உதாரணத்தின் சக்தியால் தம்முடன் இழுத்துச்செல்வார்கள்.

ஆகவே, ஏடறியாத வரலாற்றுக் காலத்தில் குடும்பம் அடைந்துள்ள பரிணும வளர்ச்சி இரு பாலாருக்கிடையே பொதுமணம் நிலவிய வட்டம் இடையருது குறுகிக் கொண்டே வந்ததில்தான் அடங்கியிருக்கிறது. ஆரம்பத்தில் குலம் முழுவதுமே இவ்வட்டத்திற்குள் இருந்தது. முதலில் நெருங்கின உறவினர்களையும் பிறகு மேலும் மேலும் தூரமான உறவினர்களையும் ஒருவர்பின் ஒருவராக விலக்கிவைத்தும், கடைசியிலே திருமணமொன்ருலேயே உறவினர்களானவர்களையும் விலக்கிவைத்தும், குழுமணத்தின் ஒவ்வொரு வடிவமும் நடைமுறையில் சாத்தியமற்றுப்போகும்படி செய்யப்பட்டது. முடிவில் எஞ்சியது ஒரே ஒரு தாம்பத்திய ஜோடி தான்; அது தாற்காலிகமாகத் தளர்ந்தரீதியிலேதான் இணைக்கப்பட்டுள்ளது; அதுதான் மூலக்கூறு; அதுவும் கலைவுற்ருல் திருமணமே இல்லாதுபோய்விடும். ஒருதார

மணம் தோற்றமெடுத்ததில் நவீனகாலத்திய அர்த் தத்தில் ஒருவன் ஒருத்தி காதலுக்குக் கொஞ்சங் கூடச் சம்பந்தமில்லை என்பதை இந்த ஒரு விஷயமே காட்டிவிடுகிறது. இந்தக் கட்டத்திலுள்ள எல்லா மக்கள் சமூகங்களின் நடைமுறையும் இதற்கு மே லும் ருசுக்கள் தருகின்றது. முந்திய குடும்ப வடிவங் களில் பெண்கள் விஷயத்தில் ஆணுக்கு ஒருபொழு தும் பஞ்சமேயில்லை; அதற்கு மாருக, தேவைக்கு அதிகமாகவே பெண்கள் கிடைத்தார்கள்; இப்பொழு தோ பெண்கள் கிடைப்பது கிராக்கியாகிவிட்டது, தேடிக்கொண்டு போகவேண்டியதாய்விட்டது. என வே, இணைமண முறையுடன் பெண்களைக்கடத்திச்செல் வதும் பெண்களை விலைக்கு வாங்குவதும் தொடங்கு கின்றன. இன்னும் எவ்வளவோ ஆழமாய் வேர்விட்ட மாறுதல் வந்துற்றதின் பரவலான அறிகுறிகளே இவை, அதற்குமேல் ஒன்றுமில்லை. இந்த அறிகுறி களை, பெண்களைக் கொள்வதற்காக இருந்த வழி முறைகளை, மாக்லென்னன் என்கிற ஸ்காட்டிஷ் ஏட் டறிவாளி, குடும்பங்களின் விசேஷ வகுப்புகளாக உருமாற்றி அவற்றைக் ''கடத்தல் மூலமாக நடக் கும் திருமணம்'' என்றும் ''விலைக்கு வாங்குவது மூலமாக நடக்கும் திருமணம்'' என்றும் அழைத் தார். மேலும், அமெரிக்க இந்தியர்களிடையேயும், (அதே கட்டத்திலிருக்கிற) இதர குலங்களிடை யேயும் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்வது, சம்பந் தப்பட்ட இரு தரப்பினரின் விவகாரம் அல்ல; பல சமயங்களில் அவர்களைக் கலந்துகொள்வதுமில்லை; அவர்களின் தாய்மார்களின் விவகாரம்தான் அது. ஆக, முன்பின்னறியாத இரு நபர்களுக்கிடையே

தான் நிச்சயதார்த்தம் நடக்கிறது; திருமண நாள் நெருங்கும்போதுதான் இந்த ஏற்பாடு நடந்துமுடிந் ததுபற்றி இரு நபர்களும் அறிகிறார்கள். திருமணத் திற்கு முன் மணமகளின் கண உறவினர்களுக்கு (அதாவது, பெண்ணின் தாய்வழி வந்த உறவினர் களுக்குத்தான், தகப்பனுருக்கும் அவரது உறவினர் களுக்கும் அல்ல) மணமகன் பரிசுகள் அளிக்கிறான்; இந்தப் பரிசுகள் கொள்ளப்பட்ட பெண்ணை வாங்கிய தற்குரிய பரிசுகளாகப் பயன்படுகின்றன. அவளோ அவனே விரும்புகிறபோது திருமணத்தை ரத்து செய்துகொள்ளலாம். என்றபோதிலும், பல குலங் களில், உதாரணமாக இரோகுவாய்களிடையில், இப்படிப்பட்ட மண உறவு ரத்துக்களுக்கு எதிராகப் பொதுஜன உணர்ச்சி படிப்படியாக வளர்ந்தது. சச் சரவுகள் ஏற்படுகிற பொழுது இரு தரப்பினரின் கண உறவினர்கள் குறுக்கிட்டுச் சமரசப்படுத்த முயல்கிறார்கள்; அந்த முயற்சிகள் தோற்றுப்போன பிறகுதான் கணவனும் மனைவியும் பிரிகிறார்கள்; குழந்தைகள் தாயிடமே இருந்து விடுகின்றன; இருவரும் மறுபடியும் மணம் புரிய உரிமை பெற் றவர்களாகிறார்கள்.

இணைக் குடும்பம் என்பதே சுதந்திரமான தனிக் குடும்ப வாழ்வைத் தேவைப்படுத்துவதற் கோ அல்லது விரும்பச் செய்வதற்கோ சக்தியற்ற அளவுக்கு மிகவும் பலவீனமாகவும் ஸ்திரமின்றியும் இருந்தது. முன்காலத்திலிருந்து வந்தடைந்த பொது வுடைமைக் குடும்ப வாழ்வை அது கலேத்துவிட வில்லே. ஆனால், பொதுவுடைமைக் குடும்ப வாழ்வு என்கிறபோது வீட்டில் பெண்ணின் மேலாதிக்கத்

தைக் குறிக்கும்—இயற்கையான தகப்பன் யார் என்று நிச்சயமாக நிர்ணயிக்கமுடியாத காரணத்தால் இயற்கையான தாயைமட்டும் அங்கீகரிக்கும் நிலை பெண்களிடம், அதாவது தாய்மார்களிடம், பெரு மதிப்பைக் குறிப்பதுபோல. சமுதாயம் தொடங்கும்பொழுது ஆணுக்குப் பெண் அடிமையாக இருந்தாள் என்பது பதினெட்டாம் நூற்றுண்டின் அறிவு மலர்ச்சிக் காலத்திலிருந்து நமக்கு வந்துசேர்ந்துள்ள கருத்துக்களிலெல்லாம் சுத்த அபத்தமானதொரு கருத்தாகும். எல்லாக் காட்டுமிராண்டிகளிடையிலும் கடைக்கட்டத்திலும் இடைக்கட்டத்திலுமுள்ள அநாகரிக நிலையிலுள்ள மக்களிடையேயும், ஓரளவுக்கு அதன் தலைக்கட்டத்திலுள்ள மக்களிடையேயும் பெண் சுதந்திரமான அந்தஸ்து வகித்துவந்தது மட்டுமல்ல, மதிப்புமிக்க அந்தஸ்தும் வகித்துவந்தாள். செனிகா இரோகுவாய்களிடையே பல ஆண்டுகள் மதபோதகராக இருந்த ஆர்தர் ரைட் என்பவர் இணைக் குடும்பத்தில் இன்னும் பெண் வகித்துவருகிற ஸ்தானத்தைப் பற்றிச் சாட்சியமளிக்கட்டும்: ''அவர்களின் குடும்ப அமைப்புமுறையைப் பொறுத்தவரையில், பழைய நீளமான வீடுகளில் வாழ்ந்தபொழுது [பல குடும்பங்களை அணைத்தபடி இருந்த பொதுவுடைமைக் குடும்பங்கள்]... ஏதாவது ஒரு கிளான் [கணம்] பெரும்பாலும் மேலோங்கியிருந்திருக்கக்கூடும்; பிற கிளான்களிலிருந்து [கணங்களிலிருந்து] பெண்கள் கணவன்மார்களைக் கொண்டார்கள்.... சகஜமாகவே வீட்டில் ஆட்சிபுரிந்தது பெண் பகுதியே; பொருள் கிடங்குகள் பொதுவிலிருந்தன; தன் பங்குக்குப் பொருட்களைக் கொண்டுவந்து தரு

வதற்கு வக்கில்லாத துரதிர்ஷ்டம்பிடித்த கணவனோ அல்லது காதலனோ துயரப்பட வேண்டியதுதான். வீட்டில் அவனுக்கு எத்தனை குழந்தைகள் இருந்த போதிலும், எத்தனை பொருட்கள் இருந்தபோதிலும் அவன் வெளியே போய்விடும்படி எந்த விநாடியிலும் உத்தரவிடப் படலாம். அப்படி உத்தரவிடப் பட்ட பிறகு அதை மீற முயல்வது அவனுக்கே நல்லதல்ல. அவனை வீடு சகித்துக் கொள்ளாது; தனது கிளானுக்கு [கணத்துக்கு] அவன் திரும் பிச் சென்று விட வேண்டியது தான். அல்லது, அடிக்கடி நடக்கிறமாதிரி, வெளிச்சென்று இன்னொ ரிடத்தில் புதிய திருமண உறவைத் துவக்கிவிட வேண்டியதுதான். பிற இடங்களிலுள்ளது போலவே கிளான்களிடையே [கணங்களிடையே] பெண்கள் தான் பெரும் சக்தியாக இருந்தார்கள். தேவையான சந்தர்ப்பங்களில், தலைவனின் கொம்பைத் தட்டி யெறிந்து—அப்படித் தான் தொழில் மொழியில் சொல்லப்பட்டது — அவனைச் சாதாரண வீரர்களின் அணியில் தள்ளி விட அவர்கள் தயங்கியதில்லை''. பொதுவுடைமைக் குடும்பத்தில் பெரும்பாலான பெண்கள் அல்லது எல்லாப் பெண்களுமே ஒரே யொரு கணத்தைச் சேர்ந்தவர்களாவர், ஆண்களோ பல்வேறு கணங்களிலிருந்து வந்தவர்கள். அதுதான் புராதன காலங்களில் பெண்கள் மேலோங்கிய நிலை யிலிருந்து வந்ததற்குப் பௌதீகரீதியான அஸ்திவார மாகும். இதை பாகோபென் கண்டுபிடித்தது அவர் செய்த மூன்றாவது மாபெரும் சேவையாகும். இன் னொன்றையும் நான் சேர்த்துச்சொல்லலாம். காட்டு மிராண்டி நிலையிலுள்ள மக்களிடையிலும் அநாகரிக

நிலேயிலுள்ள மக்கள் மத்தியிலும் பெண்கள் மீது வேலேச் சுமை அளவு மீறியதாயிருக்கிறது என்று பிரயாணிகளும் மதபோதகர்களும் தரும் செய்திகள் மேலே சொன்னதுடன் எந்த விதத்திலும் முரண்பட்டு மோதிக்கொள்வதாயில்லே. இரு பாலாரிடையேயும் உழைப்புப் பிரிவினையை நிர்ணயிப்பதற்குரிய காரணங்கள் வேறு; சமுதாயத்தில் இரு பாலாரின் அந்தஸ்தை நிர்ணயிப்பதற்குரிய காரணங்கள் வேறு. நமக்கு முறையாகப் படுகிற அளவுக்குமேல் கடுமையாக உழைக்கிற பெண்களேக் கொண்ட மக்கள் நமது ஐரோப்பியர்கள் பெண்களிடம் வைத்திருக்கிற மதிப்பைவிட எவ்வளவோ அதிகமாக மதிப்பு வைத்திருக்கின்றனர். போலி வந்தனோபசாரங்களால் சூழப்பட்டு, எல்லாவிதமான உண்மையான உழைப்பிலிருந்தும் விலக்கப்பட்டு இருக்கிற நாகரிகச் சீமாட்டியின் சமூக அந்தஸ்து இருக்கிறதே, அது அநாகரிக நிலேயைச் சேர்ந்த, கஷ்டப்பட்டு உழைக்கிற பெண்ணின் அந்தஸ்தைவிடச் சமூகரீதியில் எவ்வளவோ கீழானதாகும். அந்தப் பெண் தன் மக்களிடையே உண்மையிலேயே ஒரு சீமாட்டியாக (lady, frowa, Frau—எஜமானி) கருதப்பட்டாள், அவள் வகித்த நிலேயின் தன்மையினுலேயே அவள் அப்படி இருந்தாள்.

இன்று அமெரிக்காவில் குழு மணத்தின் இடத்தை இணேக் குடும்பம் முழுவதும் கைப்பற்றிவிட்டதா இல்லேயா என்ற விஷயத்தை இன்னும் காட்டுமிராண்டி நிலேயின் தலேக்கட்டத்திலேயே இருந்து வரும் வடமேற்கு அமெரிக்க, மேலும் குறிப்பாகத் தென் அமெரிக்க, மக்களிடையே முன்னிலும்

நெருங்கி ஆராய்வதின் மூலமாகத்தான் முடிவுகட்ட முடியும். பின்சொன்ன மக்களிடையே புணர்ச்சிச் சுதந்திரம் பற்றிய ஏராளமான உதாரணங்கள் கொடுக்கப்படுவதால் பழைய குழு மணம் அடியோடு ஒடுக்கப்படுவதாகக் கற்பித்துக் கொள்வது சாத்தியமில்லை. எப்படியிருப்பினும், அதன் எல்லா அடையாளங்களும் இன்னும் மறைந்து விடவில்லை. குறைந்தபட்சம் நாற்பது வட அமெரிக்கக் குலங்களில், ஒரு குடும்பத்தின் மூத்த சகோதரியை மணம் புரிந்துகொள்கிற ஆண் அவளது சகோதரிகளில் அனைவரையும், அவர்கள் உரிய வயது எட்டியதும், தனது மனைவிகளாகக் கொள்ள உரிமை பெற்றிருக்கிறான்: சகோதரிகளின் ஒரு முழுக் குழுவுக்குக் கணவன்மார்கள் பொதுவாக இருந்த அமைப்பின் மிச்ச சொச்சம் இது. மேலும், காலிபோர்னிய தீபகற்பத்திலுள்ள (காட்டுமிராண்டி நிலையின் தலைக்கட்டத்தைச் சேர்ந்த) குலங்களிடையே சில விழாக்கள் உண்டு, அவ்விழாக் காலங்களில் வரைமுறையற்ற புணர்ச்சியில் ஈடுபடுவதற்காகப் பல "குலங்கள்" திரண்டுவருகின்றன என்று பான்கிராப்ட் சொல்கிறார். இவை கணங்கள் என்பது வெளிப்படை; ஒரு கணத்தின் பெண்கள் இன்னொரு கணத்தைச் சேர்ந்த ஆண்களெல்லோரையும் பொதுவான கணவர்களாகவும், அதேபோல் ஒரு கணத்தின் ஆண்கள் இன்னொரு கணத்தின் பெண்களெல்லோரையும் பொதுவான மனைவியராகவும் கொண்டிருந்த பழங்காலத்தை இவற்றிற்கு மங்கலாக நினைவூட்டுகிறதைக் குறிப்பவையே இந்த விழாக்கள். இதே வழக்கம் ஆஸ்திரேலியாவிலும் இன்னும் இருந்து வருகிறது. சில மக்கள்

சமூகங்களில் வயதானவர்கள், அதாவது தலைவர்களும் மந்திரவாதி-புரோகிதர்களும், பொதுமனைவியர் முறையைத் தமது நோக்கங்களுக்காகப் பயன்படுத்திக்கொள்கிறதும், பெரும்பாலான பெண்களைத் தமக்கே ஏகபோகமாக்கிக் கொள்கிறதும் நிகழத்தான் செய்கிறது. ஆனால் அவர்கள் கூட, தம் முறைக்கு, சில விழாச் சமயங்களிலும் மக்கள் பெருந்திரளாகக் கூடும் காலங்களிலும் பழைய பொதுமையை அனுமதித்து, தமது மனைவியர் வாலிபர்களோடு இன்பமனுபவிக்க விட்டுவிடவேண்டியவர்களாகின்றனர். இம்மாதிரிக் குறிப்பிட்ட காலங்களில் நடக்கும் சாடேர்னேலிய விருந்து விழாக்களுக்கு[1] வரிசை வரிசையாக வெஸ்டர்மார்க் (28-29ம் பக்கங்களைப் பார்க்க) உதாரணங்கள் தருகிறார்; இந்த விழாக்களில் அந்தப் பழைய சுயேச்சையான புணர்ச்சி வழக்கம் ஒரு குறுகிய காலத்துக்கு அமுலுக்கு வருகிறது. இதற்கு உதாரணங்கள் இந்தியாவைச் சேர்ந்த ஹோக்கள், சந்தால்கள், பஞ்சார்கள், கோட்டர்கள்; சில ஆப்பிரிக்க மக்கள் மத்தியிலே, முதலியன. இதில் வேடிக்கை என்னவெனில், இவற்றைக் குழு மணத்தின் மிச்சசொச்சங்களாகக் கருதாமல் — குழு மணத்தையே அவர் மறுக்கிறார் — பண்டைக்கால மனிதனுக்கும் பிற விலங்குகளுக்கும் பொதுவாயிருந்த புணர்ந்து இணைந்து வாழும் பருவகாலத்தின் மிச்சசொச்சங்

[1] சாடேர்னேலிய விருந்து விழாக்கள்: (ரோமானிய தெய்வம் சாடேர்ன்)— பண்டைக்கால ரோமாபுரியில் மக்கள் திரளின் விருந்துகள், சாகுபடி வேலைகள் முடிக்கப்பட்டுவிட்டது பற்றிக் கொண்டாடப்பட்டன.—பதிப்பாசிரியர்கள்.

கள் என இதிலிருந்து வெஸ்டர்மார்க் முடிவு கட்டு கிறார்.

இப்பொழுது பாகோபெனின் நான்காவது மா பெரும் கண்டுபிடிப்புக்கு வருகிறோம். அதுதான் குழு மணத்திலிருந்து இணை முறைக்கு வந்துசேர்ந்த பரவலான மாற்றமாகும். தெய்வங்களின் பண்டைக் காலக் கட்டளைகளை மீறியதற்குச் செய்த தவம் என்று, கற்புரிமை வாங்கிக் கொள்வதற்காகச் செய்யும் தவம் என்று எதை பாகோபென் அர்த்தப்படுத்திக் கொண்டாரோ அது உண்மையிலே என்ன? பழைய பொதுக் கணவர்கள் முறையிலிருந்து விடுபட்டுத் தன்னை ஒருவனுக்குமட்டுமே ஒப்படைத்துவிட உரிமை பெறுவதற்காகச் செய்யும் தவத்தின் ஒரு மாயத் தோற்றமே அது. குறுகிய கால ஒப்புக் கொடுப்பு என்ற வடிவத்தை இந்தத் தவம் பெறுகிறது. பாபிலோனியப் பெண்கள் வருடத்தில் ஒரு தடவை மிலிட்டா கோவிலில் தங்களை ஒப்புக் கொடுத்துவிட வேண்டியிருந்தது. இதர மத்திய கிழக்கு நாட்டு மக்கள் சமூகங்கள் தமது பெண்களைப் பல வருடங் களாக அனெய்டிஸ் தேவதையின் கோவிலுக்கு அனுப்பிவைத்து வந்தார்கள். அங்கே அவர்கள் தாங் கள் தேர்ந்தெடுத்துக்கொண்ட, தங்களுக்குப் பிடித் தமான ஆண்களுடன் சுதந்திரமாகப் புணரவேண் டும், பிறகுதான் அவர்கள் மணம் புரிந்துகொள்ள அனுமதிக்கப்பட்டார்கள். மதத் திரையால் மூடப் பட்ட இவ்வித வழக்கங்கள் மத்தியதரைக் கடலுக் கும் கங்கை நதிக்கும் இடையிலுள்ள ஆசிய மக்கள் சமூகங்களில் அநேகமாக எல்லாவற்றிற்கும் பொது வாகும். காலம் செல்லச் செல்ல விடுதலை பெறுவதற்

காக அளிக்கப்பெறும் காணிக்கைகளின் பழு படிப் படியாக வருவாகிறது. பாகோபென் குறிக்கிறது போல்: ''வருடா வருடம் அர்ப்பணம் செய்துகொள் வதற்குப் பதிலாக ஒரேயொரு நிகழ்ச்சியோடு நின்றுவிடுகிறது; பெருமாட்டிகளின் பொது மகளிர் முறைக்குப் பின் யுவதிகளின் பொது மகளிர் முறை வந்து சேருகிறது; கல்யாண காலத்தில் அது அமுலுக்கு வந்தது போய், கல்யாணத்திற்கு முன் அமுலுக்கு வருகிறது, வரைமுறையின்றி எல் லோருக்கும் தன்னை ஒப்புக் கொடுத்ததுபோய், சில பேர்களுக்கு ஒப்புக் கொடுப்பது நடந்தது'' (''தாய் உரிமை''[1], XIX பக்கம் பார்க்க). இதர மக்கள் சமூகங் களில் மதத் திரை இல்லை; சில மக்கள் சமூகங்களில் —பண்டைக்கால திரேஸியர்கள், கெல்டுகள், இந்தி யாவிலுள்ள பூர்வீகக் குடிகள், மலாய மக்கள் சமூ கங்கள், தென்கடல் தீவு வாசிகள், இக்காலத்திய பல அமெரிக்க இந்தியர்கள்—திருமணம் நடக்கிற வரைக்கும் பெண்களுக்குப் புணர்ச்சி விஷயத்தில் அத்தியந்த சுதந்திரம் உண்டு. அனேகமாகத் தென் அமெரிக்கா முழுவதிலும் குறிப்பாக இப்படித்தான் இருக்கிறது; அந்தக் கண்டத்துக்குள் கொஞ்சமா வது நுழைந்து பார்த்த எவரும் அதற்குச் சான்று தருவார்கள். இந்த வகையில், அகஸீஸ் என்பவர் (**''பிரேஸில் நாட்டுக்குள் பிரயாணம்''** என்ற நூல், போஸ் டன், நியூயார்க்கில் **1886**ம் ஆண்டில் வெளியானது[2],

[1] Bachofen J.J., "Das Mutterrecht". Stuttgart, 1861.—**பதிப் பாசிரியர்கள்.**

[2] Agassiz, L., "A Journey in Brasil". Boston, 1886.—**பதிப்பாசிரி யர்கள்.**

226ம் பக்கம்) செவ்விந்திய வம்சபரம்பரையில் வந்த ஒரு பணக்காரக் குடும்பத்தைப் பற்றி பின்வருவனவற்றைச் சொல்கிறார். அந்த வீட்டிலுள்ள மகளுக்கு அவர் அறிமுகம் செய்யப்பட்டு அவளது தகப்பனைப்பற்றி விசாரித்தார். தகப்பனார் என்றால் அம்மாவின் கணவன், பராகுவேக்கு எதிரான யுத்தத்தில் சேவை செய்யும் அதிகாரி என்று கருதிக் கொண்டார். ஆனால் தாயோ சிரித்துக்கொண்டே "naõ tem pai, é filha da fortuna" — இவளுக்குத் தகப்பன் இல்லை, ஏதோ சந்தர்ப்ப வசமாகப் பிறந்த பெண் இவள்—என்று விடையளித்தாள். ''இங்குள்ள செவ்விந்தியப் பெண்கள் அல்லது கலப்புரத்தப் பெண்கள் முறைக்கேடான வழியில் பிறந்த தம் குழந்தைகளைப்பற்றி இப்படி எப்போதும் பேசுகின்றனர், குற்ற மனோபாவமோ, வெட்கமோ அவர்கள் உணர்வில் இல்லை. இது சர்வ சகஜம்; அப்படி இல்லாதிருப்பதுதான் விதிவிலக்கு எனத் தோன்றுகிறது. குழந்தைகள் [அனேக சமயங்களில்] தாயைப் பற்றி [மட்டுமே] தெரிந்து கொண்டிருக்கிறார்கள், ஏனெனில் அவர்களைப் பற்றிய கவலையும் பொறுப்பும் அவள் மீதுதான் விழுகின்றன. ஆனால் தகப்பனைப் பற்றி அவர்களுக்கு ஒன்றும் தெரியாது. அந்தத் தகப்பன்மீது தனக்கோ, தன் குழந்தைகளுக்கோ எவ்வித உரிமையும் இருப்பதாகத் தாய்மாருக்குப் படுவதாகவும் தோன்றவில்லை.'' இங்கே நாகரிக மனிதனுக்கு இவ்வளவு விநோதமாகப் படுகிறதெல்லாம் தாயுரிமைப்படியும் குழு மணத்திற்குள்ளும் இருக்கிற விதிதானே ஒழிய வேறில்லை.

இதர சில மக்கள் சமூகங்களிடையே, மணமக

 னின் நண்பர்கள், உறவினர்கள் அல்லது மணத்திற்கு வந்த விருந்தினர்கள் திருமணத்தின்போதே மணமகள் மீது தமக்குள்ள பழைய சம்பிரதாய உரிமையைக் கையாள்கின்றனர்; மணமகளைக் கடைசியாக அனுபவிப்பவன் மணமகன் தான்; உதாரணமாக, பண்டைக் கால பெலியாரிக் தீவுகளிலும், ஆப்பிரிக்க ஆகில்களிடையிலும் இப்படி. இன்றுகூட அபிசீனியாவிலுள்ள பெரியாக்கள் மத்தியில் இப்படியிருக்கிறது. வேறு சில மக்கள் சமூகங்களில் அதிகாரப் பதவியிலிருக்கிற ஒருவன்—குலத் தலைவன் அல்லது கணத் தலைவன், காசிக், ஷமான், புரோகிதன், சிற்றரசன் அல்லது வேறெந்தப் பட்டம் வகித்திருந்தாலும் சரி—சமுதாயத்திற்குப் பிரதிநிதித்துவம் வகித்து மணமகளிடம் முதல் இரவின் உரிமையை அனுபவிக்கிறான். நவீன சிருங்கார முலாம் பூசுவதெல்லாம் இருந்த போதிலும், இந்த முதல் இரவு உரிமை (jus primae noctis) இன்றைய நாள் வரை குழு மணத்தின் ஒரு மிச்சசொச்சமாக அலாஸ்கா பிரதேசத்திலுள்ள குடிகளிடையேயும் (பான்கிராப்ட் எழுதிய "சுதேச இனங்கள்", முதல் தொகுதி, 81ம் பக்கம்), வட மெக்சிகோவிலுள்ள தாஹூக்களிடையேயும் (அதே நூலின் 584ம் பக்கம்), இதர மக்கள் சமூகங்களிலும் நீடித்திருக்கிறது. குறைந்த பட்சம் ஆதியில் கெல்டிக் நாடுகளாயிருந்தவற்றில் மத்திய காலம் முழுவதிலும் இது இருந்தது. அங்கே அது குழு மணத்திலிருந்து நேரடியாகக் கடத்தி விடப்பட்டது—உதாரணம், ஆரகானில். காஸ்தீலில் விவசாயி என்றும் பண்ணையடிமையாக இருந்ததேயில்லை. ஆனால் 1486ல் கத்தோலிக்க

பெர்டினன்ட் உத்தரவு பிறப்பிக்கும் வரை மிகப் படுமோசமான பண்ணையடிமை முறை ஆரகானில் இருந்துவந்தது. இந்தச் சட்டம் சொல்வதாவது: ''மேற்சொன்ன பிரபுக்கள் (செனியோர்கள், பாரன்கள்) விவசாயி மணம் புரிந்துகொண்ட பெண்ணுடன் முதல் இரவில் படுக்கக்கூடாது என்றும், திருமணம் நடந்த இரவில் அவள் படுக்கைக்குச் சென்ற பிறகு தமது அதிகாரத்துக்கு அறிகுறியாக அவர்கள் கட்டிலையும் அவளையும் தாண்டுவது கூடாது என்றும், மேற்சொன்ன பிரபுக்கள் விவசாயியின் புத்திர புத்திரிகளின் சேவைகளை, ஊதியம் தந்தோ, தராமலோ, அவர்களின் சித்தமின்றிப் பயன்படுத்திக்கொள்ளக்கூடாது என்றும் நாம் தீர்ப்பளித்துப் பிரகடனம் செய்கிறோம்'' என்று. (சுகன்ஹேய்ம் எழுதிய ''பண்ணையடிமை முறை'' என்ற நூல், **1861**ல் பீட்டர்ஸ்பர்க்கில் வெளியானது.[1] **35**ம் பக்கம்; கடலோனிய மூலத்திலிருந்து மேற்கோள் தரப்பட்டுள்ளது.)

அவர் சொல்கிற ''பொது மகளிர் முறை''யிலிருந்து, "Sumpfzeugung" இலிருந்து, ஒருதார மணத்திற்கு மாற்றம் பெற்ற காலம் நெடுகிலும் அந்த மாற்றத்தைக் கொண்டு வந்தவர்கள் முக்கியமாக பெண்களே என்று பாகோபென் கூறுவது மீண்டும் முற்றிலும் சரி. பொருளாதார நிலைமைகளின் வளர்ச்சி காரணமாக, அதாவது பழைய பொதுவுடைமை முறை பலவீனப்படுத்தப்பட்டு ஜனநெருக்

[1] **Sugenheim S.**, "Geschichte der Aufhebung der Leibeigenschaft und Hörigkeit in Europa bis an die Mitte des neunzehnten Jahrhunderts". St. Petersburg, 1861.—**பதிப்பாசிரியர்கள்.**

கம் பெருகிய தன்விளைவாகப் பழைய சம்பிரதாய வாழ்வின் பால் உறவுகள் தமது வெள்ளையான புராதனக் காட்டுத் தன்மையை இழந்து வரவர அந்த உறவுகள் மேலும் மேலும் ஈனமானவையென்றும் ஒடுக்குவனவாயும் பெண்களுக்குத் தோன்றியிருக்கவேண்டும். மேலும் மேலும் ஆர்வத்தோடு அவர்கள் கற்புரிமைக்காக வேட்கை கொண்டிருந்திருக்கவேண்டும். விமோசனம் பெறும் வகையில் குறிப்பிட்ட ஒருவனைத் தாற்காலிகமாகவோ, நிரந்தரமாகவோ மணம் செய்து கொள்வதில் வேட்கை கொண்டிருக்க வேண்டும். இந்த முன்னேற்றம் ஆண்களிடமிருந்து தோன்றியிருக்க முடியாது; அவர்கள் என்றைக்குமே— இன்றைய நாள் வரைக்குங்கூட— நடைமுறைக் குழு மணத்தின் இன்பங்களைக் கைவிடக் கனுக் கூடக் கண்டது கிடையாது என்ற காரணமே இதற்குப் போதும். பெண்கள் முயன்று இணை மண முறை நோக்கி மாற்றம் கண்ட பிறகுதான் கண்டிப்பான ஒரு தார மணத்தை—பெண்களுக்கு மட்டும் தான், சொல்லவேண்டியதில்லை— ஆண்கள் புகுத்தமுடிந்தது.

காட்டுமிராண்டி நிலைக்கும் அநாகரிக நிலைக்கும் இடைப்பட்ட எல்லைக் கோட்டில் தான் இணைக் குடும்ப முறை எழுந்தது; முக்கியமாகக் காட்டுமிராண்டி நிலையின் தலைக்கட்டத்திலும், இங்குமங்கும் அநாகரிக நிலையின் கடைக் கட்டத்திலும் அது எழுந்தது. காட்டுமிராண்டி நிலைக்குக் குறிப்பு அம்சமாகக் குழு மணமும், நாகரிக நிலைக்குக் குறிப்பு அம்சமாக ஒருதார மணமும் இருப்பது போலவே அநாகரிக நிலைக்கு இணைக் குடும்ப முறை குறிப்பு அம்சமாக உள்ளது. அது ஸ்திரமான ஒரு

தார மணத்தை நோக்கி மேலும் வளர்ச்சியடைவதற்கு நாம் இதுவரை கண்டு வந்திருக்கிறதற்கு மாறுபட்ட காரணங்கள் தேவைப்பட்டன. இணைக் குடும்பத்தில் குழு அதன் கடைசி அமைப்புக் கூறுக்குக் குறுக்கப்பட்டுவிட்டது; இரு அணுக்கள் கொண்ட மூலக்கூறாக—ஒருவனும் ஒருத்தியுமாக—குறுக்கப்பட்டுவிட்டது. குழு மணத்தின் வட்டத்தை இடையறாது சுருக்கி வந்ததின் மூலமாக இயற்கைத் தேர்வு தனது பணியைச் செய்துமுடித்துவிட்டது. இந்தத் திசையில் மேற்கொண்டு செய்வதற்கு அதற்கு ஒன்றும் இருக்கவில்லை. புதிய, சமுதாய ரீதியான விசைச் சக்திகள் செயல்படாமலிருந்திருந்தால் இணைக் குடும்ப முறையிலிருந்து ஒரு புதிய குடும்ப வடிவம் தோன்றுவதற்குக் காரணமே இருந்திருக்காது. ஆனால் இந்த விசைச் சக்திகள் செயல்படத்தான் துவங்கின.

இணைக் குடும்பத்தின் சாஸ்திரியக் களமான அமெரிக்காவை நாம் விட்டுக் கிளம்புகிறோம். குடும்பத்தின் முன்னைவிட மேலானதொரு வடிவம் அங்கே வளர்ந்தது என்று நாம் முடிவு கட்டுவதைச் சாத்தியமாக்குவதற்கு ஆதாரம் எதுவும் கிடையாது; அல்லது, அந்தக் கண்டத்தைக் கண்டுபிடித்து வசப்படுத்துவதற்கு முன்பாக எந்தக் காலத்திலும் அதன் எந்தப் பகுதியிலும் கண்டிப்பான ஒருதார மணம் இருந்தது என்பதற்கும் ஆதாரம் எதுவும் கிடையாது. ஆனால் பழைய உலகின் நிலைமை வேறுமாதிரி இருந்தது.

இங்கே மிருகங்களைப் பழக்குவதும், மந்தைகளை வளர்த்துப் பெருக்குவதும் இதுவரை கேட்

டறியாத செல்வத்திற்குரிய ஓர் ஊற்றுக்கண்ணைப் பயன்படுத்தி, புத்தம் புதிய சமுதாய உறவுமுறைகளையும் சிருஷ்டித்தன. அநாகரிக நிலையின் கடைக் கட்டம் வரை நிலையான செல்வம் என்று வீடும், துணிமணிகளும், நேர்த்தியற்ற நகைகளும், உணவு பெறவும் தயாரிக்கவும் பயன்பட்ட கருவிகளும்—அதாவது படகுகளும், ஆயுதங்களும், மிகவும் சாதாரணமான வகைப்பட்ட வீட்டுச் சாமான்களும்—மட்டுமே இருந்தன. உணவுக்காகத் தினம் தினம் பாடுபடவேண்டியிருந்தது. இப்பொழுதோ, குதிரைகள், ஒட்டகைகள், கழுதைகள், எருதுகள், வெள்ளாடுகள், செம்மறியாடுகள், பன்றிகள் ஆகியவற்றின் மந்தைகளுடன் முன்சென்றுகொண்டிருக்கிற, மேய்ச்சல் தொழில் புரிந்த மக்கள் சமூகங்கள்—இந்தியாவின் ஐந்து நதிகள் ஓடுகிற பகுதியிலும் கங்கை நதிப்பிரதேசத்திலும் ஆரியர்கள், அதைவிட நீர்வளமிக்க ஆக்ஸஸ், ஜகார்தஸ் ஆறுகள் ஓடுகிற புல்வெளி பிரதேசங்களிலுள்ள ஆரியர்கள், யூப்ரேடீஸ், டைக்ரிஸ் நதிப் பக்கங்களிலுள்ள செமைட்டுகள்—பெற்றிருந்த உடமைகளை வெறுமனே மேற்பார்வை செய்து மிகச் சாதாரணமான கவனிப்பு அளித்துவந்தால் போதும், அவற்றின் எண்ணிக்கையை மேலும் மேலும் பெருக்கமுடிந்தது, பாலும் இறைச்சியுமாகச் சத்துமிக்க உணவும் கிடைத்து வரும். இதுவரை உணவு சேகரிப்புக்குக் கையாண்ட முறைகள் அனைத்தும் இப்போது பின்னுக்குத் தள்ளப்பட்டுப் போயின. ஒரு காலத்தில் அவசியமாயிருந்த வேட்டைத் தொழில் இப்போது சுகஜீவன வேலையாகிவிட்டது.

ஆனால் இந்தப் புதிய செல்வம் யாருக்குச் சொந்தமாயிருந்தது? சந்தேகமின்றி ஆரம்பத்தில் அது கணத்துக்கே சொந்தமாயிருந்தது. ஆனால் மந்தைகள் மீது தனியுடைமை என்பது ஆரம்ப காலகட்டத்திலேயே வளர்ந்திருக்க வேண்டும். மோஸஸின் முதல் நூல் என்று சொல்லப்படுகிறதில் அதன் ஆசிரியருக்குத் தந்தை ஆப்ரஹாம், தான் ஒரு குடும்பக் குழுவின் தலைவன் என்ற ரீதியில் கால்நடை மந்தைகளுக்குச் சொந்தக்காரராக இருந்தாரா அல்லது ஒரு கணத்தின் உண்மையான பரம்பரைத் தலைவன் என்ற அந்தஸ்தினால் அவற்றிற்குச் சொந்தக்காரராக இருந்தாரா என்று தோன்றியதோ என்று சொல்வது கடினம். ஆனால் ஒன்றுமட்டும் நிச்சயம்: அதாவது, நவீனகால அர்த்தத்தில் அவரைச் சொத்துடைமையாளர் என்று கருதக்கூடாது. அதேபோல் உண்மை யென்று ஆதாரம் பெற்றுள்ள வரலாற்றின் தொடக்கக் காலத்தில் மந்தைகள் எல்லாம் குடும்பத் தலைவர்களின் தனிச்சொத்தாக எங்கணுமே இருந்து வரக் காண்கிறோம் என்பதும், அநாகரிக நிலைக் காலத்துக் கலைப்பொருட்களும், உலோகச் சாமான்களும், சுகவாழ்வுப் பொருட்களும், கடைசியாக மனிதக் கால்நடைகளான அடிமைகளும் இருந்த மாதிரியே தான் அவையும் இருந்தன என்பதும் நிச்சயம்.

ஏனெனில் இப்போது அடிமைமுறையும் புதிதாகத் தோற்றுவிக்கப்பட்டது. அநாகரிக நிலையின் கடைக்கட்டத்தில் அடிமை எதற்கும் பிரயோஜனமில்லை. இந்தக் காரணத்திற்காகத்தான் அமெரிக்க இந்தியர்கள் தாம் தோற்கடித்த எதிரிகளை அதற்கு

மேலான கட்டத்தில் நடத்தியதற்கு முற்றிலும் வேருக நடத்தினர்கள். ஒன்று, ஆண்கள் கொல்லப்பட்டனர் அல்லது வெற்றிபெற்ற குலம் அவர்களைக் சகோதரர்களாகச் சுவீகரித்துக்கொண்டது. பெண்களை மணம் புரிந்துகொண்டார்கள் அல்லது அவர்களையும் உயிர்பிழைத்த அவர்களின் குழந்தைகளையும் அதேபோல் சுவீகரித்துக்கொண்டார்கள். இந்தக் கட்டத்தில் மனித உழைப்புச் சக்தி என்பது தன்னை வாழ வைத்துக்கொள்வதற்குரிய செலவுக்கு மேலாகக் கணிசமான உபரியைத் தரவில்லை. கால்நடை வளர்ப்பு, உலோகங்களைப் பண்படுத்தல், துணிநெசவுத் தொழில், கடைசியிலே நிலத்தில் வேளாண்மை செய்தல் ஆகியவை புகுத்தப்பட்டபின் இது மாறியது. முன்பு வெகு சுலபமாகக் கிடைத்து வந்த மனைவிமார்களுக்கு இப்போது எப்படி ஒரு பரிவர்த்தனை மதிப்பு ஏற்பட்டு வாங்கப்பட்டார்களோ, அதேபோல்தான் உழைப்புச் சக்தி விஷயத்திலும் ஏற்பட்டது; அதிலும் குறிப்பாகக் கால்நடை மந்தைகள் குடும்பச் சொத்துக்களாக இறுதியிலே மாற்றப்பட்டுப்போனபின் இப்படியாயிற்று. கால்நடைகள் பெருகிய வேகத்தில் குடும்பம் பெருகவில்லை. கால்நடைகளைக் கவனித்துக்கொள்ள அதிக ஆட்கள் தேவைப்பட்டனர்; போரில் சிறைப்படுத்தப்பட்ட கைதிகள் இந்தக் காரியத்துக்கு என்று பயன்பட்டனர்; மேலும் அவர்களைக் கால்நடைகளைப் போலவே பெருகச் செய்ய முடிந்தது.

இந்தச் செல்வங்கள் குடும்பங்களின் தனிச் சொத்தாகப் போய் விட்டு அங்கே விரைவாகப் பெருகத் தொடங்கியதுமே, அவை இணை மணமுறை

யின்மீதும் தாயுரிமைக் கணத்தின்மீதும் ஆதாரப்பட்டிருந்த சமுதாயத்துக்குப் பலமான அடி கொடுத்தன. இணை மணமுறை என்பது குடும்பத்தில் ஒரு புதிய அம்சத்தைப் புகுத்தியிருந்தது. இயற்கையான தாய்க்குப் பக்கத்தில் உண்மையென்று ஆதாரம்பெற்ற இயற்கைத் தகப்பனுரையும் அது நிறுத்தியது—இன்றைய ''தகப்பனுர்''களில் பல பேரைவிட அவன் உண்மையான தகப்பனுராயிருக்கக் கூடும். அன்று குடும்பத்தில் நிலவியிருந்த உழைப்புப் பிரிவினையின் படி, உணவையும் அதற்குத் தேவையான கருவிகளையும் சேகரிப்பதும், அதன் விளைவாய் அவற்றின் சொந்தக்காரனுக இருப்பதும் ஆணின் பொறுப்பாயிற்று. பிரிய நேரிடும்போது அவன் அவற்றைத் தன்னுேடு கொண்டுபோனுன்; வீட்டுச் சாமான்களைப் பெண் தன்னிடம் வைத்துக்கொண்டதுபோல. ஆகவே, அந்தக் காலத்திய சமுதாய வழக்கப்படி, உணவுப் பொருட்களுக்குரிய புதிய மூலாதாரங்களுக்கும்—கால்நடைகளுக்கும்—ஆணே சொந்தக்காரனுக இருந்தான்; பின்னுல் புதிய உழைப்புக் கருவிக்கும்—அடிமைக்கும்—அவனே சொந்தக்காரனுன். ஆனுல் அதே சமுதாயத்தின் வழக்கப்படி குழந்தைகள் அவனது சொத்துக்கு வாரிசாக முடியவில்லே. இவ்விஷயத்தில் நிலைமை பின்வருமாறு:

தாயுரிமைப் படி, அதாவது பெண்வழியாக மட்டுமே வம்சாவளி கணக்கிடப்பட்டு வந்தவரைக்கும், கணத்தில் பரம்பரையாக வாரிசு முறை கொண்டாடி வந்த வழக்கத்தின்படியும், இறந்துபோன கண அங்கத்தினன் உடமைக்குக் கண உறவினர்கள் தான் முதலில் வாரிசுகளாயிருந்தனர்.

சொத்து கணத்துக்குள்ளேயேதான் தங்கி யிருக்க வேண்டும். முதலில், சம்பந்தப்பட்ட உடைமைகள் அற்பமானவை என்பதினுல் வெகு நெருங்கிய கண உறவினர்களிடம் — அதாவது, தாய்த் தரப்பைச் சேர்ந்த இரத்த உறவினர்களிடம்—அவை போய்ச் சேர்ந்திருக்கக்கூடும். ஆனுல் இறந்தவனின் குழந்தைகளோ அவனுடைய கணத்தைச் சேர்ந்தவர்களல்ல, அவற்றின் தாய்க்குரிய கணத்தைச் சேர்ந்தவர்கள். ஆரம்பத்தில் அவர்கள், தாயின் மற்ற இரத்த உறவினர்களோடு கூடவே, தாயிடமிருந்து சுவீகரித்துக்கொண்டு வந்தார்கள்; பின்னுல் ஒரு வேளை அவளது சொத்தில் அவர்கள் முதல் உரிமை பெற்றிருந்திருக்கலாம். ஆனுல் தந்தையிடமிருந்து அவர்கள் சுவீகரிக்கமுடியாது; ஏனெனில் அவர்கள் தகப்பனின் கணத்தைச் சேர்ந்தவர்களல்ல; அந்தச் சொத்து அக்கணத்துக்குள் தான் தங்கவேண்டும். ஆகவே, மந்தைச் சொந்தக்காரன் இறந்தானேயானுல் அந்த மந்தைகள் முதலில் அவனது சகோதர சகோதரிகளிடமும் சகோதரிகளின் குழந்தைகளிடமும் அல்லது அவனது தாயின் சகோதரிகளின் சந்ததியாரிடம் போய்ச்சேர்ந்தன; ஆனுல், அவனது குழந்தைகளுக்கு வாரிசுரிமை கிடையாது.

இவ்வாறு செல்வம் பெருகப் பெருக, அது ஒரு பக்கத்தில் குடும்பத்தில் பெண்ணைவிட ஆணுக்கு முக்கியமான அந்தஸ்து அளித்ததுமட்டுமல்லாமல் இன்னொரு பக்கத்தில் தனது குழந்தைகளுக்குச் சாதகமான வழியில் பரம்பரை வாரிசு வரிசைமுறையைத் தூக்கியெறிய இந்த வலுப்பெற்ற அந்தஸ்தைப் பயன்படுத்திக்கொள்ள ஆணுக்கு ஒரு தூண்டு

கோல் அளித்தது. ஆனால் தாயுரிமைப்படி வம் சாவளி இருந்துவந்தவரை இது நடப்பது சாத்திய மில்லை. ஆகவே, இதைத் தூக்கியெறிய வேண்டிய தாயிற்று; அது தூக்கியெறியவும் பட்டது. இப் போது நமக்குத் தோன்றுவதுபோல் இது அவ்வளவு கஷ்டமுமில்லை. ஏனெனில் இந்தப் புரட்சி—மனித குலம் அனுபவித்த மிக நிர்ணயமான புரட்சிகளில் இதுவும் ஒன்றாகும்—ஒரு கணத்தின் எந்த அங்கத் தினரையும் பாதிக்கவேண்டியதில்லை. எல்லா அங்கத் தினர்களும் முன்போலவே இருந்து வர முடியும். இனிமேல் ஆண்களின் சந்ததிகள் கணத்துக்குள்ளே யே இருக்க வேண்டும், பெண்களின் சந்ததிகள் கணத்திலிருந்து விலக்கப்பட்டுத் தகப்பனின் கணத் துக்கு மாற்றப்படவேண்டும் என்று சர்வசாதாரண மான தீர்மானம் செய்தால் போதும். பெண்வழி யாக வம்சாவளியைக் கணக்கிடுவது, தாய்வழியாக வாரிசுரிமையைக் கணக்கிடுவது, இரண்டும் அத் தோடு தூக்கியெறியப்பட்டன; ஆண்வழி வம் சாவளி முறையும் வாரிசுரிமை முறையும் அமைக்கப் பட்டன. நாகரிக மக்களிடையே இந்தப் புரட்சி எப்படி எப்போது சாதிக்கப்பட்டது என்று நமக்கு ஒன்றும் தெரியாது. இது முழுவதும் ஏடறியாத வரலாற்றின் காலத்தைச் சேர்ந்த நிகழ்ச்சியாகும். இது உண்மையிலே **சாதிக்கப்பட்டது** என்பதற்குக் குறிப்பாக பாகோபென் திரட்டியுள்ளபடி தாயுரி மைக்குரிய ஏராளமான அடையாளங்கள் வேண்டிய தற்கு மேலாகவே நிரூபித்துள்ளன. அது எவ்வளவு சுலபமாகச் சாதிக்கப்பட்டது என்பதற்குப் பல முழுமையான செவ்விந்தியக் குலங்களைப் பார்த்

தாலே போதும். பெருகிவரும் செல்வத்தின் காரணமாகவும் மாறிப்போன வாழ்க்கை முறையின் (காடுகளிலிருந்து புல்வெளிப் பிரதேசங்களுக்கு இடமாற்றம் கண்டது) காரணமாகவும், ஓரளவுக்கு நாகரிகம், மதபோதகர்கள் ஆகியோரின் செல்வாக்கினாலேயும், அது அக்குலங்களிடையே சமீப காலங்களிலே தான் நடந்தேறியுள்ளது; இன்னும் நடந்துகொண்டேதானிருக்கிறது. எட்டு மிஸ்ஸௌரி குலங்களில் ஆறு குலங்கள் ஆண்வழி வம்சாவளியையும் வாரிசுரிமை முறையையும் கொண்டுள்ளன, இரண்டு இன்னும் பெண்வழி வம்சாவளியையும் வாரிசுரிமை முறையையும் வைத்துக்கொண்டுள்ளன. ஷானீக்கள், மியாமிக்கள், டிலாவேர்கள் ஆகியோரிடையே, தகப்பனிடமிருந்து சொத்து சுவீகரிக்கச் செய்யவேண்டிக் குழந்தைகளுக்குத் தகப்பனாரின் கணத்திலுள்ள பெயர்களில் ஒன்றைச் சூட்டி அவர்களைத் தகப்பனின் கணத்துக்கு மாற்றிவிடுவது வழக்கமாகிவிட்டது. ''பெயர்களை மாற்றி விடுவதின்மூலம் விஷயங்களையே மாற்ற முயல்வது மனிதனின் உள்ளார்ந்த பொய்த் தர்க்கப் போக்காகும்! நேரடி நலன் ஒரு போதிய நோக்கத்தைச் சிருஷ்டிக்கிற இடங்களிலெல்லாம் சம்பிரதாயத்தை ஊடுருவி உடைத்துக் கொண்டு வெளிவருவதற்குச் சம்பிரதாயத்துக்குள்ளேயே ஓட்டைகளைத் தேடுவதும் அப்படியே!'' (மார்க்ஸ்). அதன் விளைவாக, ஒரே குழப்பம் ஏற்பட்டது. தந்தையுரிமைக்கு மாற்றமடைந்ததின்மூலமாக மட்டுமே விஷயங்களை மறுபடியும் நேராக்க முடிந்தது, அவை நேராக்கவும் பட்டன. ''மொத்தத்தில் இதுவே மிக மிக இயற்கையான

மாற்றமாகத் தோன்றுகிறது'' (மார்க்ஸ்). பழைய உலகத்தின் நாகரிக நிலையைச் சேர்ந்த மக்களிடையே இந்த மாற்றம் சாதிக்கப்பட்டதற்குக் கையாண்ட வழிவகைகளைப்பற்றி ஒப்புநோக்குச் சட்ட இயல் வல்லுநர்கள் சொல்வதற்கு என்ன இருக்கிறது— அநேகமாக அவை ஊகங்களே— என்று தெரியவேண்டுமென்றால் ம. கவலேவ்ஸ்கிய் எழுதி, 1890ல் ஸ்டாக்ஹோமில் வெளியிடப்பட்ட, ''குடும்பம், சொத்து ஆகியவற்றின் தோற்றமும் பரிணாமமும் பற்றிய சுருக்க வரலாறு'' என்ற நூலைப் பார்க்க.[1]

தாயுரிமை தூக்கியெறியப் பட்டது பெண்ணினம் உலக வரலாற்று ரீதியில் பெற்ற தோல்வியாகும். வீட்டிலேயும் ஆட்சிச் சூத்திரத்தை ஆண் கைப்பற்றினான்; பெண் இழிநிலைக்குத் தள்ளப்பட்டாள், பணிமகளாக்கப்பட்டாள்; ஆணின் காம இச்சைக்கு அடிமையானாள்; கேவலம், குழந்தைகளைப் பெறும் சாதனமாக ஆகிவிட்டாள். பெண்களின் தாழ்ந்தப் பட்ட இந்த நிலை—இது மாவீரர் சகாப்தத்தைச் சேர்ந்த கிரேக்க மக்களிடையே, இன்னும் அதிகமாக சாஸ்திரீய காலத்தைச் சேர்ந்த கிரேக்க மக்களிடையே, குறிப்பாகத் தென்படுகிறது—படிப்படியாக முலாம் பூசப் பெற்றும், வேஷமிடப்பட்டும் ஓரளவுக்கு மென்மையான வடிவத்தில் காட்டப்பட்டும் வந்திருக்கிறது. ஆனால் அது ஒழிந்தபாடில்லை.

இப்போது நிலைநாட்டப்பட்டுவிட்ட ஆணின் ஏகபோக ஆட்சியினால் வந்த முதல் விளைவு இப்

[1] **Kovalevsky M.**, "Tableau des origines et de l'évolution de la famille et de la propriété". Stockholm, 1890.—**பதிப்பாசிரியர்கள்.**

பொழுது இடைக்காலக் குடும்பவடிவமாகத் துலக்கமாகியுள்ள தந்தைவழிக் குடும்பத்தில் காணக்கிடக்கிறது. அதன் முக்கிய அடையாளம் பலதார மணம் — அதைப்பற்றிப் பின்னர் மேலும் சொல்வோம் — அல்ல; அதற்குப் பதிலாக, ''சுதந்திரமற்றவர்களாயும் சுதந்திரமானவர்களாயும் இருக்கிற நபர்களின் ஒரு தொகையைக் குடும்பத் தலைவனின் தந்தையதிகாரத்தின் கீழ் ஒரு குடும்பமாகத் திரட்டியமைப்பதுதான். செமிட்டிக் வடிவத்தில் இந்தக் குடும்பத்தலைவன் பலதார மணமுறையில் வாழ்கிறான், சுதந்திரமற்றவர்களுக்கு மனைவியும் குழந்தைகளும் உண்டு. அந்த அமைப்பு முழுவதின் நோக்கமெல்லாம் கால்நடை மந்தைகளை ஒரு குறுகிய பிரதேசத்தில் பராமரித்து வளர்ப்பதாகும்''. சுதந்திரமற்றவர்களை உள்ளிணைத்துக்கொள்வது, தந்தையதிகாரம் — இரண்டுதான் பிரதான குணாம்சங்கள்; இதன்படி, இந்த வகைக் குடும்ப வடிவத்துக்குத் தலைசிறந்த மாதிரியாயுள்ளது ரோமானியக் குடும்பமாகும். நவீனகாலத்திய பிலிஸ்டைன்களின் இலட்சியத்தை — பிக வுணர்ச்சியும் குடும்பச் சச்சரவும் சேர்ந்து கலவையான இலட்சியத்தை — 'familia' என்ற சொல் ஆரம்பத்தில் குறிக்கவில்லை. ஆரம்பத்தில், ரோமானியர்களிடையே, அது மணமானவர்களையும் அவர்களின் குழந்தைகளையும் குறிக்கவில்லை, அடிமைகளை மட்டும்தான் குறித்தது. 'Famulus' என்றால் வீட்டு அடிமை என்று பொருள்; 'familia' என்றால் ஒரு நபருக்குச் சொந்தமான அடிமைகளின் மொத்தத் தொகை என்று பொருள். கேயஸ் காலத்தில் கூட familia, id est patrimonium (வாரிசுச்

சொத்து) உயில் எழுதப்பட்டு விட்டுச்செல்லப்பட்டது. ஒரு புதிய சமுதாய அமைப்பை வர்ணிப்பதற்காக ரோமானியர்கள் இந்தச் சொல்லைத் தோற்றுவித்தார்கள், இந்த அமைப்பின் தலைவன் தன்கீழ் மனைவியையும் குழந்தைகளையும், பல அடிமைகளையும், ரோமானியத் தந்தையதிகாரத்துக் குட்பட்டதாய், அவர்களின் சாவையோ, வாழ்வையோ நிர்ணயிக்கும் அதிகாரத்துடன் வைத்திருந்தான். ''எனவே, இந்தச் சொல்லின் மூலங்களின் இருப்புக் கவசம் போர்த்த குடும்ப அமைப்பு முறையைவிடப் பழைமையானதல்ல; அது வயல் வேளாண்மைக்குப் பிறகும், சட்ட சம்மதமாக்கப்பட்ட அடிமைமுறைக்குப் பின்னும், கிரேக்கர்களும் (ஆரிய) லத்தீனியர்களும் பிரிக்கப்பட்டுப் போன பிறகும் வந்துற்றது.'' இதற்குக் கூடுதலாக மார்க்ஸ் கூறுவதாவது: ''அடிமை முறையை (servitus) மட்டுமின்றிப் பண்ணையடிமை முறையையும் கரு அளவில் நவீனகாலக் குடும்பம் தன்னுள் கொண்டிருக்கிறது; ஏனெனில் ஆரம்பத்திலிருந்து அது விவசாய வேலைகளுடன் சம்பந்தப்பட்டுள்ளது. சமுதாயத்திற்குள்ளும் அதன் அரசுக்குள்ளும் பின்னால் விரிந்த அளவில் வளர்ச்சி கண்ட எல்லா விரோதங்களையும் அது தன்னுள்ளே **சிறுவடிவத்தில்** வைத்துக் கொண்டிருக்கிறது.''

இப்படிப்பட்ட குடும்ப வடிவம் இணைக் குடும்பம் ஒருதார மணத்துக்கு மாறிச் சென்றதைக் காட்டுகிறது. மனைவியின் விசுவாசத்தை உறுதிப்படுத்துவதற்காக, அதாவது குழந்தைகளின் தகப்பனார் இன்னவர்தான் என்பதை உறுதி செய்வதற்காக,

ஆணின் பரிபூர்ண அதிகாரத்தின்கீழ் பெண் வைக்கப்படுகிருள்; அவளே அவன் கொன்ருல், அவன் தன் உரிமையைத்தான் கையாள்கிறவனுகிருன்.

தந்தைவழிக் குடும்பத்துடன் நாம் ஏடறிந்த வரலாற்றுக்குள் நுழைகிறேம்; அத்துடன், ஒப்பு நோக்குச் சட்ட இயல் என்ற விஞ்ஞானம் நமக்கு முக்கியமான உதவியளிக்கக் கூடிய ஒரு களத்துக்கு வந்து விடுகிறேம். உண்மையிலே அது இங்கே நமக்குக் கணிசமான முன்னேற்றம் அளித்திருக்கிறது. தந்தை வழிக் குடும்பச் சமூகம் என்பது — அதாவது, 'ஜத்ருகா' (நட்புறவுள்ளது என்பது இதற்குப் பொருள்) என்ற பெயராலும், அல்லது 'ப்ராத்ஸ்த்வோ' (இதற்குச் சகோதரப்பாங்கு என்று அர்த்தம்) என்ற பெயராலும் செர்பியர்களிடையேயும் பல்கார்களிடையேயும், சிறிது மாறிய வடிவத்தில் கிழக்கத்திய மக்கள் சமூகங்களிடையேயும், இன்று கூட நாம் காணும் படியான தந்தைவழிக் குடும்பச் சமூகம் — குழு மணத்திலிருந்து பரிணமமெய்திய தாயுரிமைக் குடும்பத்திற்கும் நவீன உலகம் தெரிந்துவைத்திருக்கிற தனிப்பட்ட குடும்பத்திற்கும் இடையில் மாறிச் செல்லும் கட்டமாக அமைந்துள்ளது என்று ருசுப்பித்ததற்கு மக்ஸீம் கவலேவ்ஸ்கிய்க்கு ("குடும்பம், சொத்து ஆகியவற்றின் தோற்றமும், பரிணமமும் பற்றிய சுருக்க வரலாறு", ஸ்டாக்ஹோம், 1890; 60-100ம் பக்கங்கள்) நாம் கடமைப்பட்டிருக்கிறேம். பழைய உலகத்தின் நாகரிக நிலையெய்திய மக்களான ஆரியர்கள், செமைட்டுகள் விஷயத்

தில் மட்டுமாவது இது ருசுப்பிக்கப்பட்டிருப்பதாக வே தோன்றுகிறது.

தெற்கு-ஸ்லாவிக் 'ஜத்ருகா' இப்படிப்பட்ட குடும்பச் சமூகத்துக்கு இன்றுள்ள சிறப்பான உதாரணம் தருகிறது. ஒரு தகப்பன் வம்ச பரம்பரையில் வந்த சில தலைமுறைகளைச் சேர்ந்த சந்ததியாரையும் அவர்களுடைய மனைவியரையும் தன்னுள் அணைத்திருக்கிறது; அவர்களெல்லோரும் ஒரே குடும்பத்தில் வாழ்கிறார்கள், தமது வயல்களைப் பொதுவில் உழுகிறார்கள், பொதுச் சேமிப்பிலிருந்து உணவும் துணியும் எடுத்து உபயோகிக்கிறார்கள், உபரிப் பொருட்களைப் பொதுவில் உடைமையாக்கி வைத்துக் கொள்கிறார்கள். வீட்டு எஜமானனின், 'தமாஸின்' (domácin) தலைமையாதிக்க நிர்வாகத்தின்கீழ் அந்தச் சமூகம் இருக்கிறது; வெளிவிவகாரங்களில் அதற்கு அவனே பிரதிநிதி; சிறிய பொருட்களை அவனே விநியோகிக்கலாம்; நிதிகளை அவனே நிர்வகிக்கிறான்; அதற்கும், விவகாரங்களை நடத்திச்செல்வதற்கும் அவனே பொறுப்பாளி. அவன் தேர்ந்தெடுக்கப்படுகிறான்; வயதில் அவன் மூத்தவனாயிருக்க வேண்டும் என்பதில்லை. பெண்களும் அவர்களுடைய அலுவல்களும் வீட்டு எஜமானியின், 'தமாஸிகா', (domácica) செலுத்துதலின் கீழ் உள்ளன. அவள் சகஜமாக தமாஸினின் மனைவியாகவே இருப்பாள். பெண்களின் கணவர்களைத் தேர்ந்தெடுப்பதில் அவளுக்கு முக்கியமான, அடிக்கடி நிர்ணயமான பங்குண்டு. இருந்தாலும், தலைமையாய அதிகாரம் குடும்பக் கவுன்சிலுக்குத்தான் அளிக்கப்பட்டிருக்கிறது; அந்தக் கவுன்சில் ஆணும் பெண்

ணுமாக வயது வந்தோர் அனைவரையும் அங்கத்தினர்களாகக் கொண்ட மன்றமாகும். இந்த மன்றத்திடம் வீட்டு எஜமானன் தனது செயல்களை விவரிக்கிறான்; முக்கியமான முடிவுகளையெல்லாம் இதுவே எடுக்கிறது; அங்கத்தினர்களிடையே நீதி வழங்குவதும் இதுவே; முக்கியமான வாங்கல், விற்பனைகளை, சிறப்பாக நிலச்சொத்து முதலியவற்றை வாங்கல், விற்பது பற்றி, இதுவே முடிவு செய்கிறது.

ருஷ்யாவிலும் இப்படிப்பட்ட பெரிய குடும்பச் சமூகங்கள் இருக்கின்றனவென்று சென்ற பத்தாண்டுகளுக்கு முன்பு தான் ருசுப்பிக்கப்பட்டது. 'ஒப்ஷீனு' — அதாவது கிராமச் சமூகம் — என்ற பெயரால் ருஷ்யர்களின் பொதுவான வழக்கங்களில் அவை அதே அளவுக்கு ஆழமாக வேர்விட்டுள்ளன என்று இப்போது பொதுவாகவே அங்கீகரிக்கப்படுகின்றது. மிக மிகப் பழமையான ருஷ்யச் சட்டத் தொகுப்பாகிய யாரோஸ்லாவின் ''பிராவ்தா'' என்பதில் டால்மேஷிய சட்டங்களில் இருப்பது போலவே 'வெர்வ்' என்ற பெயரின்கீழ் அவை காணப்படுகின்றன; போலிஷ், செக் வரலாற்று மூலாதாரங்களிலும் அவற்றைப் பற்றிய குறிப்புகளைக் காணலாம்.

ஹொய்ஸ்லர் சொல்கிறபடி (''ஜெர்மன் சட்டவுரிமை ஸ்தாபனங்கள்''[1]) பொருளாதார மூலக்கூறு என்ற முறையில் ஜெர்மானியர்களிடையிலும் நவீன காலத்திய அர்த்தம் தாங்கிய தனிப்பட்ட

[1] **Heusler, A.**, "Institutionen des deutschen Rechts". Bd I-II, Leipzig, 1885-86 —**பதிப்பாசிரியர்கள்.**

குடும்பம் என்பது ஆதியில் இருக்கவில்லை; ஆதியில் இருந்தது ''வீட்டுச் சமூகம்'' என்பதுதான்; அதில் பல தலைமுறைகள் அல்லது தனித்தனிக் குடும்பங்கள் அடங்கும்; அவற்றில் அநேகமாகப் பல சுதந்திரமற்றவர்கள் உட்பட்டிருந்தனர். ரோமானியக் குடும்பமும் கூட இவ்வித மாதிரியைச் சேர்ந்தது என்று அடையாளங்கண்டு கொள்ளப்பட்டுள்ளது; எனவே, அதன் விளைவாக வீட்டு எஜமானனின் பரிபூர்ண அதிகாரமும் சரி, அவன் சம்பந்தப்பட்ட மட்டில் குடும்பத்தின் மற்ற அங்கத்தினர்களுக்கு உரிமைகள் எதுவும் இல்லாதிருப்பதும் சரி, பலத்த சர்ச்சைக்குட்படுத்தப்பட்டுள்ளன. அதே போல், அயர்லாந்திலுள்ள கெல்ட் மக்களிடையேயும் இப்படிப்பட்ட குடும்பச் சமூகங்கள் இருந்துவந்ததாக உத்தேசிக்கப்படுகிறது. பிரான்ஸிலும் நிவர்னேயில் பிரெஞ்சுப் புரட்சிக் காலம்வரை 'parçonneries' என்ற பெயரில் அவை தொடர்ந்துநீடித்திருந்தன; பிரான்ஷ்-கொந்தே பிரதேசத்தில் அவை இன்றுகூட முழுதும் அழியாமலேயிருக்கின்றன. லுஹான் ஜில்லாவில் (சவோன், லுவார் பகுதி) பல பெரிய விவசாயி வீடுகளைக் காணலாம்; அவற்றில் கூரை வரைக்கும் உயரமுள்ள ஒரு நடுப் பொதுவறையும் அதைச் சுற்றிப் படுக்கையறைகளும், இந்தப் படுக்கையறைகளுக்குச் செல்ல ஆறிலிருந்து எட்டு வரையுள்ள மாடிப்படிகளும் இருக்கின்றன; இந்த வீடுகளில் ஒரே குடும்பத்தின் சில தலைமுறைகள் வசிக்கின்றன.

இந்தியாவில் நிலத்தைப் பொதுவில் சாகுபடி செய்துவந்த குடும்பச் சமூகத்தைப் பற்றி மகா அலெக்ஸாந்தர் காலத்திலிருந்த நியார்கஸ் என்ப

வர் ஏற்கனவே குறிப்பிட்டிருந்தார்; அது இன்றுகூட அதே வட்டாரத்தில், பஞ்சாபிலும் நாட்டின் வட மேற்குப் பகுதி முழுவதிலும், இருந்துவருகிறது. காக்கஸஸில் அது இருந்துவருவதாகக் கவலேவ்ஸ்கியே ருசு தர முடிந்தது. அல்ஜீரியாவில் கபீல்களிடையே அது இன்னும் இருந்துவருகிறது. அமெரிக்காவில் கூட அது இருந்தது என்று சொல்லப்படுகிறது. ஜூரிடா விவரித்த, பண்டைக்கால மெக்ஸிகோவில் இருந்த "calpullis"[1] போன்றதே இது என நிரூபிக்க முயற்சிகள் நடக்கின்றன. இன்னொரு பக்கத்தில், பெரு என்கிற நாட்டில் ஒரு வகையான மார்க் சட்டதிட்டம் (பெருவில் இந்த மார்க் Marca' என்று அழைக்கப்பட்டது விந்தைதான்) ஸ்பானிஷ் நாடு பிடிப்பு நடந்த காலத்தில், அவ்வப்போது விளைச்சல் நிலம் பங்கிடப்பட்டு வந்த நிலையில், அதாவது தனி நபர் வெள்ளாமை இருந்துவந்த நிலையில், நிலவிய தாக குனவ் ஓரளவுக்குத் தெளிவாகக் கூனவ் ("Ausland", 1890, இதழ்கள் 42-44) ருசுப்பித்திருக்கிறார்.

எப்படியான போதிலும், நிலத்தில் பொதுச் சொத்தும் பொதுச் சாகுபடியும் கொண்டு இருந்த தந்தைவழிக் குடும்பச் சமூகம் என்பது இதுவரையில் இருந்ததைவிட இன்று முற்றிலும் இன்னோர் அர்த்த முக்கியத்துவத்தைத் தாங்கி நிற்கிறது. பழைய உலகத்தைச் சேர்ந்த நாகரிக மக்களிடையேயும் இதர சில மக்களிடையேயும் தாயுரிமைக் குடும்பத்துக்கும் தனிப்பட்ட குடும்பத்துக்கும் இடையே அது வகித்த முக்கியமான மாற்றக்காலப்

[1] Calpullis: —அஸ்டெக் குடும்பச் சமூகம்.— பதிப்பாசிரியர்கள்.

பாத்திரத்தை நாம் இனிமேல் சந்தேகிப்பதற்கில்லை. இதிலிருந்து மேலும் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறார் கவலேவ்ஸ்கிய்; அதாவது, இந்த மாற்றக்காலக் கட்டத்திலிருந்துதான் கிராம அல்லது மார்க் சமூகம் தனி நபர் வெள்ளாமையுடனும், முதலில் அவ்வப்பொழுதும் பிறகு நிரந்தரமாயும் விளைச்சல் நிலங்களையும் மேய்ச்சல் நிலங்களையும் பங்கு பிரித்துத் தருவதுடனும் கூடியதாக, வளர்ச்சி பெற்றெழுந்தது; இந்த முடிவைப்பற்றிப் பிறகு வந்து பார்ப்போம்.

இந்தக் குடும்பச் சமூகங்களுக்குள்ளே இருக்கிற குடும்ப வாழ்க்கையைப் பொறுத்தவரை ஒன்றைக் கவனித்தாகவேண்டும்; குறைந்தபட்சம் ருஷ்யாவில் மட்டுமாவது, வீட்டின் தலைவன் வாலிபப் பெண்கள், குறிப்பாக, தனது மருமகள்மார் விஷயத்தில், தனது பதவியைப் படுமோசமாகத் துஷ்பிரயோகம் பண்ணிக் கொண்டிருந்தான்; அடிக்கடி அவர்களை ஓர் அந்தப்புரமாக மாற்றிவிட்டபடி இருந்தான்; ருஷ்ய நாடோடிப் பாடல்களில் இந்த நிலைமைகள் ஒரு மாதிரி பச்சையாகவே பிரதிபலிக்கப்பட்டுள்ளன.

ஒருதார மணமுறைக்கு வருமுன்னர் —தாயுரிமை தூக்கியெறியப்பட்டதன்பின் தொடர்ந்து ஒருதார மணமுறை வெகுவிரைவாக வளர்ந்தது — பலதார மண முறையைப் பற்றியும் பலபுருஷ மணமுறையைப்பற்றியும் இன்னும் சில வார்த்தைகள் சொல்வோம். ஏதாவதொரு நாட்டில் இவ்விரு மணமுறைகளும் அக்கம்பக்கமாக இருந்துவந்திருந்தாலொழிய அவை விதிவிலக்குகளாகத்தான்,

சொல்லப்போனால் வரலாற்று சொகுசுப் பொருட்களாகத்தான் இருக்க முடியும்; ஆனால் அப்படி அவை எந்த ஒரு நாட்டிலும் இருந்ததில்லை என்பது எல்லோரும் அறிந்ததே. பலதார மணமுறையிலிருந்து விலக்கப்பட்ட ஆண்கள் பலபுருஷ மண முறையினால் மிச்சப்பட்டுப் போன பெண்களோடு திருப்திப்பட்டு நின்றுகொள்ள முடியவில்லை; சமுதாய ஸ்தாபனங்கள் எவையாயிருந்தபோதிலும் இரு பாலாரின் எண்ணிக்கை இதுவரை ஓரளவுக்குச் சமமாகவே இருந்துவந்துள்ளது; எனவே இந்த மண வடிவமோ அந்த மணவடிவமோ பொது வழக்காய் அமையப் பெற முடியவில்லை. உண்மையிலே, ஓர் ஆண் பலதார மணத்தில் ஈடுபடுவது என்பது அடிமைமுறையின் ஒரு விளைபொருளேயாகும், அதுவும் சில விதிவிலக்கான வழக்குகளோடு நின்றுகொண்டது. செமைட்டிக் தந்தைவழிக் குடும்பத்தில், குடும்பத் தலைவன் மட்டுமோ—அதிகமாகப் போனால், அவனது இரண்டொரு குமாரர்களுமோ— தான் பலதார மணத்தில் வாழ்ந்தார்கள்; மற்றனைவரும் ஆளுக்கு ஒரு மனைவியோடு திருப்திப்பட்டுக்கொள்ள வேண்டியிருந்தது. கீழ்த்திசை நாடுகள் முழுவதிலும் இன்று இது இப்படியேதான் இருந்துவருகிறது. பலதார மணம் என்பது பணக்காரர்களுக்கும் பிரபுக்களுக்கும் உரிய சலுகையுரிமையாகும்; பிரதானமாகப் பெண்ணடிமைகளை விலைக்கு வாங்குவதின் மூலம் இம் மனைவியர் சேகரிக்கப்பட்டார்கள்; பெருந்தொகையான மக்கள் ஒருதார மணத்திலேயே வாழ்கின்றனர். இதேபோன்ற விதிவிலக்கைத்தான் இந்தியாவிலும் திபேத்திலுமுள்ள பலபுருஷ மண

மும் தருகிறது; குழு மணத்திலிருந்து அது தோற்றம் எடுத்தது சுவையுள்ள விஷயம்தான்; இந்தத் தோற்றத்தை இன்னும் நெருங்கிப் பரிசீலித்தாக வேண்டும். எப்படியாயினும், அதன் நடைமுறையில் பலபுருஷ மணம் முகமதியர்களின் பொறாமை மிக்க அந்தப்புரங்களைவிட மிகவும் சிக்கலானதாகத் தோன்றுகின்றது. இந்தியாவில், குறைந்தபட்சம் நாயர்கள் இடையிலாவது ஆண்கள், மூன்றோ அல்லது நான்கோ அல்லது அதற்கும் அதிகமான பேரோ கொண்ட குழுக்களாக அமைந்து ஒரே மனைவியைப் பொதுவில் கொண்டிருந்தனர். ஆனால் அதே பொழுதில் அந்த ஆண்களில் ஒவ்வொருவனும் வேறு மூன்று அல்லது அதற்கு அதிகமான ஆண்களோடு இரண்டாவது ஒரு மனைவியைப் பொதுவில் கொண்டிருக்கலாம்; அதே மாதிரி ஒரு மூன்றாவது மனைவி, நான்காவது மனைவி என்றுபடி போய்க்கொண்டேயிருக்கலாம். இந்தத் திருமணக் கிளப்புகளில் ஒரு புதிய மணவடிவத்தை — **கிளப் மணத்தை** — மாக்லென்னன் கண்டுபிடிக்காதது அதிசயம் தான்; இந்தக் கிளப்புகளில் பலவற்றில் ஒரே சமயத்தில் ஆண்கள் சேர்ந்திருக்கலாம்; இதை அவரே வர்ணித்திருக்கிறார். இருந்தாலும், இந்தத் திருமணக் கிளப் விவகாரம் என்பது அசல் பலபுருஷ மணம் அல்ல; அதற்கு மாறாக, ழிரோ-தெய்லோன் குறித்துள்ளபடி, இது குழு மணத்தின் ஒரு விசேஷமான வடிவமே; இதில் ஆண்கள் பலதார மணத்தில் வாழ, பெண்கள் பலபுருஷ மணத்தில் வாழ்கிறார்கள்.

4. **ஒருதார மணக் குடும்பம்.** ஏற்கனவே குறிப்பிட்டுள்ளபடி, அநாகரிக நிலையின் இடைக் கட்டம் தலைக்கட்டத்துக்கு மாறிச்செல்லும் காலப் பகுதியிலே இது இணைக் குடும்பத்திலிருந்து தோற்ற மெடுக்கிறது; அதன் இறுதி வெற்றி நாகரிகம் தொடங்குவதற்குரிய அடையாளக்குறிகளில் ஒன்று. அது ஆணின் மேலாதிக்கத்தை அடிப்படையாகக் கொண்டது; அதன் தெளிவான நோக்கம் விவாதத் திற்கிடமில்லாத தந்தை முறையுள்ள குழந்தைகளைப் பெறுவது தான்; காலாகாலத்தில் இந்தக் குழந் தைகள் தமது தகப்பனாரின் இயற்கைவாரிசுகள் என்ற முறையில் அவரது சொத்தைச் சுவீகரிக்க லாம் என்பதற்குத்தான் இந்தத் தந்தை முறை வேண்டியிருந்தது. இணைக் குடும்பத்திலிருந்து ஒரு தார மணம் வேறுபட்டிருப்பது மண உறவின் எவ் வளவோ அதிகமான இறுக்கம்தான். இப்போது இரு தரப்பினரும் இஷ்டப்படும் போது இதை ரத்து செய்யமுடியாது. விதிப்படி இப்போது ஆண்மட்டும் தான் அதை ரத்து செய்து தனது மனைவியைத் தள்ளி விடலாம். மணவாழ்வில் விசுவாசமின்றி யிருக்கும் உரிமை இப்போதும்கூட ஆணிடமே இருக்கிறது; குறைந்தபட்சம் வழக்கமாவது அதை அனுமதிக்கி றது (வைப்பாட்டியைத் தனது வீட்டில் கொண்டு வந்து வைத்துக்கொள்ளாதவரையில் கணவனுக்கு இந்த உரிமையை நெப்போலியன் சட்டம் தெளிவாக வே வழங்குகிறது); சமுதாயம் வளர வளர இந்த உரிமை மேலும் மேலும் செலுத்தப்படுகிறது. பண் டைக்காலப் பால் உறவு நடைமுறையைப் பெண் ஞாபகப்படுத்திக்கொண்டு அதை மீண்டும் உயிர்ப்

பிக்க விரும்பினால் முன்னெப்போதையும் விடக் கடுமையாக அவள் தண்டிக்கப்படுகிறாள்.

கிரேக்கர்களிடையே முழுக் கடுமையுடன் கூடிய தாய் இந்தக் குடும்ப வடிவம் இருப்பதை நாம் பார்க்கிறோம். மார்க்ஸ் குறிப்பிடுகிறபடி, புராணத்தில் பெண் தெய்வங்கள் வகிக்கும் நிலை ஆரம்பக்காலத்தைக் காட்டுகிறது; அப்போது பெண்கள் பின்னை விடச் சுதந்திரமான மதிப்புள்ள ஸ்தானத்தில் இருந்தனர். ஆனால் மாவீரர் சகாப்தத்தில் ஆணின் மேலாதிக்கத்தின் காரணத்தாலும், பெண்ணடிமைகளின் போட்டியின் காரணத்தாலும் பெண்கள் ஏற்கனவே கீழ்நிலைக்குத் தாழ்த்தப்பட்டுவிட்டதைப் பார்க்கிறோம். டெலிமாகஸ் தனது தாயின் பேச்சில் குறுக்கிட்டு வாய்மூடும்படி கட்டளையிடுவதை நாம் ''ஒடிஸே''யில் படிக்கலாம். ஹோமரின் காவியத்தில், கைதி செய்யப்பட்ட பெண்கள் வெற்றி பெற்றவர்களின் காமவெறிக்கு இலக்காகின்றனர்; ராணுவத் தலைவர்கள் ஒருவர்பின் ஒருவராக, பதவி வரிசைப்படி, அழகுமிகுந்த பெண்களைப் பொறுக்கிக்கொள்கின்றனர். இப்படிப்பட்ட ஒரு பெண்ணடிமைக்காக அகிலிஸும் அகமெம்னனும் சச்சரவிட்டுக்கொள்கிறதை ''இலியாத்'' காவியம் முழுவதும் சுற்றிவருகிறது என்பது நமக்குத் தெரியும். ஹோமரின் ஒவ்வொரு முக்கியமான வீரன் சம்பந்தமாயும் ஓர் அடிமைப் பெண்—அவனது கூடாரத்தில் வசித்து, அவனுடன் ஒரே படுக்கையில் உறங்குபவள்—குறிப்பிடப்படுகிறாள். நாடு திரும்பும்போது இந்தப் பெண்கள் கணவன்மாரின் இல்லத்துக்குக் கொண்டு போகப்படுகின்றனர். எஷ்கிலஸின் நாடகத்தில் அகமெம்னன்

கஸான்றிராவை அப்படித்தான் வீட்டுக்குக் கொண்டு போகிருன். இந்தப் பெண்ணடிமைகளுக்குப் பிறக்கும் குமாரர்கள் தகப்பஞரின் சொத்தில் ஒரு சிறு பங்கைப் பெறுகிருர்கள், சுதந்திர மனிதர்களாகக் கருதப்படுகிருர்கள். இப்படித்தான் டெலமாஜுக்கு முறைக்கேடாகப் பிறந்த மகனே டியூகுரோஸ் என்பவன்; அவன் தனது தகப்பனின் பெயரை வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டான். மணந்து கொண்ட மனைவி இதையெல்லாம் சகித்துக்கொள்ள வேண்டும், ஆனல் தன்னைப் பொறுத்தவரையில் தூய்மையான கற்போடும் தாம்பத்திய விசுவாசத்தோடும் இருக்கவேண்டும் என எதிர்பார்க்கப் பட்டாள். மாவீரர் சகாப்தத்தில், நாகரிகக் காலத்தில் இருந்ததைவிட அதிக மதிப்போடு கிரேக்க மனைவி நடத்தப் பட்டாள் என்பது உண்மையே. ஆனல் அவளுடைய கணவனைப் பொறுத்தவரையில் அவள் தனது சட்டபூர்வமான வாரிசுகளுக்குத் தாயாகவும், அவனது பிரதான வீட்டு வேலைக்காரியாயும், பெண்ணடிமைகளை மேற்பார்வையிடுபவளாயும் இருந்தாள். இந்தப் பெண்ணடிமைகளை அவன் இஷ்டப்படும் போது தனது வைப்பாட்டிகளாக வைத்துக்கொள்ளலாம், வைத்துக்கொள்ளவும் செய்தான். ஒருதார மணத்துக்குப் பக்கத்திலேயே அடிமை முறையும் இருந்ததுதான், ஆணுக்கு முழுக்க முழுக்க சொந்தமாயிருக்கிற அழகிய இளம்பெண்கள் இருந்ததுதான், ஆரம்பத்திலிருந்தே ஒருதார மணம் என்பது **பெண்களுக்கு மட்டுமே**, ஆண்களுக்கு இல்லை என்ற ஒரு குறிப்பான தன்மையை முத்திரையிட்டுக் காட்டி

யது. அது இன்றைக்கும் கூட இத்தன்மை பெற்றுத் தான் இருக்கிறது.

பிற்காலத்தைச் சேர்ந்த கிரேக்கர்களைப் பொறுத்தமட்டில் நாம் டோரியர்களையும் அயோனியர்களையும் வேறுபடுத்திப் பார்க்க வேண்டும். முந்தியவர்கள் – இவர்களில் ஸ்பார்டாதான் சாஸ்திரீய உதாரணமாக இருந்தது—ஹோமர் குறிப்பிடுவதைவிடப் பலவகைகளில் மிகப் பழைமையான மண உறவு முறைகளைக் கொண்டிருந்தார்கள். ஸ்பார்டாவில் இணை மண வடிவத்தை நாம் காண்கிறோம்—அது அங்கு நிலவியிருந்த கருத்தோட்டங்களுக்கேற்ப அரசால் திருத்தப்பட்டிருந்தது; அந்த மணவடிவம் குழு மணத்தின் பல அம்சங்களைத் தன்னிடம் இன்னும் கொண்டிருந்தது. குழந்தைகள் பிறக்காத திருமணங்கள் ரத்து செய்யப்பட்டன. முதலாவது மலட்டு மனைவியோடு கூட இரண்டாவது மனைவி ஒருத்தியையும் அனெக்ஸான்டிரிடாஸ் (சுமார் 650 கி. மு.) கொண்டிருந்தான், இரு குடும்பங்களை நடத்தினான். அரிஸ்டோனஸ் அரசனின் முதல் இரண்டு மனைவியரும் மலடிகள், அவர்களில் ஒருத்தியைப் போக விட்டு விட்டான்; மூன்றாவது மனைவியாக ஒருத்தியைக் கைக் கொண்டான். இன்னொரு பக்கத்தில, ஒரே மனைவியைப் பொதுவில் பல சகோதரர்கள் வைத்துக்கொள்ளலாம். தனது நண்பனின் மனைவியை விரும்புகிற ஒருவன் அவளை அவனோடு பங்கு போட்டுக்கொள்ளலாம். ஒருவன் தனது மனைவியை, ''பொலிகாளை'' என்று பிஸ்மார்க் சொல்லக்கூடுமே, அப்படிப்பட்டவனுக்கு (அவன் ஒரு பிரஜையாக இல்லாவிட்டா

லும் கூட) தருவது முறை என்றே கருதப்பட்டது. ப்லூடார்க் நூலில் ஒரு பகுதியுண்டு; அதில் ஒரு ஸ்பார்டா பெண் தன்மீது காதல் தெரிவித்துப் பின் வந்து கொண்டேயிருக்கிறவனிடம் தன் கணவனைப் போய்ப் பார்க்கும்படி அனுப்புகிருள்; ஷோமான் கூறுகிறபடி, இது இன்னும் அதிகமான பால் உறவுச் சுதந்திரத்தைக் குறிக்கிறது. ஆக, அசல் கற்பின்மை என்பது, அதாவது கணவனுக்குத் தெரியாமல் மனைவி சோரம் போவது, கேள்விப்படாத விஷயமாகவே இருந்தது. இன்னொரு பக்கத்தில், ஸ்பார்டாவில், குறைந்தபட்சம் அதன் உச்ச நிலையிலாவது, வீட்டுச் சேவக அடிமைமுறை என்பது யாருக்கும் தெரியாத விஷயமாகும். ஹீலட் பண்ணையடிமைகள் எனப்பட்டோர் எஸ்டேட்டுகளில் ஒதுக்கப்பட்டு வாழ்ந்து வந்தனர்; எனவே ஸ்பார்டியாட்டுகள்[1] எனப்படுவோர் அவர்களின் பெண்களைப் புணர்வதற்குச் சபலம் குறைவாயிருந்தது. இந்தச் சூழ்நிலைமைகளிலெல்லாம் ஸ்பார்டா பெண்கள் மற்றெல்லா கிரேக்கப் பெண்களையும்விட எவ்வளவோ கௌரவமான நிலையில் இருந்து வந்தனர் என்பதும் மிகவும் இயற்கைதான். ஸ்பார்டாவின் பெண்களையும் அதீனியப் பொது மகளிரில்—ஹெறெதேரேக்களில்—பொறுக்கியெடுத்த பகுதியினரையும் பற்றி மட்டுமே பண்டைக் காலத்தவர்கள் மரியாதையோடு பேசினர், அந்தப் பெண்களின் பேச்சுக்களை ஏட்டில் குறிக்கத்தக் கனவாகக் கருதினுர்கள்.

[1] **ஸ்பார்டியாட்டுகள்**—ஹீலட்டுகள் போல் அல்லாமல் பண்டைக்கால ஸ்பார்டாவில் பூர்ண பிரஜாவுரிமைகளை அனுபவித்துவந்த ஒரு பிரஜா வகுப்பினர்.—**பதிப்பாசிரியர்கள்.**

அயோனியர்களிடையே—இவர்களில் ஆதென்ஸ் இனம் குறித்துக் காட்டுவதாகும் — விஷயங்கள் முற்றிலும் வேறுக இருந்தன. நூல் நூற்றல், நெசவு செய்தல், துணிதைத்தல், இவற்றைத் தான் பெண்கள் கற்ருர்கள்; அதிகமாகப் போனுல், கொஞ்சம் படிக்கவும் எழுதவும் கற்றுக் கொண்டனர். நடைமுறையில் தனிமையிலே வைக்கப்பட்டார்கள், பிற பெண்களோடு மட்டுமே உறவாடினுர்கள். வீட்டில் பெண்கள் வசிக்கும் பகுதி ஒரு தனிப் பகுதியாகும், மேல்மாடியிலோ, வீட்டின் பின்புறக் கட்டத்திலோ இருந்தார்கள்; அங்கே ஆண்கள் சுலபத்தில் போகமுடியாது, குறிப்பாக அன்னியர்கள் போகவேமுடியாது. ஆண்கள் வீட்டுக்கு வந்தால் பெண்கள் அங்கே போய்விடுவார்கள். பெண் அடிமைகள் கூடவந்தால் ஒழியப் பெண்கள் வெளியே போவதில்லை; அநேகமாக வீட்டில் காவலில்தான் வைக்கப்பட்டிருந்தார்கள்; பிறன் மனைவியைக் கூடுபவர்களுக்குப் பயங்காட்டுவதற்காக மோலோசியக் கடி நாய்கள் வைக்கப்பட்டிருந்தன என்று அரிஸ்டோபேனஸ் சொல்கிருர்; ஆசிய நாடுகளில், குறைந்தபட்சமாகச் சொன்னுல், பெண்களைக் காவல் காப்பதற்கு அலிகளை வைத்திருந்தனர். ஹெரடோடஸ் காலத்திலேயே வியாபாரத்துக்காக அலிகள் ஹியோஸில் உற்பத்தி செய்யப் பட்டனர்; வாக்ஸ்மத் கூறுகிறபடி, இது அநாகரிகர்களுக்காக மட்டுமல்ல. யூரிபிடிஸ் நூலில் பெண்ணை 'oikurema' என்று, அதாவது வீட்டைக் கவனித்துக் கொள்வதற்குரிய ஐந்து என்று (அஃறிணையில்தான் இச்சொல் உள்ளது) வர்ணிக்கப்

படுகிறது; குழந்தைகளைப் பெற்றெடுக்கும் தொழில் ஒன்று போக, அதீனியனுக்கு அவள் வீட்டின் தலைமை வேலைக்காரிதான், மற்றப்படி ஒன்றுமில்லை. கணவனுக்கு அவனது தேகப் பயிற்சிகளும், பொது விவகாரங்களும் இருந்தன; அவற்றிலிருந்து மனைவி விலக்கப்பட்டிருந்தாள். இத்துடன் கூடுதலாக, அவனது இஷ்டத்துக்குப் பெண்ணடிமைகளும் இருந்தனர்; ஆதென்ஸின் உச்சநிலைக் காலத்தில் பரந்த விபசாரமும் இருந்தது. குறைந்தபட்சமாகச் சொன்னால், அரசும் ஆதரவளிக்கும் வகையில் அதைப் பார்த்துக் கொண்டிருந்தது. இந்த விபசாரம் ஒன்றின் அடிப்படையில் மட்டுமே பிரசித்திபெற்ற கிரேக்கப் பெண்கள் தோன்றி வளர்ந்தார்கள்; ஸ்பார்டா பெண்கள் தமது குணத்தின் விசேஷத்தால் உயர்ந்ததைப் போலவே, அப்பெண்கள் தமது மதிவன்மையாலும் கலைரசனையாலும் பண்டைக் காலப் பெண்ணினத்தின் பொதுவான தரத்துக்கு மேலாக உயர்ந்தோங்கியிருந்தனர். ஒருத்தி பெண்ணாக இருக்கவேண்டுமென்றால் அவள் முதலில் ஒரு பொது மகளாக இருந்து தீரவேண்டும் என்றிருந்தது அதீனியக் குடும்பத்தின் மீது விதிக்கப்பட்ட கண்டனங்களிலேயே மிகக் கடுமையானதாகும்.

மற்ற அயோனியர்கள் மட்டுமின்றி, மூலநாட்டிலும் காலனிகளிலும் இருந்த கிரேக்கர்கள் அனைவருமே தமது குடும்ப உறவுகளை மேலும் மேலும் உருவாக்கி வந்ததற்கு இந்த அதீனியக் குடும்பம்தான், காலப்போக்கில் ஒரு முன்மாதிரியாக ஆயிற்று. ஆனால், தனிமைப்படுத்தலும் காவலும் எவ்வளவுதான் இருந்தபோதிலும் கணவன்மார்களை வஞ்சிப்ப

தற்குப் பெண்களுக்கு அடிக்கடி வாய்ப்புகள் கிடைத்தன. சொந்த மனைவிமாரிடம் அன்பு காட்ட வெட்கப்பட்டிருக்கக்கூடிய அந்தக் கணவன்மார்கள் பொது மகளிரோடு பலவிதக் காதல் விவகாரங்களில் ஈடுபட்டனர். ஆனால் பெண்களைத் தாழ்ந்த நிலையில் தள்ளினது ஆண்கள்மீதே திரும்பிப் பாய்ந்தது, அவர்களையும் தாழ்த்திவிட்டது. கடைசியில் அவர்கள் சிறுவர்களுடன் காம உறவு கொள்வதென்கிற ஒழுக்கக் கேட்டில் இறங்கும் மட்டத்துக்கு அமிழ்ந்துவிட்டனர். கானிமேட் பற்றிய கட்டுக்கதையை வைத்துக் கொண்டு அவர்கள் தம்மையும் தமது தெய்வங்களையும் தாழ்மைப்படுத்திக்கொண்டார்கள்.

பண்டைக் காலத்தில் மிக மிக நாகரிகமான, உயர்ந்த வளர்ச்சி பெற்ற மக்கள் சமூகங்களில் நாம் அடையாளம் கண்டு கொள்ளக்கூடிய அளவுக்கு, ஒருதார மணமுறையின் தோற்றம் இப்படித்தான் இருந்தது. தனிப்பட்ட காமத்தின் விளைவாய் ஏற்பட்டதல்ல அது; அத்துடன் அதற்கு எவ்வித சம்பந்தமும் கிடையவே கிடையாது. ஏனெனில் முன்போலவே திருமணங்கள் என்பவை சௌகரியத்துக்காகச் செய்துகொண்ட திருமணங்களாகவே தானிருந்தன. இயற்கையான நிலைமைகளை அடிப்படையாகக் கொள்ளாமல் பொருளாதார நிலைமைகளை—அதாவது, ஆதிகால, இயற்கையாக வளர்ந்த பொதுச் சொத்தின் மீது தனியுடைமை வெற்றி பெற்றிருந்த நிலைமைகளை—அடிப்படையாகக் கொண்டு எழுந்த முதல் குடும்ப வடிவம் அது. குடும்பத்தில் ஆணின் ஆட்சி, தனதே எனக் கூடிய குழந்தைகளைப் பெறுவது, தனது செல்வத்துக்கு வாரிசாக வர விதியுள்ள

வர்களைப் பெறுவது—இவை மட்டுந்தான் ஒருதார மணத்தின் லட்சியங்கள் என்று கிரேக்கர்கள் பகிரங்கமாக ஒத்துக்கொண்டார்கள். மற்றப்படி, அது ஒரு சுமை, தெய்வங்களுக்கும் அரசுக்கும் மூதாதையர்களுக்கும் நிறைவேற்றித் தீர வேண்டியிருக்கிற கடமை. ஆதென்ஸில் சட்டம் கல்யாணத்தைக் கட்டாயமாக்கியதுமட்டுமல்ல, திருமணக் கடமைகள் எனப்படுபவற்றில் குறைந்தபட்சக் கடமைகளை ஆண் நிறைவேற்றுவதையும் கட்டாயமாக்கியது.

ஆக, ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே ஏற்பட்ட ஒரு சமரசமாக ஒருதார மணமுறை வரலாற்றில் தோற்றம் பெறவில்லை; மண முறையின் உச்ச வடிவம் அது என்பது போகட்டும். அதற்கு மாறாக, ஒரு பால் மற்றொரு பாலை அடிமைப்படுத்தியதாக அது தோற்றமளிக்கிறது, ஏட்டறிந்த வரலாற்றுக்கு முந்திய காலங்களில் அறவே அறிந்திராத இரு பால் சச்சரவு குறித்து விடுத்த பிரகடனமாகவே அது தோற்றமளிக்கிறது. 1846ல் மார்க்ஸும் நானும் எழுதிய பிரசுரிக்கப்படாத பழைய கையெழுத்துப் பிரதியொன்றில்[1] நான் பார்த்தது பின்வருமாறு:—''குழந்தை பெறுவதற்காக ஆணுக்கும்

[1] ''ஜெர்மன் தத்துவம்'' என்ற நூலை இது குறிக்கிறது. மார்க்ஸும் எங்கெல்ஸும் 1845-46ல் எழுதியது; இதை ஜெர்மன் சோஷல்-டெமாக்ராட்டுகள் மூலையில் போட்டுவிட்டிருந்தார்கள். சோவியத் கம்யூனிஸ்ட் கட்சி மத்தியக் கமிட்டியின் கீழுள்ள மார்க்ஸீய-லெனினீயக் கழகத்தால் முதல் முதலாக ஜெர்மன் மொழியில் 1932ல் பிரசுரிக்கப்பட்டது. ருஷ்ய மொழிபெயர்ப்பு 1933ல் வெளியாயிற்று.—**பதிப்பாசிரியர்கள்.**

பெண்ணுக்கும் இடையே இருந்த வேலைப் பிரிவினை தான் முதல் வேலைப் பிரிவினையாகும்''. இன்று இத்துடன் நான் பின்வருமாறு சேர்க்க முடியும். வரலாற்றில் தோன்றுகிற முதல் வர்க்க விரோதம் ஒருதார மணத்தில் ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே விரோதம் வளர்வதோடு ஒன்றுபடுகிறது, முதல் வர்க்க ஒடுக்குமுறையோ பெண்பாலை ஆண் பால் ஒடுக்கும் ஒடுக்குமுறையோடு ஒன்றுபடுகிறது. ஒருதார மணமுறை மகத்தான வரலாற்று ரீதியான ஒரு முன்னேற்றமாகும்; அதே சமயத்தில் அடிமை முறையுடனும் தனிச் சொத்துடனும் சேர்ந்தாற் போலவே அது ஒரு சகாப்தத்தைத் துவக்கி வைத்தது; அந்தச் சகாப்தத்தில் ஒவ்வொரு முன்னேற்றமும் அதேபோல் சார்புரீதியிலே ஒரு பின்னடைவாகவும் இருக்கிறது, அதில் ஒரு குழுவின் துன்பத்தையும் அடக்குமுறையையும் கொண்டு இன்னொரு குழுவின் நலமும் வளர்ச்சியும் பெறப்படுகின்றன; அந்தச் சகாப்தம் இன்றுவரை நீடிக்கிறது. அது நாகரிக சமுதாயத்தின் மூலக்கூறுவகைப்பட்ட வடிவமாகும்; அவ்வடிவத்தின் மூலமாக அந்தச் சமுதாயத்தில் நிறைவாக வளர்ச்சி பெறுகிற விரோதங்களின், முரண்பாடுகளின் தன்மையை நாம் ஏற்கனவே ஆராயமுடியும்.

இணைக் குடும்பத்தின் வெற்றியுடனே, அல்லது ஒருதார மணமுறையின் வெற்றியுடனேகூட, புணர்ச்சி செய்வதற்கு இருந்த பழைய சார்பு ரீதியான சுதந்திரம் நிச்சயமாக மறைந்து விடவில்லைதான். ''பழைய திருமண வாழ்க்கை முறை புனலுவா குடும்பம் படிப்படியாக மறைந்ததின் வழியாக இப்போது மேலும் குறுகலான வரம்புகளுக்குள்

குறுக்கப்பட்டுவிட்டு, முன்னேறிவரும் குடும்பத்தை இன்னமும் சூழ்ந்து நின்றது; நாகரிக நிலையின் எல்லையைத் தொடும்வரைக்கும் அதைப் பின்தொடர்ந்தும் வந்தது.... கடைசியிலே, பொது மகளிர் முறை என்ற புதிய வடிவத்தில் அது மறைந்தது; இந்த வடிவம், நாகரிகத்தில் குடும்பத்தின் மேல் விழுகின்ற கரிய நிழல் போல் மனிதகுலத்தைப் பின்தொடர்ந்து வருகிறது.'' பொது மகளிர் முறை என்பதற்கு **ஒருதார மண முறைக்கு அக்கம்பக்கமாகவே** ஆண்களுக்கும் மணமாகாத பெண்களுக்குமிடையே நிகழும் மணநிலைக்குப் புறம்பான புணர்ச்சி என்று மார்கன் பொருள் கொள்கிறார்; இது, நாகரிகக் காலப் பகுதி முழுவதிலும், பல்வேறு வடிவங்களில் செழித்தோங்கியிருக்கிறது என்பது எல்லோரும் அறிந்ததே; அது பகிரங்க விபசாரமாகத் திட்டமாக உருப்பெற்று வருகிறது. இந்தப் பொது மகளிர் முறையை நேரடியாகக் குழு மணத்திலிருந்து வந்ததாக, கற்புரிமையை வாங்குவதற்குச் செலுத்தும் காணிக்கைக்காகப் பெண்கள் புணர்ச்சிக்கு இணங்குவதிலிருந்து வந்ததாக அடையாளங்கண்டு கொள்ள முடியும். பணத்திற்காகப் புணர்ச்சிக்கு உடன்படுவது என்பது முதலில் ஒரு மதச் செய்கையாக இருந்தது; காதல் தெய்வத்தின் கோவிலில் இது நடந்தது; அந்தப் பணமும் கோவில் கஜானுவுக்குச் சென்றது. ஆர்மீனியாவிலுள்ள அனெய்டிஸின் ஹீரோடூல்களும்[1], கோரின்திலுள்ள

[1] **ஹீரோடூல்கள்** — கோவில் சேவகிகளாக இருக்கும் பெண்ணடிமைகள்.—**பதிப்பாசிரியர்கள்.**

அப்ரோடைட்டியின் ஹீரோடூல்களும், இந்தியக் கோவில்களுடன் பிணைக்கப்பட்டுள்ள நாட்டிய தாசிகளும்—பாயதேர்கள் எனப்படுபவர்கள் (இது போர்த்துகீசிய 'bailadeira' — நாட்டியக்காரி என்ற சொல்லின் திரிபாகும்) முதன் முதலில் வந்த விபசாரிகள். இப்படிக் காணிக்கைக்காகத் தம்மை ஒப்புக்கொடுக்கும் முறை ஆதியில் எல்லாப் பெண்களுக்குமுரிய கடமை யாகும்; பின்னால் அவர்கள் எல்லோரின் சார்பில் இந்தப் பூசாரிணிகள் மட்டும் அதைப் பின்பற்றி வந்தார்கள். மற்ற மக்கள் சமூகங்களிடையே மணமாவதற்குமுன் பெண்களுக்குப் புணர்ச்சி சுதந்திரம் அளித்திருந்ததிலிருந்து—ஆகவே, இதுவும் குழுமணத்தின் மீதமிச்சம்தான்; இன்னொரு வழியாக நம்மிடம் வந்து சேர்ந்திருக்கிறதே தவிர வேறில்லை—பொது மகளிர் முறை வெளிப்பட்டு வளர்ந்துள்ளது. சொத்து வேறுபாடு—அதாவது, அநாகரிக நிலையின் தலைக்கட்டத்திலேயே—அடிமையுழைப்புக்குப் பக்கத்திலேயே இங்கும் அங்குமாகக் கூலியுழைப்பும் தோன்றுகிறது; அதே சமயத்தில், அதன் அவசியமான தொடர் பொருளாக, சுதந்திரமான பெண்கள் விபசாரத்தைத் தொழிலாகக் கொள்வதும் பெண்ணடிமையின் நிர்ப்பந்த ஆத்மசமர்ப்பணத்துக்குப் பக்கத்திலேயே தோன்றுகிறது. இப்படித்தான் நாகரிகத்திற்குக் குழு மணம் விட்டுச் சென்ற பரம்பரைச் சொத்து இரு தரப்புளளது; நாகரிகம் உண்டாக்கி வைத்தவை எல்லாம் எப்படி இரு தரப்பும், இரு அர்த்தமும், சுயமுரண்பாடும், விரோதமும் கொண்டிருக்கின்றனவோ, அப்படியேதான் இதுவும்;

ஒரு பக்கத்தில் ஒருதார மணமுறை; இன்ெனுரு பக்கத்தில் பொது மகளிர் முறை, இதனுள் விபசாரம் என்ற அதன் மிகத் தீவிரமான வடிவமும் அடங்கும். மற்ற எந்தச் சமுதாய ஸ்தாபனமும் போலத்தான் பொது மகளிர் முறையும் ஒரு சமுதாய ஸ்தாபனம்; அது பழைய புணர்ச்சி சுதந்திரத்தின் தொடர்ச்சியே— ஆண்களுக்குச் சாதகமாக. யதார்த்தத்தில் குறிப்பாக ஆளும் வர்க்கத்தினர் இதைச் சகித்துக் கொள்வதோடன்றி ஆர்வத்துடன் பின்பற்றவும் செய்கிருர்கள் என்ருலும் அதைச் சொல்லளவில் கண்டிக்கிருர்கள். யதார்த்தத்தில் இந்தக் கண்டனம் அதில் ஈடுபடும் ஆண்களைத் தாக்குவதில்லை, பெண்களைத் தான் தாக்குகிறது; அவர்கள் சமூக பகிஷ்காரம் செய்யப்பட்டுச் சமூகத்துக்கு வெளியே தள்ளப்படுகிருர்கள். எதற்காக? பெண்பால்மீது ஆண்பால் செலுத்தும் பூர்ண ஆதிக்கமே சமுதாயத்தின் அடிப்படை விதி என்று பிரகடனம் செய்யத்தான்.

இருந்த போதிலும், இதனுல் ஒருதார மணமுறைக்குள்ளேயே இரண்டாவது முரண்பாடு ஒன்று வளர்கிறது. பொது மகளிர் முறையைக் கொண்டு தனது வாழ்க்கையை அணி செய்து கொண்டுள்ள கணவனுக்குப் பக்கத்திலேயே புறக்கணிக்கப்பட்ட மனைவியும் நிற்கிருள். முரண்பாட்டில் ஒரு பாதி இல்லாமல் மறு பாதியை மட்டும் கொள்வது சாத்தியமல்ல; ஆப்பிளில் ஒரு பாதியைச் சாப்பிட்டுவிட்டு முழு ஆப்பிளைக் கையில் வைத்திருக்க முடியுமா? அது போல. இருந்தாலும், ஆண்கள் வேறு மாதிரி நினைத்துக் கொண்டார்கள் போலிருக்கிறது—மனைவியர்கள் அவர்களுக்குப் புத்தி கற்பிக்கும்வரை.

ஒருதார மண முறையோடு அதற்குமுன் இல்லாத இரண்டு நிரந்தரமான சமுதாயப் பிரமுகர்கள் காட்சியில் தோன்றுகிறார்கள்—மனைவியின் கள்ளக் காதலனும், மனைவியால் வஞ்சிக்கப்பட்ட கணவனும். பெண்கள்மீது ஆண்கள் வெற்றி பெற்றுவிட்டார்கள்; ஆனால் வெற்றி பெற்றவனுக்கு முடி சூட்டும் வேலையைத் தோற்றுப்போனவர்கள் தாராள சிந்தையுடன் மேற்கொண்டார்கள். மனைவி சோரம் போவது— அது தடை செய்யப்பட்டது, கடுமையாகத் தண்டிக்கப்பட்டது, இருந்தாலும் அடக்கமுடியாதது—ஒருதார மணமுறைக்கும் பொது மகளிர் முறைக்கும் பக்கத்தில் தவிர்க்கமுடியாத சமுதாய ஸ்தாபனமாக ஆகிவிட்டது. குழந்தைகளின் நிஜமான தகப்பன் யார் என்கிற விஷயம் முன்போலவே இப்பொழுதும், அதிகப்பட்சமாகச் சொல்லப்போனால், ஒரு தார்மீக நம்பிக்கையை ஆதாரமாகக் கொண்டிருக்கும் விஷயமாகிவிட்டது. தீர்வு காண இயலாத இந்த முரண்பாட்டைத் தீர்க்க வேண்டி நெப்போலியன் சட்டத் தொகுப்பின் 312வது பிரிவு பின்வருமாறு உத்தரவிட்டது: "L'enfant conçu pendant le mariage a pour père le mari" "மணவாழ்க்கையில் கருக் கொண்ட குழந்தைக்குக் கணவனே தான் தகப்பன் ஆகிறான்" என்று. மூவாயிரம் ஆண்டுகளாக நிலவி வரும் ஒருதார மணத்தின் இறுதி விளைவு இதுதான்.

ஆக, தனிப்பட்ட குடும்பத்தில், அதன் வரலாற்று ரீதியான தோற்றத்தை உண்மையாகப் பிரதிபலிக்கிற சமயங்களிலும், ஆணின் தனியாதிக்கத்தின் விளைவாக ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே

ஏற்படும் சச்சரவைத் தெளிவாக வெளிப்படுத்தும் சமயங்களிலும் நமக்கு ஒரு சிறு ஓவியம் கிடைக்கிறது; அதில் சமுதாயத்திலுள்ள விரோதங்களும் முரண்பாடுகளும் தெரிகின்றன; நாகரிகம் தொடங்கிய காலத்திலிருந்து வர்க்கங்களாகப் பிரிந்த சமுதாயம் அந்த விரோதங்களிலும் முரண்பாடுகளிலும் இயங்கிவருகிறது; அவற்றை அதனுல் தீர்க்கவும் முடியவில்லை, தோற்கடிக்கவும் முடியவில்லை. தனது முழு ஸ்தாபனத்தின் ஆதித் தன்மையை நிர்ணயிக்கிற விதிகளின்படி எங்கே மணவாழ்க்கை நடந்து கொண்டிருக்கிறதோ, அவ்வகைப்பட்ட ஒரு தார மணத்தின் உதாரணங்களைத் தான், ஆனுல் கணவனின் ஆதிக்கத்தை எதிர்த்து மனைவி கலகம் செய்கிற உதாரணங்களையே நான் இங்கு குறிக்கிறேன் என்பது இயற்கையே. எல்லாத் திருமணங்களும் இப்படியில்லை என்பது ஜெர்மானிய பிலிஸ்டைன்களுக்கு நன்ருகத் தெரிந்திருப்பது போல் வேறு எவருக்கும் தெரியாது. அவர்களுக்கு அரசிலும் ஆளத் திறனில்லை; வீட்டிலும் ஆளத் திறனில்லை. எனவே நியாயமாகவே அவர்களது மனைவிகள் தான் முழு உரிமையோடு வீட்டில் ஆட்சி செலுத்துகிருர்கள். அவ்வாட்சியைச் செலுத்துவதற்கு ஆண்கள் தகுதியற்றவர்கள். ஆனுல் ஜெர்மானியர்கள் தம்மைத் தாமே தேற்றிக்கொள்ளும் முறையில் துரதிர்ஷ்டத்தில் சிக்கிய தனது தோழர்களாகிய பிரெஞ்சுக்காரர்களைவிடத் தாங்கள் எவ்வளவோ மேல் என்று கற்பனை செய்துகொள்கிருர்கள். ஜெர்மானியனைவிட பிரெஞ்சுக்காரன் பல சமயங்களில் இன்னும் மோசமான நிலைமையில் இருக்கிருனும்.

இருந்தாலும், கிரேக்கர்களிடையே பெற்றிருந்த சாஸ்திரீயமான கடுமையான வடிவத்தில் தனிப்பட்ட குடும்பம் எல்லா இடங்களிலும் எப்போதும் தோன்றவில்லை. ரோமானியர்கள், எதிர்காலத்தில் உலகத்தை வெல்லப் போகிறவர்கள் என்ற ரீதியிலே, கிரேக்கர்களை விட நாசூக்கில் குறைவானதாயிருந்தாலும் பரந்த நோக்கு கொண்டிருந்தார்கள்; அவர்கள் இடையே பெண்ணுக்கு அதிக சுதந்திரமும் மதிப்பும் தரப்பட்டது. அவள் மேல் ஜீவ மரண அதிகாரம் தனக்கு இருந்ததனுல் தனது மனைவியின் மணவாழ்க்கை விசுவாசத்துக்குப் போதிய பாதுகாப்புகள் இருப்பதாக ரோமானியன் நம்பினுன். மேலும், கணவனைப் போலவே மனைவியும் சுயமாகக் கல்யாணத்தை ரத்து செய்யமுடியும். ஆனுல், ஜெர்மானியர்கள் வரலாற்றில் பிரவேசித்தபிறகுதான் ஒருதார மணத்தின் வளர்ச்சியில் ஆகப்பெரிய முன்னேற்றம் திட்டமாக நிகழ்ந்தது. காரணம், அவர்களிடையே வறுமை இருந்ததால், இணைக் குடும்பத்திலிருந்து ஒருதார மணமுறை முழுவதாகப் பரிணுமம் பெற்று வெளிவந்ததாகத் தெரியவில்லை. டாஸிடஸ் கூறுகிற மூன்று சூழ்நிலைமைகளைக் கொண்டு நாம் இந்த முடிவுக்கு வருகிறோம். முதலாவதாக: திருமணத்தின் புனிதத் தன்மையில் அவர்களுக்கு உறுதியான நம்பிக்கையிருந்தாலும்—''ஒவ்வொரு மனிதனும் ஒரு மனைவியோடு திருப்தியடைந்திருந்தான்; கற்பு என்னும் அரண் சூழப் பெண் வாழ்ந்திருந்தாள்''—அந்தஸ்துள்ள ஆண்களுக்கும், குலத் தலைவர்களுக்கும் பலதார மணம் இருந்தது; இந்த நிலைமை இணை மணமுறை கொண்

டிருந்த அமெரிக்கர்களின் நிலைமையை ஒத்திருந்தது. இரண்டாவதாக, தாயுரிமையிலிருந்து தந்தையுரிமைக்குக் கொஞ்ச காலத்துக்கு முன்புதான் மாறிச் சென்றிருக்கமுடியும்; காரணம், தாயின் சகோதரன் —தாயுரிமைப்படி கணத்தில் அதி நெருங்கிய ஆண் உறவினன் அவனே—சொந்தத் தகப்பனைவிட நெருங்கிய உறவினனாக அநேகமாக இன்னமும் கருதப்பட்டான்; இதுவும் அமெரிக்க இந்தியர்களின் கருத்துடன் பொருந்துகிறது; மார்க்ஸ் அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தபடி, அமெரிக்க இந்தியர்களிடையேதான் நமது ஏடறிந்த வரலாற்றுக்கு முந்திய இறந்த காலத்தைப் புரிந்துகொள்வதற்குரிய திறவுகோல் கிடைத்தது. மூன்றாவதாக, ஜெர்மானியர்களிடையே பெண்கள் உயர்வாக மதிக்கப்பெற்றார்கள், பொது விவகாரங்களிலும் செல்வாக்குப் பெற்றிருந்தார்கள்; இவை ஆண்களின் ஆதிக்கம் ஆகிய ஒருதார மண லட்சணத்திற்கு நேரடி முரண்பாடாகும். இந்த அம்சங்களில் எல்லாம் ஸ்பார்டா மக்களோடு ஜெர்மானியர்கள் ஒத்துப் போகிறார்கள்; ஸ்பார்டா மக்களிடையேயும், அதேபோல் இணை மணமுறை முழுவதாக மறைந்தொழியவில்லை என்பதை ஏற்கனவே நாம் பார்த்தோம். ஆக, இது சம்பந்தமாகவும், ஜெர்மானியர்கள் வெளிப்பட்டபிறகு ஒரு புத்தம் புதிய அம்சம் உலகாதிக்கம் பெற்றது. ரோமானிய உலகின் அழிவுக் குவியலின்மேல் இனங்கள் கலந்ததிலிருந்து உதித்த புதிய ஒருதார மண முறை ஆணின் ஆதிக்கத்தை, மென்மையான வடிவங்களைக் கொண்டு போர்த்து, குறைந்தபட்சமாக வெளிவேஷத்துக்

காயினும் சாஸ்திரீய பண்டைக்காலம் அறிந்திருந்ததைவிட எவ்வளவோ சுதந்திரமான, மதிப்புள்ள ஸ்தானத்தை வகிக்க அனுமதித்தது. முதல் தடவையாக, பெரிதினும் பெரிய தார்மீக முன்னேற்றத்துக்குவேண்டிய சாத்தியப்பாட்டைச் சிருஷ்டித்தது; இதை ஒருதார மணத்திலிருந்து தான் நாம் பெறுகிறோம், அதற்கு நாம் ஒருதார மணத்திற்குத்தான் கடமைப்பட்டுள்ளோம்; இந்த வளர்ச்சி அந்தந்தச் சந்தர்ப்பத்தைப் பொறுத்து அந்த மணமுறைக்குள்ளேயோ, அல்லது அதற்குச் சமதூரமாகவோ, அல்லது அதற்கு எதிராகவோ நிகழ்ந்து கொண்டிருக்கலாம்; இந்த வளர்ச்சிதான், நவீனகாலத்திய தனிப்பட்ட காதல் என்பது; முன்பு உலகெங்குமே அறியப்படாதிருந்த விஷயம் இது.

இருந்தாலும், ஜெர்மானியர்கள் இணைக் குடும்பத்தில் இன்னமும் வாழ்ந்துவந்தார்கள், அதோடு கூடுமானவரைக்கும் அவர்கள் அதற்குப் பொருத்தமாகவிருந்த பெண் நிலையை ஒருதார மணத்துடன் ஒட்டவைத்துவிட்டார்கள் என்ற சூழ்நிலையிலிருந்து தான் இந்த முன்னேற்றம் திட்டமாக எழுந்தது. ஜெர்மானியர்களின் கட்டுக்கதையான, அதிசயமான தார்மீகத் தூய்மையுள்ள மனப்போக்கின் விளைவாக அது எழவேயில்லை; ஒருதார மணம் வெளிப்படுத்திய கண்ணையுறுத்தும்படியான அதே தார்மீக விரோதங்களை இணைக் குடும்பம் நடைமுறையில் வெளிப்படுத்தவில்லை என்பதோடு அவர்களின் தூய்மையுள்ள மனப்போக்கு நின்றுவிடுகிறது. இதற்கு மாறாக, ஜெர்மானியர்கள் குடிபெயர்ந்து போனதில், குறிப்பாகத் தென் கிழக்கில் கருங்கடலோரமாயுள்ள

சமவெளிகளிலுள்ள நாடோடிகளை நோக்கிப் போனதில், தார்மீகத் துறையில் மிகவும் இழிந்து போனார்கள்; குதிரைச் சவாரிக் கலை ஒன்று போக, மற்றபடி அவர்களிடமிருந்து மோசமான, இயற்கைக்கு விரோதமான கெட்ட பழக்கங்களைக் கற்றுக்கொண்டார்கள்; டாய்பால்களைப்பற்றி ஆமியானஸூம், ஹெருல்களைப் பற்றி புரோகோபியஸூம் கூறியுள்ளதில் வெளிப்படையாக இதற்குச் சான்றளித்துள்ளனர்.

நாமறிந்தவற்றுள் ஒருதார மணமுறை என்ற ஒரே குடும்ப வடிவத்திலிருந்துதான் நவீனகாலத்துக் காதல் வளர்ந்திருக்கமுடியும் என்றாலும்—இந்தக் காதல் அதற்குள் மட்டுந்தான், ஏன், மிகப் பெரும்பாலும் அதற்குள்ளே மட்டுந்தான்—கணவன் மனைவியின் பரஸ்பரக் காதலாக வளர்ந்தது என்று கொள்ளக் கூடாது. ஆணின் ஆதிக்கத்தின் கீழுள்ள உறுதியான ஒருதார மணத்தின் தன்மை முழுவதுமே இதை அனுமதிக்கிறதில்லை. சரித்திர ரீதியிலே செயலாற்றுகிற எல்லா வர்க்கங்களிடையேயும், அதாவது எல்லா ஆளும் வர்க்கங்களிடையேயும், திருமணம் என்பது இணை மண முறைக் காலத்திலிருந்து பெற்றோர்கள் ஏற்பாடு செய்து வைத்த சௌகரியத்திற்கான திருமணமாகவேதான் இருந்துவந்தது. மேலும், வரலாற்று ரீதியிலே ஒரு மனவெழுச்சியாக, (குறைந்தபட்சம் ஆளும் வர்க்கங்களைச் சேர்ந்த) எந்த ஒரு நபரும் ஈடுபட உரிமை பெற்றிருந்த ஒரு மனவெழுச்சியாக, காதல் பெற்றிருந்த முதல் வடிவம், மோக ஆவேசத்தின்—காதலின் குறிப்பான குணம்சம் இதுதான்—உன்னதமான வடிவமாகக் காதல் பெற்றிருந்த முதல் வடிவம், மத்தியகாலத்தைச் சேர்ந்த வீரதர்

மத்தின் பாற்பட்ட காதலின் முதல் வடிவம், கணவன் மனைவியின் காதல் அல்ல. அதற்குப்பதிலாக, அதன் சாஸ்திரீய வடிவத்தில், புரோவான்ஸ் மக்களிடையே, அது நேராக முழு வேகத்துடன் பிறன் மனைவியைக் கூடுவதை நோக்கிப் போகிறது; அதன் அருமைபெருமைகளைப்பற்றி அவர்களின் கவிஞர்கள் பாடிவைத்திருந்திருக்கிறார்கள். 'ஆல்பாக்கள்' என்று சொல்லப்படுபவை, ஜெர்மன் மொழியில் அருணோதய கீதங்கள் [Tagelieder] எனப்படுபவை, புரோவான்ஸின் காதல் கவிதைகளிலேயே தலைசிறந்த கவிதைகளாம். போர்வீரன் எப்படித் தனது காதலியுடன் — இன்னொருவனின் மனைவியுடன் — படுத்திருக்கிறானென்றும், காவல்காரன் எப்படி வெளியே காவல் காத்து நிற்கிறான் என்றும், அருணோதயத்தின் (alba) முதற்கிரணங்கள் வெளித் தெரிந்ததும் யாருக்கும் தெரியாமல் அப்போர்வீரன் தப்பிவிடக் காவற்காரன் அவனை எப்படி அழைக்கிறான் என்றும் அந்தக் கவிதைகள் வர்ணிக்கின்றன. காதலன் பிரியும் காட்சி கவிதையின் உச்ச நிலையாக அமைந்திருக்கிறது. வடக்கு பிரெஞ்சுக்காரர்களும் சரி, மதிப்புக்குரிய ஜெர்மானியர்களும் சரி, ஒன்றுபோல இந்தக் கவிதைப் பாணியை மேற்கொண்டனர், அத்தோடு அதற்குப் பொருத்தமாயிருந்த வீரதர்ம வகைப்பட்ட காதலின் நடத்தைமுறைகளையும் மேற்கொண்டனர்; மேலும் இதே கருத்துக்குறிப்புள்ள விஷயத்தைப் பற்றி நமது பழைய வோல்ப்ராம் வான் எஷென்பாஹ் நம்மிடையே மூன்று மிக அழகிய அருணோதய கீதங்களை விட்டுச் சென்றுள்ளார்;

அவரது மூன்று நீளமான வீரச்சுவைக் கவிதைகளை விட இவை எனக்கு மேலாகப் படுகின்றன.

நம் காலத்திய பூர்ஷ்வாத் திருமணம் இரு வகைப்பட்டது. கத்தோலிக்க நாடுகளில், அதுவரை நடந்ததுபோலவே, பெற்றோர்கள் தமது பூர்ஷ்வா மகனுக்குத் தகுந்த மனைவியைக் கட்டிவைக்கிறார்கள். அதன் இயற்கையான விளைவு இதுதான்: ஒரு தார மணத்திலுள்ள முரண்பாடு முழு மலர்ச்சி பெற்றுவிடுகிறது—கணவன் தரப்பில் செழித்தோங்கும் பொது மகளிர் முறை, மனைவி தரப்பில் செழித்தோங்கும் சோரநாயக முறை. மரணத்துக்குப் பரிகாரம் எதுவும் இல்லை என்பதுபோலவே சோரநாயகமுறைக்கும் பரிகாரம் எதுவும் இல்லை என்ற ஒரே காரணத்திற்காகத்தான் கத்தோலிக்க சர்ச்சு மணரத்துரிமையை ஒழித்தது என்பதில் சந்தேகமில்லை. இன்னொரு பக்கத்தில், புராடஸ்டென்ட் நாடுகளில், பூர்ஷ்வா மகன் தனது வர்க்கத்துக்குள்ளிருந்தே ஏறத்தாழ சுதந்திரமாகவே மனைவியைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள அனுமதிக்கப்படுகிறான் என்பதே விதி. இதன் விளைவாக, ஓரளவுக்குக் காதலின் அடிப்படையில் திருமணம் இருக்கமுடியும்; ஒழுக்கவளமுறையையொட்டி, புராடஸ்டென்ட் ஆஷாடபூதித் தனத்துக்கு ஏற்ப, காதல் இருப்பதாகவே எப்பொழுதும் கற்பித்துக் கொள்ளப்படுகிறது. இதில், ஆண்கள் பொது மகளிர் முறையில் தீவிரமாக இறங்குவதில்லை, சோரநாயகமுறையில் பெண் ஈடுபடுவது என்பதும் அவ்வளவுக்கு விதியாயில்லை. இருந்தபோதிலும், ஒவ்வொரு மணவகையிலும் மக்கள் மணம் புரிவதற்கு முன்பிருந்த நிலையிலேயே இருப்பதினாலும்,

புராடஸ்டென்ட் நாடுகளின் பிரஜைகள் பெரும்பாலும் பிலிஸ்டைன்களாக இருப்பதினாலும் இந்த புராடஸ்டென்ட் ஒருதார மணம் என்பது—தலை சிறந்த உதாரணங்களிலிருந்து சராசரியை வைத்துக் கொண்டு பார்த்தால்—சலிப்புமிகுந்த மணவாழ்க்கைக்கே கொண்டுசெல்கிறது; இதைத்தான் இல்லற இன்பம் என்று வர்ணிக்கிறார்கள். திருமணத்தின் இவ்விருவகைகளைச் சிறக்கப் பிரதிபலிப்பது நாவல் தான்—கத்தோலிக்க நடைக்குப் பிரெஞ்சு நாவல், புராடஸ்டென்ட் நடைக்கு ஜெர்மன் நாவல். இரண்டுவகைகளிலும் ஆணுக்குக் ''கிடைக்கிறது''; ஜெர்மன் நாவலில் இளைஞனுக்குப் பெண் கிடைக்கிறாள்; பிரெஞ்சு நாவலில் மனைவியால் வஞ்சிக்கப்பட்டவன் என்கிற பட்டம் கணவனுக்குக் கிடைக்கிறது. இருவரில் யாருடைய நிலைமை அதிக மோசமானது என்று கண்டுகொள்வது எப்போதும் சுலபமில்லை. ஏனெனில் பிரெஞ்சு பூர்ஷ்வாவுக்கு, ஜெர்மன் நாவலின் விறுவிறுப்பற்ற தன்மையைக் கண்டாலே, பீதி உண்டாகிறது; ஜெர்மானிய பிலிஸ்டைனுக்கோ பிரெஞ்சு நாவலின் ''ஒழுக்கக்கேட்டை''க் கண்டால் அதேபோல் பீதி உண்டாகிறது. இருந்தாலும், ''பெர்லின் உலக நகராகிக் கொண்டிருக்கிறது'' அல்லவா? எனவே, இப்பொழுதெல்லாம் ஜெர்மன் நாவல்கள் கொஞ்சம் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு பொது மகளிர் முறை பற்றியும் சோர நாயகமுறை பற்றியும் எழுதத் தொடங்கியுள்ளன; அங்கே அவை இருப்பது ரொம்ப காலமாகத் தெரிந்த விஷயமே.

இருந்தாலும், இவ்விரு உதாரணங்களிலும்

சம்பந்தப்பட்டவர்களின் வர்க்க நிலைதான் திருமணத்தை நிர்ணயிக்கிறது, அந்த அளவுக்கு அது, சௌகரியத்துக்காகச் செய்யப்பட்ட திருமணமாகவே என்றும் இருந்துவிடுகிறது. இவ்விரு உதாரணங்களிலும், இந்தச் சௌகரியத் திருமணம் அடிக்கடி படுமோசமான விபசாரமாக ஆகிவிடுகிறது—சில சமயங்களில் கணவன் மனைவி இரு தரப்பிலும் நடக்கும்; ஆனால் மனைவி தரப்பில்தான் அதிகம் இது; அவளுக்கும் சாதாரண விலைமகளுக்கும் இருக்கும் வித்தியாசமெல்லாம் ஒரு கூலிக்காரி போல் அவள் வேலைக்கூலிக்காகத் தனது உடலை விற்பதற்குப் பதிலாக நிரந்தரமாக அடிமைத்தனத்துக்குத் தன் உடலை விற்றுவிடுகிறாள் என்பதுதான். சௌகரியத் திருமணங்கள் எல்லாவற்றிற்கும் பூரியேயின் பின்வரும் சொற்கள் பொருத்தமானவை: ''இலக்கணத்தில் இரண்டு எதிர்மறைகள் உடன்பாட்டுப் பொருள் ஆவது போல், திருமண ஒழுக்கங்களில் இரண்டு விபசாரங்கள் ஒரு நன்னெறியாக ஆகின்றன''. ஒடுக்கப்பட்ட வர்க்கங்களிடையே தான், அதாவது தற்காலத்தில் பாட்டாளி வர்க்கத்திடையேதான், கணவன் மனைவி உறவுக்கிடையே காதல் என்பது விதியாக ஆகமுடியும்; இந்த உறவு அதிகார பூர்வமாக அனுமதிக்கப்பட்டதா இல்லையா என்பதுபற்றி அக்கறையில்லை. ஆனால் இங்கே சாஸ்திரீய ஒருதார மணத்திற்குரிய எல்லா அடிப்படைகளும் நீக்கப்படுகின்றன. இங்கே, சொத்து அறவே கிடையாது; இந்தச் சொத்தைப் பாதுகாத்து வாரிசிடம் விட்டுச் செல்வதற்காகத்தான் ஒருதார மணமுறையும் ஆண் ஆதிக்கமும் நிலை நிறுத்தப்பட்டன. ஆக

வே, இங்கே ஆண் ஆதிக்கத்தை வலியுறுத்திக் காட்டத் தூண்டுகோல் எதுவும் கிடையாது. இன்னும் மேலாக, அதற்கு வழிவகைகளும் கிடையா; இந்த ஆண் ஆதிக்கத்தைப் பாதுகாப்பது பூர்ஷ்வாச் சட்டமே; அந்தச் சட்டம் உடைமை வர்க்கங்களுக்குத்தான், பாட்டாளி வர்க்கங்களோடு அவை வைத்துக் கொண்டுள்ள உறவுகளுக்குத்தான், இருக்கின்றது. அதற்குப் பணமும் செலவழியும்; எனவே, தொழிலாளியின் வறுமையின் காரணமாக, மனைவியால் அவன் கொள்ளும் மனப்பான்மையில் இந்தச் சட்டத்துக்கு முக்கியத்துவம் இல்லை. இங்கே, முற்றிலும் வேறான தனிப்பட்ட உறவுகளும் சமுதாய உறவுகளும் நிர்ணயமான காரணப் பொருட்களாயுள்ளன. மேலும், பெருமளவுத் தொழில்முறை வீட்டிலிருந்து உழைப்புச் சந்தைக்கும் தொழிற் கூடத்துக்கும் பெண்களை மாற்றியனுப்பி விட்டிருப்பதாலும், அது குடும்பத்தின் சோற்றுக்கு வழி தேடுபவளாக அவளை அடிக்கடி ஆக்குகிறதாலும், பாட்டாளி வீட்டில் ஆணின் ஆதிக்கத்துக்குரிய கடைசி மீத மிச்சங்களும் கூட அறவே ஆதாரம் அற்றுப் போயின— ஒருதார மணமுறை ஸ்தாபிதமானபிறகு உறுதியாக வேர்விட்டுப் போன, பெண்ணை மிருகத்தனமாக நடத்தும்போக்கு இருக்கிறதே, அது மட்டும் ஒருவேளை இங்கும் கொஞ்சம் இருக்கலாம். எனவே, பாட்டாளிக் குடும்பம், அதன் கறாரான அர்த்தத்தில் ஒருதார மணவகைப்பட்டதல்ல—அதிதீவிரக் காதல் இருந்தாலும், பரஸ்பர தாம்பத்திய விசுவாசம் இருந்தாலும் சரி, எல்லா மத அல்லது லௌகீக ஆசிகள் பெற்றிருந்தாலும் சரி. எனவே, ஒருதார

மணமுறையோடு நிரந்தரமாக ஒட்டிக் கொண்டிருக்கிற தொங்குசதைகளான பொது மகளிர் முறையும் சோரநாயகமுறையும் இங்கே அற்பப் பாத்திரம் தான் வகிக்கின்றன. திருமணத்தை ரத்து செய்யும் உரிமையைப் பெண் நடைமுறையில் திரும்பப் பெற்றுவிட்டாள்; கணவனும் மனைவியும் இணைந்து வாழ முடியவில்லை யென்றால் இருவரும் பிரியவே விரும்புகிறார்கள். சுருங்கச் சொன்னால், சொல்லிலக்கணத்தின் அர்த்தப்படி தான் பாட்டாளித் திருமணம் ஒருதார மணமாகுமேயொழிய அந்தச் சொல்லின் வரலாற்றிற்குரிய அர்த்தத்தில் ஆகாது.

சட்டங்கள் முன்னேற முன்னேறப் பெண் புகார் செய்வதற்கான எல்லாக் காரணங்களையும் மேலும் மேலும் நீக்கிவிடுகின்றன என்று நிச்சயமாக நமது சட்ட நிபுணர்கள் சாதிக்கிறார்கள். நவீன காலத்திய நாகரிகச் சட்ட அமைப்புகள் இரண்டு விஷயங்களை மேலும் மேலும் அங்கீகரித்துவருகின்றன: முதலாவது, திருமணம் செயல்பாடுள்ளதாயிருக்க வேண்டுமென்றால் இரு தரப்பாரும் சுயேச்சையாக மனமொப்பிச் செய்துகொண்ட ஒப்பந்தமாக அது இருக்கவேண்டும்; இரண்டாவது, மண வாழ்க்கையில் உரிமைகள், கடமைகள் விஷயத்தில் இரு தரப்பினரும் சம நிலையில் இருக்கவேண்டும். இருந்தாலும், இவ்விரு கோரிக்கைகளும் முரணின்றிச் செயல்படுத்தப் படுமேயானால் பெண்ணுக்கு வேண்டியதெல்லாம் கிடைத்து விட்டதாகத் தான் இருக்கும்.

இது வக்கீல் வாதமே; இதே போன்ற வக்கீல் வாதத்தைக் கொண்டுதான் தீவிரக் குடியரசுப்போக்

குள்ள பூர்ஷ்வாவும் பாட்டாளியை நிராகரிக்கிறன். உழைப்பு ஒப்பந்தம் என்பதும் இரு தரப்பாரும் சுயேச்சையாக மனமொப்பிச் செய்து கொண்ட ஒப்பந்தமாகத் தான் சொல்லப்படுகிறது. ஆனல் சட்டம் அவ்விரு தரப்பினரையும் **ஏட்டளவில்** சம நிலையில் வைத்தவுடனேதான் அது சுயேச்சையாகச் செய்து கொண்ட ஒப்பந்தமாகக் கருதப்படுகிறது. தனது வர்க்க நிலையால் ஒரு தரப்புக்குக் கொடுக்கப் பட்டுள்ள அதிகாரம், அது இன்னொரு தரப்பின்மீது நிர்ப்பந்தம் கொண்டுவருவது, இரு தரப்பினரின் உண்மையான பொருளாதார நிலைமை—இவற்றைப் பற்றியெல்லாம் சட்டத்துக்கு அக்கறையே யில்லை. மேலும், அந்த உழைப்பு ஒப்பந்தம் முடியும்வரை இரு தரப்பினருக்கும் சம உரிமைகள்—ஏதாவது ஒரு தரப்பு வெளிப்படையாக அவற்றை வற் புறுத்தாது தள்ளிவைத்தாலொழிய—இருப்பதாகச் சொல்லப்படுகிறது. பொருளாதார நிலைமை சம உரிமைகளின் மங்கிய நிழலைக்கூடக் கைவிடும்படி தொழிலாளியைக் கட்டாயப்படுத்துகின்றதே — இல்லை, இதைப்பற்றியும் சட்டம் ஒன்றும் செய் வதற்கில்லை.

திருமணத்தைப் பொறுத்தமட்டில், மணக்க விரும்புவதாக இரு தரப்பினரும் சுயேச்சையாகத் தமது விருப்பத்தைப் பதிவு செய்தவுடனே மிக மிக முற்போக்கான சட்டம் கூட பூர்ணமாகத் திருப்தியடைந்து விடுகிறது. சட்டத் திரைகளின் பின் என்ன நடக்கிறது—அங்கேதானே யதார்த்த வாழ்க்கை நடத்திக்காட்டப்படுகிறது, இந்தச் சுயேச் சையான ஒப்பந்தத்துக்கு எப்படி வந்தார்கள் ஆகிய

வற்றைப் பற்றிச் சட்டத்துக்கோ, சட்ட நிபுணர்களுக்கோ ஒரு கவலையும் இல்லை. ஆனபோதிலும், இந்தச் சுயேச்சையான ஒப்பந்தம் நிஜத்திலே என்னவாக ஆகிறது என்பது பல்வேறு நாடுகளின் சட்டங்களை மிக மிகச் சாதாரணமாக ஒப்புநோக்கினாலே சட்ட நிபுணனுக்குத் தெரிய உதவியாயிருக்கும். பெற்றோர்களின் சொத்தில் உரிமைப்படி பங்கு கிடைக்கும் படி குழந்தைகளுக்குச் சட்டத்தால் உத்தரவாதம் செய்யப்பட்டு, வாரிசுரிமை ரத்துக்கு இடமில்லாதபடி செய்யப்பட்டுள்ள நாடுகளில் — ஜெர்மனி, பிரெஞ்சுச் சட்டத்தின் கீழ் உள்ள நாடுகள் முதலியவற்றில் — கல்யாண விஷயத்தில் பெற்றோர்களின் ஒப்புதலைக் குழந்தைகள் பெற்றுத் தீரவேண்டும். ஆங்கிலேயச் சட்டத்தின்கீழ் உள்ள நாடுகளில் — இங்கே திருமணத்துக்குப் பெற்றோர்களின் ஒப்புதல் சட்டப்படி கோரப்படவில்லை— பெற்றோர்கள் தமது சொத்தை யாருக்கு எழுதிவைக்கலாம், எழுதிவைக்கக் கூடாது என்பதில் பூர்ண சுதந்திரம் பெற்றிருக்கிறார்கள், அவர்கள் விரும்பினால் தம் குழந்தைகளுக்கு ஒரு தம்படி கூடக் கொடுக்காமல் இருந்து விடலாம். எனவே, அப்படி இருந்தபோதிலும், அல்லது இன்னும் சரியாகச் சொல்வதென்றால் இப்படி இருப்பதினால் தான், பிதுரார்ஜிதமாகப் பெறக்கூடிய சொத்துள்ள வர்க்கங்களிடையே திருமண சுதந்திரம் என்பது பிரான்ஸ், ஜெர்மனியைவிடக் கடுகளவேனும் அதிகமாக பிரிட்டனிலோ, அமெரிக்காவிலோ இல்லை.

மண வாழ்க்கையில் ஆணுக்கும் பெண்ணுக்கும் சட்டவகையில் சமநிலை விஷயத்திலும் அப்படி

யேதான். சட்டத்தின்முன் இருவரும் சமமற்ற நிலையில் இருக்கிறார்கள்; இது, முந்திய சமுதாய நிலைமைகள் விட்டுச்சென்ற சம்பத்தாகும்; இந்தச் சமமற்ற நிலை பெண்களைப் பொருளாதார வகையில் ஒடுக்குவதிலிருந்து பெறும் விளைவுதானே தவிர அதற்கு அது காரணமல்ல. பற்பல தம்பதிகளையும் அவர்களின் குழந்தைகளையும் கொண்டிருந்த பழைய பொதுவுடைமைவகைப்பட்ட குடும்பச் சமூகத்தில் பெண்களிடம் விடப்பட்டிருந்த வீட்டுக் குடும்ப நிர்வாகமும், ஆண் உணவு தேடித் தருவது எவ்வளவு பொதுவகைப்பட்ட, சமுதாயரீதியிலே அவசியமான தொழிலாக இருந்ததோ, அதே போலத்தான் பொதுவான சமுதாய ரீதியிலே அவசியமான தொழிலாக இருந்தது. தந்தைவழிக் குடும்பத்தில் இந்த நிலைமை மாறிவிட்டது; ஒருதார மணவகைப்பட்ட தனிப்பட்ட குடும்பத்தில் இன்னும் அதிகமாகவே மாறிவிட்டது. வீட்டு நிர்வாகம் தனது பொதுத் தன்மையை இழந்தது. அது சமுதாயத்தின் கவலைக்குரிய விவகாரம் அல்ல. **தனிப்பட்ட தொண்டு** ஆகிவிட்டது அது. மனைவியே முதல் வீட்டு வேலைக்காரி ஆகிவிட்டாள்; சமுதாய உற்பத்தியிலிருந்து அவள் வெளியே தள்ளப்பட்டாள். நவீனகாலத்தியப் பெருமளவுத் தொழில்முறை ஒன்றுதான் அவளுக்கு—அதிலும் பாட்டாளி வர்க்கப் பெண்ணுக்கு மட்டுந்தான்— சமுதாய உற்பத்தியிலிறங்க வழி திறந்து விட்டது. ஆனால், எந்த விதத்தில் என்று பார்த்தால் குடும்பத்தின் தனிப்பட்ட தொண்டில் அவள் தன் கடமைகளையெல்லாம் முடிக்கிறபோது பொது உற்பத்தியிலிருந்து விலக்கப்பட்டு எதுவும்

சம்பாதிக்க முடியாதவளாகிருள். பொதுத் தொழி லில் பங்கு கொண்டு சுயேச்சையாகச் சம்பாதித்து வாழ அவள் விரும்பும் போது தனது குடும்பக் கடமைகளை நிறைவேற்ற முடிகிற நிலைமையில் இருக் கிறதில்லை. தொழிற் கூடத்தில் இருக்கிற பெண்ணுக்கு ஆனதுதான் வைத்தியம், சட்டம் உட்பட எல்லா வேலைகளிலும் உள்ள பெண்ணுக்கும். பகிரங்கமாக வோ மறைவாகவோ உள்ள வீட்டு அடிமைத்தனத் தின் அடிப்படையில்தான் நவீனகாலத் தனிப்பட்ட குடும்பம் இருக்கிறது; இந்த நவீனகாலச் சமுதாயம் என்பதும் தனிப்பட்ட குடும்பங்களைத் தனது மூலக் கூறுகளாகக் கொண்டிருக்கிற ஒரு பொருள்தொகை யே. இன்றைய நாளில், மிகப் பெரும்பாலான சமயங்களில், ஆண்தான் சம்பாதிக்கிறவனுக, சோற் றுக்கு வழிவைக்கிறவனுக இருக்க வேண்டியிருக் கிறது; குறைந்தபட்சம் சொத்துள்ள வர்க்கங்களில் இப்படித்தான்; இது அவனுக்கு ஆதிக்க நிலையைத் தருகிறது; அதற்கொன்றும் விசேஷமான சட்ட வகைச் சலுகையுரிமைகள் வேண்டியதில்லை. குடும் பத்தில் அவன்தான் பூர்ஷ்வா; மனைவி பாட்டாளி வர்க்கமாக இருக்கிருள். என்ருலும், தொழில் துறை உலகில், முதலாளி வர்க்கத்தின் விசேஷமான சட்டவகைச் சலுகையுரிமைகள் எல்லாம் ஒருபுறம் ஒதுக்கப்பட்டு இரண்டு வர்க்கங்களின் சட்டவகைச் சமநிலை ஸ்தாபிக்கப்பட்டபின்புதான் பாட்டாளி வர்க்கத்தை அழுத்திக் கொண்டிருக்கிற பொருளா தார ஒடுக்குமுறையின் குறிப்பான தன்மை மிகக் கூர்மையாக வெளித்தெரிகிறது. இரண்டு வர்க்கங் களிடையேயுள்ள விரோதத்தை ஜனநாயகக் குடி

யரசு ஒழிக்கிறதில்லை. மாறாக, அதைச் சண்டையிட்டுத் தீர்த்துக்கொள்வதற்குக் களம்தான் அமைத்துக் கொடுக்கிறது. அதே போலத்தான், நவீனக் குடும்பத்தில் பெண்மீது ஆணுக்குள்ள ஆதிக்கத்தின் அலாதித்தன்மையும், அவர்களிடையே உண்மையான சமுதாயச் சமத்துவம் நிறுவுவதற்கான அவசியமும், வழிமுறையும், அவ்விருவரும் சட்டத்தின்முன் பூர்ணமாகச் சமநிலையில் இருக்கும் போதுதான், முழு உருவத்தில் வெளிக்காட்டப்படும். பெண்ணினம் முழுவதையும் பொதுத் தொழில் துறையில் மீண்டும் புகுத்துவதுதான் பெண்களின் விடுதலைக்குரிய முதல் நிபந்தனை என்பது அப்பொழுதுதான் தெளிவாகும்; இது, சமுதாயத்தின் பொருளாதார மூலக்கூறு என்ற தன்மையைத் தனிமைப்பட்ட குடும்பம் பெற்றிருக்கிறதே, அந்தத் தன்மையை ஒழித்துத்தீரவேண்டும் என்று கோருகிறது என்பதும் தெளிவாகும்.

* * *

ஆக, முக்கியமான மூன்று மண வடிவங்கள் உள்ளன; பெரும்பாலும், அவை மூன்றும் மூன்று முக்கியமான சமுத்தாய வளர்ச்சிக் கட்டங்களுடன் பொருந்தியிருக்கின்றன. காட்டுமிராண்டி நிலைக்கு—குழு மணம்; அநாகரிக நிலைக்கு—இணை மணம்; நாகரிக நிலைக்கு—ஒருதார மணம், இதன் துணைப் பொருளாய்ச் சோரநாயக முறையும், விபசாரமும். அநாகரிக நிலையின் தலைக்கட்டத்தில், இணை மணத்துக்கும் ஒருதார மணத்துக்கும் நடுவே, பெண்ணடிமை

கள்மீது ஆண்கள் ஆதிக்கம் செலுத்துவதும், பல தார மணமும் செருகப்பட்டுள்ளன.

நமது விளக்கவுரை முழுவதும் காட்டியிருக்கிறபடி, இந்தத் தொடரில் குறிக்கவேண்டிய முன்னேற்றம், குழு மணத்திலுள்ள புணர்ச்சிச் சுதந்திரம் பெண்களிடமிருந்து மேலும் மேலும் பறிக்கப்படுகிறதே தவிர ஆண்களிடமிருந்து பறிக்கப்படுவதில்லை என்ற அலாதி உண்மையோடு இணைக்கப்பட்டுள்ளது. யதார்த்தத்தில், ஆண்கள் விஷயத்தில் குழு மணம் இன்றைய வரைக்கும் இருந்துதான் வருகிறது. பெண்ணுக்கு, சட்டரீதியிலும் சமுதாய ரீதியிலும் கொடிய விளைவுகளை உண்டாக்கத்தக்க அதே குற்றம், ஆண் விஷயத்தில் மரியாதைக்குரியதாகக் கருதப்படுகிறது; அதிகமாகப் போனால், அவனது ஒழுக்கத்துக்கு அது ஒரு சிறிய கறை; அதை அவன் மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொள்கிறான். முதலாளித்துவ சரக்கு உற்பத்திமுறை பழைய பரம்பரைப் பொது மகளிர் முறையை நம் காலத்தில் மாற்றவும் இசைவிக்கவும் செய்யச் செய்ய அது அதிக பகிரங்கமான வேசி முறையாக மாறி வருகிறது, அதன் விளைவுகள் மேலும் மேலும் ஒழுக்கங்கெடத் தக்கவையாகிவருகின்றன. மேலும் பெண்களை விட ஆண்களைத்தான் இது அதிகமாக ஒழுக்கங்கெடச் செய்கிறது. பெண்களிடையில், விபசாரம் தன் பிடியில் சிக்கிக் கொள்ளும் துரதிர்ஷ்டக்காரிகளைத் தான் இழியச் செய்கிறது; அவர்களும், பொதுவாக நம்பப்பட்டுவருகிற அளவுக்கு அப்படியொன்றும் இழிந்துவிடவில்லை. இன்னொரு பக்கத்தில், அது ஆண் உலகம் முழுவதின் தன்மையையே கீழ்மையாக்கு

கிறது. ஆக, பத்தில் ஒன்பது சந்தர்ப்பங்களில், நிச்சயதார்த்தத்துக்கும் மணத்துக்கும் இடையே நீடிக்கிற நீண்ட காலம், நடைமுறையில் ஆணுக்கு மணவாழ்க்கையில் துரோகம் புரிவதற்குரிய தயாரிப்புப் பள்ளியாகவே இருக்கிறது.

நாம் ஒரு சமுதாயப் புரட்சியை நெருங்கிக் கொண்டிருக்கிறோம்; அதில், ஒருதார மணத்தின் இதுவரை இருந்துள்ள பொருளாதார அடிப்படைகள் அனைத்தும், ஒருதார மணத்தின் துணைப் பொருளான விபசாரத்தின் அடிப்படைகளைப் போலவே, நிச்சயமாக மறைந்து போகும். ஒரு நபரின் கையில்—ஓர் ஆணின் கையில்—கணிசமான அளவுக்குச் செல்வம் குவிந்ததிலிருந்துதான், இந்தச் செல்வத்தைப் பிற குழந்தைகளுக்கல்லாமல் தன் சொந்தக் குழந்தைகளுக்கு விட்டுச்செல்லவேண்டுமென்ற விருப்பத்திலிருந்துதான், ஒருதார மணம் தோன்றியது. இந்த நோக்கத்திற்குப் பெண் ஒருதார மணத்திலிருப்பது மிக அவசியம், ஆனால் ஆணுக்கு அப்படி அவசியமில்லை; எனவே பெண்ணுக்குரிய இந்த ஒருதார மணம் ஆண் பழகும் வெளிப்படையான அல்லது மறைவான பலதார மணத்துக்கு தடையாயிருக்கவில்லை. என்றாலும். வரவிருக்கும் சமுதாயப் புரட்சி, குறைந்தபட்சம் நிரந்தரமான மரபுரிமைச் செல்வத்தின் பெரும்பகுதியை—உற்பத்திச் சாதனங்களை—சமுதாயச் சொத்தாக மாற்றி விடுவதின் மூலம், வாரிசுமுறை பற்றிய இந்தக் கவலைகளையெல்லாம் ஒரு குறைந்தபட்சத்துக்குக் கொண்டு வந்து விடும். பொருளாதாரக் காரணங்களிலிருந்து ஒரு

தார மணம் தோன்றியதால், இந்தக் காரணங்கள் மறையும் போது அதுவும் மறைந்துவிடுமா?

இதற்கு நியாயமான விடை அளிக்கலாம்: மறைவதற்குப்பதிலாக, அது நிறைவாக நடைமுறையில் வெளிப்படுத்திக் கொள்ளத் தொடங்கும். ஏனெனில், உற்பத்திச் சாதனங்களைச் சமுதாயச் சொத்தாக்கி விட்டதோடு கூலியுழைப்பும் பாட்டாளி வர்க்கமும் மறைந்து போகின்றன; மேலும் அத்துடன், ஒரு குறிப்பிட்ட—புள்ளிவிபரப்படி கணக்கிடத்தக்க — எண்ணிக்கையிலுள்ள பெண்கள் பணத்திற்காகத் தம்மை விற்கவேண்டியிருக்கிற அவசியமும் மறைந்துவிடுகிறது. விபசாரம் மறைகிறது; ஒருதார மணம் நலிந்துபோவதற்குப் பதிலாக, இறுதியிலே ஒரு யதார்த்தமாகிறது—ஆணுக்கும் சேர்த்து.

எப்படி இருந்தபோதிலும், ஆணின் நிலைமை கணிசமாக மாறிவிடுகிறது. பெண்ணின் நிலைமையோ, எல்லாப் பெண்களின் நிலைமையோ, மிக முக்கியமான மாற்றம் பெறுகிறது. உற்பத்திச் சாதனங்கள் பொதுச் சொத்தாக மாறிவிட, தனிப்பட்ட குடும்பம் சமுதாயத்தின் பொருளாதார மூலக்கூறாக இருந்துவருவதும் நின்று போகிறது. தனிப்பட்ட வீட்டு நிர்வாகம் சமுதாயத் தொழிலாக மாற்றப்படுகிறது. குழந்தைப் பராமரிப்பு, கல்வி பொது விவகாரம் ஆகிவிடுகின்றன. எல்லாக் குழந்தைகளையும் சமுதாயம் சமமாகக் கவனித்துக் கொள்கிறது—அவர்கள் மண உறவில் பிறந்தவர்களாயினும் சரி, மண உறவுக்கு வெளியே பிறந்தவர்களாயினும் சரி. எனவே, ''விளைவுகளை''ப் பற்றிய கவலை—இதுவே தான்

காதலிக்கும் ஒருவனுக்குப் பெண் தன்னைச் சுதந்திரமாகக் கொடுத்துவிடுவதைத் தடுக்கிற தார்மீக, பொருளாதார வகைப்பட்ட அதிமுக்கியமான சமுதாய காரணப் பொருளாகும்—மறைந்துபோகும். மேலும் மேலும் தங்குதடையற்ற புணர்ச்சி படிப்படியாக மேலோங்குவதற்கு இது காரணமாக அமையாதா? அத்துடன், பெண்களின் கற்பைப்பற்றியும், வெட்கத்தைப்பற்றியும் முன்னைவிட அதிக தாட்சணியமுள்ள பொது ஜன அபிப்பிராயம் மேலோங்குவதற்கும் இது காரணமாக அமையாதா? இன்னும் கடைசியாக, நவீன உலகில் ஒருதார மணமும் விபசாரமும் எதிர்மறைகளாக இருப்பினும், அவை ஒன்றுக்கொன்று பிரிக்கமுடியாத எதிர்மறைகளாக, இதே சமுதாய நிலைமைகளிலிருந்து வரும் இரண்டு துருவங்களாக இருப்பதை நாம் பார்க்கவில்லையா? தன்னுடன் ஒருதார மணத்தையும் சாவுக் குழிக்குள் இழுத்துச் செல்லாமல் விபசாரம் மறைந்து போகமுடியுமா?

இங்கே ஒரு புதிய காரணப் பொருள் செயல்படத் தொடங்குகிறது; ஒருதார மணம் வளர்ந்த காலத்தில் அது, அதிகபட்சமாகச் சொன்னால், கரு வடிவத்தில்தான் இருந்துவந்தது; அதுதான், தனிப்பட்ட காதல்.

மத்திய காலத்துக்குமுன் தனிப்பட்ட காதல் என்று ஒன்றுமே இருக்கவில்லை. உடல் அழகு, மிக அன்னியோன்னியமாகப் பழகுதல், விருப்பங்களில் ஒருமனப்பட்ட தன்மை, முதலியவை ஆண் பெண் இடையே புணர்ச்சி வேட்கையை எழச் செய்தன, யாருடன் இந்த அதிக அன்னியோன்னியமான

உறவில் ஈடுபடுவது என்ற கேள்வியைப்பற்றி ஆணோ பெண்ணோ முழுக்கமுழுக்க அசட்டையாக இருந்த தில்லை—இவை யாவும் உள்ளங்கை நெல்லிக்கனி. இருந்தாலும், நம் காலத்திய காதலுக்கும் இதற்கும் எவ்வளவோ தூரமுண்டு. பண்டைக்காலம் நெடு கிலும், கல்யாணத்திற்குப் பெற்றோர்கள்தான் ஏற் பாடு செய்தார்கள்; இரு தரப்பாரும் பேசாமல் ஒப்பிவந்தனர். பண்டைக்காலம் அறிந்திருந்த அற் பக் கணவன் மனைவிக் காதலுங்கூட அகநிலை விருப் பமல்ல, புறநிலைக் கடமையே; திருமணத்திற்குக் காரணம் அல்ல அது; மண வாழ்க்கைக்கு அனுபந்தம் அது. பண்டைக்காலத்தில், நவீனகால அர்த்தத்தி லுள்ள காதல் விவகாரங்கள் அதிகாரப் பாங்கான சமுதாயத்துக்கு வெளியே மட்டுமே நிகழ்ந்தன. எந்த இடையர்களின் காதல் வாழ்விலுள்ள இன்ப துன்பங்களைப் பற்றித் தியோக்ரிடஸும் மோஸ்க ஸும் பாடுகிறார்களோ, அல்லது லோங்கஸ் எழுதிய ''டாப்னிஸும் குளோவும்'' என்ற காவியம் பாடு கிறதோ அந்த இடையர்கள் வெறும் அடிமைகள் தாம்; சுதந்திரப் பிரஜையின் துறையான அரசாங்க விவகாரங்களில் அவர்களுக்குப் பங்கு இல்லை; இருந்தாலும், அடிமைகளிடையில் இருப்பது நீங் கலாக, காதல் விவகாரங்கள் நலிந்துவரும் பண் டைய உலகின் சீரழிவுப் பொருட்களாகத் தான் காணப்படுகின்றன. அந்தக் காதல் விவகாரங்களும் அதிகாரப்பாங்கான சமுதாயத்துக்குவெளியே நிறுத் தப்பட்ட பெண்களோடு தான், அதாவது பொது மகளிரோடு தான், அதாவது அந்நியப் பெண் கள் அல்லது விடுவிக்கப்பட்ட பெண்களோடுதான்;

ஆதென்ஸில், அதன் நலிவு நெருங்கிவரும் கட்டத்தில் இவை நடந்தன; ரோமாபுரியில், சக்கரவர்த்திகளின் காலத்தில் இவை நடந்தன. சுதந்திரமான ஆண் பெண் பிரஜைகள் இடையிலே காதல் விவகாரங்கள் நிகழ்ந்தன என்றால் சோரநாயகமுறை வடிவத்தில்தான். நம் அர்த்தத்திலிருக்கிற காதல் என்பது பண்டைக்காலத்திய சாஸ்திரீயக் காதல் கவிஞராகிய அனக்ரியானுக்கு ஒரு பொருட்டேயல்ல; எந்த அளவுக்கு எனில், காதலிக்கப்படும் நபர் பெண்ணாகவோ ஆணாகவோ இருக்கவேண்டும் என்பது கூட அவருக்குச் சட்டை பண்ணவேண்டிய விஷயமாயிருக்கவில்லை.

நமது காதல் பண்டைக்காலத்தியவர்களின் புணர்ச்சி விருப்பம், 'Eros' எனப்படுவதோடு வெகுவாக மாறுபட்டிருக்கிறது. முதலாவதாக, இருதலைக் காமம் என்பது இதற்கு இருக்கவேண்டும்; இந்த அம்சத்தில் ஆணுக்குச் சமமாகப் பெண் இருக்கிறாள்; ஆனால் பண்டைக்காலத்திய புணர்ச்சி விருப்பம் நிலவிய போது எல்லாச் சமயங்களிலும் பெண்ணை யாரும் கேட்டுக் கொண்டிருக்கவில்லை. இரண்டாவதாக, இரு தரப்பினரும் இல்லாமையை அல்லது பிரிவைப் பெரிய—யாவற்றிலும் பெரிய என்று இல்லாவிட்டாலும்—துரதிர்ஷ்டம் என்று கருதுகிற இடத்தில் தான் காதல் தீவிரமும் நிரந்தரமும் பெற்றுவிளங்குகிறது. ஒருவரையொருவர் அடைவதற்காக அவர்கள் மாபெரும் அபாயங்களிலும் இறங்குகிறார்கள், உயிரைப் பணயம் வைக்கவும் முன்வருகிறார்கள்; அதிகமாகச் சொல்லப்போனால், பண்டைக்

காலத்தில் இது சோரக் காமத்தில் தான் நிகழ்ந்தது. கடைசியாக, புணர்ச்சியை மதிப்பிடுவதற்கு ஒரு புதிய தார்மீக அளவுகோல் கிடைக்கிறது. புணர்ச்சி சட்டபூர்வமானதா இல்லையா என்பதுமட்டுமல்ல கேள்வி; அது பரஸ்பரக் காதலிலே விளைந்ததா அல்லவா என்றும் கேள்வி கேட்கப்படுகிறது. நிலப் பிரபுத்துவ அல்லது பூர்ஷ்வா நடைமுறையில் மற்ற எல்லா தார்மீக அளவுகோல்களுக்கு ஏற்படுகிற தைவிட மேலான கதி இதற்கொன்றும் ஏற்படுகிற தில்லை—இதை அப்படியே புறக்கணித்துவிடுகிறார்கள். அதே சமயத்தில், அதன் கதி மோசமாயும் போய்விடுவதில்லை. தத்துவரீதியிலே, ஏட்டளவிலே, அது அங்கீகரிக்கப்படுகிறது — மற்றதனைத்தும் போலவே. இதற்குமேல் தற்சமயம் எதிர்பார்க்க முடியாதுதான்.

பண்டைக்காலம், காதலின் தொடக்கத்துடன், எதனோடு முடிந்ததோ அதனோடு, அதாவது விபசாரத்தோடு, மத்தியகாலம் ஆரம்பித்தது. வீரதர்மக் காதலை ஏற்கனவே நாம் வர்ணித்தோம்; அருணோதய கீதங்களை அது தோற்றுவித்தது. இவ்வகைப்பட்ட காதலின் நோக்கம் மணவாழ்க்கையை உடைத்தெறிவதே; இதற்கும், மண வாழ்க்கைக்கு அடிப்படையாக விளங்கும் கதியுள்ள காதலுக்கும் இடையே பெரும்பள்ளம் இருக்கிறது. வீரதர்ம சகாப்தம் இந்தப் பள்ளத்துக்கு முழுவதாகப் பாலம் அமைக்கவேயில்லை. கட்டுப்பாடு அற்றவர்களான லத்தீன்காரர்களை விட்டு நாம் அறப்பண்புள்ள ஜெர்மானியர்களிடம் வந்தாலும், நிபலுங்குகளைப் பற்றிய பாட்டில் பார்ப்பதென்ன? கிரீம்ஹில்ட்

என்பவள் ஸிக்ப்ரீட் தன்னைக் காதலிப்பது போல் தானும் ஒரு மாற்றுக்குக்கூடக் குறைவில்லாமல் அவனை ரகசியத்தில் காதலித்து வருகிறபோதிலும், தன்னை ஒரு போர்வீரனுக்கு மணம் முடிக்க நிச்சயம் செய்திருப்பதாக குந்தர் தெரிவித்தபோது—அந்தப் போர்வீரனின் பெயரை குந்தர் தெரிவிக்கவில்லை— அதற்குப் பதில் தரும் முறையில் வெறுமனே, ''என்னைக் கேட்கவேண்டிய தேவையில்லை; உன் கட்டளைப் படியே நான் என்றும் நடப்பேன்; பிரபுவே, எனது கணவனாக யாரைத் தாங்கள் தேர்ந்தெடுக்கிறீர்களோ, அவரையேதான் நான் மணப்பேன்'' என்று சொல்கிறாள். இந்த விஷயத்தில் தனது காதலும் கணக்கிலெடுத்துக் கொள்ளப்படலாமே என்று அவள் சிந்தனையிலேகூடப் படவேயில்லை. புரூன் ஹில்டைக் கண்ணால் பார்க்காமலேயே அவளை மணம் புரிய முயல்கிறான், குந்தர். அதே போலத் தான் எட்ஸெலும் கிரீம்ஹில்டை மணக்க முயல் கிறான். ''குட்ரூன்'' நூலிலும் இதேதான் நடக் கிறது; அதில் அயர்லாந்தின் சிகெபான்ட் நார் வீஜியக்காரி உட்டேயை மணக்கவும் ஹெகெலிங்கன் நாட்டைச் சேர்ந்த ஹெடல் அயர்லாந்தின் ஹில்தே யை மணக்கவும் முயல்கிறார்கள்; கடைசியாக மோர் லாந்து நாட்டு ஸிக்ப்ரீடும், ஒர்மானியின் ஹார்ட்மத் தும், ஸீலாந்தின் ஹெர்விக்கும், குட்ரூனை மணக்க முயல்கின்றனர்; இங்கே தான் முதல் தடவையாக, குட்ரூன் தனது சுயச்சித்தப் படி கடைசியாகக் குறிக்கப்பட்ட நபரை மணக்க முடிவு செய்கிறாள். பொது விதியாகவே, இளஞ் சிற்றரச மணமகளைப் பெற்றோர்களே தேர்ந்தெடுத்தார்கள்; பெற்றோர்

கள் இறந்துபோயிருந்தால் உயர்ந்த மானியக்காரர்களைக் கலந்து கொண்டு—எல்லா விஷயங்களிலும் அவர்களுடைய சொல்லுக்கு மதிப்பு அதிகம் உண்டு—அவன் மணமகளைத் தானே தேர்ந்தெடுத்துக் கொள்கிறான். அது வேறு விதமாயும் இருக்கமுடியாது. சிற்றரசன் விஷயம்போலவே, 'நைட்டு', பிரபு விஷயத்திலும் திருமணம் என்பது அரசியல் நடவடிக்கை; புதிய அணி உறவுகள் வழியே அதிகாரத்தைக் கூட்டிக்கொள்வதற்குரிய வாய்ப்பு அது; **வம்சத்தின்** நலன்தான்—தனி நபரின் நலன் அல்ல—நிர்ணயமான காரணப் பொருளாகும். இங்கே, திருமண விஷயத்தில் காதலுக்கு மதிப்பு கிடைக்கும் என்று நம்புவது எப்படி?

மத்தியகால நகரங்களைச் சேர்ந்த கில்ட் நபர் விஷயத்திலும் இப்படியேதான். அவனைப் பாதுகாத்த அதே சலுகையுரிமைகள், விசேஷ நிபந்தனைகளோடு கூடிய கில்ட் உரிமைப்பத்திரங்கள், பிற கில்டுகளிலிருந்தும் சக கில்டு நபர்களிடமிருந்தும், ஜெர்னிமன்களிடமிருந்தும், வேலைபழகுபவர்களிடமிருந்தும் சட்டப்படி தன்னைப் பிரித்து வைக்கும் செயற்கையான வேறுபாடு வரையறைகள்—இவையெல்லாம் தனக்குத் தகுதியுள்ள ஒரு மனைவியைக் கட்டிக் கொள்வதற்கேற்ற வட்டத்தைக் கணிசமான அளவுக்குக் குறுக்கிவிட்டிருந்தன. யார் தனக்கு மிகவும் தகுதியுள்ள மனைவி என்ற பிரச்சினையோ தனிப்பட்ட விருப்பமல்லாது, குடும்ப நலனின் அடிப்படையில் இந்தச் சிக்கலான அமைப்பின்கீழ் முடிவு செய்யப்பட்டது.

எனவே, மத்தியகாலத்தின் முடிவுவரையில்,

திருமணம் என்பது மிகப் பெரும்பாலும் தொடக்கத்திலிருந்த படியே தான் இருந்து வந்தது — அதாவது, சம்பந்தப்பட்ட இரு தரப்பினரால் அது முடிவு செய்யப் படவில்லை. தொடக்கத்தில், பிறக்கும்போதே மணந்துகொண்டுதான் ஒருவன் பிறந்தான் — தனக்கு மாறுபட்ட பாலைச் சேர்ந்த ஒரு முழுக் குழுவை மணந்து கொண்டு. குழு மணத்தின் பிந்திய வடிவங்களிலும் இதுபோன்ற உறவு அநேகமாக இருந்திருக்கும் — குழு மேலும் மேலும் அதிகமாகக் குறுக்கப்பட்டு வருகிறது என்பதோடு இருக்கும். இணை மணத்தில் குழந்தைகளின் திருமணத்துக்குப் பெற்றோர்கள் ஏற்பாடு செய்வார்கள் என்பதே விதி; இங்கேயுங்கூட, புதிய உறவு முறையின் பந்தங்கள் கணத்திலேயும் குலத்திலேயும் இளந்தம் பதிகளின் ஸ்தானத்தை வலுப்படுத்த வேண்டும் என்று யோசனைகளே நிர்ணயமான காரணப் பொருளாக உள்ளன. மேலும், பொதுச் சொத்தைவிடத் தனிச்சொத்தின் கை மேலோங்கி விட்டதுடன், வாரிசுரிமையில் அக்கறையும் தந்தையுரிமையும் ஒருதார மணமும் மேல் நிலைக்கு வந்துவிட்டதுடன், திருமணம் முன்னைவிட அதிகமாகப் பொருளாதாரக் காரணங்களைச் சார்ந்திருக்க வேண்டியதாயிற்று. விலை கொடுத்துப் பெண்ணை வாங்கும் திருமணத்தின் வடிவம் மறைகிறது, ஆனால் அந்தப் பேரம் என்னவோ, பெண் மட்டுமின்றி ஆணும் சொந்த குணங்களைக் கொண்டு மதிக்கப்படாமல் சொத்துக்களைக் கொண்டு மதிக்கப்படும் வழியிலே அதிகமாகிக் கொண்டே போகும் அளவில் நடத்திமுடிக்கப்படுகின்றது. இரு தரப்பினரின் பரஸ்

பர மன விருப்பங்கள் தான் திருமணத்துக்கு அமையக் கூடிய, யாவற்றுக்கும் மேலான காரண மாக இருக்க வேண்டும் என்ற கருத்து இருக்கிறதே, இதை ஆரம்பத்திலிருந்து ஆளும் வர்க்கங்களின் நடைமுறையில் யாரும் கேள்விப்பட்டதேயில்லை. அதிகமாகச் சொன்னால், காதல் கதைகளில் அல்லது ஒடுக்கப்பட்ட வர்க்கங்கள் மத்தியிலே மட்டுந் தான் இவை நடந்தன; ஆனால் அவர்கள் தான் கணக்கில் சேர்த்தி இல்லையே!

பூகோளக் கண்டுபிடிப்புகள் என்ற யுகத்தைத் தொடர்ந்து, உலக வியாபாரம், செய் பொருள் உற்பத்தி [manufacture] வழியாக உலகையே வெற்றி கொள்ள வெளிக்கிளம்பிய போது முதலாளித்துவ உற்பத்தி கண்டு கொண்ட நிலைமை இது தான். இவ்வகைத் திருமணம் அதற்கு மிகப் பொருத்தமா யிருந்திருக்க வேண்டும் என்று நினைக்கலாம்; ஆம், உண்மையில் அப்படித் தான் இருந்தது. இருந்தாலும் — உலக வரலாற்றின் நையாண்டி ஆழங்காணமுடியாதது—முதலாளித்துவ உற்பத்தி முறைதான் அதில் நிர்ணயமான உடைப்பை உண்டாக்கிவிட்டது. எல்லாப் பொருட்களையும் சரக்குகளாக மாற்றிவிட்டதின்மூலமாக அது எல்லாப் பண்டைக்காலப் பரம்பரை உறவுகளையும் கரைத்துவிட்டது; சுவீகரித்துக்கொண்ட பழக்கங்கள், வரலாற்று வகைப்பட்ட உரிமைகள் இருந்த இடத்தில் வாங்கி-விற்கும் பேரத்தை, ''சுதந்திரமான'' ஒப்பந்தத்தைக் கொண்டு வந்து வைத்தது. முந்திய சகாப்தங்களுடன் ஒப்பிடும்போது நாம் கண்டிருக்கும் முன்னேற்றம், சுவீகாரம் பெற்ற நிலைமைகளிலிருந்து சுயமாக

ஒப்பந்தம் செய்துகொண்ட நிலைமைகளுக்கு—"from status to contract" — பரிணமமடைந்ததில் தான் அடங்கியுள்ளது என்று ஆங்கிலேயச் சட்ட நிபுணர் எச். எஸ். மெயின் சொன்னபோது, தாம் ஏதோ பிரம்மாண்டமான கண்டுபிடிப்பைச் செய்துவிட்ட தாகவே நம்பினார்; இந்தக் கூற்று எந்த அளவுக்குச் சரியோ அந்த அளவுக்கு வெகு காலத்துக்குமுன்பே ''கம்யூனிஸ்ட் அறிக்கை''யில் அடங்கியிருந்து.

ஆனால் ஒப்பந்தங்களைச் செய்து முடிக்கவேண்டு மானால், தம்மையும் தமது செய்கைகளையும், உடைமைகளையும் சுயேச்சையாகக் கொடுக்கமுடிகிற நபர்கள், சமநிலையில் உள்ள நபர்கள், முதலில் இருந்துதீரவேண்டும். இப்படிப்பட்ட ''சுயேச்சை யான'', ''சமமான'' மனிதர்களைச் சிருஷ்டிப்பதே முதலாளித்துவ உற்பத்தியின் முக்கியக் கடமைக ளில் ஒன்றாகும். தொடக்கத்தில் இது அரை உணர் வுள்ள வகையிலே, மத வேஷத்திலே நடைபெற்றா லும், லூதர் மதச்சீர்திருத்தம், கால்வின் மதச்சீர் திருத்தம் காலத்திலிருந்து இது ஒரு கோட்பாடாக உறுதிப்பட்டது: அதாவது, செயல்களைச் செய்து கொண்டிருக்கும்போது ஒரு மனிதனுக்குப் பூர்ண மாகத் தன் சித்தத்தின்மீது பூர்ண சுதந்திரம் இருந் திருந்தால் மட்டுமே அவன் தனது செய்கைகளுக்குப் பூர்ணமாகப் பொறுப்பாளியாகிறான் என்றும், ஒழுக்கக் கேடான செய்கைகளைச் செய்யும்படி கட்டாயப்படுத் துகிற எல்லாக் கட்டாயத்தையும் எதிர்ப்பது ஒழுக் கத்தின்பாற்பட்ட ஒரு கடமையாகும் என்றும் கொள் வதே அந்தக் கோட்பாடு. ஆனால் இந்தக் கோட் பாடு, திருமணத்திலிருந்த முந்திய நடைமுறையோடு

எப்படிப் பொருந்தும்? பூர்ஷ்வாக் கருத்தோட்டங் களின்படி, திருமணம் என்பது ஓர் ஒப்பந்தம், ஒரு சட்ட விவகாரம், உண்மையிலேயே எல்லாவற்றை யும்விட அதிமுக்கியமான சட்ட விவகாரம்; ஏனெனில் இரு நபர்களின் உடலையும் உள்ளத்தையும் வாழ்க்கை பூராவுக்குமே அது முடித்துக் கொடுத்துவிடுகிறது. நிஜந்தான், சடங்கு ரீதியிலே அந்தப் பேரம் சுயேச் சையாகத்தான் முடிக்கப்பட்டது; இரு தரப்பினரின் ஒப்புதலைப் பெருமல் அது முடிக்கப்பட வில்லை; ஆனல் இந்த ஒப்புதல் எப்படிப் பெறப்பட்டது, உண்மையிலேயே திருமணத்திற்கு ஏற்பாடு செய் தவர்கள் யார் என்பது மிக நன்ருகத் தெரிந்திருக்கிற சேதிதான். ஆனல் மற்றெல்லா ஒப்பந்தங்களுக்கும் முடிவெடுப்பதற்கு உண்மையிலே சுதந்திரம் இருக்க வேண்டுமென்று கோருகிறபோது, இதற்கு மட்டும் ஏன் கோரக்கூடாது? தம்மை, தமது உடலையும் உறுப் புக்களையும் கொடுத்துவிடத் தம்பதிகளாக்கப்படப் போகிற இள நபர்களுக்குச் சுயேச்சையான உரி மையில்லையா? வீரநூர்மத்தின் ஒரு விளைவாகக் காதல் என்பது ஒரு பாஷனுகவில்லையா? பிறர் மனைவியரைக் கூடும் வகைப்பட்ட வீரர்களின் காதலுக்கு எதிராக, கணவன் மனைவியரிடையே காதல் என்பது அதன் சரியான பூர்ஷ்வா வடிவமில்லையா? ஆனல் ஒருவரை யொருவர் காதலிப்பது கணவன் மனைவியின் கட மையானல் காதலர்களும் பிறரையன்றி ஒருவரை யொருவர் மணப்பதுதானே கடமையாகும்? மேலும், பெற்ருேர்களுக்கும், உறவினர்களுக்கும், இதர சம் பிரதாயக் கல்யாணத் தரகர்களுக்கும் மணமுடிச்சுப் போடுவோருக்கும் இருக்கும் உரிமையைவிடக் காத

லர்களின் உரிமை மேலாக நிற்கவில்லையா? சுயமாக, தனிப்பட்ட முறையில் தேர்ந்தெடுப்பது என்ற உரிமை சர்ச்சுக்குள்ளும் மதத்துக்குள்ளும் ஒழுங்கு முறை பாராமல் தள்ளிக்கொண்டுவந்து புகுந்ததென்றால், இளைய தலைமுறையின் உடலையும் ஆன்மாவையும், சொத்தையும், சுகத்தையும் துக்கத்தையும் பைசல் செய்து முடித்துவிட மூத்த தலைமுறை உரிமை கொண்டாடும் இடத்துக்கு வந்தவுடன் அது ஏன் நின்றுகொள்ளவேண்டும்?

பழைய சமுதாய பந்தங்களையெல்லாம் கட்டுத் தளர்த்திச் சம்பிரதாயக் கருத்தோட்டங்களின் அடிப்படைகளையெல்லாம் குலுக்கிவிட்ட ஒரு காலப் பகுதியில் இந்தக் கேள்விகள் எழத்தான் செய்யும். ஒரேயடியில் உலகின் அளவு கிட்டத்தட்டப் பத்து மடங்கு பெரிதாகிவிட்டது. மேற்கு ஐரோப்பியர்கள் பார்ப்பதற்கு அரைக் கோளத்தின் நான்கில் ஒரு பகுதிக்குப் பதிலாக உலகம் முழுவதுமே கண்ணெதிரே திறக்கப்பட்டு இருந்தது; பூகோளத்தின் மற்றெல்லாப் பகுதிகளையும் தமதாக்கிக் கொள்ள அவர்கள் விரைந்தார்கள். நாட்டின் பழைய குறுகிய எல்லைத் தடைகள் மறைந்துவிட்ட மாதிரியே மத்திய காலத்திய, பாரம்பரை யாதிக்கம் பெற்ற கருத்துமுறை எழுப்பியிருந்த ஆயிரங்காலத்துத் தடைகளும் மறைந்தொழிந்தன. மனிதனின் புறக்கண்ணுக்கும் அகக்கண்ணுக்கும் எதிரே எல்லையில்லா விரிவுள்ள அடிவானம் விரிந்தது. கௌரவ மனோபாவத்தின் நல்ல நோக்கங்களாலும், தலைமுறை தலைமுறையாய் வந்துசேர்ந்த மதிப்பு மிக்க கில்டுச் சலுகையுரிமைகளாலும் இந்தியச் செல்வங்களால் வசீகரிக்கப்பட்

டிருக்கும் இளைஞனுக்கு, மெக்ஸிகோ, பொடோஸியின் தங்க, வெள்ளிச் சுரங்கங்களாலும் வசீகரிக்கப்பட்டுள்ள இளைஞனுக்கு என்ன லாபம்? அது பூர்ஷ்வா வர்க்கத்தின் வீரதர்மக் காலப் பகுதியாகும், அதற்கும் அதன் வீரக் காதல் அனுபவம், காதல் கனவுகள் இருந்தன — ஆனால் அவை பூர்ஷ்வா அடிப்படையில், கடைசிப் பரிசீலனையில் பார்க்கும்போது, பூர்ஷ்வாக் குறிக் கோள்களைக் கொண்டிருந்தன.

இப்படித்தான் மேலேறிவரும் பூர்ஷ்வா வர்க்கம், குறிப்பாகப் புராடெஸ்டென்ட் நாடுகளில் — நடப்பு அமைப்புக்கள் அங்கேதான் மிகவும் குறுக்கப்பட்டுவிட்டன, திருமண விஷயத்திலும் ஒப்பந்த சுதந்திரத்தை மேலும் மேலும் அங்கீகரித்து, மேலே வர்ணித்தபடி நிறைவேற்றியும் வைத்தது. திருமணம் வர்க்க வகைப்பட்ட திருமணமாகவே இருந்தது; ஆனால் அந்த வர்க்க வரம்புகளுக்குள்ளே, இரு தரப்பினருக்கும் ஓரளவுக்குத் தேர்வுச் சுதந்திரம் இருந்தது. மேலும், பரஸ்பரக் காதல், கணவன் மனைவியரின் உண்மையான சுயேச்சையுள்ள ஒப்புதல் ஆகியவற்றின் அடிப்படையில் இல்லாத ஒவ்வொரு மணமும் ஒழுக்கக்கேடானது என்று ஏட்டளவிலும், தார்மீகத் தத்துவத்திலும், கவிதா வர்ணனையிலும் அசைக்க முடியாதவாறு நிலைநிறுத்தப்பட்டது போல் வேறெதுவும் நிலைநிறுத்தப்படவில்லை. சுருங்கச் சொன்னால், காதல் மணம் ஒரு மனித உரிமை என்று பிரகடனப்படுத்தப்பட்டது; ஆணின் உரிமை மட்டுமல்ல (droit de l'homme) அதோடு, விதிவிலக்காக, பெண்ணின் உரிமையுங்கூட (droit de la femme).

ஆனுல் ஓர் அம்சத்தில் இந்த மனித உரிமை மனித உரிமைகள் எனப்பட்ட மற்றெல்லாவற்றி லிருந்தும் மாறுபட்டிருந்தது. பின்சொன்னவை நடைமுறையில் ஆளும் வர்க்கத்தோடு, பூர்ஷ்வா வர்க்கத்தோடு தங்கி நின்றுகொண்டுவிட்டபோது, ஒடுக்கப்பட்ட வர்க்கத்திடமிருந்து, பாட்டாளி வர்க்கத்திடமிருந்து, அவை நேர்முகமாகவோ மறை முகமாகவோ பறிக்கப்பட்டுவிட்டபோது, வரலாற் றின் நையாண்டி மீண்டும் இங்கே தன்னை வலியுறுத் திக் காட்டிக் கொண்டிருக்கிறது. பழக்கமான பொருளாதாரச் செல்வாக்குகள் ஆளும் வர்க்கத் தின் மீது தொடர்ந்து ஆதிக்கம் செலுத்தி வரு கின்றன; எனவே, விதிவிலக்கான சந்தர்ப் பங் களில் தான், உண்மையாகச் சுயேச்சையான திரு மணங்களைக் காட்டும் அது. ஆனுல் ஆதிக்கம் செலுத்தப்படுகிற வர்க்கங்களிடையே இவை விதி யாயுள்ளன என்று பார்த்தோம்.

ஆக, திருமணத்தில் முழு சுதந்திரம் என்பது முதலாளித்துவ உற்பத்தியையும் அது சிருஷ்டிக்கும் சொத்து உறவுகளையும் ஒழிக்கிறதின்வழியாக வாழ்க் கைத் துணையைத் தேர்ந்துகொள்வதில் இன்னும் இவ்வளவு பலமான செல்வாக்கைச் செலுத்திவரு கிற பொருளாதாரக் காரணங்களை விலக்கியபிறகு தான் பொதுவாகச் செயல்படமுடியும். அப்போது தான், பரஸ்பர அன்பு ஒன்றைத்தவிர வேறெந்தக் காரணமும் இருக்காது.

காதல் என்பது ஒருவன்பால் அல்லது ஒருத்தி யின்பால் செலுத்தப்படுவது; அது அதன் இயல்பு. என்ருலும் இன்று பெண்மட்டுமே அதைப் பூர்ண

மாக நடைமுறையில் காட்டுகிருள். எனவே, காதல் திருமணம் என்பது அதன் இயல்பிலேயே ஒருதார மணமாகத்தான் இருக்கிறது. குழு மணத்திலிருந்து தனிப்பட்ட திருமணத்துக்கு முன்னேறியது முக்கிய மாகப் பெண்கள் செய்த வேலையே என்று பாகோ பென் கருதியது எவ்வளவு சரியாயிருக்கிறது என்று பார்த்தோம். இணை மணத்திலிருந்து ஒருதார மணத் துக்கு மாறியதை மட்டுந்தான் ஆண்கள் செய்த வேலை என்று கொள்ளமுடியும்; மேலும், வரலாற்று ரீதியிலே பார்த்தால், இந்த மாற்றத்தின் சாராம் சம் பெண்களின் நிலை மேலும் இழிந்தது என்பதும் ஆண்கள் விசுவாசம் கெட்டுப்போகச் செளகரியம் கிடைத்தது என்பதுமே. வழக்கமாக ஆண்கள் விசு வாசம் கெட்டுப்போவதைப் பெண்கள் சகித்துக் கொண்டிருக்குமாறு கட்டாயப்படுத்துகிற பொரு ளாதார நோக்கங்கள்—தமது ஜீவனோபாயத்தைப் பற்றிய கவலை, அதற்கும் மேலாகத் தமது குழந் தைகளின் எதிர்காலத்தைப் பற்றிய கவலை—மறை கிறதோடு இப்படிச் சாதிக்கப்பட்ட ஆண் பெண் சமத்துவம் என்பதன் விளைவு, முந்தைய அனுபவத் தைக் கவனிக்கும் போது, பெண்கள் பலபுருஷ மண முறைக்குப் போய்விடுவதை விட ஆண்கள் உண்மையிலேயே ஒருதார மணத்திலிருக்கிறவர்க ளாக ஆவதாகவே இருக்கும்.

என்ருலும், ஒருதார மணத்திலிருந்து அதிநிச் சயமாக மறையப் போகிறவை, சொத்து உறவுகளி லிருந்து எழுந்ததின்விளைவாக அதன்மீது முத்திரை யாக விழுந்திருக்கிற எல்லா லட்சணங்களுமே. அவையாவன: முதலாவதாக, ஆணின் ஆதிக்கம்;

இரண்டாவதாக, மணத்தை ரத்து செய்யமுடியாமை. மணவாழ்க்கையில் ஆண் ஆதிக்கம் செலுத்துவது வெறுமனே அவனது பொருளாதார ஆதிக்கத்தின் விளைவேயாகும்; அது போகும் போது இதுவும் போய்விடும். மண ரத்து முடியாமை என்பது ஓரளவுக்கு ஒருதார மணம் தோன்றியெழுந்ததற்குரிய பொருளாதார நிலைமைகளுடையவும் ஓரளவுக்கு இந்தப் பொருளாதார நிலைமைகளுக்கும் ஒருதார மணத்துக்குமுள்ள சம்பந்தம் இன்னும் சரியாகப் புரிந்துகொள்ளப்படாமலும் மதத்தினால் மிகைபடக் கூறப்பட்டும் வந்த காலத்திலிருந்து வந்திருக்கிற ஒரு சம்பிரதாயத்தினுடையவும் விளைவேயாகும். இன்று அது ஆயிர மடங்குக்கு உடைப்புக் கண்டுவிட்டிருக்கிறது. காதல் திருமணங்கள்மட்டுமே ஒழுக்கமானவை என்றால் காதல் நீடித்திருக்கும் மணவாழ்க்கைகள்தான் ஒழுக்கமுள்ளவை. தனிப்பட்ட காதல் நிலவும் காலம் நபருக்கு நபர் வேறுபடுகிறது—குறிப்பாக ஆண்களிடத்தில். அந்தக் காதல் திட்டமாக அற்றுப்போவது, அல்லது இன்னொரு நபர் மீது கொள்கிற புதிய ஆர்வமிக்க காதல், பிரிந்துபோவதை அந்தத் தம்பதிகளுக்கும் சமுதாயத்துக்கும் ஒரு வரப்பிரசாதமாகச் செய்கின்றது. மண ரத்துக்குரிய காரியாதிகள் என்ற பயனற்ற சேற்றில் இறங்கி நடக்கிற அனுபவம் மக்களுக்கு நேராது.

ஆக, முதலாளித்துவ உற்பத்திமுறைக்கு வந்துகொண்டிருக்கும் அழிவுக்குப்பிறகு பால் உறவுகளைச் சீர்படுத்துவதுபற்றி நாம் ஹேஷ்யமாகச் சொல்லக் கூடியது எது நடக்காது, எது இருக்காது என்ற வகையில்தான் பெரும்பாலும் இருக்கிறது. ஆனால்

கூடுதலாக என்ன இருக்கும்? ஒரு புதிய தலைமுறை வந்தபிறகு அது முடிவு கட்டப்படும். அந்தத் தலைமுறையைச் சேர்ந்த ஆண்களுக்கும் பணத்தைக் கொண்டோ, அன்றிச் சமுதாயரீதியான இதர அதிகாரச் சாதனங்களைக் கொண்டோ ஒரு பெண்ணைத் தமக்கு இணங்கச் செய்வதற்குத் தம் வாழ்க்கையில் என்றைக்குமே வாய்ப்பிருக்காது; பெண்கள், உண்மைக் காதலுக்காக மட்டுமேயன்றி வேறெந்த நோக்கத்துக்காகவும் எந்த ஆணுக்கும் என்றைக்குமே இணங்கக் கடமைப்பட்டிருக்கமாட்டார்கள். பொருளாதார விளைவுகளைப்பற்றிய பயந்துகொண்டு காதலனுக்குத் தம்மை ஒப்புக்கொடுக்கத் தயங்கவேண்டிய நிர்ப்பந்தம் அவர்களுக்கு ஏற்படாது. அப்படிப்பட்ட மக்கள் தோன்றியவுடனே அவர்கள் என்ன செய்யவேண்டும் என்று நாம் இன்று நினைக்கிறோமோ, அதைக் கடுகளவேனும் சட்டை செய்யமாட்டார்கள். தனித்தனி நபரின் நடைமுறையையொட்டித் தமது சொந்த நடைமுறையையும் அதற்குப் பொருத்தமான தமது சொந்தப் பொதுஜன அபிப்பிராயத்தையும் அவர்கள் நிலைநிறுத்துவார்கள்—அத்துடன் விஷயம் தீர்ந்தது.

இதற்கிடையில், நாம் மார்கனிடம் திரும்பிப் போவோம், அவரை விட்டு ரொம்ப தூரம் விலகி வந்துவிட்டோமே. நாகரிக நிலைக் காலப்பகுதியில் வளர்ச்சி பெற்ற சமுதாய ஸ்தாபனங்களைப் பற்றிய வரலாற்றுவகை ஆராய்ச்சி அவருடைய நூலின் விஷயத்துக்கு அப்பாலுள்ளது. எனவே, இந்தக் காலப் பகுதியில் ஒருதார மணத்தின் கதியைப்

பற்றி அவர் சுருக்கமாகத்தான் ஆராய்கிறார். ஒரு தார மணக் குடும்பத்தின் வளர்ச்சியை ஒரு முன்னேற்றமாக, நிறைவான ஆண் பெண் சமத்துவத்துக்குக் கிட்டத்தட்ட ஒப்பானதாக அவரும் கருதுகிறார்; இருந்தாலும் இந்தக் குறிக்கோளை எட்டிவிட்டதாக அவர் கருதவில்லை. ஆனால், அவர் சொல்கிறார்: ''குடும்பம் என்பது ஒன்றன்பின் ஒன்றாக நான்கு வடிவங்களைக் கடந்து வந்துள்ளது, இப்போது அது ஐந்தாவது வடிவத்தில் உள்ளது என்ற உண்மையை ஒத்துக் கொண்டால் எதிர்காலத்தில் இந்த வடிவம் நிரந்தரமாக இருந்துவருமா என்ற கேள்வி உடனே எழுகிறது. அதற்குத் தரக்கூடிய ஒரே விடை இதுதான்: சமுதாயம் முன்னேற அதுவும் முன்னேறும்; சமுதாயம் மாற அதுவும் மாறும் —சென்ற காலத்தில் நடந்த மாதிரியே. சமுதாய அமைப்பின் சிருஷ்டி இது, அதன் பண்பாட்டை இது பிரதிபலிக்கும். நாகரிக நிலை தொடங்கிய காலத்திலிருந்து ஒருதார மணம் பெரிதும் மேம்பட்டிருக்கிறது; நவீனகாலத்தில் மேலும் கருதத்தக்க அளவில் மேம்பட்டிருக்கிறது; எனவே ஆண் பெண் சமத்துவம் பூர்ணமாகச் சாதிக்கப்படும்வரை அது மேலும் மேம்படுவதற்கு முடியும் என்று குறைந்த பட்சமாகவாவது கருதிக்கொள்ளலாம். தூர எதிர் காலத்தில் சமுதாயத்தின் தேவைகளை ஒருதார மணத்தால் பூர்த்திசெய்ய முடியாமற்போய்விடுமேயானால் அதற்குப்பின் வருகிறதன் தன்மையை முன் கூட்டிச்சொல்வது அசாத்தியம்.''

## III

## இரோகுவாய் கணம்

மார்கனின் மற்ெருரு கண்டுபிடிப்புக்கு இப்போது வருகிறேம். ரத்த உறவுமுறைகளிலிருந்து குடும்பத்தின் புராதன வடிவத்தைப் புனரமைத்ததைப் போன்ற முக்கியத்துவம் பெற்றது இது—குறைந்தபட்சமாகச் சொன்னுல். அமெரிக்க இந்தியக் குலத்துக்குள் இருக்கிற கண ஸ்தாபனங்கள் மிருகங்களின் பெயர்களைத் தாங்கியிருந்தன; இந்த ஸ்தாபனங்கள் கிரேக்கர்களின் 'genea'வுடனும் ரோமானியர்களின் 'gentes'உடனும் ஒன்றுனவை; இதில் அமெரிக்க வடிவமே கணத்துக்குரிய ஆதி வடிவம், கிரேக்க, ரோமானிய வடிவங்கள் பின்னுல் அதிலிருந்து பெறப்பட்டு வந்தவையே; கணமாகவும், பிராட்ரிக் குழுவாகவும் [phratry], குலமாகவும் புராதன காலத்திலிருந்து கிரேக்க, ரோமானிய சமுதாய ஸ்தாபனம் முழுவதும் அமெரிக்க இந்திய சமுதாய ஸ்தாபனத்தோடு ஒன்று போல் உள்ளது; (நமக்குத் தெரிந்திருக்கிற செய்திகள் காட்டுகிற அளவுக்கு) கணம் என்பது அநாகரிகர்கள் நாகரிக நிலைக்குள் புகும்வரைக்கும் அதற்குப்பிறகும் பொதுவாகப் பெற்றிருந்த ஸ்தாபனம். இவையெல்லாம் நிரூபித்துக்காட்டப்பட்டதினுல் புராதன கிரேக்க, ரோமானிய வரலாற்றிலிருக்கும் மிகவும் கடினமான பகுதிகள் ஒரேயடியில் தெளிவுபடுத்தப்பட்டன. அதே சமயத்தில், அரசு புகுத்தப்படுவதற்கு முன்பாகப் பண்டைக் காலத்திலிருந்த சமுதாய அமைப்பு முறையின் அடிப்

படைக் குழும்சங்களின்மீதும் எதிர்பாராத வெளிச்சத்தை வீசிக்காட்டியது. புரிந்துகொண்டதும் அது மிகச் சுலபம் என்று தோன்றக்கூடும்; என்றாலும், மிகச் சமீபத்தில்தான் மார்கன் அதைக் கண்டுபிடித்தார். 1871ல் வெளியிடப்பட்ட தமது முந்திய நூலில் இந்த ரகசியத்தை இன்னும் அவர் புரிந்துகொண்டிருக்கவில்லை; அதை அவர் கண்டுபிடித்த பிறகு, வழக்கமாகவே எவ்வளவோ தன்னம்பிக்கையுள்ள ஆங்கிலேய ஏடேற்று வரலாற்றாசிரியர்கள் கூண்டெலிபோல் கொஞ்ச காலத்துக்கு மௌனம் சாதிக்க வேண்டியிருந்தது.

இந்தக் கணக் குழுவுக்கு மார்கன் பொதுவாக வைத்த பெயர் 'gens' என்பது. இது லத்தீன் சொல். அதுவும், அதற்குச் சம அர்த்தங்கொடுக்கிற கிரேக்கச் சொல்லான 'genos' என்பதும் பொதுவான ஆரியச் சொல்லான 'gan' என்றதிலிருந்து பெறப்பட்டவை (ஜெர்மன் மொழியில், ஆரிய 'g', பொது விதியாக, 'k' என்று வழங்கும்; ஆகவே, 'kan'); ஆரிய 'gan' என்பதற்குப் பெற்றெடுப்பது என்பது பொருள். 'gens, genos' சம்ஸ்கிருத 'janas', கோதிக் மொழியில் 'kuni' (மேற்சொன்ன விதிப்படி அமைந்தது), பண்டைக்கால நோர்டிக், ஆங்கிலோ-சாக்ஸன் 'kyn', ஆங்கிலேய 'kin', மத்தியமேல் ஜெர்மன் 'künne'—இவையனைத்தும் ஒன்று போல கணக் குழுவை, வம்சாவளியை, குறிக்கின்றன. என்ற போதிலும், லத்தீன் 'gens'உம், கிரேக்க 'genos'உம் ஒரு பொது மூதாதையின் (இங்கே ஓர் ஆண் மூதாதையின்) சந்ததிகள் என்று பெருமையாய்ச் சொல்லிக்கொள்கிற கணக் குழுக்களைக் குறிக்கவே விசேஷ

மாக உபயோகிக்கப்படுகின்றன; இந்த ஸ்தாபனங்கள், சில சமுதாய, மத ஸ்தாபனங்களின் வழியாக ஒரு தனிச்சமூகமாக ஒன்றாக இணைக்கப்பட்டுள்ளன; இருந்தாலும், இந்தச் சமூகத்தின் தோற்றம், அதன் தன்மை நமது வரலாற்றாசிரியர்கள் அனைவருக்கும் விளங்காமலே இருந்துவந்தன.

பூனலுவா குடும்பம் சம்பந்தமாய் ஆதிவடிவத்தில் ஒரு கணம் எப்படி அமைக்கப்பெற்றுள்ளது என்று ஏற்கனவே மேலே பார்த்தோம். பூனலுவா திருமணத்தின் விசேஷத்தாலும், அதற்குள் அவசியகரமாகவே மேலோங்கியிருந்த கருத்தோட்டங்களுக்குப் பொருத்தமாகவும், கணத்தின் ஸ்தாபகரான ஒரு குறிப்பிட்ட தனிப்பெண் வம்சமூலத்திலிருந்து அடையாளங் கண்டு கொள்ளப்பட்ட சந்ததியார்களைக் கொண்டவர்களாயுள்ள நபர்களே அதில் அடங்கியிருந்தனர். இந்தக் குடும்ப வடிவத்தில் தகப்பன் யார் என்பது நிச்சயமில்லை. ஆதலால், பெண்வழி வம்ச பரம்பரையே செல்லத்தக்கது. சகோதரர்கள் சகோதரிகளை மணக்கக்கூடாதாகையால், வேறு வம்சாவளியைச் சேர்ந்த பெண்களையே மணக்கலாமாகையால், அந்தப் பெண்களுக்குப் பிறக்கும் குழந்தைகள், தாயுரிமைப்படி, அந்தக் கணத்திற்கு வெளியேதான் நிற்பார்கள். எனவே, ஒவ்வொரு தலைமுறையின் **புதல்விகளின்** குழந்தைகள்தாம் கணக் குழுவில் இருப்பார்கள்; புதல்வர்களின் குழந்தைகள் தங்கள் தாயின் கணத்துக்குச் சென்றுவிடுகின்றனர். இந்த ரத்த உறவுக் குழு, அதே குலத்துக்குள் இருக்கும் அதே மாதிரியான

குழுக்களிலிருந்து வேறாக, ஒரு தனிக்குழுவாகத் தன்னைப் பிரித்துக்கொண்டபிறகு, அது என்ன ஆகும்?

இரோகுவாய்களின் கணத்தை, குறிப்பாக செனிகா குலத்தின் கணத்தை, ஆதிகணத்தின் சாஸ்திரிய வடிவமாக மார்கன் எடுத்துக்கொள்கிறார். அவர்களிடையே எட்டு கணங்கள் உள்ளன; அவை பின்வரும் மிருகங்களின் பெயர்களைத் தாங்கியுள்ளன: 1) ஓநாய்; 2) கரடி; 3) ஆமை; 4) பீவர்; 5) மான்; 6) ஸ்னைப் என்ற பறவை; 7) ஹெரன் என்ற பறவை; 8) பருந்து. ஒவ்வொரு கணத்திலும் பின்வரும் பழக்கங்கள் நிலவுகின்றன:

1. அது தனது 'சாகெம்' என்பவரையும் (சமாதான காலத்தில் அதன் தலைவன்) தனது தலைவனையும் (யுத்தத்தில் அதன் தலைவன்) தேர்ந்தெடுக்கிறது. கணத்திற்குள்ளிருந்துதான் சாகெம் தேர்ந்தெடுக்கப்படவேண்டும்; கணத்தில் அவனது பதவி பரம்பரையானது — பதவி காலியாகும்போது அது உடனே நிரப்பப்படவேண்டுமென்ற அர்த்தத்தில். யுத்தத் தலைவனைக் கணத்திற்கு வெளியேயிருந்தும் தேர்ந்தெடுக்கலாம், அந்தப் பதவி சில சமயம் காலியாகவும் இருக்கலாம். முந்திய சாகெமின் மகன் எப்போதும் சாகெம் பதவிக்கு வந்ததில்லை; ஏனெனில் இரோகுவாய்களிடையே தாயுரிமை நிலவியது, எனவே மகன் இன்னொரு கணத்தைச் சேர்ந்தவனாவான். ஆனால், சகோதரனின் மகனோ, சகோதரியின் மகனோ அடிக்கடி தேர்ந்தெடுக்கப்பட்டான். ஆண் பெண் எல்லோரும் தேர்தலில் வோட்டுப் போட்டனர். இந்தத் தேர்வை மற்ற ஏழு கணங்களும் ஊர்ஜிதம் செய்யவேண்டும்; அதன்

பிறகுதான் அவன் சடங்குப்படி பதவியில் அமர்த்தப் பட்டான். இதை இரோகுவாய் கணக் குழுக் கூட்டு முழுவதின் பொதுக் கவுன்சில் நடத்திவைத்தது. இதன் அர்த்தமுக்கியத்துவம் பின்னால் தெரியும். கணத்திற்குள் சாகெமின் அதிகாரம் தந்தைவகைப் பட்டது, தார்மீகத் தன்மை கொண்டது. பலாத் காரச் சாதனங்கள் எவையும் அவனிடம் கிடையா. தனது பதவியின் விசேஷத்தால் அவன் செனிகாக் களின் குலக் கவுன்சிலிலும் அங்கத்தினனுவன்; அதே போல் இரோகுவாய் கணக் குழுக் கூட்டின் கவுன்சி லிலும் அங்கத்தினனுனன். ராணுவப் படையெடுப் புக்களின் போதுதான் யுத்தத் தலைவன் உத்தரவு கள் போட்டான்.

2. சாகெமையும், யுத்தத் தலைவனையும் கணம் இஷ்டப்படும்போது நீக்கிவிட முடியும். இதையும் ஆண்கள், பெண்கள் சேர்ந்தே செய்தார்கள். அதன் பிறகு நீக்கப்பட்டவர்கள் சாதாரண வீரர்களாகவும் தனிப்பட்ட நபர்களாகவும் மற்றவர்களைப்போலவே இருந்தார்கள். குலத்தின் கவுன்சிலும் சாகெம்களை நீக்கி விட முடியும்—கணத்தின் விருப்பங்களுக்கு எதிராகக்கூட.

3. கணத்துக்குள் எந்த அங்கத்தினனும் மணம் புரியக்கூடாது. இதுதான் கணத்தின் அடிப்படை விதி, அதை ஒன்றுபடுத்திவைத்திருக்கும் பந்தம்; நேரடியாயுள்ள இரத்த உறவுமுறையின் எதிர் மறை வெளியீடு இது; நேரடி இரத்த உறவுமுறை யின் விசேஷத்தால் தான் அதற்குள் இருக்கிற தனி நபர்கள் உண்மையிலே ஒரு கணமாக ஆகிறார்கள். இந்தச் சாதாரண விஷயத்தைக் கண்டுபிடித்ததின்

வழியாக மார்கன் கணத்தின் தன்மையை வெளிப் படுத்தினார். அதுவரைக்கும் கணத்தைப் புரிந்துகொள் ளாமலே யிருந்துவந்ததற்குக் காட்டுமிராண்டிகளைப் பற்றியும் அநாகரிகர்களைப் பற்றியும் முந்திவந்த செய்தி அறிக்கைகளே ருசுவாகும்; அவற்றில், கண ஸ்தாபனத்தில் அமைந்துள்ள பல்வேறு ஸ்தாபனங் கள் குலம், கிளான், தூம், முதலானபடி தெரியாத் தனமாகவும் வரைமுறையின்றியும் குறிக்கப்படுகின் றன; மேலும், இவற்றைப்பற்றிப் பேசும்பொழுது இப்படிப்பட்ட எந்த ஸ்தாபனத்திலும் திருமணம் தடை செய்யப்பட்டிருந்தது என்றும் சில சமயங் களில் அடித்துச் சொல்லப்பட்டது. இது படுமோச மான குழப்பத்தை உண்டாக்கி, அதில் மிஸ்டர் மாக்லெல்லன் நெப்போலியன் போல் குறுக்கிட்டு, தமக்குள் மணம் தடை செய்யப்பட்டுள்ள குலங்க ளாகவும் (விகோத்திர குலம்), தமக்குள் மணம் அனுமதிக்கப்பட்டுள்ள குலங்களாகவும் (சகோத் திர குலம்) குலங்கள் யாவும் பிரிக்கப்பட்டுள்ளன என்ற தாக்கீதை வெளியிட்டு ஒழுங்கு ஏற்படுத்தி னார். இவ்வாறு விஷயங்களைப் பூராவாகக் குழப்பி விட்டபிறகு, தனது அபத்தமான இரண்டு வகுப்பு களில் எது பழைமையானது—விகோத்திர குலமா, சகோத்திர குலமா—என்ற மிக ஆழ்ந்த ஆராய்ச்சி யில் அவரால் இறங்கமுடிந்தது. இரத்த உறவு முறையில் அமைந்த கணத்தையும், அதன் விளைவாக அதன் அங்கத்தினர்களுக்குள்ளே மணம் சாத்திய மற்றிருப்பதையும் கண்டுபிடித்தபிறகு தக்ஷணமே இந்த முட்டாள்தனம் நின்றுவிட்டது. இரோகு வாய்களை நாம் கண்டுகொள்ளும் காலத்தில் கணத்

துள் மணத்துக்குத் தடை போட்டிருக்கும் விதி விடாப்பிடியாகப் பின்பற்றப்பட்டிருக்கிறது என்பது வெளிப்படை.

4. இறந்தவர்களின் சொத்து கணத்தின் இதர அங்கத்தினர்களிடையே விநியோகிக்கப்பட்டது--- அது கணத்தில் இருந்து தீர வேண்டும். இரோகுவாய் விட்டுச்செல்லமுடிகிற சொத்து அற்ப சொற்பமானதே என்பதால், அது கணத்துள் அவனது மிக நெருங்கிய உறவினர்களிடையே பிரிக்கப்பட்டது. ஆண் இறக்கும்போது, அவனது இயற்கையான சகோதர சகோதரிகள், தாய்மாமன் ஆகியோருக்கு; பெண் இறந்தால், அவளது குழந்தைகளுக்கு, இயற்கையான சகோதரிகளுக்கு, ஆனால், சகோதரர்களுக்கு இல்லை. கணவன் மனைவி ஒருவரிடமிருந்து ஒருவர் சொத்தைச் சுவீகரிக்கமுடியாது, தகப்பனிடமிருந்து குழந்தைகளும் சுவீகரிக்க முடியாது என்பதற்கு அதுதான் காரணம்.

5. கணத்தின் அங்கத்தினர்கள் ஒருவர்க்கொருவர் உதவி, பாதுகாப்பு, குறிப்பாக அந்நியர்கள் புரியும் கெடுதல்களுக்குப் பழிவாங்குவதில் ஆதரவு தருவது கடமை; தனி நபர் தனது பாதுகாப்புக்காகக் கணத்தை நம்பியிருந்தான், நம்பியிருக்க முடிந்தது. அவனுக்குக் கெடுதல் செய்தால், கணத்துக்கு கெடுதல் செய்ததாகும். இதிலிருந்து—கணத்தின் இரத்த உறவுகளிலிருந்து— இரத்தப் பழி வாங்கும் கடமை எழுந்தது; இதை இரோகுவாய்கள் நிபந்தனையின்றி அங்கீகரித்தார்கள். கணத்தின் அங்கத்தினனல்லாதவன் ஒரு கண அங்கத்தினனைக் கொன்றால், கொல்லப்பட்டவனின் கணம் முழுவதும்

இரத்தப் பழி வாங்கச் சபதமேற்றிருக்கும். முதலில் மத்தியஸ்தம் பண்ண முயற்சி நடக்கும். கொன்றவனின் கணத்தின் கவுன்சில் கூட்டப்படும்; விஷயத்தைச் சுமுகமாக முடிக்கக் கொல்லப் பட்டவனுடைய கணக் கவுன்சிலுக்கு யோசனைகள் சமர்ப்பிக்கப்படும்—பெரும்பாலும் வருத்தம் தெரிவித்தால், அதிக மதிப்புள்ள வெகுமதிகள் தருவது என்ற வடிவத்தில். இவற்றை ஏற்றுக்கொண்டால், விஷயம் முடிந்துவிட்டது. இல்லாவிட்டால், பாதிக்கப்பட்ட கணம் ஒருவனையோ ஒன்றுக்கு மேற்பட்டவர்களையோ இரத்தப் பழி வாங்குபவர்களாக நியமிக்கும்; இவர்களின் கடமை கொலையாளியைத் துரத்திச்சென்று கொல்வதுதான். இது நடந்தால் கொலையாளியின் கணத்துக்குப் புகார் செய்ய உரிமை கிடையாது; விஷயம் சரிசெய்யப்பட்டதாகவே கருதப்படும்.

6. கணத்துக்குத் திட்டவட்டமான பெயர்களும், பெயர் வரிசைகளும் உண்டு; குலம் முழுவதிலும் அவற்றை உபயோகிக்க அது ஒன்றுக்குத்தான் உரிமை; எனவே ஒரு தனி நபரின் பெயர் அவனது கணத்தையும் குறிக்கும். கணப் பெயர் கொண்டவனுக்குக் கண உரிமைகளும் இயல்பாகவே உண்டு.

7. அந்நியர்களைக் கணம் தன்னுள் சேர்க்கமுடியும், அதன் வழியாகக் குலம் முழுவதிலும் சேர்க்கலாம். கொல்லப்படாத யுத்தக் கைதிகள் ஒரு கணத்தில் சுவீகரிக்கப்பட்டதின்மூலமாக செனிகா குலத்தின் அங்கத்தினர்களாயினர்; அதன் வழியே அவர்கள் எல்லாக் குல உரிமைகளையும் கண உரிமைகளையும் பெற்றனர். கணத்தின் தனி அங்கத்தினர்களின் கோரிக்கையின்பேரில் இந்தச் சுவீகாரம் நடந்

தது—ஆண்கள் அந்நியனைச் சகோதர அல்லது சகோதரி உறவில் வைத்தனர்; பெண்கள் அவனைக் குழந்தை உறவில் வைத்தனர். இதன் ஊர்ஜிதத்திற்காக, சடங்குமுறைப்படி கணத்திற்குள் ஏற்கப்படுவது அவசியம். மிகவும் எண்ணிக்கை குறைவாயுள்ள கணங்கள் இன்னொரு கணத்திலிருந்து, அதன் ஒப்புதலின் பேரில், திரள் திரளாகச் சுவீகாரம் செய்து கொள்வதின்வழியாக அடிக்கடி பெருக்கப் பட்டன. இரோகுவாய்களிடையே, சுவீகாரச் சடங்குமுறை குலக் கவுன்சிலின் பொதுக் கூட்டத்தில் நடத்தப்பட்டது; நடைமுறையில் ஒரு மதச் சடங்காக இது ஆக்கப்பட்டுவிட்டது.

8. அமெரிக்க இந்தியக் குலங்களில் விசேஷமான மதக்கிரியைகள் இருந்ததாக நிரூபிப்பது கஷ்டமாயிருக்கும். இருந்தாலும், இந்தியர்களின் மதச் சடங்குகள் ஏறத்தாழக் கணங்களோடு சம்பந்தப்பட்டவை. இரோகுவாய்களிடையே, அவர்களுடைய ஆறு வருடாந்தர மதச்சடங்குகளின்போது, தனித் தனி கணங்களின் சாசெம்களும் யுத்தத் தலைவர்களும் பதவி வகிக்கும் விசேஷத்தால் ''நம்பிக்கையின் காவலர்களில்'' வைத்துக் கணக்கிடப்பட்டார்கள், புரோகிதக் காரியங்களையும் நடத்தினார்கள்.

9. கணத்துக்கு ஒரு பொதுவான இடுகாடு உண்டு. நியூயார்க் மாகாண இரோகுவாய்கள் வெள்ளையர்களால் சூழ்ந்து நெருக்கப்பட்டு, அவர்களின் இடுகாடு மறைந்துவிட்டது. ஆனால் முன்பு அது இருந்தது. அது இன்னும் மற்ற இந்தியக் குலங்களிடையே இருந்துவருகிறது; உதாரணமாக, டஸ்கரோராக்கள் மத்தியிலே. இந்தக் குலம் இரோகு

வாய்களுடன் நெருங்கிய உறவு கொண்டது; டஸ்க ரோராக்கள் கிறிஸ்தவர்களாயினும் தமது இடுகாட்டில் ஒவ்வொரு கணத்துக்கும் ஒரு விசேஷமான வரிசை ஏற்பாடு செய்துள்ளனர். ஆக ஒரு தாய் தன் குழந்தைகளின் வரிசையில் வைக்கப்பட்டு அடக்கம் செய்யப்படுகிருள், ஆனுல் தந்தை அப்படியில்லை. இரோகுவாய்களிடையேயும் கண அங்கத்தினர்கள் அனைவரும் சவ அடக்கத்தின்போது வந்திருப்பார்கள், சமாதியைத் தயார் செய்வார்கள், சவ அடக்கச் சொற்பொழிவுகள் நடத்துவது முதலியன செய்வார்கள்.

10. கணத்துக்கு ஒரு கவுன்சில் உண்டு; அது கணத்திலுள்ள வயதுவந்த ஆண்கள், பெண்கள் அனைவரையும் கொண்ட ஒரு ஜனநாயகக் கூட்டுறுப்பு: எல்லோருக்கும் அதில் சம வோட்டுரிமையுண்டு. இந்தக் கவுன்சில் சாகெம்களையும் யுத்தத் தலைவர்களையும் தேர்ந்தெடுக்கவோ நீக்கவோ செய்தது; பாக்கி ''நம்பிக்கையின் காவலர்களையும்'' இப்படித் தான் செய்தது. கொல்லப்பட்ட கண அங்கத்தினர்களுக்காகப் பிராயச்சித்தக் காணிக்கைகள் பெறுவதா அல்லது இரத்தப் பழி வாங்குவதா என்பதைப் பற்றியும் அது முடிவு செய்தது. அந்நியர்களை அது கணத்துக்குள் சுவீகரித்தது. சுருங்கச் சொன்னுல், கணத்துக்குள் அதுவே முழு அரசுரிமை பெற்ற அதிகாரம்.

பிரதிநிதித்துவமுள்ள ஓர் இந்தியக் கணத்தின் உரிமைகள் இவையே. ''ஓர் இரோகுவாய் கணத்தின் எல்லா அங்கத்தினர்களும் தனிப்பட்ட முறையில் சுதந்திரமாக இருந்தனர், ஒருவன் மற்றவனின்

சுதந்திரத்தைக் காக்கக் கடமைப்பட்டிருந்தான்; சலுகையுரிமைகளிலும், தனிப்பட்ட உரிமைகளிலும் அவர்கள் சமமாகவே இருந்தார்கள்; சாகெமும் யுத்தத் தலைவர்களும் மேல்நிலை எதற்கும் உரிமை கொண்டாடவில்லை. அவர்கள் இரத்த உறவினால் இணைக்கப்பட்டிருந்த ஒரு சகோதரக் குழுவாக அமைகிறார்கள். சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம், என்றைக்கும் வரையறுக்கப்படாதிருந்த போதிலும், கணங்களின் முக்கியமான கோட்பாடுகளாயிருந்தன. கணம் என்பது சமுதாய அமைப்பின் மூலக்கூறு. இந்திய சமுதாய அமைப்புக்கு அதுவே அடிப்படை. இந்தியர்களின் குணத்தில் எங்கும் நிலவும் அம்சமாக உள்ள சுதந்திர உணர்வையும் தன் மதிப்பையும் [இது] விளக்க உதவுகிறது.''

அவர்களைக் கண்டுபிடித்த காலத்தில், வட அமெரிக்க இந்தியர்கள் எல்லோரும் தாயுரிமைப்படி கணங்களில் திரட்டப்பட்டிருந்தார்கள். டகோடாக்கள்போல் ஒரு சில குலங்களில் மட்டுமே கணங்கள் சீரழிந்து வந்தன; ஒஜிப்வாக்கள், ஓமாஹாக்கள் போன்ற வேறு சிலவற்றில் தந்தையுரிமைப்படி கணங்கள் திரட்டப்பட்டிருந்தன.

ஐந்தாறு கணங்களுக்குமேலாக உள்ள இந்தியக் குலங்கள் நிறைய உண்டு. அவற்றில் மூன்று, நான்கு, அதற்கும் அதிகமான கணங்கள் ஒரு விசேஷமான குழுவில் ஒன்றுபடுத்தப்பட்டிருந்தன. இந்தக் குழுவுக்கு மார்கன்—இந்தியச் சொல்லுக்குச் சமதையான கிரேக்கச் சொல்லைக் கொண்டு அப்படியே மொழிபெயர்த்து—'பிராட்ரி' (சகோதரக் குழு)

என்றழைக்கிறார். இப்படியாக, செனீகாக்களிடையே இரண்டு பிராட்ரிகள் உள. முதல் பிராட்ரியில் முதலாவதிலிருந்து நான்காவது கணம் வரை அடங்கும்; இரண்டாவதில் ஐந்தாவதிலிருந்து எட்டாவது உள்ளிட்டு அடங்கும். நெருங்கிப் பரிசீலிக்கும்போது, மொத்தத்தில் இந்த பிராட்ரியாக்கள் ஆரம்பத்தில் குலம் பிரிந்திருந்த ஆதிக்கணங்களையே குறிக்கின்றன; ஏனெனில், கணத்துக்குள் மணத்தடை ஏற்பட்டபிறகு, ஒவ்வொரு குலத்திலும் குறைந்த பட்சம் இரண்டு கணங்களையாவது கொண்டிருக்க வேண்டியது அவசியமாயிற்று. அப்போது தான் அது சுதந்திரமாக நிலைகொண்டிருக்க முடியும். குலம் பெருகப்பெருக, ஒவ்வொரு கணமும் மீண்டும் இரண்டு அல்லது அதற்குமேற்பட்ட கணங்களாக வகுக்கப்பெற்றது, அவை இப்போது தனித்தனி கணங்களாக ஆகிவிடுகின்றன. இந்தச் சேய்க்கணங்களையெல்லாம் தன்னுள் அணைத்து நிற்கும் ஆரம்பத்தில் வந்த கணமோ பிராட்ரியாக ஜீவித்து வருகிறது. செனீகாக்களிடையேயும் பெரும்பான்மையான இதர இந்தியக் குலங்களிடையேயும் ஒரு பிராட்ரியிலுள்ள கணங்கள் யாவும் சகோதர கணங்கள் ஆகும், மற்றவற்றில் இருக்கும் கணங்கள் யாவும் பங்காளி கணங்கள் ஆகும். நாம் பார்த்தபடி, இந்தப் பெயர்களுக்கு அமெரிக்காவின் ரத்த உறவுக் குடும்ப முறையில் மிகவும் உண்மையான, பொருள் பொதிந்த அர்த்தமுக்கியத்துவம் உண்டு. ஆதியில், எந்த செனீகாவும் தனது பிராட்ரிக்குள் மணம் புரிய முடியாது; ஆனால் இந்தத் தடை வெருகாலமாகக் காலாவதியாகியிருந்தது; அது இப்போது கணத்

துடன் நின்றுவிடுகிறது. 'கரடி'யும் 'மா'னும்தான் ஆதியிலிருந்த இரண்டு கணங்களாகும், அவற்றி லிருந்துதான் மற்றவை கிளைத்தன என்று செனிகாக் களிடையே ஒரு பரம்பரைக்கதை இருந்தது. இந்தப் புதிய ஸ்தாபனம் உறுதியாக வேரூன்றியதோ இல் லையோ, அது தேவைக்கேற்றபடி திருத்தியமைக்கப் பட்டது. சம நிலையை நாட்டுவதற்காக, பிற பிராட்ரிகளிலிருந்து முழுசுமுழுசாகக் கணங்கள் செத்துப் போயிருந்த பிராட்ரிகளுக்கு மாற்றப் பட்டன. ஒரே பெயர் தாங்குகிற கணங்கள் வேறு குலங்களில் பிராட்ரிகளிடையே பல்வேறு வகை யாக வகுக்கப்பட்டிருக்கக் காண்பதை இது விளக் குகிறது.

இரோகுவாய்களிடையே பிராட்ரியின் வேலை கள் ஒரு பகுதி சமுதாய ரீதியானவையாயும் ஒரு பகுதி மத ரீதியானவையாயும் உள்ளன. 1) பிராட்ரி கள் பந்து விளையாட்டு விளையாடுகிறார்கள், ஒன்றுக்கு எதிராக இன்னொன்று இருந்து கொண்டு; ஒவ் வொரு பிராட்ரியும் தனது சிறந்த ஆட்டக்காரர்களை அனுப்புகிறது, மற்ற பிராட்ரி அங்கத்தினர்கள் பார்வையாளர்களாக, பிராட்ரிக் கிரமப்படி, நின்று கொண்டு தத்தம் தரப்பினரின் வெற்றி வியப்பைப் பற்றிப் பந்தயம் வைத்துக்கொள்கின்றனர். 2) குலக் கவுன்சிலில் ஒவ்வொரு பிராட்ரியின் சாகெம்களும் யுத்தத் தலைவர்களும் ஒன்றாய்க் கூடி உட்காருகின் றனர்; ஒரு குழு மற்றொன்றுக்கு முன் அமர்கிறது. ஒவ்வொரு பேச்சாளனும் ஒவ்வொரு பிராட்ரி அங் கத்தினர்களையும் தனி ஸ்தாபனம் என்ற வகையில் விளித்துப் பேசுகிறான். 3) குலத்துக்குள் கொலை

நடந்திருந்து, கொல்லப்பட்டவனும் கொலையாளியும் ஒரே பிராட்ரியைச் சேராதவர்களாயிருந்தால், பாதிக்கப்பட்ட கணம் அடிக்கடி தனது சகோதர கணங்களை வேண்டிக்கொள்ளும்; இவை நமது பிராட்ரிக் கவுன்சிலைக் கூட்டி, ஒரு ஸ்தாபனம் என்ற வகையில் மற்ற பிராட்ரிக்குச் சொல்லியனுப்பும். விஷயத்தைச் சரிசெய்வதற்காக அதன் கவுன்சிலையும் கூட்டுமாறு கேட்கும். இங்கேயும் பிராட்ரி தான் ஆதி கணமாகத் தோற்றமளிக்கிறது; அதனால் பிறந்த பலவீனமான, தனிப்பட்ட கணத்தை விட வெற்றி பெறுவதற்கு மேலான வாய்ப்புக்கள் உள்ளதாகவே அது தோற்றமளிக்கிறது. 4) முக்கியமான நபர்கள் இறந்தால், எதிர் பிராட்ரி சவச் சடங்குகளுக்கும் சவ அடக்கக்கிரியைகளுக்கும் ஏற்பாடு செய்வதை மேற்கொண்டது, இறந்தவனின் பிராட்ரி துக்கம் கொண்டாடுவதாகச் சவ ஊர்வலத்தில் சென்றது. ஒரு சாகெம் இறந்தால், எதிர் பிராட்ரி இரோகுவாய்களின் குழுக்கூட்டுக் கவுன்சிலுக்குப் பதவி காலியானதுபற்றித் தெரிவித்தது. 5) பிராட்ரிக் கவுன்சில் ஒரு சாகெம் தேர்ந்தெடுக்கப்படும்போது மீண்டும் அரங்கில் தலைகாட்டியது. சகோதர கணங்கள் ஊர்ஜிதம் செய்வது சகஜமான விஷயமாகக் கொள்ளப்பட்டது; ஆனால் மற்றொரு பிராட்ரியின் கணங்கள் அதற்கு எதிராக இருக்கலாம். அப்படி நேரும்போது இந்த பிராட்ரியின் கவுன்சில் கூடி, இந்த எதிர்ப்பை ஆதரித்தால், தேர்தல், செல்லத்தக்கதல்ல. 6) முன்பு, இரோகுவாய்களுக்கு விசேஷமான, மதவகைப்பட்ட ரகசியக் கிரியைகள் இருந்தன; இவற்றை வெள்ளையர்கள்

"medicine lodges"[1] என்றழைத்தார்கள். செனிகாக்களிடையே இரண்டு மதக்குழுவினர் — ஒவ்வொரு பிராட்ரிக்கும் ஒன்றாக அமைந்திருந்து — இவற்றைக் கொண்டாடினர்; இவற்றில் புதிதாகச் சேரும் அங்கத்தினர்களுக்கு முறையான உட்புகு சடங்கு இருந்தது. 7) நாடுபிடிப்பின் காலத்தில் திளாஸ்கலாவின் நான்கு சேரிகளில் வசியப்படுத்திக் கொண்டிருந்த நான்கு "lineages" (வம்சாவளிகள்) நான்கு பிராட்ரிகளாக இருந்தால் — அநேகமாக இது நிச்சயமாக இருக்கும் — கிரேக்கர்களிடையேயுள்ள பிராட்ரிகள் போலவும், ஜெர்மனியர்களிடையேயுள்ள கணக் குழுக்களைப்போலவும், இந்தப் பிராட்ரிகள் ராணுவக் கூறுகளாகவும் பணியாற்றின என்று இது நிரூபிக்கிறது. ஒவ்வொன்றும் தனித் தனி அணியாக, இந்த நான்கு வம்சாவளிகளும் போருக்குச் சென்றன; ஒவ்வொன்றுக்கும் சொந்த ராணுவ உடுப்பும் கொடியும் இருந்தன, தலைவனும் இருந்தான்.

பிராட்ரியில் சில கணங்கள் அமைந்திருந்தது போலவே, சாஸ்திரீய வடிவத்தில் சில பிராட்ரிகளும் ஒரு குலமாக அமையப்பெற்றிருந்தன. சில சமயங்களில், மத்தியக் கண்ணியாகிய பிராட்ரி மிகவும் பலவீனப்படுத்தப்பட்ட குலங்களிடையே இல்லாதிருந்தது. அமெரிக்காவிலுள்ள இந்தியக் குலத்தின் அடையாளங்காட்டுகிற குணாம்சங்கள் எவை?

1. சொந்த நிலப்பரப்பும் சொந்தப் பெயரும் கொண்டிருப்பது. யதார்த்தத்தில் குடிதங்கியிருக்கும்

[1] வைத்தியர்கள் கூட்டங்கள். - பதிப்பாசிரியர்கள்.

பிரதேசத்தோடு கூடுதலாக, வேட்டையாடவும் மீன் பிடிக்கவும் ஒவ்வொரு குலமும் கணிசமான பிரதேசத்தைப் பெற்றிருந்தது. இதற்கு அப்பால், அடுத்த குலத்தின் பிரதேசத்தை வந்தடைகிற வகையில் அகலமாக ஒரு நடுநிலைப் பிரதேசம் இருந்தது. எங்கு இரு குலங்களின் மொழிகளும் உறவு கொண்டிருந்தனவோ, அங்கு இந்த நடுநிலைப் பிரதேசத்தின் அளவு சிறியதாக இருந்தது. அப்படி இல்லாத இடங்களில் விரிவாக இருந்தது. இப்படிப்பட்ட நடுநிலைப் பிரதேசம்தான் ஜெர்மானியர்களின் எல்லைக் காடு, சீஸரின் சுயேவிக்கள் தங்களின் பிரதேசத்தைச் சுற்றிலும் அமைந்த பொட்டல்காடு; டேன்களுக்கும் ஜெர்மானியர்களுக்கும் இடையேயிருந்த "isarnholt" (டேனிஷ் மொழியில் 'jarnved, limes Danicus'); ஜெர்மானியர்களுக்கும் ஸ்லாவ்களுக்கும் இடையேயிருந்த சாக்ஸனியர்களின் காடும் "branibor"உம் (ஸ்லாவிக் மொழியில் "பாதுகாப்புக்குரிய காடு") —இதிலிருந்து பிராண்டன்பர்க் தன் பெயரைப் பெறுகிறது. அரைகுறையாக வரையறுக்கப்பட்ட எல்லைகளைக் கொண்டு இவ்வாறு குறிக்கப்பட்ட பிரதேசம்தான் குலத்தின் பொது நிலம்; இதை மற்றக் குலங்களும் அவ்விதமே அங்கீகரித்தன; ஆக்கிரமிப்பிலிருந்து இது குலத்தால் காக்கப்பட்டுவந்தது. பெரும்பான்மையான சந்தர்ப்பங்களில், ஜனத்தொகை பெருவாரியாகப் பெருகிவிட்டபோதுதான் எல்லைகளின் நிச்சயமற்ற தன்மை நடைமுறைக்கு அசௌகரியமாக ஆகியது. சிந்திக்கப்பட்ட தேர்வு முடிவின் விளைவாக அல்லாமல் தற்செயலின் விளைவாகவேதான் குலப் பெயர்கள் அமைந்தன என்று

தோன்றுகிறது. காலம் செல்லச்செல்ல ஒரு குலம் தனது அண்டையிலுள்ள குலத்தை அதன் சொந்தப் பெயருக்கு மாறான பெயரால் அழைப்பதும் அடிக்கடி நடந்தது; உதாரணமாக, ஜெர்மானியர்கள் (die Deutschen) விஷயத்தில் இப்படித்தான் நடந்தது; அவர்களுக்கு முதல் வரலாற்றுப் பொதுப் பெயரான 'ஜெர்மானி' (Germanen) என்பது கெல்டுகளால் தரப்பட்ட பெயரேயாகும்.

2. அந்தந்தக் குலத்துக்கே உரித்தான ஒரு விசேஷ **ஸ்தலமொழி** [dialect]. உண்மையிலே, குலம், ஸ்தலமொழி இரண்டும் சேர்ந்தே நிலவின. கிளைப்பகுப்பு மூலமாகப் புதிய குலங்களையும் புதிய ஸ்தலமொழிகளையும் நிலைநிறுத்துவது சமீபகாலம் வரையில் அமெரிக்காவில் முன்னேறிக்கொண்டே தானிருந்தது. இப்போதுங்கூட அது அறவே நின்று விட்டிருக்க முடியாது. எங்கே பலவீனப்படுத்தப் பட்ட இரு குலங்கள் ஒன்றாய்க் கலக்கின்றனவோ, அங்கே, விதிவிலக்காக, நெருங்கிய உறவுள்ள ஸ்தல மொழிகள் அந்த ஒரே குலத்துக்குள் பேசப்படுகின்றன. அமெரிக்கக் குலங்களின் சராசரித் தொகை 2,000. இருந்தாலும், செரோகீக்களின் தொகை 26 ஆயிரமாகும் — அமெரிக்காவில் ஒரே ஸ்தலமொழியில் பேசுகிற இந்தியர்களின் ஆகமிகப் பெரிய தொகை இவர்களுடையதே.

3. கணங்கள் தேர்ந்தெடுத்த சாகெம்களையும் யுத்தத் தலைவர்களையும் பதவியில் நியமித்தல்.

4. மீண்டும் அவர்களை, அவர்களின் கணத்தின் விருப்பங்களுக்கு எதிராகவுங் கூட, பதவியிலிருந்து நீக்கும் உரிமை. இந்த சாகெம்களும் யுத்தத் தலைவர்களும் குலக் கவுன்சிலின் அங்கத்தினர்

கள் ஆதலால், அவர்கள் சம்பந்தமாகக் குலத்துக்குள்ள உரிமைகள் சொல்லாமலே விளங்கக் கூடியவை. எங்கெல்லாம் குலங்களின் குழுக் கூட்டு ஏற்படுத்தப்பட்டு, ஒரு குழுக்கூட்டுக் கவுன்சிலில் எல்லாக் குலங்களும் பிரதிநிதித்துவம் பெற்றிருந்தனவோ, அங்கெல்லாம் அந்த ஸ்தாபனத்திடம் மேலே சொன்ன உரிமைகள் மாற்றப்பட்டிருந்தன.

5. பொதுவான மதக்கருத்துக்கள் (புராணங்கள்), வழிபாட்டுக் கிரியைகள் பெற்றிருந்தல். ''அநாகரிகர்களின் பாஷன்படி அமெரிக்க இந்தியர்கள் மதபக்தியுள்ள மக்களாகவிருந்தனர்''. அவர்களுடைய புராணம் விமர்சனரீதியில் இன்னும் பரிசீலிக்கப்படவேயில்லை. அவர்கள் தமது மதக்கருத்துக்களுக்கு, பலவகைப்பட்ட ஆவிகளுக்கு, மனித உருவம் தந்திருந்தனர்; இருந்தாலும், அவர்கள் வாழ்ந்திருந்த அநாகரிக நிலையின் கடைக்கட்டத்தில் அவற்றிற்கு உடம்புவகைப்பட்ட உருவங்கள், அதாவது விக்கிரகங்கள், கிடையா. பல தெய்வங்களை வணங்கும் மதத்தை நோக்கிப் பரிணமமடைந்த இயற்கை வழிபாடு, பஞ்சபூத வழிபாடு, அது. திட்டவட்டமான வழிபாட்டு வடிவங்களுடன், அதாவது நடனங்களுடனும் விளையாட்டுகளுடனும் — வெவ்வேறு குலங்களுக்கும் முறையான விழாக்கள் இருந்தன. குறிப்பாக நடனமாடுதல், மதச்சடங்குகள் அனைத்திலும் முக்கியமான பகுதியாயிருந்தது; ஒவ்வொரு குலமும் தனித்தனியே தனது மதச்சடங்குகளை நடத்தியது.

6. பொது விவகாரங்களுக்கு ஒரு குலக் கவுன்சில். தனித்தனி கணங்களின் சகல சாகெம்களையும்

யுத்தத் தலைவர்களையும் கொண்டிருந்தது அது; அவற்றின் உண்மையான பிரதிநிதிகள் அவர்களே, ஏனெனில் அவர்களை எப்போதும் நீக்கமுடியும். கவுன்சில் பகிரங்கமாகக் கூடியது; குலத்தின் மற்ற அங்கத்தினர்கள் சூழ்ந்திருந்தார்கள்; விவாதத்தில் கலக்கவும் தமது அபிப்பிராயத்தைக் கூறவும் அவர்களுக்கு உரிமை இருந்தது; கவுன்சில் முடிவு செய்தது. கவுன்சிலிடம் சொல்லிக்கொள்வதற்கு யாருக்கும் இடமுண்டு என்பது விதியாக இருந்தது; பெண்கள்கூடத் தமது அபிப்பிராயத்தைத் தாம் தேர்ந்தெடுத்த ஒரு பிரதிநிதியின் வாயிலாகத் தெரிவிக்கலாம். இரோகுவாய்களிடையே கடைசி முடிவுகளை ஒருமனதாகத்தான் எடுக்கவேண்டும்; ஜெர்மன் மார்க் சமூகங்களின் சில முடிவுகள் விஷயத்திலும் இப்படியேதானிருந்தது. குறிப்பாக மற்றக் குலங்களோடுள்ள உறவுகளை முறைப்படுத்துகிற வேலை குலக் கவுன்சில்களின் பொறுப்பாகும். அது அதிகார தூதர்களை வரவேற்றது, தானும் அனுப்பிவைத்தது, யுத்தத்தையும் பிரகடனப்படுத்தியது, சமாதானத்தையும் செய்துகொண்டது. போர் கிளம்பும் போது அதைத் தொண்டர்கள்தான் பிரதானமாக நடத்தினர். எந்தெந்தக் குலங்களுடன் தான் திட்டவட்டமாகச் சமாதான உடன்படிக்கையைச் செய்துகொள்ளாதிருக்கிறதோ, அவற்றோடெல்லாம் அந்தக் குலம் கோட்பாடு ரீதியில் யுத்த நிலையில் இருந்தது. இப்படிப்பட்ட எதிரிகளின்மேல் நடத்திச் செல்லும் ராணுவப் படையெடுப்புகளைப் பெரும்பாலும் ஒரு சில தலைசிறந்த வீரர்களே திட்டமிட்டு நடத்தினர். அவர்கள் ஒரு போர் நடனம் புரிந்தனர்;

அந்த நடனத்தில் கலந்து கொள்கிறவர்கள் அலை வரும் அதன்மூலம் படையெடுப்பில் கலந்துகொள்வதற்குத் தங்கள் விருப்பத்தைத் தெரிவித்தனர். உடனே ஒரு படையணி அமைக்கப்பட்டு, போருக்குப் புறப்பட்டுச் சென்றது. குலப்பிரதேசம் தாக்கப்படும்போது, அதன் பாதுகாப்பும் இதே போலத்தான் பிரதானமாகத் தொண்டர்களைக் கொண்டு நடத்தப்பட்டது. படையணிகள் கிளம்பிச்செல்வதும், திரும்பிவந்து சேர்வதும், பொது விழாக்கள் நடத்துவதற்குரிய சந்தர்ப்பமாக எப்போதும் செய்யப்பட்டது. இப்படிப்பட்ட படையெடுப்புக்களுக்குக் குலக் கவுன்சிலின் அனுமதி அவசியமில்லை. அதை யாரும் கேட்கவும் இல்லை, யாரும் அளித்ததுமில்லை. டாஸிடஸ் வர்ணித்துள்ளபடி ஜெர்மானியப் பரிவாரங்கள் நடத்திய தனிப்பட்ட படையெடுப்புக்களைப் போலக் கணக்காக ஒரேமாதிரியாக அவை இருந்தன. ஆனால் ஒரு விலக்கு: ஜெர்மானியர்களிடையே பரிவாரங்களின் கூட்டம் ஏற்கனவே மற்றதைவிட நிரந்தரமான தன்மையைப் பெற்றிருந்தது; சமாதான காலங்களில் அது ஒரு பலமான மூலக்கருவாக இருந்தது; போர் மூளும்போது அந்த மூலக்கருவைச் சுற்றிப் பாக்கியிருக்கும் தொண்டர்கள் திரண்டு குழுக்குழுவாய் அமைந்தனர். இப்படிப்பட்ட ராணுவ அணிகள் எண்ணிக்கையளவில் பலமாக இருந்தது அருமையே. இந்தியர்களின் அதிமுக்கியமான ராணுவப் படையெடுப்புக்கள், வெகு தூரம் செல்லவேண்டியிருந்த படையெடுப்புக்கள்கூட, அற்பசொற்பமான படைகளைக் கொண்டே நடத்தப்பட்டன. ஒரு முக்கியமான போருக்காக இப்படிப்பட்ட

படைகள் பல திரளும்போது ஒவ்வொரு குழுவும் தனது தலைவனுக்குத்தான் பணிந்துவந்தது. இந்தத் தலைவர்களின் கவுன்சிலைக் கொண்டு படையெடுப்புத் திட்டத்தின் ஒற்றுமைக்கு ஏறத்தாழ உத்தரவாதம் செய்யப்பட்டது. ஆமியானஸ் மார்ஸெலினஸ் வர்ணித்துள்ளபடி, நான்காம் நூற்றாண்டில் மேல் ரைன் பிரதேசத்தைச் சேர்ந்த அலமான்னிகள் பின்பற்றிய போர் முறை இது.

7. சில குலங்களில் நாம் ஒரு முதன்மைத் தலைவனைக் காண்கிறோம், அவனது அதிகாரங்கள் சொற்பமே. சாகெம்களில் அவனும் ஒருவன்; அவசரமாகச் செயல் புரியவேண்டிய சந்தர்ப்பங்களில், கவுன்சில் கூடி முடிவுகள் எடுக்க முடிகிறவரை, அவனே தாற்காலிக நடவடிக்கைகள் எடுக்கவேண்டும். நிர்வாக அதிகாரத்தோடு கூடிய ஓர் அதிகாரியைச் சிருஷ்டிப்பதற்கு இது ஒரு பலவீனமான முயற்சியே; ஆனால் மேற்கொண்டு ஏற்பட்ட வளர்ச்சி காட்டியது போல, இது பொதுவாகவே பயனற்ற, நன்கு முதிராத முயற்சியே. நாம் பார்க்கப்போகிறபடி, யதார்த்தத்தில் தலையாய ராணுவ தளபதிதான் பெரும்பாலான சந்தர்ப்பங்களில் — எல்லாவற்றிலும் இல்லாவிடினும் கூட — இப்படிப்பட்ட அதிகாரியாக வளர்ந்தான்.

அமெரிக்க இந்தியர்களில் பெரும்பான்மையினர் குல ஒற்றுமைப்பாடு என்ற கட்டத்தைத்தான் என்றுமே போனதில்லை. எண்ணிக்கையில் சிறிதான குலங்களைக் கொண்டிருந்தும், விரிந்த எல்லைப் பிரதேசங்களினால் ஒன்றிலிருந்தொன்று பிரிக்கப்பட்டும், நிரந்தரமான போர்களினால் பலவீனப்படுத்தப்

பட்டும் இருக்கிற இவை கொஞ்சம் மக்களைக் கொண்டு ஒரு பிரம்மாண்டமான பிரதேசத்தை வசியப்படுத்திக் கொண்டிருந்தன. தாற்காலிக அவசர நிலைமையிலிருந்து ஏற்படும் ஒப்பந்தங்கள் இங்குமங்கும் இரத்த உறவு முறையுள்ள குலங்களுடன் செய்து கொள்ளப்பட்டு, அந்த நிலைமை தீரானதும் அவை கலைக்கப்பட்டன. ஆனால் சில வட்டாரங்களில், ஆதியில் இரத்த உறவு கொண்டிருந்து பின்னால் வேற்றுமைப்பட்டுப்போன குலங்கள் மீண்டும் நிரந்தரமான குழுக்கூட்டுக்களில் ஒன்றுபட்டன; அவற்றின் வழியே தேசமாக அமைவதற்கான முதல் நடவடிக்கையை எடுத்தன. அமெரிக்காவில், இப்படிப்பட்ட குழுக்கூட்டின் மிக முன்னேறிய வடிவத்தை இரோகுவாய்களிடையே காண்கிறோம். மிஸ்ஸிஸிபி நதிக்கு மேற்கேயுள்ள தமது ஆதி இருப்பிடங்களிலிருந்து குடிபெயர்ந்து — அங்கே அவர்கள் மாபெரும் டகோடா குடும்பத்தின் கிளையாகப் பெரும்பாலும் அமைந்திருக்கக் கூடும்—நீடித்து அலைந்து திரிந்த பிறகு இன்றைக்கு நியூயார்க் மாகாணமாக இருக்கும் பிரதேசத்தில் குடிதங்கினர். செனிகாக்கள், கயூகாக்கள், ஓனோன்டகாக்கள், ஒனீடாக்கள், மோஹாக்கள் என அவர்கள் ஐந்து குலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தனர். மீன், வேட்டையில் கிடைத்த மிருகங்கள், பண்பற்ற காய்கறித் தோட்டத் தொழில்—ஆகியவற்றைக் கொண்டு அவர்கள் காலந்தள்ளினர். மரக் கிராதி வேலிகளால் பாதுகாக்கப்பட்டு வந்த கிராமங்களில் அவர்கள் வசித்தனர். எப்போதுமே அவர்கள் 20,000க்கு மேல் இருந்ததில்லை; ஐந்து குலங்களுக்கும் பொதுவான சில கணங்கள் அவர்களிடம்

இருந்தன; நெருங்கிய உறவுகொண்ட ஸ்தலமொழிகளை—ஒரே மொழியைச் சேர்ந்தவை அவை—பேசினர்; ஒரே தொடர்ச்சியாக அமைந்திருந்த பிரதேசத்தில் அவர்கள் இருந்தனர்; அது ஐந்து குலங்களிடமும் பிரிக்கப்பட்டிருந்தது. இந்த வட்டாரம் புதிதாக வசப்படுத்தப்பட்டதால், தாங்கள் வெளியேற்றியவர்களை எதிர்த்து இந்தக் குலங்கள் தமக்குள் பழக்கமான கூட்டுறவு கொள்வது இயற்கையே. ரொம்பச் சமீபமாகச் சொன்னால் 15வது நூற்றாண்டின் தொடக்கத்தில் இது ஒரு முறையான "நிரந்தரக் கூட்டுச் சங்கமாக", ஒரு குழுக்கூட்டாக, வளர்ந்தது; அது தனது புதிய பலத்தின் உணர்வு கொண்டு, உடனே ஆக்கிரமிப்புத் தன்மை பூண்டு தனது சக்தியின் உச்சநிலையில்—சுமார் 1675ல்—சுற்றிலுமுள்ள விரிந்த பிரதேசங்களை வசப்படுத்திக் கொண்டது; அவற்றின் வாசிகளில் கொஞ்சம் பேரைத் துரத்திவிட்டு, மற்றவர்களைக் கப்பம் கட்டும்படி நிர்ப்பந்தித்தது. இரோகுவாய்களின் குலக் குழுக் கூட்டுதான் இந்தியர்கள் எட்டிய அதிமுன்னேற்றமுள்ள சமுதாய ஸ்தாபனமாகும்; அப்போது இந்தியர்கள் அநாகரிக நிலையின் கடைக்கட்டத்திலிருந்து வெளிவந்ததில்லை (அதாவது, மெக்ஸிகர்கள், நியூமெக்ஸிகர்கள், பெருவியர்கள் நீங்கலாக). குழுக்கூட்டின் அடிப்படை குணம்சங்கள் பின்வருமாறு:—

1. நிறைவான சமத்துவமும் உள்குலவிவகாரங்களில் சுதந்திரமும் என்ற அடிப்படையில் ஐந்து ரத்த உறவு முறையுள்ள குலங்களிடையே நிரந்தரமான நேச ஒப்பந்தம். இந்த இரத்த உறவுமுறை குழுக்கூட்டின் உண்மையான அடிப்படையாக அமைந்

திருந்தது. ஐந்து குலங்களில் தந்தைக் குலங்கள் என்று மூன்று அழைக்கப்பட்டன — அவை பரஸ்பரம் சகோதரர்களாக இருந்தன; மற்ற இரு குலங்களும் மகன் குலங்கள் என்றழைக்கப்பட்டன — அவையும் தம்மிடையே சகோதரர்களாயிருந்தன. மூன்று கணங்கள்—மிகப் பழமையானவை—இந்த எல்லா ஐந்து குலங்களிலும் உயிரோடுள்ள பிரதிநிதிகளைக் கொண்டிருந்தன; வேறு மூன்று கணங்கள் மூன்று குலங்களில் அவ்வாறே பெற்றிருந்தன. இக்கணங்கள் ஒவ்வொன்றின் அங்கத்தினர்களும் ஐந்து குலங்கள் எல்லாவற்றிலும் சகோதரர்களாக இருந்தனர். வெறும் ஸ்தலமொழி வேறுபாடுகளோடு கூடிய பொது மொழியே பொது வம்சாவளியின் வெளியீடும் சான்றும் ஆகும்.

2. குலக்குழுக் கூட்டின் உறுப்பு ஒரு குழுக் கூட்டுக் கவுன்சிலேயாம்; இதில் ஐம்பது சாகெம்கள் இருப்பார்கள்; எல்லோருக்கும் சம அந்தஸ்து, சம மரியாதை; குழுக்கூட்டு சம்பந்தப்பட்ட எல்லா விவகாரங்களிலும் இதுவே கடைசி முடிவுகள் செய்தது.

3. குலக்குழுக்கூட்டு அமைக்கப்பட்ட காலத்தில் இந்த ஐம்பது சாகெம்களும் குலக்குழுக்கூட்டின் குறிக்கோள்களுக்குப் பொருத்தமாக விசேஷமாகச் சிருஷ்டிக்கப்பட்ட புதிய பதவிகளை வகிப்பவர்களாகக் குலங்களுக்கும் கணங்களுக்குமிடையே விநியோகிக்கப்பட்டிருந்தனர். சாகெம்களின் பதவிகள் காலியாகும்போது சம்பந்தப்பட்ட கணங்கள் அவர்களைப் புதிதாகத் தேர்ந்தெடுத்தன; அவற்றால் அவர்களை என்றைக்கும் நீக்கிவிடமுடியும், ஆனால்

அவர்களைப் பதவியில் அமர்த்தும் உரிமை மட்டும் குலக் குழுக்கூட்டினிடமே இருந்தது.

4. இந்தக் குழுக்கூட்டு சாகெம்கள் தத்தம் குலங்களிலும் சாகெம்களாக இருந்தனர்; குலக் கவுன்சிலிலும் ஒவ்வொருவருக்கும் ஒரு ஸ்தானமும் ஒரு வோட்டும் இருந்தன.

5. குழுக்கூட்டுக் கவுன்சிலின் எல்லா முடிவுகளும் ஒருமனதான முடிவுகளாக இருந்து தீரவேண்டும்.

6. குலரீதியிலேதான் வோட்டளிப்பு; ஆக, ஒவ்வொரு குலமும், ஒவ்வொரு குலத்திலிருக்கும் எல்லா கவுன்சில் அங்கத்தினர்களும் கட்டுப்படுத்தும் ஒரு முடிவு எடுக்கு முன் தமக்குள் ஒத்துப்போயிருக்க வேண்டும்.

7. ஐந்து குலக் கவுன்சில்களில் ஒவ்வொன்றும் குழுக்கூட்டுக் கவுன்சிலைக் கூட்டலாம், ஆனல் கூட்டுக் கவுன்சிலுக்குத் தன்னைத்தானே கூட்ட அதிகாரமில்லை.

8. கூடி இருக்கும் மக்கள் முன் அதன் கூட்டங்கள் நடந்தன. ஒவ்வோர் இரோகுவாய்க்கும் பேச உரிமை இருந்தது; கவுன்சில் ஒன்றே முடிவு எடுத்தது.

9. குலக் குழுக்கூட்டுக்கு அதிகாரபூர்வமான தலைவன் கிடையாது, பிரதான நிர்வாக அதிகாரியும் கிடையாது.

10. இருந்தாலும், அதற்கு இரண்டு மேலான யுத்தத் தலைவர்கள் இருந்தனர்; இருவருக்கும் சம உரிமைகளும் சம அதிகாரமும் உண்டு (ஸ்பார்டா மக்களின் இரண்டு ''அரசர்கள்'', ரோமாபுரியில் இரண்டு கான்சல்கள்).

இந்த முழுமையான சமுதாய முறையின் கீழ் நான் நானூறு ஆண்டுகளுக்கு மேலாக இரோகுவாய்கள் வாழ்ந்தார்கள், இன்னமும் வாழ்ந்துவருகிறார்கள். அதைப் பற்றி மார்கன் சொன்னதைக் கொஞ்சம் விபரமாகவே கொடுத்திருக்கிறேன். காரணம், இன்னமும் அரசு பற்றி அறிந்திராத ஒரு சமுதாயத்தின் ஸ்தாபனத்தை ஆராய்வதற்கு நமக்கு அது வாய்ப்பளிக்கிறது. அரசு ஏற்படுவதற்கு, சம்பந்தப்பட்ட பொதுமக்கள் திரளிலிருந்து வேறாகத் தனித்த ஒரு விசேஷமான பொது அதிகாரம் முதலில் இருந்தாக வேண்டும்; மேலும் ஜெர்மன் மார்க்கின் அமைப்பு அரசிடமிருந்து சாராம்சத்தில் மாறுபட்டிருக்கிற ஒரு சுத்தமான சமுதாயத்தன்மையுள்ள ஸ்தாபனமே, பின்னால் அது அரசுக்கு அடிப்படையாக பெருவாகப் பயன்பட்டதென்றாலும் கூட, என்று மோரார் உண்மையான இயல்புணர்ச்சியோடு அங்கீகரிக்கிறார். எனவே, மார்க்குகள், கிராமங்கள், மேனார்கள், நகரங்கள் ஆகியவற்றின் ஆதி அமைப்பு முறையிலிருந்தும் அதற்கு அக்கம் பக்கமாகவும் பொது அதிகாரம் படிப்படியாக எழுவதை மோரார் தமது எல்லா நூல்களிலும் ஆராய்கிறார். ஆதியில் ஒன்றுபட்டிருந்த குலம் படிப்படியாக ஒரு பிரம்மாண்டமான கண்டத்திலே பரவிப் படர்ந்தது எப்படி என்று வட அமெரிக்க இந்தியர்கள் காட்டுகின்றனர்; பிரிவினை மூலமாக, குலங்கள் எப்படி மக்கள் சமூகங்களாக, முழுமையான குலங்களின் குழுக்களாக ஆயின என்றும் காட்டுகின்றனர். பரஸ்பரம் புரிந்துகொள்ள முடியாதவையாக அமையும்வரை மொழிகள் மாறிவந்ததுமட்டுமன்றி, ஆதி

ஒற்றுமையின் ஒவ்வோர் அடையாளக் குறியும் மறைந்தொழியும்வரை அவை எப்படி மாறிவந்தன என்றும் காட்டுகின்றனர்; அதே சமயத்தில், குலங்களிலுள்ள தனித்தனி கணங்கள் எப்படிப் பலவாகப் பிளவுண்டுபோயின என்றும் காட்டுகின்றனர்; பழைய தாய்க்கணங்கள் எப்படி பிராட்ரிகளாக நிலையூன்றியிருந்தன, இந்த மிகப்பழைமையான கணங்களின் பெயர்கள் மிகமிகத் தொலைவிலுள்ள, நீண்டகாலமாகப் பிரிந்துபோயுள்ள குலங்களிலும் அதேபோல் எப்படி இருந்து வருகின்றன என்றும் காட்டுகின்றனர்—இந்தியக் குலங்கள் பெரும்பாலானவற்றில் ஓநாய், கரடி என்பவை இன்னும் கணப் பெயர்களாக இருந்துவருகின்றன. பொதுவாகச் சொன்னால், மேலே வர்ணித்த சமுதாய அமைப்பு எல்லோருக்கும் பொருந்தும், அவற்றில் பல இரத்த உறவுள்ள குலங்கள் குலக்குழுக்கூட்டு என்ற அளவுக்குப் போய்ச்சேரவில்லை என்பது ஒன்று நீங்கலாக.

ஆனால், கணம் ஒரு சமுதாய மூலக்கூறாக அமைந்ததுமே இந்த மூலக்கூறிலிருந்து கணங்கள், பிராட்ரிகள், குலம் ஆகியவற்றின் முழு அமைப்பும் அநேகமாக நிர்ப்பந்தமான அவசியத்தை—ஏனெனில் அது இயல்பே—முன்னிட்டு வளர்வதைக் காண்கிறோம். அவை மூன்றும் ரத்த உறவு முறையைப் பல்வேறு அளவுகளில் கொண்டிருந்த குழுக்களே; அவற்றில் ஒவ்வொன்றும் தன்னுள் நிறைவுள்ளது; தன் விவகாரங்களைத் தானே கவனித்துக்கொள்கிறது; அதே பொழுதில் ஒவ்வொன்றும் மற்றவற்றிற்குத் துணையாக இருக்கிறது. மேலும், அவற்றின் பொறுப்பில் வந்துசேருகிற விவகாரத்துறையும் கடைக்கட்

டத்திலிருக்கிற அநாகரிகர்களின் பொது விவகாரங்கள் அனைத்தையும் தன்னுள் அடக்கியதாயிருந்தது. எனவே, சமுதாய மூலக்கூறுகக் கணத்தை நாம் பார்க்கிற இடங்களிலெல்லாம் மேலே வர்ணித்ததற்கொப்பான குலத்தின் ஸ்தாபனம் ஒன்றும் இருக்கும் என்று எதிர்பார்க்கலாம்; மேலும், போதிய மூலாதார விஷயங்கள் இருக்கிற இடங்களில்—உதாரணமாக, கிரேக்கர்களிடையே, ரோமானியர்களிடையே இருந்தது போல—நாம் அவற்றைக் காண்பது மட்டுமன்றி, எங்கே மூலாதார விஷயங்கள் இல்லையோ அங்கே அமெரிக்க சமுதாய அமைப்புமுறையுடன் ஒப்புநோக்குவது நம்மை மிக மிகக் கடினமான சந்தேகங்களிலிருந்தும் புதிர்களிலிருந்தும் கரையேற்றிவிடும் என்றும் நம்மை நாமே தெளிவுபடுத்திக்கொள்ளலாம்.

மேலும், இந்தக் கண முறை அதன் குழந்தைத் தன்மையதான எளிமையிலே அற்புதமாக இருக்கிறது! போர் வீரர்கள், போலீஸ் யாருமின்றி, பிரபுக்கள், அரசர்கள், கவர்னர்கள், நீதிபதிகள் யாருமின்றி, சிறைக்கூடங்களின்றி, கோர்ட்டு வழக்குகளின்றி, எல்லாமே ஒழுங்காக நடைபெறுகின்றன. எல்லாச் சண்டை சச்சரவுகளும், சம்பந்தப்பட்ட எல்லோராலும் தீர்த்துவைக்கப்படுகின்றன—கணமும், குலமும், தனிப்பட்ட கணக் குழுக்களும் தமக்குள்ளே தீர்த்துக் கொள்கின்றன. மிகத் தீவிரமான, அதுவும் அருமையாக அமுல் நடத்தப்படுகிற நடவடிக்கையாகவே இரத்தப் பழி வாங்குதல் பயமுறுத்துகிறது; அதன் நாகரிக வடிவமே நமது மரண தண்டனை என்பது, இதற்கு நாகரிகத்

தின் எல்லா அனுகூலங்களும் குறைகளும் உள்ளன. இன்றிருப்பதைவிடப் பற்பல விவகாரங்கள் பொது வில் இருந்தபோதிலும் கூட—பொதுவிலும், பொது வுடைமை வகையிலும் வீட்டு விவகாரங்கள் பல குடும்பங்களால் நடத்திச் செல்லப்படுகின்றன; நிலம் குலத்தின் உடைமை; சிறிய தோட்டங்கள் மட்டுமே குடும்பங்களுக்குத் தாற்காலிகமாகத் தரப்படுகின்றன —நமது விரிவான, சிக்கலான நிர்வாக யந்திரத்தில் ஒரு துணுக்குகூட அவசியப்படவில்லை. சம்பந்தப்பட் டவர்கள் முடிவெடுக்கிறார்கள், அநேக விஷயங் களில் தொன்றுதொட்டு வந்துள்ள பழக்கம் எல்லா வற்றையும் முறைப்படுத்தியுள்ளது. ஏழை, இல்லா தவன் என்று யாரும் இருக்கமுடியாது—முதியோர் கள், நோயாளிகள், யுத்தத்தில் அங்கஹீனர்களான வர்கள் விஷயத்தில் பொதுவுடைமை வகைப்பட்ட குடும்பமும் கணமும் தமது கடமைகளை உணர்ந் திருக்கின்றன. எல்லோரும் சுயேச்சையானவர்கள், சமமானவர்கள்—பெண்கள் உள்பட. இன்னும் அடி மைகளுக்கு இடமில்லை; அந்நிய குலங்களை அடிமைப் படுத்துவதற்கும், ஒரு விதியாக, இன்னும் இடமில் லாமலே இருந்தது. ஏரீக்களையும், ''நடுநிலை இனங் களையும்'' 1651ம் ஆண்டு வாக்கில் இரோகுவாய்கள் வென்றபோது, அவர்களைக் குலக்குழுக்கூட்டில் சம அங்கத்தினர்களாகச் சேரும்படி அழைத்தார்கள்; தோற்கடிக்கப்பட்டவர்கள் மறுத்த போது தான் அவர்கள் தங்கள் பிரதேசத்திலிருந்து துரத்தியடிக் கப்பட்டார்கள். இப்படிப்பட்ட சமுதாயத்தால் சிருஷ்டிக்கப்படுகிற ஆண்கள், பெண்கள் எவ்வகைப் பட்டவர்கள் என்பதைக் கெடுக்கப்படாத இந்

தியர்களுடன் தொடர்பு கொண்ட எல்லா வெள்ளை யர்களும் அடைந்த உவப்பே காட்டுகிறது; இந்த அநாகரிகர்களின் தன்மதிப்பு, நேர்மை, குண பலம், தைரியம் பற்றிய உவப்பு அது.

ஆப்பிரிக்காவில் இந்தத் தைரியத்துக்கு நாம் சமீபத்தில் உதாரணங்களைக் கண்டோம். சில மாதங் களுக்கு முன் நூபியர்களைப் போல், சில ஆண்டு களுக்குமுன் ஜூலூ கபீர்களும்[1] — இவ்விரு குலங் களிலும் கண ஸ்தாபனங்கள் இன்னும் இறந்து விடவில்லை — எந்த ஐரோப்பிய ராணுவமும் செய்யமுடியாததைச் செய்துள்ளனர். வெறும் குத் துக்கோல்களும் ஈட்டிகளுமே அவர்களது ஆயுதங் களாயிருந்தன; துப்பாக்கி வகையறுக்கள் ஏது மில்லை. மறுபுறமோ துப்பாக்கிகள் குண்டுமாரி பொழிந்தன. ஆயினும் இவர்கள் நெருக்கமாக அணிவகுத்துப் போராடுவதில் உலகிலேயே தலை சிறந்தவர்கள் என்று ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கும் ஆங்கிலேயக் காலாட் படையினரின் துப்பாக்கிச் சனியன்கள் வரைக்கும் முன்னேறி அவர்களை அணி குலைந்து சிதறச் செய்து, சில தடவைகள் பின்னடை யவும் செய்தார்கள். இவ்வளவிற்கும் ஆயுதபலத் தில் பிரம்மாண்டமான வேறுபாடு இருந்தது, ராணுவச் சேவை ஒன்றும் அவர்களுக்குக் கிடை யாது; ராணுவப் பயிற்சிகள் என்னவென்றே அவர் கள் அறியார். 24 மணி நேரத்தில் ஒரு குதிரையை

[1] 1879ல் பிரிட்டிஷ்காரர்களுக்கும் ஜூலூக்களுக்கும், 1883ல் பிரிட்டிஷ்காரர்களுக்கும் நூபியர்களுக்கும் இடை யே நடந்த யுத்தங்களை இது குறிக்கிறது.—**பதிப்பாசிரியர் கள்.**

விட அதிக வேகமாக, அதிக தூரம் கயிறால் ஓட முடிகிறது என்று ஆங்கிலேயர்கள் குறைப்பட்டுக் கொண்டதே அவர்களின் திறனுக்கும், தாங்கும் சக்திக்கும் சிறப்பான சான்றாகும். ஓர் ஆங்கிலேய ஓவியர் சொல்கிறமாதிரி அவர்களுடைய சின்னஞ் சிறிய தசைநார் கூடக் கசைக்கயிறுபோல் கடினமாகவும் உருக்குபோலவும் முறுக்கேறியிருக்கிறது.

வர்க்கப் பிரிவினைகள் எழுமுன் மனிதர்களும் மனித சமுதாயமும் இருந்த நிலை இதுவே. அன்றைய மனிதரின் நிலைமையை இன்று நாகரிக மக்களில் மிகப்பெரும்பாலோரின் நிலைமையோடு நாம் ஒப்பிட்டால் இன்றைய பாட்டாளி, சிறு விவசாயி ஆகியவர்களுக்கும் பண்டைக்காலக் கணத்தின் சுதந்திரமுள்ள அங்கத்தினனுக்கும் இடையே பிரம்மாண்டமான பள்ளம் இருக்கக் காண்போம்.

சித்திரத்தின் ஒரு பக்கம் இது. இருந்தாலும், இந்த ஸ்தாபனம் அழியவிதிக்கப்பட்டிருந்தது என்பதை நாம் மறக்கவேண்டாம். குலத்துக்கு அப்பால் அது வளரவில்லை; குலங்களின் குழுக்கூட்டு நாம் பின்னால் பார்க்கப் போவது போல, அதன் வீழ்ச்சியின் துவக்கத்துக்குச் சமிக்ஞையாக விளங்கியது; இந்த விஷயத்தை இரோகுவாய்கள் மற்றவர்களை அடிமைப்படுத்தச் செய்த முயற்சிகளும் காட்டியுள்ளன. குலத்துக்குவெளியே இருந்தவை எல்லாம் சட்டத்துக்குப் புறம்பானவை. திட்டமாகச் சமாதான ஒப்பந்தங்கள் இல்லாத இடங்களில், குலங்களிடையே போர் நடந்து கொண்டிருந்தது; மற்றெல்லா மிருகங்களிடமிருந்தும் மனிதனை வேறுபடுத்திக்காட்டும் கொடூரத்துடன் போர் நடத்

நப்பட்டது; சுயநலத்தை முன்னிட்டுத்தான் பின்னுல் இந்தக் கொடுரம் நுணிக்கப்பட்டது. நாம் அமெரிக்காவில் பார்த்ததுபோல் கண முறை பூர்ண மலர்ச்சி பெற்றிருக்கவேண்டுமானுல் அதற்கு முன்பாக மிகவும் வளர்ச்சிபெற்றிராத ஓர் உற்பத்தி வடிவம் இருந்தாகவேண்டும்; அதாவது சொற்ப எண்ணிக்கையிலுள்ள மக்கள் மிக விரிவான நிலப் பரப்பில் பரவிக்கிடப்பதன் காரணமாக, புறநிலையிலுள்ள இயற்கை, மனிதனுக்கு வேருக, எதிரியாக, புரியாததாக இருந்து, அவன்மேல் பூர்ண ஆதிக்கம் செலுத்திவரவேண்டும்; இந்த ஆதிக்கம் அவனது குழந்தைத்தனமான மதக்கருத்துக்களில் பிரதிபலிக்கிறது. குலம் மனிதனுக்கு, தன் சம்பந்தமாகவும், வெளியார் சம்பந்தமாகவும் எல்லாமாக இருந்து வந்தது. குலம், கணம், அவற்றின் ஸ்தாபனங்கள் புனிதமானவை, மீறக்கூடாதவை, இயற்கையால் அமைக்கப் பெற்ற மேலான சக்தி; உணர்ச்சி, சிந்தனை, செய்கை யாவற்றிலும் அதற்கு மனிதன் பூர்ணமாக அடிமைப்பட்டு இருந்து வந்தான். இந்தச் சகாப்தத்தின் மக்கள் மனத்தைக் கவரத் தக்கவர்களாக நமக்குத் தோன்றின போதிலும், அவர்கள் ஒருவர்க்கொருவர் வித்தியாசமே இல்லாமலிருந்தனர்; மார்க்ஸ் சொல்கிறபடி, ஆதிகாலச் சமூகத்தின் கொப்பூழ்க் கொடியுடன் அவர்கள் பிணைக்கப்பட்டிருக்கிருர்கள். இந்த ஆதிகால சமூகத்தின் சக்தியை உடைக்கவேண்டியதாயிருந்தது, அது உடைக்கவும் பட்டது. ஆனுல், அதை உடைத்த செல்வாக்குச் சக்திகள் பண்டைக்காலத்திய கண சமுதாயத்தின் எளிமையான தார்மீக

மேன்மையிலிருந்து வந்துற்ற வீழ்ச்சியாகவும், இழிநிலையாகவும் நமக்குத் தொடக்கத்திலிருந்தே தோன்றுகின்றன. மிகவும் இழிந்த நலன்களே—ஈனத்தனமான பேராசை, மிருகத்தனமான காம வெறி, பொருளாசைமிக்க பணப்பித்து, பொதுச் சொத்துக்களைச் சுயநலத்துக்காகக் கொள்ளையிடுதல் ஆகியன—புதிய, நாகரிகச் சமுதாயத்தை, வர்க்கச் சமுதாயத்தைக் கட்டியங்கூறி வரவேற்கின்றன. மிக மிகக் கொடுமையான வழிவகைகள்—திருட்டு, கற்பழித்தல், ஏமாற்றல், நம்பிக்கைத் துரோகம் ஆகியவை—வர்க்கங்களற்ற, பழைய கண சமுதாயத்துக்குக் குழிபறித்துக் குப்புறத் தள்ளிவிடுகின்றன. மேலும், இந்தப் புதிய சமுதாயம், அதன் 2,500 ஆண்டுகாலத்திய வாழ்வில், சுரண்டப்படுகிற, ஒடுக்கப்படுகிற மிகப் பெரும்பான்மையினருக்குப் பாதகமாக அற்பச் சிறுபான்மையினரின் வளர்ச்சியாக இருந்து வந்துள்ளதே தவிர வேறொன்றுமில்லை; அது முன்னைவிட இன்று கூடுதலாகவே அவ்வாறிருக்கிறது.

## IV

### கிரேக்க கணம்

கிரேக்கர்களும், பெலாஸ்கியர்களும், ஒரே குலத்தோற்றுவாயிலிருந்து வந்த பிற மக்கள் சமூகங்களும் அமெரிக்கர்களைப்போலவே ஏட்டறியா வரலாற்றுக் காலத்திலிருந்தே கணம், பிராட்ரி, குலம், குலக்குழுக்கூட்டு என்ற அமைப்பு வரிசை கொண்டிருந்தனர். பிராட்ரி இல்லாமற்போய்விடலாம்; உதாரணம், டோரியர்களிடையே அது இல்லை. குலக்

குழுக்கூட்டு எங்குமே முழுவதாக இன்னும் வளர்ச்சி பெறுதிருக்கலாம்; ஆனால், எவ்விடத்திலுமே கணம் மூலக்கூறாக இருந்து வந்தது. கிரேக்கர்கள் வரலாற்றில் நுழைந்த காலத்தில், அவர்கள் நாகரிகத்தின் வாயிற்படியில் இருந்தார்கள். கிரேக்கர்களுக்கும் மேலேசொன்ன அமெரிக்கக் குலங்களுக்கும் இடையே மாபெரும் இரண்டு முழுமையான சகாப்தங்கள் இருக்கின்றன; அந்த அளவுக்கு மாவீரர் சகாப்தத்தைச் சேர்ந்த கிரேக்கர்கள் இரோகுவாய்களை விட்டு முன்சென்றிருக்கிறார்கள். இந்தக் காரணத்துக்காகவே, இரோகுவாய் கணத்தின் பழைமையான தன்மையை கிரேக்க கணம் பெற்றிருக்கவில்லை. குழு மணத்தின் முத்திரை கணிசமான அளவுக்கு மங்கலாகிக் கொண்டிருந்தது. தாயுரிமை தந்தையுரிமைக்கு வழிவிட்டு நின்றது; அதனால் மேலேறிவருகிற தனிச்சொத்து கண அமைப்பில் முதல் உடைப்பை உண்டாக்கியது. முன்னைத் தொடர்ந்து இயல்பாகவே இரண்டாவது உடைப்பும் ஏற்பட்டது: தந்தையுரிமை புகுத்தப்பட்டபிறகு, பணக்காரப் பெண்வாரிசின் செல்வம், திருமணத்தின் காரணத்தால், அவளது கணவனைச் சேர்ந்ததாகும், அதாவது, இன்னொரு கணத்துக்குச் சேர்ந்ததாகும்; ஆக கண சட்டம் அனைத்தின் அடிப்படையும் உடைத்தெறியப்பட்டது; இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் அந்தப் பெண் தன் கணத்துக்குள்ளேயே மணந்து கொள்ள அனுமதிக்கப்பட்டதுமன்றி, அப்படி மணப்பது **கடமையாகவும்** ஆக்கப்பட்டது—கணத்திடம் செல்வம் தங்கியிருப்பதற்காக.

குரோட் வரைந்த ''கிரேக்க வரலாறு'' என்ற நூலின்படி, அதீனிய கணம் பின்வருவனவற்றால் பிணைக்கப்பட்டிருந்தது:

1. பொதுவான மதச் சடங்குகள், கணத்தின் ஆதி மூதாதை எனக் கருதப்பட்டு, விசேஷப் பெயர் அளிக்கப்பட்டிருந்த ஒரு தெய்வத்துக்கு வணக்கம் தெரிவிக்கும்பொருட்டுப் புரோகிதர்களுக்கு விசேஷச் சலுகையுரிமைகள்.

2. பொதுவான இடுகாடு ஒன்று. (டெமாஸ்தேனஸ் எழுதிய ''யூபுலிடி''ஸை ஒப்புநோக்குக.)

3. பரஸ்பர வாரிசுரிமைகள்.

4. பலாத்காரத்தை உபயோகிப்பதற்கு எதிராக ஒருவர்க்கொருவர் உதவி, பாதுகாப்பு, ஆதரவு அளிப்பது.

5. சில சந்தர்ப்பங்களில் கணத்துக்குள்ளேயே மணக்கும்படி பரஸ்பர உரிமையும் கடமையும், குறிப்பாகப் பெற்றோர்களற்ற பெண்கள் அல்லது பணக்காரப் பெண்வாரிசுகளுக்கு.

6. குறைந்தபட்சம் சில சந்தர்ப்பங்களிலாவது, பொதுச் சொத்துக்கு உடைமை கொண்டிருத்தல்; அதற்கென்று ஓர் 'ஆர்ஹொ'னும் (தலைவன்) பொருளாளரும் இருத்தல்.

பல கணங்களைப் பிணைத்துவைத்திருந்த பிராட்ரி இன்னும் குறைவான நெருங்கிய உறவு கொண்டிருந்தது; ஆனால் இங்கேயும் இதேபோன்ற தன்மையுள்ள பரஸ்பர உரிமைகளையும் கடமைகளையும் காண்கிறோம், விசேஷமாகக் குறிப்பிட்ட மதச் சடங்குகளில் ஒன்று குழுமித் தொழுதல், பிராட்ரி

அங்கத்தினன் கொல்லப்பட்டால் அதற்கு வழக்குத் தொடுக்கும் உரிமை ஆகியவற்றில் இதைக் காண்கிறோம். மேலும், ஒரு குலத்தின் எல்லா பிராட்ரிகளும் சில பொதுவான புனிதச் சடங்குகளைப் பிரபுக்களிடையே ('எவுபட்ரிடு'களிலிருந்து) பொறுக்கப்பட்ட 'பிலோபசீலியஸ்' (குலத் தலைவன்) என்பவனின் தலைமையின்கீழ் குறித்த கால முறைப்படி நடத்தின.

இது குரோட் எழுதியது. இதோடு மார்க்ஸ் கூடுதலாகச் சொல்வதாவது: ''கிரேக்க கணத்தில் காட்டுமிராண்டி (உதாரணம், இரோகுவாய்) தவறுக்கிடமின்றிக் காணப் படுகிறான்.'' மேலும் நாம் பரிசீலிக்கும்போது அவன் இன்னும் நன்றாகத் தெரிகிறான்.

ஏனெனில் கிரேக்க கணத்துக்குப் பின்வரும் லட்சணும்சங்களும் உண்டு:

7. தந்தையுரிமைப்படி வம்சாவளி.

8. பணக்காரப் பெண் வாரிசு நீங்கலாக மற்றவர்கள் கணத்துக்குள்ளே மணப்பதற்குத் தடை. இந்த விலக்கும், அதை ஒரு கட்டளையாக வரையறுத்திருப்பதும், பழைய விதியின் செல்லத்தக்க தன்மையைத் தெளிவாக நிரூபிக்கின்றன. ஒரு பெண் மணக்கும்போது அவள் தனது கணத்தின் மதச்சடங்குகளையும் கைவிடுகிறாள், தன் கணவனுடைய கணத்தின் மதச்சடங்குகளைப் பெறுகிறாள், கணவனின் பிராட்ரியில் அவள் சேர்க்கப்படுகிறாள் என்று எங்கும் ஒப்புக்கொள்ளப்பட்ட விதியிலிருந்து இது தொடர்கிறது, இதுவும், டிகாயேர்கஸுடைய நூலின் புகழ்பெற்ற ஒரு பகுதியும் கணத்துக்கு

வெளியே மணப்பதுதான் விதி என்று குசுட்டிக்கின் றன. ''ஹாரிகிள்ஸ்'' என்பதில் பெக்கர் ஆணோ பெண்ணோ யாரும் தமது கணத்துக்குள்ளே மணக்க அனுமதிக்கப்படவில்லை என்று நேரடியாகவே கருது கிறான்.

9. கணத்தினுள் சுவீகரித்துக்கொள்ளும் உரிமை; குடும்பத்தால் சுவீகாரம் செய்வதின்வழியாக, ஆனால் பொதுச் சடங்குகளோடு இது வழங்கப்பட்டது, அதுவும் அசாதாரணமான சந்தர்ப்பங்களில் மட்டுமே.

10. தலைவர்களைத் தேர்ந்தெடுக்கவும் நீக்கவும் உரிமை. ஒவ்வொரு கணத்துக்கும் ஓர் ஆர்ஹன் இருந் தான் என்பதை நாம் அறிவோம்; ஆனால், இந்தப் பதவி சில குடும்பங்களில் பரம்பரையாக வரக்கூடி யது என்று எங்குமே சொல்லப்படவில்லை. அநாகரிகக் காலத்தின் முடிவு வரைக்கும் பரம்பரைக்குத் திட்ட மான முக்கியத்துவம் அளிப்பதற்கு எதிராகவே நிலைமை பெரும்பாலும் இருந்தது; கணத்துக்குள் ளே ஏழை செல்வர்களிடையே முழு சமத்துவம் நிலவிய படியால் இத்தகைய முக்கியத்துவம் அற வே பொருத்தமற்றது.

குரோட் மட்டுமல்ல, நீபூர், மாம்ஸென், இன் னும் முந்தைய சரித்திராசிரியர்கள் அனைவரும் கணம் என்ற பிரச்சினையைத் தீர்க்கத் தவறினார் கள். அதன் வேறுபடுத்திக் காட்டுகிற முக்கிய மான குணும்சங்களில் பலவற்றை அவர்கள் சரி யாகக் குறித்தார்கள் என்றாலும், அதைக் **குடும் பங்களின் குழுவாகவே** அவர்கள் என்றைக்கும் கருதி வந்து, அதன் மூலம் கணத்தின் தன்மையையும்

தோற்றுவாயையும் தாங்களே புரிந்துகொள்வதற்குக்கூடச் சாத்தியமில்லாதபடி செய்துவிட்டார்கள். கண முறையில், ஸ்தாபனத்தின் மூலக்கூருகக் குடும்பம் என்றைக்கும் இருந்ததில்லை, இருந்திருக்கவும் முடியாது; ஏனெனில் கணவனும் மனைவியும் அவசியகரமாகவே வேறுபட்ட இரண்டு கணங்களைச் சேர்ந்தவர்களாயிருந்தனர். கணம் முழுவதும் பிராட்ரிக்குச் சொந்தம்; பிராட்ரி முழுவதும் குலத்துக்குச் சொந்தம்; ஆனால் குடும்பத்தின் விஷயத்திலோ அதில் ஒரு பாதி கணவனின் கணத்துக்கும் மறு பாதி மனைவியின் கணத்துக்கும் சொந்தம். அரசும் கூடப் பொதுச் சட்டத்தில் குடும்பத்தை அங்கீகரிக்கவில்லை; இன்றைக்குங்கூட அது சிவில் சட்டத்தில்தான் இருக்கிறது. ஆனபோதிலும், இதுவரை ஏடறிந்த வரலாற்றை ஆராயும் நமது சரித்திராசிரியர்கள் அனைவரும் தனிப்பட்ட ஒருதாரக் குடும்பத்தை மூலக்கருவாகக் கொண்டு அதைச் சுற்றியே சமுதாயமும் அரசும் படிப்படியாக உருவாயின என்ற கருத்தைத் தொடக்கப் புள்ளியாக வைத்தே மேல் செல்கின்றனர். உண்மையில், ஒருதாரக் குடும்பம் நாகரிகக் காலத்துக்கு மிக முற்பட்டதல்ல. ஆகவே முந்தையக் கருத்து அபத்தமான கற்பனையே. எனினும் குறிப்பாக 18ம் நூற்றாண்டில் இது மீறமுடியாத கருத்தாக நிலைபெற்றுவிட்டது.

மார்க்ஸ் மேலும் சொல்லுகிறார்: ''திரு குரோட் தயை செய்து இதையும் கவனிக்கட்டும்: கிரேக்கர்கள் தமது கணங்களைப் புராணத்தைக் காட்டி மூலங்குறித்தார்கள் என்றாலும், **தாங்களே சிருஷ்டித்த**, தெய்வங்களையும் தெய்வாம்ச புருஷர்

களையும் கொண்ட அந்தப் புராணத்தைவிடக் கணங்கள் வயதில் மூத்தவையாகும்.''

ஒரு மிக முக்கியமான, சந்தேகப்படாத சாட்சி என்ற வகையில் குரோட்டைமார்கன் விருப்பத்தோடு மேற்கோள் காட்டுகிறார். ஒவ்வோர் அதீனிய கணமும் தனது புகழ்பெற்ற மூதாதையிலிருந்து பெறப்பட்ட பெயரைத் தனக்குச் சூட்டிக் கொண்டிருந்தது என்று மேலும் அவர் கூறுகிறார். சொலான் காலத்துக்கு முன்பும் பொதுவிதியாகவும், அதற்குப் பின்பும் ஒருவன் சொத்தை உயிலெழுதிவைக்காமல் இறந்து போனாலும் அவனது சொத்துக்கு அவனது கண அங்கத்தினர்கள் (gennètes) வாரிசானார்கள் என்றும், ஒருவன் கொல்லப்பட்டால் முதலில் அவனது உறவினர்களும், அதற்கடுத்தபடி கண அங்கத்தினர்களும், கடைசியாக பிராட்ரி அங்கத்தினர்களும், குற்றவாளிமீது நீதி மன்றங்களில் வழக்குத் தொடர உரிமையும் கடமையும் பெற்றுள்ளனர் என்றும் ''அதி பண்டைக்கால அதீனிய சட்டங்களைப் பற்றி நாம் கேள்விப்படுகிறவையெல்லாம் கணப் பிரிவுகளையும் பிராட்ரிப் பிரிவுகளையும் அடிப்படையாகக் கொண்டுள்ளன'' என்றும் அவர் சொல்கிறார்.

பொது மூதாதையரிடமிருந்து கணங்கள் வழி வந்தமை ''பள்ளிப்படிப்புள்ள பிலிஸ்டைன்களுக்கு'' (மார்க்ஸ்) மண்டை வலியுண்டாக்கும் ஒரு புதிராகவே இருந்து வந்திருக்கிறது. இது இயற்கைதான்; இந்த மூதாதையர்களெல்லாம் வெறும் கட்டுக்கதை என்று அவர்கள் சாதிப்பதால் கணங்கள் எப்படி தனித்தனியான, வேறுபட்டுள்ள, ஆதியில் அறவே உறவின்றியிருந்த குடும்பங்களிலிருந்து வளர்ச்சி

பெற்றன என்று விளக்கத் தெரியாமல் விழிக்கின்ற னர்; இருந்தாலும் கணங்கள் இருப்பதை விளக் குவதற்காகவாவது எப்படியாகிலும் இதை அவர் கள் விளக்கியாகவேண்டும். எனவே ஒரு சொற்சுழ லில் சுற்றிச் சுற்றி வருகிருர்கள். வம்சாவளி என்பது கட்டுக்கதை தான், ஆனல் கணம் என்பது உண்மையே என்ற தொடர்மொழியைவிட்டு மே லே போகவில்லே. இறுதியிலே, குரோட் சொல்கி ருர்—அடைப்புக் குறிகளுக்குள் இருக்கும் கூற்றுக் கள் மார்க்ஸ் எழுதியவை—''மிக அருமையாகத் தான் இவ்வம்சாவளியைப் பற்றி நாம் கேள்விப்படு கிருேம்; ஏனெனில் பிரசித்தி பெற்ற வணங்கத் தக்க சில விஷயங்களில்தான் இது பகிரங்கத்துக்குக் கொண்டுவரப்படுகிறது. ஆனல், அதைவிட அற்ப மான கணங்கள் தமது பொதுக் கிரியைகளைப் பெற் றிருந்தன [இது கொஞ்சம் விசித்திரமானதுதான், மிஸ்டர் குரோட்!], பொதுவான அமானுஷ்ய மூதா தையையும் வம்சாவளியையும் பெற்றிருந்தன— அதைவிடப் பிரசித்தி பெற்ற கணங்கள் பெற்றிருந்த மாதிரியே [அற்பமான கணங்கள்! எவ்வளவு விசித் திரமாயுள்ளது, திரு குரோட்!] அமைப்புத் திட்ட மும் மானசிக அடிப்படையும் [அன்புடையீர், இது மானசிகமல்ல, சரீரவகை] எல்லாவற்றிலும் ஒன்ருக வே இருந்தன''.

இதற்கு மார்கன் தந்த பதிலேப் பின்வருமாறு மார்க்ஸ் சுருக்கித் தருகிருர்: ''ஆதிவடிவத்திலிருந்த கணத்துக்கு—மற்ற மனிதர்களைப்போலவே கிரேக் கர்களும் இதைப் பெற்றிருந்தனர்—பொருத்தமான ரத்த உறவுமுறை எல்லாக் கண அங்கத்தினர்களின்

பரஸ்பர உறவு பற்றிய ஞானத்தைப் பாதுகாத்து வந்தது. குழந்தைப் பருவத்திலிருந்தே நடைமுறையின் வழியே தங்களுக்கு மிகுந்த முக்கியத்துவம் கொண்டுள்ள இந்த விஷயத்தை அவர்கள் அறிந்திருந்தார்கள். ஒருதார மணக் குடும்பம் வந்ததும் இது மறைந்துபோயிற்று. கணப்பெயர் ஒரு வம்சாவளியை உண்டாக்கியது. அத்துடன் ஒப்பிட்டால் ஒருதார மணக் குடும்பத்தின் வம்சாவளி அற்பமாகப் பட்டது. இப்போது இந்தப் பெயர் அதைத் தாங்கியிருப்பவர்களுக்குத் தமது பொது மூதாதை விஷயத்தைச் சாட்சியப்படுத்துவதற்காகத்தான். ஆனால் கணத்தின் வம்சாவளி எவ்வளவோ பின்னுக்குச் சென்றதால் அதன் அங்கத்தினர்கள், அதிகச் சமீபகாலத்திய மூதாதையர்களையுள்ள சிலர் நீங்கலாக, இப்போது தமது பரஸ்பர உண்மை ரத்த உறவை நிரூபிக்கமுடியவில்லை. ஒரு பொது மூதாதைமைக்குப் பெயரே ஒரு சான்றாக, முடிவான சான்றாக இருந்தது—சுவீகாரங்கள் மட்டும் இதற்கு விலக்கு. இன்னொரு பக்கத்தில், குரோட்டும் நீபூரும் செய்கிறபடி கண அங்கத்தினர்களிடையே எல்லா ரத்த உறவுமுறையையும் உண்மையிலே மறுப்பது— இது கணத்தை மூளையின் வெறும் கட்டுக்கதையான கற்பனை சிருஷ்டியாக மாற்றிவிடுகிறது — ''மானசிக'' விஞ்ஞானிகளுக்கு, அதாவது அறைகளுக்குள் அடைபட்ட புத்தகப் பூச்சிகளுக்கு, ஏற்புடையதாகும். குறிப்பாக ஒருதார மணமுறை முளைவிடத் தொடங்கியதிலிருந்து தலைமுறைகளின் பரஸ்பரத் தொடர்பு தூரத்துக்குக் கொண்டு போகப்பட்டிருப்பதாலும் சென்ற காலத்தின் யதார்த்தம் புராணக் கற்பனையில் பிரதி

பலிப்பதாகத் தோன்றுவதாலும், நமது அப்பாவி பிலிஸ்டைன்கள் கற்பனையிலுதித்த வம்சாவளி உண்மையான கணங்களைச் சிருஷ்டித்தது என்று முடிவு செய்தார்கள், முடிவு செய்தும் வருகிறார்கள்!''

அமெரிக்கர்களிடையே இருப்பது போலவே, **பிராட்ரி** ஒரு தாய்க் கணமே, அது பல சேய்க்கணங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது, அதே சமயத்தில் அது அவற்றை ஒற்றுமைப் படுத்தியுமுள்ளது, அவையெல்லாம் ஒரு பொது மூதாதையிலிருந்து உதித்ததாக வம்சாவளி காட்டியும் வந்துள்ளது. எனவே, குரோட் சொல்கிறபடி, ''ஹெகடேயின் பிராட்ரியின் சம காலத்திய அங்கத்தினர்களும் பதினாறுவது பரம்பரை ரத்த உறவு உள்ள மூதாதையாக ஒரு பொதுவான தெய்வத்தைக் கொண்டிருந்தனர்''. எனவே இந்த பிராட்ரியின் எல்லாக் கணங்களும் நிஜமாகவே சகோதரக் கணங்களாகும். பிராட்ரி பிராட்ரிக்குத் துணை போகிற மாதிரி இருக்கவும் குலம் குலத்துக்குத் துணை போகிற மாதிரி இருக்கவும் துருப்புக்களை பிராட்ரிகளாகவும் குலங்களாகவும் அணிவகுத்து நிறுத்துக! —என்று அகமெம்னனுக்கு நெஸ்டர் புத்திமதி சொல்கிற பிரசித்தி பெற்ற பகுதியில் ஹோமர் பிராட்ரியை ஒரு ராணுவ மூலக்கூறாகத்தான் கூறுகிறார்.

ஒரு பிராட்ரி அங்கத்தினனைக் கொன்றவன் மீது வழக்குத் தொடர பிராட்ரிக்கு உரிமையும் கடமையும் உண்டு; இது, முந்திய காலங்களில் அதற்கு ரத்தப் பழிக் கடமையுமிருந்துள்ளது என்று குறிக்கிறது. மேலும், அதற்குப் பொதுவான தேவாலயங்களும் விழாக்களும் உள்ளன; ஏனெனில், பரம்பரையாய் வந்த

பழைய ஆரிய இயற்கை வழிபாட்டு முறையிலிருந்து கிரேக்கப் புராணம் முழுவதும் வளர்ச்சி பெற்றது, கணங்கள், பிராட்ரிகளினுலே தான், அவற்றிற்குள்ளிருந்தேதான். பிராட்ரிக்கு ஒரு தலைவன் (பிராட்ரியார்கஸ்) இருந்தான்; மேலும் திகூலான்ழ் அபிப்பிராயத்தில், கட்டுப்படுத்தும்படியான முடிவுகளைச் செய்கிற பொதுக் கூட்டங்களும் கோர்ட்டும் ஆட்சி நிர்வாகமும் இருந்தன. பிற்காலப் பகுதியைச் சேர்ந்த அரசுகூட, கணத்தைப் புறக்கணிக்கும் போதே, பிராட்ரியிடம் சில பொது விவகாரங்களை விட்டது.

இரத்த உறவுள்ள சில பிராட்ரிகள் ஒரு குலமாக அமைந்தன. ஆட்டிகாவில் மும்மூன்று பிராட்ரிகளைக் கொண்ட நான்கு குலங்கள் இருந்தன; ஒவ்வொரு பிராட்ரியிலும் முப்பது கணங்கள் இருந்தன. குழுக்களை இவ்வளவு ஜாக்கிரதையாகப் பிரித்திருப்பது தன்னியல்பாய் உருப்பெற்றிருந்த அமைப்பில் உணர்வுபூர்வமாக, திட்டப்படி குறுக்கிட்டிருந்திருக்க வேண்டும் என்பதையே காட்டுகிறது. இது எப்படி, எப்போது, ஏன் செய்யப்பட்டது என்பதை கிரேக்க வரலாறு வெளியிடவில்லை; ஏனெனில் கிரேக்கர்கள் பாதுகாத்து வைத்திருந்த நினைவுகளே மாவீரர் சகாப்தத்துக்கு அப்பால் எட்டிச்செல்லவில்லை.

கிரேக்கர்கள் ஒப்புநோக்கில் சிறிதான நிலப்பரப்பில் அடர்த்தியாகக் குழுமியிருந்தார்கள், எனவே அவர்களின் ஸ்தலமொழி வேறுபாடுகள் விரிந்து பரந்த அமெரிக்கக் காடுகளில் வளர்ச்சியடைந்த ஸ்தலமொழிகளின் வேறுபாடுகளைக்காட்டிலும் அதிகமாகத் தெரியாமலிருந்தன. இருந்தபோதிலும் இங்கேயுங்கூட ஒரு முக்கிய ஸ்தலமொழியைக் கொண்

டிருந்த குலங்கள்தாம் ஒரு விரிவான குழுத்தொகை யில் ஒன்றுபட்டிருந்தன என்று பார்க்கிறோம். பின்னஞ்சிறிய ஆட்டிகாவும்கூடச் சொந்தத்தில் ஒரு ஸ்தலமொழியைக் கொண்டிருந்தது; அது பின்னால் கிரேக்க உரை நடையில் வழக்கில் வந்த மொழி யாக ஆயிற்று.

ஹோமரின் இதிகாசங்களில் கிரேக்கக் குலங் கள் ஏற்கனவே சிறு சிறு மக்கள் சமூகங்களாக இணைந் துள்ளதைப் பொதுவாகக் காண்கிறோம்; இருந்தா லும், அவற்றினுள் கணங்களும், பிராட்ரிகளும், குலங் களும் தமது முழுச் சுதந்திரத்தை இன்னமும் வைத் துக் கொண்டிருந்தன. ஏற்கனவே அவர்கள் அரண் எழுப்பிய நகரங்களில் வாழ்ந்தார்கள். கால்நடை கள் மந்தைகளின் வளர்ச்சி, விவசாயம், ஆரம்பக் கைத்தொழில்கள் ஆகியவற்றோடு, ஜனத்தொகையும் பெருகியது. இத்துடன் செல்வ விஷயத்தில் இன்னும் அதிக வேறுபாடுகள் வந்து சேர்ந்தன; பழைய, இயற்கையில் வளர்ந்த ஜனநாயகத்துக்குள்ளே இவை ஒரு புதிய பிரபுத்துவ அம்சத்தை எழச்செய்தன. மிகச் சிறந்த நிலத்துக்காகவும், கொள்ளைக்காகவும் பல்வேறு சிறிய சிறிய மக்கள் சமூகங்கள் இடைய றாது போரிட்டுவந்தன. யுத்தக் கைதிகளை அடிமை யாக்குவது ஏற்கனவே அங்கீகரிக்கப்பட்ட ஸ்தாபன மாக இருந்தது.

இந்தக் குலங்களின், சிறு மக்கள் சமூகங்களின் அதிகார அமைப்பு பின்வருமாறு:—

1. நிரந்தர அதிகாரம் பெற்றது **கவுன்சில்** (boulê), ஆதியில், பெருவாக, கணத் தலைவர்களைக் கொண்டதாயிருந்தது; பின்னால் அவர்களின் தொகை

மிக அதிகமாகி விட்டபோது அவர்கள் பொறுக்கப்பட்டார்கள்; இது பிரபுத்துவ அம்சத்தை வளர்க்கவும் பலப்படுத்தவும் ஒரு வாய்ப்பை உண்டாக்கியது. மாவீரர் சகாப்தத்தைச் சேர்ந்த கவுன்சில் பிரபுக்களை (kratistoi) கொண்டு அமைக்கப்பட்டிருந்தது என்று டயொனீஸியஸ் திட்டமாகச் சொல்கிறார். முக்கிய விவகாரங்களில் கவுன்சிலுக்குத் தான் இறுதி முடிவு இருந்தது. எஸ்கிலஸ் நாடகங்கள் ஒன்றில், தீபஸ் கவுன்சில் ஒரு வழக்கில் கட்டுப்படுத்தும் முடிவைச் செய்தது. அந்த வழக்கு முடிவு இது தான்: ஈடியோக்ளியஸ் சடலத்தை முழு மரியாதைகளுடன் அடக்கம் செய்யவேண்டும், போலினீகஸின் சடலத்தை நாய்கள் தின்னும்படி வெளியே யெறிந்து விட வேண்டும் என்று. பின்னால், அரசு எழுந்ததிலிருந்து, இந்தக் கவுன்சில் ஒரு செனெட்டாக மாற்றப்பட்டது.

2. **மக்கள் சபை** (agora). கவுன்சில் கூட்டங்களில் ஆண்களும் பெண்களுமாக மக்கள் வட்டமாகச் சுற்றி நின்று, விவாதங்களில் பங்கு கொண்டு, அதன் வழியே முடிவுகளை உருவாக்கி வந்தார்கள் என்று இரோகுவாய்களிடையே நாம் பார்த்தோம். ஹோமர் காலத்து கிரேக்கர்களிடையே, ஒரு பழைய ஜெர்மன் சட்டச் சொல்லை உபயோகிப்பதானால் இந்த 'Umstand'[1] ஒரு முழுமையான மக்கள் சபையாக வளர்ந்து விட்டது; பண்டைக்கால ஜெர்மானியர்கள் விஷயத்திலும் இப்படியேதான். முக்கியமான விவகாரங்களைப் பற்றி முடிவெடுக்க

[1] **Umstand:** சுற்றிநின்று கொண்டிருப்பவர்கள். — **பதிப்பாசிரியர்கள்.**

இந்தச் சபையைக் கவுன்சில் கூட்டியது. ஒவ்வொரு வனுக்கும் பேச உரிமையிருந்தது. கையைத் தூக்கிக் காட்டுவதன் மூலம் முடிவுகள் எடுக்கப்பட்டன (எஷ்கிலஸ் நாடகமான ''முறையிடுபவர்கள்'' என்பதில்) அல்லது கோஷமிடுவதின் மூலம். அந்த முடிவு சர்வசக்தி கொண்டது, இறுதியானது. ஏனெனில், ''கிரீஸின் பண்டைக்காலப் பழக்கங்கள்''[1] என்ற நூலில் ஷோமான் சொல்கிறதாவது: ''நிறைவேற்றுவதற்கு மக்களின் ஒத்துழைப்பு தேவைப்படுகிற விஷயத்தை விவாதிக்கும்போது மக்களை அவர்களது சித்தத்துக்கு விரோதமாக அதற்கு ஒத்துக்கொள்ளச் செய்வதற்குரிய எந்தச் சாதனங்களைப்பற்றியும் ஹோமர் ஒரு குறிப்பும் தரவில்லை''. இந்தக் காலத்தில், குலத்தின் வயதுவந்த ஒவ்வோர் ஆண் அங்கத்தினனும் ஒரு போர்வீரனாக இருக்கையில், மக்களுக்கு எதிராக நிறுத்தப்படக்கூடிய மாதிரி மக்களிடமிருந்து தனிப்பட்ட பொது அதிகாரம் ஒன்றும் இன்னமும் இருக்கவில்லை. புராதன ஜனநாயகம் இன்னமும் முழு மலர்ச்சியிலிருந்தது; கவுன்சிலின், பஸீலியஸின் அதிகாரத்தையும் அந்தஸ்தையும் குறித்துத் தீர்ப்பு எடுக்கையில் இது தொடக்கப்புள்ளியாக இருந்து தீரவேண்டும்.

3. **ராணுவ தளபதி** (பஸீலியஸ்). இதைக்குறித்து மார்க்ஸ் பின்வரும் கருத்துரை அளிக்கிறார்:— ''ஐரோப்பியப் பண்டிதர்கள்—அவர்களில் பெரும்பாலோர் சிற்றரசர்களின் பிறவிச்சேவகர்களாவார்

---

[1] Schömann G. F., "Griechische Alterthümer", Bd.I-II, பெர்லின், 1855-59. —பதிப்பாசிரியர்கள்.

கள்—பஸீலியஸை நவீனகால அர்த்தத்திலுள்ள அரசனுகக் காட்டுகிருர்கள். அமெரிக்கக் குடியரசு வாதியாகிய மார்கன் இதை ஆட்சேபிக்கிருர். மிக வும் கிண்டலாக, ஆனல் நிஜமாக, பசப்புக்கார கிளாட்ஸ்டனேயும் அவரது நூலாகிய 'Juventus Mundi'[1] யையும் பற்றிப் பின்வருமாறு சொல்கிருர்: ''மா வீரர் சகாப்தத்தைச் சேர்ந்த கிரேக்கத் தலைவர் களை அரசர்களாகவும் சிற்றரசர்களாகவும் திரு. கிளாட்ஸ்டன் வாசகர்களுக்குச் சித்திரித்துக் காட்டுகிருர்; அத்தோடு அவர்களுக்குக் கண்ணிய வான்களின் குணங்களையும் சூட்டிவிடுகிருர்; ஆயி னும் கிரேக்கர்களிடையே மூத்த மகன் வாரிசா கும் வழக்கம் போதிய அளவு வரையறுக்கப்பட்ட போதிலும் தெட்டத் தெளிவாக வரையறுக்கப்பட்ட தாகத் தோன்றவில்லை என்று அவரே ஒப்புக் கொள்ள வேண்டியிருக்கிறது''. உண்மையாகப் பார்த்தால், இத் தகைய நிபந்தனைகளோடுகூடிய மூத்தபிள்ளை வாரிசு முறை போதுமான அளவு ஆனல் தெளிவின்றி வறை யறுக்கப்பட்டிருப்பது இல்லாமைக்கு ஒப்பானதே என்பதை கிளாட்ஸ்டனே உணர்ந்திருக்கவேண்டும்.

இரோகுவாய்களிடையிலும் இதர இந்தியர் களிடையிலும் தலைவர்களின் பதவி விஷயத்தில் வாரிசுமுறைக்குள்ள இடம் என்ன என்று முன்ன ரே பார்த்தோம். எல்லா அதிகாரிகளும் வெகு வாகக் கணத்துக்குள்ளேயே தேர்ந்தெடுக்கப்பட்ட படியால், அந்த அளவுக்கு, அவர்கள் கணத்துக்

[1] Gladstone W.E., "Juventus Mundi The Gods and Men of the Heroic Age", லண்டன் 1869.—பதிப்பாசிரியர்கள்.

குள் வாரிசு முறையிலேயே இருந்து வந்தார்கள். காலியாகும் பதவியில், முந்தைய அதிகாரியின் அடுத்த கண உறவினனை, அதாவது அவனது சகோதரனையோ, சகோதரி மகனையோ—அவனைத் தள்ளி விடுவதற்குப் போதிய காரணங்கள் இருந்தாலொழிய—அமர்த்துவது நாளடைவில் வழக்கிற்கு வந்துவிட்டது. கிரீஸில் தந்தையுரிமையின்கீழ், பஸீலியஸ் பதவி பொதுவாகவே மகனுக்கு அல்லது புதல்வர்களில் ஒருவனுக்கு, தரப்பட்டது என்ற விஷயம் பொதுத் தேர்தல்மூலம் வாரிசைத் தேர்ந்தெடுப்பதில் புதல்வர்களுக்கு முதன்மை அளிக்கப் பட்டிருக்கலாம் என்பதையே குறிக்கிறது; ஆனால் பொதுத் தேர்தலில்லாமல் சட்டப்படி வாரிசாகப் பதவிக்கு வருவது என்று அது உட்கிடையாகக் கூடக் குறிக்கவில்லை. இங்கே, இரோகுவாய்களிடையேயும் கிரேக்கர்களிடையேயும் கணங்களுக்குள்ளே விசேஷமான பிரபுத்துவக் குடும்பங்களின் முதல் கொழுந்துகளைக் காண்கிறோம். மேலும், கிரேக்கர்களிடையே பிற்காலத்தில் வரப்போகும் பரம்பரைத் தலைவர் பதவி முறையின் அல்லது முடியாட்சி முறையின் முதல் கொழுந்துகளையும் காண்கிறோம். எனவே, கிரேக்கர்களிடையே பஸீலியஸ் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்க வேண்டும், அல்லது குறைந்தபட்சம் அதன் அங்கீகாரம் பெற்ற உறுப்பினல் — கவுன்சில் அல்லது அகோரா — ஊர்ஜிதம் செய்யப்பட்டிருக்க வேண்டும்; ரோமானிய "அரசன்" (rex) விஷயம் மாதிரியே.

"இலியாத்" இதிகாசத்தில் மக்களை ஆள்வோனாகிய அகமெம்னன் கிரேக்கர்களின் தலையாய

அரசனைக் காட்சியளிக்கவில்லை, முற்றுகையிடப்பட்டுள்ள நகரத்தின்முன்னே இருக்கும் குழுக்கூட்டின் இராணுவத்துக்குத் தலைமைத் தளபதியாகவே காட்சியளிக்கிறான். மேலும் கிரேக்கர்களிடையே பூசல்கள் ஏற்பட்டபோது, அவனது இந்தத் தன்மையைத்தான் ஓடிஸீயஸ் பிரசித்திபெற்ற பகுதியில் சுட்டிக்காட்டுகிறான்: பலர் தளபதிகளாக இருப்பது நல்லதல்ல, நமக்கெல்லோருக்கும் ஒரு தளபதியே இருக்கட்டும், முதலியன (இத்துடன் இராஜதண்டத்தைப்பற்றிய ஜனரஞ்சக வரி பின்னால் சேர்க்கப்பட்டது). ''அரசாங்க வடிவம் பற்றி இங்கே ஓடிஸீயஸ் பிரசங்கம் பண்ணவில்லை; கணத்திலிருக்கும் ராணுவத்தின் தலைமைத் தளபதிக்குக் கட்டுப்பட்டு நடக்கும்படி அவன் வற்புறுத்திக் கோருகிறான். டிராய் முன்னே ஒரு ராணுவமாக மட்டுமே காட்சியளிக்கிற கிரேக்கர்களுக்கு அகோராக் கவுன்ஸிலின் நடவடிக்கை முறைகள் போதிய ஜனநாயகத்தன்மை கொண்டவையாகவேயுள்ளன. பரிசுகளைப்பற்றி, அதாவது யுத்தலாபங்களைப் பிரிப்பதுபற்றி, பேசும்போது அகமெம்னோனையோ, அல்லது வேறு யாராவதொரு பஸீலியஸையோ பங்குபிரிப்பவனாக அகிலிஸ் செய்யவில்லை, எப்போதும் 'ஆகேயர்களின் புதல்வர்களையே', அதாவது மக்களையே, பங்குபிரிப்பவர்களாகச் செய்கிறான். அடைமொழிகளான, 'ஜீயஸின் புதல்வன்', 'ஜீயஸால் ஊனூட்டப்பெற்றவன்' என்பவை எதையும் நிரூபிக்கவில்லை, ஏனெனில் ஒவ்வொரு கணமும் ஒரு தெய்வத்தின் வம்சவழி வந்ததுதான், மேலும் குலத் தலைவனின் கணமோ ஒரு 'முக்கியமான' தெய்வத்தின், இங்கே ஜீயஸின்,

வம்சவழிவந்தது. பன்றிமேய்ப்பவனை யூமியஸ் இன்னும் மற்றவர்கள் போன்ற சுதந்திரமற்றவர்களும் கூட 'தெய்வத்துவம்' பெற்றவர்கள் ('dioi' அல்லது 'theioi'); 'ஒடிஸேய்' இதிகாசத்திலேயுங்கூட; எனவே 'இலியாத்' தைவிடப் பின்னால்வந்த காலப்பகுதியிலும் அப்படி இருந்தது. 'ஒடிஸே'யிலும் தூதனாகிய மூலியோஸுக்கு மாவீரர் என்ற பெயர் சூட்டப்படுவதைக் காண்கிறோம்; டெமோடோகஸ் என்கிற கண்பார்வையற்ற பாடகனுக்கும் அதே பெயர் சூட்டப்படுகிறது. சுருங்கச் சொன்னால், ஹோமரின் அரச முறை எனப்படுவதை, அதை அடுத்த கவுன்சில், மக்கள் சபை ஆகியவற்றுடன் குறிப்பதற்கு கிரேக்க எழுத்தாளர்கள் வழங்கிய "basileia" என்ற சொல் (ஏனெனில் இம் முறையின் முக்கியமான சிறப்பியல்பு ராணுவத் தலைமையே ஆகும்) ராணுவ ஜனநாயகம் என்றே பொருள் படும்'' (மார்க்ஸ்).

ராணுவ வேலைகள் மட்டுமல்லாமல், பஸீலியஸுக்குப் புரோகித சம்பந்தமான வேலைகளும் நீதிமன்ற வேலைகளும் இருந்தன; பிந்தியவை தெளிவாகக் குறிக்கப்படவில்லை; ஆனால் குலத்தின் அல்லது குலக்குழுக்கூட்டின் உச்சப் பிரதிநிதி என்ற ஹோதாவில் அவன் ராணுவ வேலைகளைச் செய்தான். சிவில், நிர்வாக வேலைகள் பற்றி எங்குமே குறிப்பு இல்லை; ஆனால் தனது பதவியின் காரணத்தால் அவன் கவுன்சில் அங்கத்தினனாக இருந்ததாகவும் தோன்றுகிறது. சொல் இலக்கணப்படி, பஸீலியஸ் என்ற சொல்லை 'König' என்று மொழிபெயர்ப்பது முற்றிலும் சரியே; காரணம் 'König' (Kuning) என்ற சொல் 'Kuni', 'Künne'யிலிருந்து வந்தது, கணத்

தலைவனைக் குறிக்கிறது அது. ஆனால் பழைய கிரேக்க மொழியைச் சேர்ந்த 'பஸீலியஸ்' என்ற சொல் 'König' (அரசன்) என்ற சொல்லுக்குடைய நவீன அர்த்தத்துடன் எவ்வழியிலும் பொருந்த வில்லை. தூகிடிடஸ்பழைய 'basileia'க்களை 'patrikê', அதாவது கணத்திலிருந்து பெறப்பட்டது, என்று திட்டமாகக் குறிக்கிறார்; மேலும் அதற்குக் குறிப் பிட்ட, எனவே எல்லையிடப்பட்ட, வேலைகள் இருந்தன என்றும் சொல்கிறார். தவிர, மாவீரர் சகாப்தத் தைச் சேர்ந்த 'basileia' என்பது சுதந்திர புருஷர் கள் மீது செலுத்திய தலைமை என்றும் பஸீலியஸ் ஒரு ராணுவத் தலைவன், நீதிபதி, உயர்ந்த புரோகி தன் என்றும் அரிஸ்டாட்டில் கூறுகிறார். எனவே, பின்னால் வந்த அர்த்தத்தில் பஸீலியஸுக்கு அரசாங்க அதிகாரம் கிடையாது.[1]

[1] கிரேக்க பஸீலியஸ் மாதிரியே, அஜ்டெக் ராணுவத் தலைவனும் தவறாக, நவீன அர்த்தத்திலுள்ள சிற்றரசனாக சித்திரிக்கப்பட்டிருக்கிறான். ஸ்பானிஷ்காரர்களின் செய்தி யறிக்கைகளை மார்கன்தான் முதன் முதலில் வரலாற்று ரீதியிலே விமர்சித்தார்; அவர்கள் முதலில் விஷயங்களைத் தவறாகப் புரிந்துகொண்டும், மிகைப்படுத்திச் சொல்லியும், பின்னால் வேண்டுமென்றே திரித்துக்கூறியும் உள்ளனர். மெக்ஸிகர் கள் அநாகரிக நிலையின் இடைக்கட்டத்திலிருந்தார்கள், ஆனால் நியூமெக்ஸிகன் பியூப்ளோ இந்தியர்களைவிட உயர்ந்த தரத்திலிருந்தார்கள்; புரட்டப்பட்டுள்ள செய்திகள் முடிவு செய்ய இடம் தருகிற அளவுக்கு, அவர்களின் சமூக முறை பின்வருவனவற்றிற்குப் பொருத்தமாயிருந்தது என்று மார்கன் காட்டினார்: மூன்று குலங்களைக் கொண்ட ஒரு குலக்குழுக்கூட்டு; அது மற்றச் சில குலங்களைத் தனக்குக் கப்பங் கட்டுபவை

ஆக, மாவீரர் சகாப்தத்தைச் சேர்ந்த கிரேக்க சமூக முறையில் பழைய கண அமைப்பு இன்னமும் வீரியத்துடன் இருப்பதை நாம் காண்கிறோம்; ஆனால் அதன் நலிவின் தொடக்கத்தையும் நாம் பார்க்கிறோம்: தந்தையுரிமையும் தந்தையின் சொத்துக்குக் குழந்தைகள் வாரிசாவதும் அமுலுக்கு வந்துவிட்டன. இந்த வாரிசு முறை, குடும்பத்துக்குள் செல்வம் குவியவகை செய்து கணத்துக்கு எதிராக அதற்குச் சக்தி தந்தது; செல்வத்தில் ஏற்றத்தாழ்வு ஏற்பட்டதன் விளைவாகச் சமுதாய அமைப்பு பாதிக்கப்பட்டுப் பரம்பரைப் பிரபுத்துவ முறைக்கும் அரச முறைக்கும் கொழுந்துகள் துளிர்த்தன; அடிமை முறை, முதலில் யுத்தக் கைதிகளோடு நின்றிருந்த போதிலும், ஏற்கனவே குலத்தின் சக அங்கத்தினர்களையும் கணத்தின் சக அங்கத்தினர்களையும் கூட அடிமைப்படுத்துவதற்கு வழியைச் செப்பனிட்டு வந்தது; குலங்களுக்கிடையே நடந்துவந்த முந்தைய யுத்தங்கள் கால்நடைகளையும் அடிமைகளையும் செல்வங்களையும் கைப்பற்றும் நோக்கத்துடன் நிலத்திலும் நீரிலும் திட்டமிட்ட படையெடுப்புக்களாக இழிந்து ஒரு முறையான தொழிலாக மாறிவிட்டன. சுருங்கச் சொன்னால், உயர்விலும் உயர்வான சம்

யாகச் செய்து கொண்டிருந்தது; அது குழுக்கூட்டுக் கவுன்சிலாலும், குழுக்கூட்டுத் தலைவனாலும நிர்வகிக்கப்பட்டுவந்தது; அந்தக் குழுக்கூட்டுத் தலைவனைத்தான் ஸ்பானிஷ்காரர்கள் ''சக்கரவர்த்தி''யாகச் செய்துவிட்டார்கள். [எங்கெல்ஸ் குறிப்பு.]

பத்தாகச் செல்வம் புகழப்பட்டது, மதிக்கப்பட்டது. செல்வத்தைப் பலவந்தமாகக் கொள்ளை கொள்வதை நியாயப்படுத்துவதற்காகப் பழைய கண ஸ்தாபனங்கள் வேண்டுமென்றே தவறான வழியில் செலுத்தப்பட்டன. ஒன்றே ஒன்று தான் இல்லை: கண அமைப்பின் பொதுவுடைமைப் பரம்பரைக்கு எதிரே தனி நபர்கள் புதிதாகச் சேர்த்த சொத்தைப் பாதுகாப்பதற்குமட்டுமன்றி, முன்பு துச்சமாக மதிக்கப்பட்டு வந்த தனிச்சொத்துடைமையைப் புனிதப் படுத்திவைப்பதற்குமட்டுமன்றி, இப்படிப் புனிதப் படுத்துவதே மனித சமுதாயத்தின் அதியுன்னதமான நோக்கமென்று பிரகடனம் செய்வதற்கு மட்டுமன்றி, சொத்து சேர்ப்பதற்கும் அதன் விளைவாய் மேலும் மேலும் செல்வம் பெருக்குவதற்கும் படிப்படியாக வளர்ந்துவரும் புதிய வடிவங்களுக்குப் பொது ஜன அங்கீகாரம் என்ற முத்திரையைப் பதியவைப்பதற்கும் வேண்டிய ஒரு ஸ்தாபனம் இல்லாதிருந்தது. சமுதாயத்தில் புதிதாக எழுந்து வரும் வர்க்கப் பிரிவை நிரந்தரமாக்குவதோடல்லாமல் உடைமையற்ற வர்க்கங்களை உடைமையுள்ள வர்க்கம் சுரண்டுவதற்குள்ள உரிமையையும் முந்தியவற்றின்மீது பிந்தியது செலுத்தும் ஆட்சியையும் நிரந்தரமாக்கி வைக்கக் கூடிய ஒரு ஸ்தாபனம் இல்லை.

அந்த ஸ்தாபனம் வந்து சேர்ந்தது. அரசு என்பது புதிதாகச் சமைக்கப்பட்டது.

# V

## அதீனிய அரசின் உதயம்

அரசு எப்படி வளர்ந்தது; எப்படிக் கண முறையின் சில உறுப்புக்கள் மாற்றப்பட்டன; புதிய உறுப்புக்களின் தோற்றத்தால் எப்படிச் சில அகற்றப்பட்டன; இறுதியிலே, எப்படி எல்லாமே உண்மையான அரசாட்சி உறுப்புக்களால் கலைக்கப்பட்டன — கணங்கள், பிராட்ரிகள், குலங்கள் மூலமாகத் தற்காத்துக் கொண்டிருந்த உண்மையான “ஆயுதமேந்திய மக்களுக்கு”ப் பதிலாக அரசாட்சி உறுப்புக்களின் சேவகத்திலிருக்கிற — எனவே மக்களுக்கு எதிராகவும் உபயோகிக்கப்படக் கூடியதாயுமுள்ள — ஆயுதமேந்திய “பொது அதிகாரம்” எப்படி வந்துசேர்ந்தது — என்பதையெல்லாம் பண்டைக்கால ஆதென்ஸில் நன்றாகக் கண்டு கொள்ளத் தக்கமாதிரி, குறைந்தபட்சம் ஆரம்ப தசையில் வேறெங்கும் காண முடியாது. வடிவங்கள் எப்படி மாறிவந்தன என்பதை மொத்தத்தில் மார்கனே வர்ணிக்கிறார்; இம்மாறுதல்களை உண்டாக்கிய பொருளாதார உள்ளடக்கத்தை நானே பெரிதும் கூடுதலாகத் தரவேண்டியிருந்தது.

மாவீரர் சகாப்தத்தில், அதீனியர்களின் நான்கு குலங்களும் ஆட்டிகாவின் தனித்தனிப் பகுதிகளில் வைக்கப்பட்டிருந்தன. அவற்றில் இருந்த பன்னிரண்டு பிராட்ரிகளும் கூட கிக்ராப்ஸைச் சேர்ந்த பன்னிரண்டு நகரங்களில் இன்னமும் தனித்தனியே இருப்பிடம் கொண்டிருந்தன என்று தோன்றுகிறது. ஆட்சி அமைப்பு மாவீரர் சகாப்தத்தைச் சேர்ந்தது:

மக்கள் சபை, மக்கள் கவுன்சில், பஸீலியஸ். ஏடறிந்த வரலாறு தெரிவிக்கிற அளவில், நிலம் ஏற்கனவே பிரிக்கப்பட்டுத் தனிச்சொத்தாக மாற்றப்பட்டிருப்பதை நாம் காண்கிறோம்; அநாகரிக நிலையின் தலைக்கட்டத்தின் இறுதியில் சார்பு நோக்கில் வளர்ச்சி பெற்றிருந்த சரக்கு உற்பத்தி நிலைக்கும் அதற்கு அளவான சரக்கு வியாபாரத்துக்கும் இது பொருத்தமாயிருந்தது. தானியங்களோடு கூடுதலாக, ஒயினும் எண்ணெயும் விளைக்கப்பட்டன. ஈஜீயன் கடல் வழியே நடந்த வாணியம் போனீகியர் கையிலிருந்து மேலும் மேலும் ஆட்டிகாவின் கைக்கு வந்துசேர்ந்தது. நிலத்தை வாங்கி விற்பதின் விளைவாயும், விவசாயம் கைத்தொழிலுக்கிடையேயும், வியாபாரம் கப்பல் செலுத்துதலுக்கிடையேயும் தொடர்ந்திருந்த வேலைப் பிரிவினையின் விளைவாயும் கணங்கள், பிராட்ரிகள், குலங்கள் ஆகியவற்றின் அங்கத்தினர்கள் வெகு விரைவிலே தமக்குள் கலந்து போய்விட்டனர். பிராட்ரிகளும் குலங்களும், சொந்த தேசத்தவர்களாயினும், அந்த ஸ்தாபனங்களைச் சேராத, எனவே தம் இருப்பிடத்திலேயே அந்நியர்களாக இருக்கிற நபர்களைத் தமது மாவட்டத்தில் சேர்த்துக்கொண்டன. ஏனெனில், சமாதான காலத்தில், ஒவ்வொரு பிராட்ரியும் ஒவ்வொரு குலமும் ஆதென்ஸிலுள்ள மக்கள் கவுன்சிலையும் பஸீலியஸையும் கலந்தாலோசிக்காமலேயே தமது சொந்த விவகாரங்களை நிர்வகித்து வந்தன. ஆனால் பிராட்ரியிலோ குலத்திலோ சேராத அந்தப் பிரதேச வாசிகள் இயற்கையாகவே இந்த நிர்வாகத்தில் பங்கு கொள்ள முடியவில்லை.

கண அமைப்புக்குரிய உறுப்புக்களின் முறைப் படுத்தப்பட்ட வேலையை இது மிகவும் பாதித்தது னல் மாவீரர் சகாப்தத்திலேயே இதற்கு ஒரு பரி காரம் தேவைப்பட்டது. தீஸியஸ் வகுத்தது என்று சொல்லப்படுகிற அரசியல் சட்டம் புகுத்தப்பட்டது. இந்த மாற்றத்தின் பிரதான குணம்சம், ஆதென் ஸில் ஒரு மத்திய நிர்வாகம் அமைக்கப்பட்டதே; அதாவது, குலங்களால் இதுவரை சுதந்திரமாக நடத்தப்பட்டு வந்த சில விவகாரங்கள் பொது விவகாரங்களாக அறிவிக்கப்பட்டு ஆதென்ஸில் அமர்ந்துள்ள பொதுக் கவுன்சிலுக்கு மாற்றப்பட் டன. அதன்வழியாக, அமெரிக்காவிலுள்ள எந்தச் சுதேச மக்கள் சமூகமும் என்றைக்கும் சென் றதைவிட ஒருபடி மேலாகவே அதீனியர்கள் சென்றார் கள்: அண்டையிலுள்ள குலங்கள் வெறுமனே கூட்டா கச் சேருவது என்பதின் இடத்தில் இப்போது எல்லாக் குலங்களையும் ஒரே ஒரு மக்கள் சமூகமாக இணைத்துக் கலக்கச் செய்வது என்பது வந்துசேர்ந்தது. இத னல் பொதுவான அதீனிய சட்ட அமைப்பு ஒன்று ஏற்பட்டது; அந்தச் சட்ட அமைப்பு தனிப்பட்ட குலங்களின், கணங்களின் பழக்க வழமுறைகளுக்கு மேற்பட்டதாய் இருந்தது. ஆதென்ஸின் பிரஜை கள் என்ற முறையில் அது அவர்களுக்கு, தமது சொந்த குலத்துக்குச் சேராத பிரதேசங்களிலுங் கூட, சில உரிமைகளையும் கூடுதலான சட்டப் பாது காப்பையும் தந்தது. இருந்தாலும், கண முறைக்குக் குழிபறிப்பதற்கு இது முதல் படியேயாகும். ஏனெ னில், ஆட்டிகாவின் எல்லாக் குலங்களுக்கும் அந் நியர்களாயிருந்த, அதீனிய கண முறைக்குப் புறம்

பானவர்களாய், புறம்பிலேயே இருந்துவந்த, பிரஜைகளைப் பின்னால் அனுமதிப்பதை நோக்கிச் செல்வதற்குரிய முதற்படி இது. இன்னொரு நடவடிக்கை—இதுவும் தீஸியஸால் எடுக்கப்பட்டது என்று சொல்லப்படுகிறது—கணங்கள், பிராட்ரிகள், குலங்கள் என்ற வித்தியாசமின்றி மக்கள் சமூகம் முழுவதையும் ஏவுபட்ரிடுகள்—பிரபுக்களாகவும், கெயாமோரர்கள்—நிலத்தில் பயிர் செய்பவர்களாகவும், டெமியுர்குகள்—கம்மியர்களாகவும் மூன்று வகுப்புக்களாகப் பிரித்து, பொதுப் பதவிகளைத் தனி விசேஷ உரிமையாகப் பிரபுக்களுக்கு அளித்தது. நிஜந்தான், பொதுப் பதவிகளை வகிக்கும் உரிமையைப் பிரபுக்களுக்கு ஒதுக்கித் தந்தது ஒன்றைத் தவிர, இந்தப் பிரிவினை செயல்படாமலே கிடந்தது; ஏனெனில், அது வகுப்புக்களிடையே சட்டவகையான வேறு எந்த வேறுபாடுகளையும் சிருஷ்டிக்கவில்லை. இருந்த போதிலும், அது முக்கியம்; காரணம், மெதுவாக வளர்ந்துவிட்டிருந்த புதிய சமுதாய அம்சங்களை அது நமக்கு வெளிப்படுத்திவைக்கின்றது. கணத்தில் சில குடும்பங்கள் வழக்கமாகப் பதவி வகிப்பது ஏற்கனவே இந்தக் குடும்பங்களின் அதிகமாக மறுக்கப்படாத உரிமையாக வளர்ந்துவிட்டிருப்பதை இது காட்டுகிறது; ஏற்கனவே தமது செல்வத்தினால் பலம் பெற்றுவிட்டிருந்த இந்தக் குடும்பங்கள் தமது கணத்துக்கு வெளியே ஒரு சலுகையுரிமை பெற்ற வர்க்கமாக ஒன்றுபடத் தொடங்கின என்றும் இது காட்டுகிறது; முளையிலிருந்த அரசு இந்தக் கைப்பற்றுதலை அனுமதித்தது என்றும் இது காட்டுகிறது. தவிர, விவசாயி

களுக்கும் கம்மியர்களுக்குமிடையே யிருந்த வேலைப் பிரிவினை கணங்களாகவும் குலங்களாகவும் இருந்த பழைய பிரிவினையின் உயர்வுடன் சமுதாய ரீதியி லே போட்டி போடுகிற அளவுக்குப் பலமடைந்து விட்டது என்றும் இது காட்டுகிறது. கடைசியாக, கண சமுதாயத்துக்கும் அரசுக்கும் இடையே சமரசப்படுத்த முடியாத விரோதத்தையும் அது பிரகடனம் செய்தது. அரசு அமைப்பதற்கு எடுத்த முதல் முயற்சி கணங்களை உடைத்தெறிவதாகத் தான் இருந்தது; அந்தக் கணங்கள் ஒவ்வொன்றின் அங் கத்தினர்களும் சலுகையுரிமை பெற்றவர்களாகவும் கீழ்நிலைப்பட்டவர்களாகவும் பிரிக்கப் பட்டனர்; பிந்தியவர்கள் மேலும் தொழில் புரியும் இரு வகுப் புக்களாகப் பிரிக்கப்பட்டனர்; இப்படியாக, ஒரு வருக்கொருவர் எதிராக நிறுத்தப்பட்டனர்.

சொலான் காலம் வரைக்கும் நிகழ்ந்தேறிய ஆதென்ஸின் பிந்தைய அரசியல் வரலாறு பூர்ணமாகத் தெரிந்ததாயில்லை. பஸீலியஸ் பதவி வழக்கொழிந்து போயிற்று; பிரபுக்களிடையேயிருந்து தேர்ந்தெடுக் கப்பட்ட ஆர்ஹென்கள் அரசின் தலைவர்களாயினர். கி. மு. 600 வாக்கில் சகிக்கமுடியாத அளவுக்குப் போகிற வரை பிரபுக்களின் ஆட்சி இடைவிடாமல் வலுப்பெற்றது. பொது மக்களின் சுதந்திரத்தை நசுக்குவதற்குப் பிரதானச் சாதனங்களாகப் பயன் பட்டவை பணமும் கந்துவட்டிக்கடனும். பிரபுக்கள் பிரதானமாக ஆதென்ஸிலும் அதைச் சுற்றியும் வாழ்ந்தனர்; அங்கே, கடல்வழி வாணிபமும், இன் னும் பக்கத்தொழிலாக அவ்வப்பொழுது நடக்கும் கப்பல் கொள்ளையும் அவர்களின் செல்வத்தைப்

பெருக்கி, பணரூபச் செல்வத்தை அவர்கள் கைகளிலே குவித்தன. இங்கிருந்து வளர்ந்துவந்த பண அமைப்புமுறை, அரிக்கும் அமிலம்போல் இயற்கைப் பொருளாதார அடிப்படையிலிருந்த கிராமச் சமூகங்களின் பரம்பரை வாழ்வில் ஊடுருவியது. கணமுறைக்கும் பண அமைப்பு முறைக்கும் அறவே பொருத்தமிருக்க முடியாது. ஆட்டிகாவின் சிறுநில விவசாயிகளின் நசிவு தங்களைப் பாதுகாத்துவந்த பழைய கணப் பந்தங்கள் தளர்ந்துபோனதோடு ஒன்று சேர்ந்தது. கடன்காரர்களின் பத்திரங்களும் அடைமானப் பத்திரங்களும் — அதற்குள் அதீனியர்கள் அடைமானத்தையும் படைத்துவிட்டிருந்தார்கள் — கணத்தையோ பிராட்ரியையோ மதிக்கவில்லை. பழைய கணமுறைக்குப் பணம், கடன், பணவிஷயத்தில் கடன்படுவது ஆகியவைபற்றி ஒன்றும் தெரியாது. எனவே இடையறாது விரிவடைந்துவந்த பிரபுக்களின் பண ஆட்சி ஒரு புதிய சட்டத்தை — வழக்கத்தில் அமைந்த சட்டத்தை — உண்டாக்கியது; கடன்பட்டவனிடமிருந்து கடன்காரனுக்குப் பாதுகாப்பளிக்கவும், பணம்படைத்தவன் சிறு விவசாயியைச் சுரண்டுவதை அனுமதிக்கவும் உண்டாக்கப்பட்டது இது. ஆட்டிகாவின் கிராம மாவட்டங்கள் எல்லாம் அடைமானக் கம்பங்கள் நாட்டப்பட்டுக் காட்சியளித்தன; அந்தக் கம்பங்கள் அவை நாட்டப்பட்டிருக்கும் நிலங்கள் இன்னின்னாருக்கு இன்னின்ன தொகைக்கு அடைமானம் வைக்கப்பட்டுள்ளன என்ற விபர அறிக்கையைத் தாங்கிநின்றன. அம்மாதிரிக் குறிப்பிடப்படாத நிலங்கள் பெரும்பாலும் காலம் கடந்த அடைமானங்களுக்காகவும் வட்டி

செலுத்தாததற்காகவும் விற்கப்பட்டுப் போய், பிரபுத்துவத்தில் பிறந்த கந்துவட்டிக்காரர்களின் சொத்தாகிவிட்டன; குத்தகைதாரனாக இருந்து தன் உழைப்பில் ஆறில் ஐந்து பகுதியைக் குத்தகையாகத் தனது புது எஜமானனுக்குச் செலுத்தி ஆறில் ஒரு பகுதியைக் கொண்டு வாழ்வதற்கு அனுமதிக்கப் பட்டாலே விவசாயி மகிழ்ச்சியடைந்தான். அதற்கு மேலும் உண்டு: நிலத்துண்டை விற்றுவந்த தொகை கடனுக்கு ஈடுகட்டுவதாயிராமற் போனால், அல்லது அந்தக் கடனுக்கு அடைமானம் வைக்கப்படவில்லையானால், கடன்பட்டவன் கடனையடைக்கத் தன் குழந்தைகளை வெளிநாடுகளில் அடிமைகளாக விற்றுத்தரவேண்டும். தகப்பனார் தன் குழந்தைகளைத் தானே விற்பது — தந்தையுரிமை, ஒருதார மணமுறை ஆகியவற்றின் முதற்பலன் இப்படி! மேலும், இரத்தம் உறிஞ்சுபவனுக்கு இன்னும் திருப்தியேற்படவில்லையானால், கடன்பட்டவனையே அவன் அடிமையாக விற்றுவிடலாம். அதீனிய மக்களிடையே நாகரிகத்தின் மனோகரமான அருணோதயம் இப்படித் தானிருந்தது.

முன்பெல்லாம், மக்களின் வாழ்க்கை நிலைமைகள் கண முறைக்குப் பொருத்தமாக இன்னமும் இருந்த போது, இப்படிப்பட்ட புரட்சி நடப்பது அசாத்தியம்; ஆனால் இங்கே அது எப்படி ஏற்பட்டது என்று யாருக்குமே தெரியவில்லை. ஒரு வினாடி இரோகுவாய்களிடம் திரும்பச்செல்வோம். தாங்கள் ஒன்றும் செய்யாமலே, நிச்சயமாகத் தமது சித்தத்திற்கு விரோதமாக, அதீனியர்களின் மேல் திணிக்கப் பட்ட விவகார நிலை போன்ற ஒரு நிலை இரோகு

வாய்களிடையே ஏற்படுவது சிந்திக்கவும் இயலாத சங்கதியாகும். அங்கே, ஜீவனோபாயத்திற்குரிய பொருட்களின் உற்பத்திமுறை—அது ஆண்டுக்குப் பின் ஆண்டாக மாறாமலே இருந்து வந்தது—வெளியேயிலிருந்து புகுத்தப்பட்டவை போன்ற இப்படிப்பட்ட சச்சரவுகளை என்றைக்கும் எழச் செய்திருக்கமுடியாது. பணக்காரன் ஏழை, சுரண்டுகிறவர்கள் சுரண்டப்படுபவர்கள் என்ற பகைமையை எழச் செய்திருக்கமுடியாது. இயற்கையின் சக்திகளைக் கட்டுப்படுத்துவதிலிருந்து இரோகுவாய்கள் இன்னமும் வெகு தொலைவில் இருந்தார்கள்; ஆனால் இயற்கை விதித்திருந்த வரம்புகளுக்குள் தமது உற்பத்திக்குத் தாமே எஜமானர்களாக இருந்தார்கள் அவர்கள். அவர்களுடைய சிறிய தோட்டங்களில் மோசமான விளைச்சல் கண்டது ஒரு புறமிருக்க, அவர்களின் ஏரிகளிலும் நதிகளிலும் மீன்கள் இல்லாமற்போய் விடுவதும், அவர்களின் காடுகளில் வேட்டை மிருகங்கள் இல்லாமற்போய் விடுவதும் — இவையெல்லாம் ஒருபுறமிருக்க, தமது ஜீவனோபாயத்துக்குரிய முறையின் விளைவு என்னென்பது என்று அவர்களுக்குத் தெரிந்தேயிருந்தது. விளைவு பின்வருமாறு இருக்கும்: அற்பமாகவோ, நிறைவாகவோ வாழ்க்கைக்கு வேண்டிய பொருட்கள்; முன் சிந்தித்தறியாத சமுதாய பூகம்பங்கள் அல்ல, கணப் பந்தங்களை அறுப்பதல்ல, கணங்களின், குலங்களின் அங்கத்தினர்களைப் பகைமையுள்ள, ஒன்றையொன்று எதிர்த்துப் போராடிக் கொண்டிருக்கிற வர்க்கங்களாகப் பிரிவுபடுத்துவதல்ல. மிகமிகக் குறுக்கப்பட்ட வரம்புகளுக்குள் உற்பத்தி நடத்தப்பட்டு வந்தது; ஆனால்—உற்பத்தி செய்த சொந்தப்

பொருளின்மீது உற்பத்தியாளர்கள் கட்டுப்பாடு வைத்துக் கொண்டிருந்தார்கள். அநாகரிக உற்பத்தியிலுள்ள பிரம்மாண்டமான அனுகூலம் இதுதான்; நாகரிகம் வந்தபிறகு இது போய்விட்டது. இப்போது இயற்கைச் சக்திகளின்மீது மனிதன் செலுத்தி வரும் பிரம்மாண்டமான கட்டுப்பாட்டின் அடிப்படையில், இப்பொழுது சாத்தியப்பட்டிருக்கிற சுதந்திரமான ஐக்கியத்தின் அடிப்படையில், அதைத் திரும்பப் பெறுவதுதான் அடுத்த தலைமுறையின் கடமையாக இருக்கும்.

கிரேக்கர்களிடையே அப்படியில்லை. கால்நடை மந்தைகள், சொகுசுப் பொருட்கள்மீது தனியுடைமை தோன்றியதானது தனி நபர்களிடையே பண்டமாற்றுதலுக்குக் கொண்டுவந்துவிட்டது, விளைபொருட்களைச் சரக்குகளாக மாற்றுவதில் கொண்டுவந்து விட்டது. பின்தொடர்ந்து வந்த புரட்சி முழுவதற்குமுள்ள வேர் இங்கே தான் இருக்கிறது. தாம் உற்பத்தி செய்த பொருளை உற்பத்தியாளர்கள் தாமே இன்னமும் நேரடியாக அனுபவிக்காதபோது, பண்டமாற்றத்தின் போக்கில் அதைத் தம் கையிலிருந்து போய்விட அனுமதித்தபோது, அதன்மேல் அவர்கள் கட்டுப்பாட்டை இழந்து விட்டார்கள். அது பிறகு என்னவாகும் என்று அவர்களுக்குத் தெரியவில்லை; அந்த உற்பத்திப் பொருள் ஒரு நாளன்று உற்பத்தியாளர்களுக்கு எதிராகத் திருப்பப்படலாம், அவர்களைச் சுரண்டுவதற்காகவும் ஒடுக்குவதற்காகவும் உபயோகிக்கப்படலாம் என்ற சாத்தியக்கூறு தலைதூக்கியது. எனவே, தனி நபர்களிடையே பரிவர்த்தனையை ஒழித்தாலன்றி, எந்தச்

சமுதாயமும் அதிக காலத்துக்குத் தனது சொந்த உற்பத்திக்குத் தானே எஜமானனாகவிருக்கவோ, தனது உற்பத்தி செய்முறையின் சமுதாய விளைவுகளைத் தொடர்ந்து கட்டுப்படுத்திவைத்துவரவோ முடியாது.

என்றாலும், தனி நபர்களிடையே பரிவர்த்தனை நிலைநாட்டப்பட்டபிறகு, உற்பத்திப் பொருட்களைச் சரக்குகளாக மாற்றியபிறகு, எவ்வளவு துரிதமாக உற்பத்திப் பொருள் உற்பத்தியாளன்மீது தனது ஆட்சியை வெளிப்படுத்திக்கொள்கிறது என்பதை அதீனியர்கள் சீக்கிரத்தில் கற்கவேண்டியிருந்தது. சரக்குகளின் உற்பத்தியோடு, தனித்தனி நபர்கள் சொந்தத்துக்கு நிலத்தைச் சாகுபடி செய்வதும் வந்தது; அதை விரைவிலே தொடர்ந்து நிலத்தில் தனியுடைமையும் வந்துசேர்ந்தது. அதன் பிறகு பணம் வந்தது —பணம் என்பது மற்ற எல்லாவற்றையும் பரிவர்த்தனை செய்துகொள்வதற்குரிய சர்வவியாபகமான சரக்கு. ஆனால் மனிதர்கள் பணத்தைப் புதிதாகப் படைத்தபோது தாங்கள் ஒரு புதிய சமுதாய சக்தியைச் சிருஷ்டிப்பதாகக் கொஞ்சமேனும் எண்ணவேயில்லை; அந்த ஒரே ஒரு சர்வவியாபகமான சக்திக்குச் சமுதாயம் முழுவதுமே தலைவணங்கித் தீரவேண்டும். தன்னைச் சிருஷ்டித்தவர்களின் சித்தமோ அறிவோ இல்லாமலேயே திடீரென்று வெளிப்பட்டுவிட்ட, இளமையின் மிருகபலம் வாய்ந்த இந்தப் புதிய சக்தி தனது ஆதிக்கத்தை அதீனியர்களுக்கு உணர்த்தியது.

என்ன செய்வது? பணத்தின் வெற்றிகரமான நடைக்கு எதிரே பழைய கண ஸ்தாபனம் செயல்

வீரியமற்றதாகிவிட்டதாக நிரூபித்துக் கொண்டது மட்டுமல்ல; பணம், கடன் தந்தவர்கள், கடன் வாங்கியவர்கள், பலவந்தமாகக் கடன் வசூல் போன்ற விஷயங்களுக்குத் தனது நாட்டுக்கோட்டுக்குள்ளேயே ஓரிடத்தை அளிப்பதற்கும் அது சக்தியற்றிருந்தது. ஆனால் புதிய சமுதாய ரீதியான சக்தியோ வந்தாகிவிட்டது; நல்விருப்பங்களாலோ அன்றிப் பழைய நல்ல காலம் திரும்ப வராதா என்று ஏங்கிக்கிடப்பதனாலோ பணத்தையும் வட்டிக்குக் கடன் கொடுப்பதையும் ஒழித்துக்கட்ட முடியவில்லை. மேலும், கண முறையில் இதர பல சிறிய உடைப்புகளும் ஏற்பட்டுவிட்டன. ஆட்டிகா முழுவதிலும், குறிப்பாக ஆதென்ஸ் நகரத்திலும், கண அங்கத்தினர்களும் பிராட்ரி அங்கத்தினர்களும் வரைமுறையின்றிக் கலந்தது தலைமுறைக்குத் தலைமுறை அதிகமாகியது; ஓர் அதீனியன் தனது கணத்துக்கு வெளியே நிலப்பகுதிகளை விற்க அனுமதிக்கப்பட்டிருந்தாலும் தான் குடியிருக்கும் வீட்டை அப்படி விற்க இன்னும் தடுக்கப்பட்டுத்தான் வந்தான் என்றிருந்தபோதிலும் இப்படி நடந்தது. தொழிலும் வாணிபமும் முன்னேற ஏற, விவசாயம், கைத்தொழில், பல்வேறு சிறு தொழில்களில் உள்ள பல வகைகள், வர்த்தகம், கப்பலோட்டுதல், முதலிய உற்பத்தியின் பல்வேறு கிளைகளுக்கிடையே உழைப்புப் பிரிவினை, முன்னைவிட அதிக நிறைவாக வளர்ந்தது. ஜனத்தொகை செய்யும் தொழிலின்படி ஓரளவுக்கு நன்கு வரையறுக்கப்பட்ட குழுக்களாக இப்போது பிரிக்கப்பட்டது; அந்த ஒவ்வொரு குழுவும் கணத்திலோ பிராட்ரியிலோ இடம் பெறாத பல புதிய பொதுவான நலன்

களைப் பெற்றிருந்தது; எனவே அவற்றைக் கவனித்துக்கொள்வதற்குப் புதிய பதவிகளைச் சிருஷ்டிப்பது அவசியமாயிற்று. அடிமைகளின் எண்ணிக்கை கணிசமான அளவுக்கு அதிகரித்திருந்தது; இந்த ஆரம்பக் கட்டத்திலேயே சுதந்திரமுள்ள அதினியர்களின் தொகையைக் காட்டிலும் அதிகமாக அடிமைகள் இருந்திருக்க வேண்டும். ஆதியில் கண அமைப்பு அடிமை முறையை அறிந்திருந்ததில்லை; எனவே, அது சுதந்திரமற்றவர்களின் இந்தப் பெருங் கூட்டத்தைக் கட்டியாள்வதற்குரிய வழிவகைகள் ஒன்றையும் அறியாதிருந்தது. மேலும் கடைசியாக, வாணிபம் பலப்பல அந்நியர்களை ஆகர்ஷித்ததால், அவர்கள் ஆதென்ஸில் குடி தங்கிவிட்டனர்; ஏனெனில் அங்கு பணம் சம்பாதிப்பது இன்னும் சுலபமாயிருந்தது. பழைய அமைப்பின்படியோ, இந்த அந்நியர்களுக்கு உரிமைகளோ, சட்டத்தின் பாதுகாப்போ கிடையாது. பரம்பரையாய் வந்த சகிப்புத் தன்மை இருந்த போதிலும், மக்களிடையே அவர்கள் கலவரத்திற்குரிய, அந்நிய அம்சமாகவே இருந்து வந்தார்கள்.

சுருங்கச் சொன்னால், கண முறை முடிவுக்கு வந்து கொண்டிருந்தது. சமுதாயம் அதன் எல்லைகளைக் கடந்து நாள்தோறும் மேலும் மேலும் அகன்று சென்று கொண்டிருந்தது. தன் கண்ணெதிரே விளைந்துவரும் மிகத் துன்பகரமான தீமைகளையும் கூடத் தடுக்கவோ, தணிக்கவோ அது சக்தியற்றிருந்தது. ஆனால், இதற்கிடையில், சந்தடியில்லாமல் அரசு வளர்ந்துவிட்டது. முதலில் நகரத்துக்கும் நாட்டுப்புறத்துக்கும், பிறகு நகரப்புறத்துத் தொழி

லின் பல்வேறு கிளைகளுக்கும் இடையே யிருந்த உழைப்புப் பிரிவினையால் ஏற்பட்ட புதுக் குழுக்கள் தமது நலன்களைப் பாதுகாக்கப் புதிய உறுப்புக்களை உண்டாக்கின. எல்லா வகைப்பட்ட பொதுப் பதவிகளும் ஏற்படுத்தப்பட்டன. அதன் பிறகு, இளம் அரசுக்கு எல்லாவற்றிற்கும் மேலாகச் சொந்த ஆயுதப்படைகள் தேவைப்பட்டன; கப்பலோட்டுகிற அதீனியர்களிடையே அது முதலில் கப்பற்படையாகத் தான் இருந்திருக்க முடியும். அவ்வப்பொழுது சிறு சிறு போர்களுக்காகவும் வர்த்தகக் கப்பல்களைப் பாதுகாக்கவும் அது பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும். சொலான் வருவதற்கு முந்தித் திட்டமாகச் சொல்லமுடியாத ஒரு காலத்தில் ஒவ்வொரு குலத்திலும் பன்னிரண்டாக, நௌக்ராரிகள் எனப்பட்ட சிறு பிரதேச மாவட்டங்கள் நிறுவப்பட்டன. ஒவ்வொரு நௌக்ராரியும் ஒரு யுத்தக் கப்பலைத் தயாரித்து, ஆளும் சாதனமும் தரவேண்டியிருந்தது, அதோடுகூட இரு குதிரை வீரர்களையும் நியமிக்க வேண்டியிருந்தது. இந்த ஏற்பாடு கண முறையை இரு வகைகளில் தாக்கியது. முதலாவதாக, அது சிருஷ்டித்த பொது அதிகாரமும் ஆயுதமேந்திய மக்கள் தொகை மொத்தமும் ஒன்றல்ல. இரண்டாவதாக, பொதுக் காரியங்களுக்காக அது மக்களை இரத்த உறவுக் குழுக்களின் அடிப்படையிலல்லாமல், பிரதேச அடிப்படையில், **பொதுக் குடியிருப்புப்படி** பிரித்துவைத்தது. இதன் அர்த்த முக்கியத்துவம் என்னவென்று பின்னர் பார்ப்போம்.

சுரண்டப்பட்ட மக்களுக்கு உதவியாகக் கண முறை வரமுடியாமற்போனதால் அவர்கள் மேல்

வந்துகொண்டிருக்கிற அரசின் பாதுகாப்பைத்தான் எதிர்பார்த்து நிற்கவேண்டியிருந்தது. சொலான் அரசியல் சட்டம் என்ற வடிவத்தில் அரசும் அவர்களுக்கு உதவி தந்தது; அதே சமயத்தில், பழைய அமைப்பு முறைக்கு அழிவுண்டாக்கும் வகையில் அது தன்னைப் பலப்படுத்திக் கொண்டது. கி. மு. 594ல் சொலான் தனது சீர்திருத்தத்தை எப்படிக் கொண்டுவந்தார் என்ற விஷயம் பற்றி இங்கே நமக்கு அக்கறை இல்லை—சொத்து மீது ஆக்கிரமிப்பு நடத்துவதுமூலமாக அரசியல் புரட்சிகள் என்று சொல்லப்படுபவற்றை வரிசையாக சொலான் ஆரம்பித்து வைத்தார். இதுவரை நடந்திருக்கிற புரட்சிகள் எல்லாமே ஒரு வகைச் சொத்தை எதிர்த்து இன்னொரு வகைச் சொத்துக்குப் பாதுகாப்பளிப்பதற்கே நடந்தவை. ஒரு வகைச் சொத்தைப் பாதிக்காமல் அவை இன்னொரு வகைச் சொத்தைக் காக்கமுடியாது. மகத்தான பிரெஞ்சுப் புரட்சியில் பூர்ஷ்வாச் சொத்தைப் பாதுகாப்பதற்காக நிலப்பிரபுத்துவச் சொத்து பலியிடப்பட்டது; சொலானின் புரட்சியில், கடன்பட்டவர்களின் சொத்து லாபம் பெறவேண்டி, கடன் கொடுத்தவர்களின் சொத்து நஷ்டப்படவேண்டியிருந்தது. கடன்களெல்லாம் அப்படியே ரத்து செய்யப்பட்டன. கறாரான விபரங்கள் நமக்குத் தெரியாது, ஆனால் அடமானத்துக்குள்ளான நிலங்களிலிருந்த அடமான அறிவிப்புக் குறிகளைத் தான் அகற்றிவிட்டு, கடன் காரணமாக வெளியே விற்கப்பட்டவர்களும் ஓடிப்போனவர்களும் வீடு திரும்பச் செய்ததாகத் தமது கவிதைகளில் சொலான் பெருமையாகச் சொல்லிக் கொள்கிறார்.

சொத்து உரிமைகளைப் பகிரங்கமாக மீறுவதின் வழியாகத் தான் இது செய்யப்பட்டிருக்க முடியும். உண்மையிலே பார்த்தால், முதலிலிருந்து கடைசி வரை அரசியல் புரட்சிகள் என்று சொல்லப்படுபவற்றின் குறிக்கோள் ஒரு வகைப்பட்ட சொத்தைப் பறிமுதல் செய்வதின் மூலம்—களவாடுவதின் மூலம் என்றும் சொல்லலாம்—மற்றொரு வகைப்பட்ட சொத்தைப் பாதுகாப்பதேயாம். இப்படியாக, சொத்து உரிமைகளை மீறிக்கெடுப்பதின் வழியாக மட்டுமே தனிச்சொத்துடைமை 2,500 ஆண்டுகளாகப் பாதுகாக்கப்படமுடிந்தது என்பது முழுக்க முழுக்க உண்மை.

விடுதலை பெற்ற அதீனியர்கள் மீண்டும் அடிமையாக்கப்படாமல் தடுப்பதற்கு ஒரு வழி கண்டுபிடித்தாகவேண்டியிருந்தது. இது முதலில் பொது நடவடிக்கைகளைக் கொண்டு சாதிக்கப்பட்டது; உதாரணமாகக் கடன் வாங்குபவனை அடகுவைப்பதை உள்ளடக்கிய ஒப்பந்தங்கள் தடை செய்யப்பட்டன. மேலும், ஒரு நபர் சொந்தமாக வைத்துக் கொள்ளக்கூடிய நிலத்துக்கும் ஓர் உச்சவரம்பு கட்டப்பட்டது. இது எதற்காகவெனில், விவசாயிகளின் நிலங்களின் மீது பிரபுக்கள் பேராசை கொண்டு திரிவதற்குக் குறைந்தபட்சமாகவாவது தடை விதிப்பதற்குத்தான். அதன் பிறகு அரசியல் சட்டத்தில் திருத்தங்கள் வெளிவந்தன. அவற்றில் நமக்கு முக்கியமானவை பின்வருமாறு:

ஒவ்வொரு குலத்திலிருந்தும் நூறு பேராகக் கவுன்சிலின் தொகை நானூறுக்கு உயர்த்தப்பட்டது. ஆக, இங்கே இன்னும் குலமே ஆதாரமாகப் பயன்

பட்டது. ஆனால் இது ஒன்றுதான் பழைய முறையிலிருந்து எடுத்துப் புதிய அரசியல் அமைப்பில் இணைத்துக் கொள்ளப்பட்ட அம்சமாகும். மற்றப்படி, சொந்தமாக வைத்துள்ள நிலம், அதன் சாகுபடி யளவு ஆகியவற்றைக் கொண்டு பிரஜைகளை நான்கு வகுப்புக்களாக சோலன் பிரித்தார். 500, 300, 150 மிடிம்னஸ்கள் தானியம் (ஒரு மிடிம்னஸ் என்பது சுமார் 41 லிட்டர்கள்) என்பதுதான் முதல் மூன்று வகுப்புகளுக்கும் சோலன் விதித்த குறைந்தபட்சச் சாகுபடி யளவாகும். அதை விடக் குறைந்த நிலமுள்ளவர்களும், நிலமே இல்லாதவர்களும் நான்காவது வகுப்பைச் சேர்ந்தவர்கள். முதல் மூன்று வகுப்பார்தான் பதவி வகிக்க முடியும்; உச்ச உயர்பதவிகள் முதல் வகுப்பினரைக் கொண்டு நிரப்பப்பட்டன. பொது மக்கள் மன்றத்தில் பேசவும் வாக்களிக்கவும் தான் நான்காம் வகுப்பினருக்கு உரிமையிருந்தது. ஆனால் இங்கே எல்லா அதிகாரிகளும் தேர்ந்தெடுக்கப்பட்டனர், இங்கே எல்லோரும் தமது செய்கைகளுக்குக் கணக்கு தந்தாகவேண்டும், இங்கே சட்டங்கள் எல்லாமே செய்யப்பட்டன, இங்கேயும் நான்காம் வகுப்புதான் பெரும்பான்மையிலிருந்தது. செல்வத்தின்பாற்பட்ட சலுகை நலன்கள் என்ற வடிவத்தில் பிரபுத்துவச் சலுகை நலன்கள் ஓரளவுக்குப் புதுப்பிக்கப்பட்டிருந்தன, ஆனால் நிர்ணயமான அதிகாரத்தை மக்களே வைத்திருந்தார்கள். போர்ப்படைகளைத் திருத்தியமைப்பதிலும் இந்நான்கு வகுப்புகளே அடிப்படையாயின. முதல் இரண்டு வகுப்புகளும் குதிரைப் படையைத் தந்தன; மூன்றாவது வகுப்பு கவசதாரிக்

காலாட்படையாகப் பணியாற்ற வேண்டியிருந்தது; நான்காவது வகுப்பு கவசமற்ற சாதாரண காலாட்படையாகவும் கப்பற்படையிலும் பணி புரிந்தது; இவ்வகுப்பினருக்குப் பெரும்பாலும் சம்பளம் அளிக்கப்பட்டிருக்கக் கூடும்.

இப்படியாக, அரசியல் சட்டத்தில் தனியுடைமை என்ற முற்றிலும் புதிதான அம்சம் ஒன்று புகுத்தப்பட்டது. அவரவர்கள் சொந்தத்தில் வைத்துக்கொண்டுள்ள நில அளவுக்குத் தக்கபடி பிரஜைகளின் உரிமைகளும் கடமைகளும் தரவாரியாக அமைக்கப்பட்டன. மேலும், சொத்துள்ள வர்க்கங்கள் செல்வாக்கு பெறப் பெற, பழைய ரத்த உறவுக் குழுக்கள் பின்னுக்குத் தள்ளப்பட்டன. கண முறை மற்றொரு தோல்வியடைந்தது.

இருந்தாலும், சொத்துக்குத் தக்கபடி தரவாரி அரசியல் உரிமைகளைத் தருதல் அரசுக்கு இன்றியமையாத அமைப்பு அல்ல. அரசுகளின் அரசியல் சட்ட வரலாற்றில் அது முக்கியமாக இருந்திருக்கலாம்; என்றாலும் பல அரசுகள், அதிலும் முழு வளர்ச்சி பெற்றிருந்த அரசுகள், அதின்றியே செயல்பட்டன. ஆதென்ஸிலும் அது ஒரு தாற்காலிகப் பாத்திரம்தான் வகித்தது. அரிஸ்டிடிஸ் காலத்திலிருந்து, எல்லாப் பதவிகளும் எல்லாப் பிரஜைகளுக்கும் எட்டக்கூடியவையாயிருந்தன.

அடுத்த எண்பது ஆண்டுகளினூடே அதீனிய சமுதாயம் ஒரு போக்கில் படிப்படியாகச் சென்றது; பின்வந்த நூற்றாண்டுகளில் அதே போக்கில் போய் அது மேலும் வளர்ச்சி பெற்றது. சொலானுக்கு முந்திய காலப்பகுதியில் நில அடமானக்

கடன்கள் தலைவிரித்தாடின; அவை இப்போது தடுக்கப்பட்டன; நிலச் சொத்து வரையறையின்றிக் குவிக்கப்பட்டிருந்ததும் தடுக்கப்பட்டது. அடிமை உழைப்பைக் கொண்டு மேலும் மேலும் அதிகரித்த அளவில் நடந்த வாணிபமும், கைத்தொழில்களும், கலைத் தொழில்களும் தொழிலின் பிரதானக் கிளைகளாயின. அறிவு மலர்ச்சியும் முன்னேறியது. பழைய மிருகத்தனமான முறையிலே தங்களுடைய சொந்த சக பிரஜைகளைச் சுரண்டுவதற்குப் பதிலாக, இப்போது அதீனியர்கள் பிரதானமாக அடிமைகளையும் அதீனியர்களல்லாத வாடிக்கைக்காரர்களையும் சுரண்டினார்கள். ஜங்கம சொத்துக்கள், பணம், அடிமைகள், கப்பல்கள் என்ற ரூபத்தில் செல்வம், மேலும் மேலும் அதிகரித்தது. ஆனால் சில குறைபாடுகளோடிருந்த முதல் காலப்பகுதியில் நிலம் வாங்குவதற்குரிய ஒரு வழி வகையாக இருந்ததுபோய் அதுவே ஓர் இலட்சியமாகிவிட்டது. இது, ஒரு புறத்தில், பிரபுத்துவத்தின் பழைய அதிகாரத்தோடு செல்வம் படைத்த தொழில் அதிபர்கள், வாணிபர்களின் புதிய வர்க்கம் வெற்றிகரமாகப் போட்டியிடுவதை உண்டாக்கிவிட்டது. ஆனால், இன்னொரு புறத்தில், இது பழைய கண முறைக்கு இருந்த கடைசி ஆதாரத்தையும் பிடுங்கி விட்டது. கணங்கள், பிராட்ரிகள், குலங்கள் ஆகியவற்றைச் சேர்ந்த அங்கத்தினர்கள் இப்போது ஆட்டிகா வெங்கும் சிதறிக்கிடந்தனர், முற்றிலும் ஒருவரோடொருவர் கலந்து விட்டிருந்தனர்; எனவே அவை அரசியல் நிறுவனம் என்ற வகையில் முற்றிலும் பயன்படவில்லை. அதீனியப் பிரஜைகளில் பல பேர் எந்தக்

கணத்தையும் சேர்ந்திருக்க வில்லை. அவர்கள் குடியேறிப் பிரஜைகளாகச் சுவீகரித்துக் கொள்ளப் பட்டவர்கள். ஆனால் அவர்கள் பழைய குல ஸ்தாபனம் எதிலும் சுவீகரித்துக் கொள்ளப்பட வில்லை. மேலும், பாதுகாப்பு மட்டும் பெற்று வந்த அந்நியக் குடியேறிகளின் எண்ணிக்கை திட்டமாக அதிகரித்துக் கொண்டேயிருந்தது.

இதற்கிடையில், தரப்பினரின் போராட்டங்கள் நடந்தேறின. பிரபுத்துவம் தனது முந்திய சலுகை நலன்களைத் திரும்பப்பெற முயன்றது; ஒரு குறைந்த அளவுக் காலத்துக்குத் தனது மேலாதிக்கத்தைத் திரும்பப்பெற்றது; ஆனால் கிளீஸ்தெனிஸ் புரட்சி (கி. மு. 509) அதை இறுதியாக வீழ்த்திய வரைக்குத்தான் அது இருந்தது. அத்துடன் கண முறையின் கடைசி மிச்சசொச்சங்களும் வீழ்ந்து விட்டன.

கிளீஸ்தெனிஸ் தமது புதிய அரசியல் சட்டத்தில் கணங்களையும் பிராட்ரிகளையும் ஆதாரமாகக் கொண்டிருந்த பழைய நான்கு குலங்களையும் புறக்கணித்தார். அவற்றின் இடத்தில் முற்றிலும் புதிய ஒரு ஸ்தாபனம் வந்துற்றது; ஏற்கனவே நௌக்ராரிகளில் முயன்றிருந்தபடி குடிபுகுந்த இடத்திற்குத் தகுந்தவாறு பிரஜைகளைப் பிரிப்பதின் அடிப்படையில் மட்டுமே அது இருந்தது. குல ஸ்தாபனங்களில் அங்கம் வகிப்பதல்ல, குடிபுகுந்த இடமே இப்போது நிர்ணயிக்கிற அம்சமாக இருந்தது. மக்களல்ல, பிரதேசம் தான் இப்போது பிரிக்கப்பட்டது; அரசியல் ரீதியிலே பிரதேசத்தின் இணைப்பாகங்களாக மக்கள் ஆகிவிட்டனர்.

ஆட்டிகா முழுவதும் சுயாட்சி பெற்ற நூறு சமுதாயப் பிரதேசங்கள் அல்லது 'டேம்'கள் ஆகப் பிரிக்கப்பட்டது. ஒரு டேமின் பிரஜைகள் (டேமாட்டுகள்) தமது அதிகார பூர்வமான தலைவனையும் (டேமார்க்கையும்) பொருளாளரையும் சில்லறை விவகாரங்கள் தமது அதிகார வரம்புக்குள்ளிருக்கிற முப்பது நீதிபதிகளையும் தேர்ந்தெடுத்தனர். தங்களுக்கே சொந்தமான கோவிலையும் காவல் தேவதையையும் அல்லது மாவீரனையும் பெற்றுக்கொண்டனர்; பூசாரிகளையும் அவர்களே தேர்ந்தெடுத்தனர். டேமில் மேலாதிக்க அதிகாரம் படைத்தது டேமாட்டுகளின் மன்றம்தான். மார்கன் சரியாகக் குறிப்பிட்டுள்ளபடி, இது சுயாட்சியுள்ள அமெரிக்க நகராட்சி மன்றத்தின் முன்மாதிரியமைப்பாகும். உச்ச வளர்ச்சி பெற்றிருக்கிற நவீனகாலத்திய அரசு எந்த மூல உறுப்புடன் முடிகிறதோ, அந்த மூல உறுப்புடன்தான் ஆதென்ஸில் மேல் வந்து கொண்டிருந்த அரசு ஆரம்பித்தது.

ஒரு குலத்தில் பத்து மூல உறுப்புக்கள், டேம்கள், இருந்தன. கண வகைப்பட்ட பழைய குலங்களினின்று வேறுபடுத்திக்காட்டும்பொருட்டு இவை ஸ்தல குலங்கள் என்று இப்போது அழைக்கப்பட்டன. ஸ்தல குலம் என்பது சுயாட்சியுள்ள அரசியல் நிறுவனம் மட்டுமல்ல, ஒரு ராணுவ அமைப்பும் ஆகும். அது ஒரு பிலார்க்கை, அதாவது குலத் தலைவனை, தேர்ந்தெடுத்தது; அவன் குதிரைப்படைகளுக்குத் தலைமை தாங்கினான்; காலாட்படைகளுக்குத் தலைமை வகித்த ஒரு டாக்ஸியார்க்கையும் தேர்ந்தெடுத்தார்கள்; குலப்பிரதேசத்தில் திரட்டப்பட்ட

படை முழுவதற்கும் தலைமை வகித்த ஒரு ஸ்டிராட கஸ்ஸையும் தேர்ந்தெடுத்தனர். மேலும், அது ஆட்களும் தளபதியுமாக ஐந்து போர்க் கப்பல்களையும் தந்தது; அது ஓர் ஆட்டிகா மாவீரனையும் தனது காவல் தெய்வமாகப் பெற்றுக்கொண்டது; அந்த மாவீரனின் பெயராலேயே அதுவும் அழைக்கப்பட்டது. கடைசியாக, ஆதென்ஸ் கவுன்சிலுக்கு ஐம்பது பிரதிநிதிகளையும் தேர்ந்தெடுத்தது.

இவை எல்லாவற்றின் திரண்ட வடிவே அதீனிய அரசு; பத்துக் குலங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஐந்நூறு பேர்களைக் கொண்ட கவுன்சிலாலும் கடைசிக் கட்டத்தில் பொது மக்கள் மன்றத்தாலும் அது நடத்தப்பட்டது. இந்த மன்றத்திற்கு ஒவ்வொரு பிரஜையும் வந்திருந்து வாக்களிக்கமுடியும். ஆர்ஹன்களும் இதர அதிகாரிகளும் வெவ்வேறு நிர்வாகத் துறைகளையும் நீதி மன்றங்களையும் கவனித்துக் கொண்டார்கள். தலைமையாதிக்கம் பெற்ற நிர்வாக அதிகாரம் படைத்த அதிகாரி யாருமே ஆதென்ஸில் கிடையாது.

இந்தப் புதிய அரசியல் சட்டத்தைக் கொண்டும், ஒரு பகுதி குடியேறிகளையும் ஒரு பகுதி விடுவிக்கப்பட்ட அடிமைகளையும் கொண்ட பல முழு உரிமையற்றவர்களை அனுமதித்ததைக் கொண்டும் கண முறையின் உறுப்புக்கள் பொது விவகாரங்களிலிருந்து நீக்கப்பட்டன. தனிப்பட்ட நிறுவனங்கள், மதச் சங்கங்கள் என்ற அந்தஸ்துக்கு அவை இறங்கிவிட்டன. ஆனால் அவற்றின் தார்மீகச் செல்வாக்கு, பழைய கணக் காலப்பகுதியைச் சேர்ந்த பரம்பரைக் கருத்தோட்டங்களும் அபிப்பிராயங்களும்

வெகு காலத்துக்கு உயிரோடியங்கின, படிப்படி யாகத் தான் அவை இறந்தொழிந்தன. பின்னுல் வந்த ஓர் அரசு அமைப்பில் இது நிதர்சனமாயிற்று.

அரசின் ஓர் அடிப்படையான குணும்சம் மக்க ளிடமிருந்து வேறுபடுத்திக் காட்டிக் கொள்கிற ஒரு பொது அதிகாரமே என்று நாம் பார்த் தோம். அந்தக் காலத்தில் ஆதென்ஸிடம் ஒரு மக்கள் படையும் மக்களால் நேரடியாகச் சாதனமும் ஆள்பலமும் தரப்பட்ட கப்பற்படையும்தான் இருந் தன. வெளிநாட்டு விரோதிகளிடமிருந்து பாது காக்கவும், ஜனத்தொகையில் ஏற்கனவே மிகப் பெரும்பான்மையாகி விட்டிருந்த அடிமைகளைக் கட்டுக்குள் வைத்திருக்கவும், இவ்விரண்டும் பயன் பட்டன. பிரஜைகளைப் பொறுத்தமட்டில் பொது அதிகாரம் முதலில் ஒரு போலீஸ்படை என்ற வடி வத்தில் மட்டுமே இருந்து வந்தது, இந்தப் போலீ ஸோ அரசு தோன்றிய காலத்திலிருந்தே இருந்து வந்திருக்கிறது. ஆகவேதான் 18ம் நூற்ருண்டைச் சேர்ந்த அப்பாவி பிரெஞ்சுக்காரர்கள் நாகரிக மடைந்த தேசங்களைப் பற்றிப் பேசாமல் போலீஸ் மயமான தேசங்களை (nations policées) பற்றிப் பேசினுர்கள். இப்படியாக, அதீனியர்கள் தமது அரசோடு கூடவே ஒரு போலீஸ் படையும் நிறு வினர். இது வில்லும் அம்பும் தரித்த காலாட் படையும் சவாரிப்படையும் கொண்ட போலீஸ் படையாகும், தெற்கு ஜெர்மனியிலும் சுவிட்ஸர் லாந்திலும் ‘Landjäger’ என்று இதைச் சொல் கிருர்கள். இந்தப் போலீஸ்படையில் இருந்தவர் கள் **அடிமைகளே.** இந்தப் போலீஸ் பணியைச்

சுதந்திர புருஷனுன அதீனியன் மதிப்புக்குறைவான தாகக் கருதினுன்; எந்த அளவுக்கு எனில் ஆயுத மேந்திய அடிமையே தன்னைக் கைது செய்தாலும் செய் யட்டும், தான் அப்படிப்பட்ட மானக்கேடான பணி களைச் செய்யக்கூடாது என்ற அளவுக்கு. இது பழைய கணவகைப்பட்ட மனப்பான்மையின் ஒரு வெளி யீடாகும். ஒரு போலீஸ்படை இல்லாமல் அரசு இருக்க முடியாது; ஆனுல் அது இள வயசில் தானிருந்தது; பழைய கண அங்கத்தினர்களுக்கு அவசியம் மதிப்புக்கேடானதாகத் தோன்றிய ஒரு தொழிலுக்குப் பெருமை தேடித்தரும் அளவுக்கு அந்த அரசு போதிய தார்மீக ஆதரவைப் பெற் றிருக்கவில்லை.

செல்வமும் வாணிபமும் தொழிலும் விரை வாக வளர்ச்சி பெற்றதிலிருந்து, பிரதான அங்க அமைப்புக்களில் முழுமைபெற்ற இந்த அரசு எவ் வளவு நன்ருக அதீனியர்களின் புதிய சமுதாய நிலை மையுடன் பொருந்தியிருந்தது என்பது புலனுயிற்று. சமுதாய, அரசியல் அமைப்புகள் ஆதாரப்பட் டிருந்த வர்க்க விரோதம் இப்போது பிரபுக்களுக்கும் சாதாரண மக்களுக்குமிடையிலல்ல, அடிமைகளுக் கும் சுதந்திரமடைந்திருப்பவர்களுக்கும், முழு உரிமையற்றவர்களுக்கும் பிரஜைகளுக்கும் இடை யில் தான். ஆதென்ஸ் அதன் சுபிட்சத்தின் உச்ச நிலையிலிருந்த போது பெண்களும் குழந்தை களும் அடங்கலாகச் சுதந்திரம் பெற்ற அதீனியர் களின் மொத்த எண்ணிக்கை சுமார் 90,000 தான். இரு பாலாருமடங்கிய அடிமைகளின் தொகை **3,65,000;** முழு உரிமையற்றவர்கள்—அதாவது,

குடியேறியவர்களும் விடுதலை செய்யப்பட்ட அடி-மைகளும் — 45,000. ஆக, வயதுவந்த ஒவ்வோர் ஆண் பிரஜைக்கும் குறைந்தபட்சம் 18 அடிமைகளும் இரண்டு முழு உரிமையற்றவர்களுமாக இருந்தனர். அடிமைகளில் பலர் பெரிய அறைகள் கொண்ட செய்பொருள் தொழிற்சாலைகளில் மேற்பார்வையாளர்களின் கீழ் ஒன்றாக வேலை செய்தார்கள்; அவர்கள் அதிக எண்ணிக்கையில் இருந்ததை இது விளக்குகிறது. வாணிபமும் தொழிலும் வளர்ந்ததையொட்டி ஒரு சிலரிடம் பணம் திரண்டு குவிவதும் நடந்தது. சுதந்திரமுள்ள பிரஜைகளின் கூட்டம் ஏழ்மைப்பட்டது; அவர்கள் கைத் தொழிலைக் கைக்கொண்டு அடிமை உழைப்போடு போட்டி போட வேண்டும்; இல்லையேல் முழுக்க பஞ்சப்பராரியாக வேண்டும்; இரண்டில் ஒன்றை அவர்கள் தேர்ந்தெடுக்கவேண்டியவர்களாயினர். தொழிலைக் கைக்கொண்டு அடிமை உழைப்போடு போட்டி போடுவதோ இழிவாகக் கருதப்பட்டது. தவிர அதில் வெற்றி கிடைப்பதும் அரிதே. ஆக அன்றிருந்த நிலைமைகளில் அவசியமாக நடந்தது என்னவென்றால் பஞ்சப்பராரிகளானதுதான், அவர்கள் மிகப் பெருந்தொகையினர், ஆதலால் தாங்கள் விழும்போது தங்களுடன் கூடவே அதீனிய அரசையும் அவர்கள் இழுத்து வீழ்த்திவிட்டார்கள். முடி-மன்னர்களின்முன் கெஞ்சிக் குழையும் ஐரோப்பியப் பள்ளியாசிரியர்கள் நம்மை நம்பச் செய்ய விரும்புவதுபோல் ஆதென்ஸ் வீழ்ச்சிக்குக் காரணம் ஜனநாயகம் அல்ல; அதற்குக் காரணம் அடிமைமுறை

யே; அது சுதந்திரப் பிரஜையின் உழைப்பை அவமதிப்புக்குள்ளாக்கியது.

அதீனியர்களிடையே அரசு எழுந்தது பொதுவாக அரசமைப்புக்கு மிகப்பொதுமைச் சிறப்புள்ள ஓர் உதாரணமாகத் திகழ்கிறது. ஏனெனில் ஒரு பக்கத்தில், அது ஒரு தூய்மையான வடிவத்தில் நடைபெற்றது; வெளிநாட்டு, உள்நாட்டுப் பலாத்காரம்—பிஸிஸ்டிராடஸின் ஆட்சி கைப்பற்றல் சிறிது காலத்துக்குத்தான்; அதன் பிறகு அடையாளமில்லாமலே அது இறந்தொழிந்தது—குறுக்கிடாமலே அது நடந்தது; ஏனெனில் இன்னொரு பக்கத்தில், மிக உயர்வாக வளர்ந்த அரசு வடிவத்தை, ஜனநாயகக் குடியரசை, அது பிரதிநிதித்துவப்படுத்தியது; அந்த அரசு கண சமுதாயத்திலிருந்து நேராக வெளிவந்தது; கடைசியாக நமக்கு போதுமான அளவில் முக்கியமான விபரங்கள் அனைத்தும் தெரிந்திருப்பதால்.

## VI

## ரோமாபுரியில் கணங்களும் அரசும்

ரோமாபுரி ஸ்தாபிதமானதைப் பற்றிய கட்டுக் கதையின்படி ஒரேயொரு குலமாக ஒன்றுபட்ட பல லத்தீன் கணங்கள் (கட்டுக்கதை நூறு கணங்கள் என்று கூறுகிறது) முதன்முதலாகக் குடிபுகுந்தன. நூறு கணங்கள் கொண்டது என்று சொல்லப்பட்ட ஒரு சபேல்லியன் குலமும் விரைவில் தொடர்ந்து வந்துசேர்ந்தது; கடைசியில் நூறு கணங்கள் இருந்ததாகச் சொல்லப்பட்ட, பல்வேறு அம்

சங்களைக் கொண்ட மூன்றாவது குலமும் வந்து அவர்களோடு சேர்ந்து கொண்டது. முதல் பார்வையிலேயே வெளிப்படுவதென்னவெனில் இங்கே கணம் ஒன்றைத் தவிர மற்றவையெல்லாம் இயற்கைப்பொருட்கள் அல்ல என்றும் சில சந்தர்ப்பங்களில் கணமும் கூடப் பழைய இருப்பிடத்திலிருந்து வந்த தாய்க்கணத்தின் ஒரு கிளையே என்றும்தான். செயற்கையாக அமைக்கப்பெற்றதின் அடையாளங்களை இந்தக் குலங்கள் தாங்கியுள்ளன; இருந்தபோதிலும், இரத்த உறவுள்ள அம்சங்களைக் கொண்டவையாக அவை இருந்தன; மேலும், செயற்கையாக அமைக்கப்பெறுமுன், இயற்கையாக வளர்ந்த பழைய குலத்தின் பாதியிலிருந்து அவை அமைக்கப்பட்டன. மேலும், இந்த மூன்று குலங்களில் ஒவ்வொன்றுக்கும் ஓர் உண்மையான பழைய குலம் அதற்குக்கருவாக இருந்திருக்கக்கூடியதும் சாத்தியமே. இணைக்கும் கண்ணியாகிய, குரியா என்று அழைக்கப்பட்ட பிராட்ரியில் பத்துக் கணங்கள் அடங்கியிருந்தன, எனவே மொத்தம் முப்பது கணங்கள் இருந்தன.

ரோமானிய கணம் என்ற ஸ்தாபனமும் கிரேக்க கணம் என்பதும் ஒன்றேயென்பது அங்கீகரிக்கப்பட்ட உண்மை. அமெரிக்கச் செவ்விந்தியர்கள் புலப்படுத்துகிற புராதன வடிவத்தைத் தாங்குகிற சமுதாய மூலக்கூறிலிருந்து அதன் தொடர்ச்சியாக வெளிவந்ததே கிரேக்க கணம் என்று சொன்னால், அது ரோமானிய கணத்துக்கும் பொருந்தும். எனவே, அதைப்பற்றி விவரிப்பதை நாம் சுருக்கிக்கொள்ளலாம்.

குறைந்தபட்சம் ரோம் நகரின் ஆதிகாலத்தி

லாவது ரோமானிய கணத்துக்குப் பின்வரும் அமைப்பு இருந்தது:

1. இறந்து விட்ட கண அங்கத்தினர்களின் சொத்தைப் பரஸ்பரம் சுவீகாரம் செய்துகொள்ளும் உரிமை; சொத்து கணத்துக்குள்ளேயே இருந்தது. கிரேக்க கணத்திலிருந்தும்மாதிரியே ரோமானிய கணத்தில் தந்தையுரிமை ஏற்கனவே அமுலிலிருந்ததால், பெண்வழி வம்சாவளியில் வந்த குழந்தைகள் வாரிசுரிமையைப் பெறுவதிலிருந்து விலக்கப்பட்டன. நமக்குத் தெரிந்து எழுதப்பட்ட ரோமானியச் சட்டங்களிலேயே மிகப் பழமையான பன்னிரண்டு பட்டியல்கள் என்பவற்றின்படி இயற்கைக் குழந்தைகள்தான் முதல் வாரிசாக உரிமைபெற்றனர்; இயற்கைக் குழந்தைகள் இல்லாவிட்டால் ஆக்னேட்டுகள் (அதாவது, **ஆண்** வழி வம்சாவளியைச் சேர்ந்த இரத்த உறவினர்கள்) அவர்கள் ஸ்தானத்துக்கு வந்தனர்; அவர்களும் இல்லாவிட்டால், கண அங்கத்தினர்கள் வாரிசுகளாயினர். எல்லாச் சந்தர்ப்பங்களிலும், சொத்து கணத்துக்குள்ளேயே இருந்தது. அதிகரித்த செல்வம், ஒருதார மணம் ஆகியவற்றால் சிருஷ்டிக்கப்பட்ட புதிய சட்ட ஷரத்துக்கள் கணத்தின் நடைமுறையில் படிப்படியாக ஊடுருவுவதை இங்கு நாம் பார்க்கிறோம்: ஆதியில் கண அங்கத்தினர்களுக்கு இருந்த சம வாரிசுரிமை முன்னே சொன்னபடி ரொம்ப காலத்துக்கு முன்பே நடைமுறையில் ஆக்னேட்டுகளோடு முதலில் குறுக்கப்பட்டு, பிறகு குழந்தைகளுக்கும் ஆண்வழி வம்சாவளியில் வந்த அவர்களின் சந்ததிக்குமாகக் குறுக்கப் பட்டது.

பன்னிரண்டு பட்டியல்களில் இது தலைகீழ் வரிசையிலே தரப்படுகிறது என்பது உண்மைதான்.

2. ஒரு பொது இடுகாடு. கிளாடியா என்ற பாட்ரிஷியன் கணம் ரெகில்லியிலிருந்து ரோமாபுரிக்கு வந்து குடிபுகுந்தபோது ஒரு நிலத்துண்டையும் நகரத்தில் ஒரு பொது இடுகாட்டையும் பெற்றது. அகஸ்டஸ் காலத்திலும் கூட டியூடேபர்க் காட்டில் வீழ்ச்சியடைந்த வாரஸின் தலை ரோமாபுரிக்குக் கொண்டுவரப்பட்டுக் கண இடுகாட்டில் (gentilitius tumulus) அடக்கம் செய்யப்பட்டது; எனவே அவனது கணத்துக்கும் (அதன் பெயர் குவின்டிலியா) ஒரு சொந்த இடுகாடு இருந்தது.

3. பொது மத விழாக்கள், 'Sacra gentilitia' என்ற இவை பிரசித்தமானவை.

4. கணத்துக்குள்ளேயே மணம் புரியக்கூடாது என்ற நிர்ப்பந்தம். ரோமாபுரியில் இது எழுதிய சட்டமாக என்றைக்கும் இருந்ததாகத் தோன்றவில்லை, இருந்தாலும் அந்த வழக்கம் இருந்தது. நம் காலத்துக்கு எட்டியிருக்கிற எண்ணற்ற ரோமானிய தம்பதிகளின் பெயர்களில் ஒன்றிலாவது கணவனுக்கும் மனைவிக்கும் ஒரே கணப்பெயர் இருக்கவில்லை. வாரிசுச் சட்டமும் இந்த விதியை ருசுப்பிக்கிறது. திருமணத்தின் மூலம் ஒரு பெண் தனது ஆக்னேட் உரிமைகளை இழக்கிறாள், தனது கணத்தைவிட்டுச் செல்கிறாள்; அவளோ அவளது குழந்தைகளோ அவளது தகப்பனாரின் சொத்துக்கு வாரிசாக முடியாது, அவரது சகோதரர்களின் சொத்துக்கும் வாரிசாக முடியாது; ஏனெனில், அப்படியல்லாமற்போனால் தகப்பனாரின் கணம் அந்

தச் சொத்தை இழந்துவிடும். ஒரு பெண் தனது கணத்தைச் சேர்ந்த அங்கத்தினரை மணம் புரிய அனுமதிக்கப்படவில்லை என்ற ஊகம் ஒன்றுதான் இந்த விதிக்குப் பொருள் தருகிறது.

5. நிலத்தில் பொதுவுடைமை. ஆதிகாலத்தில் குலப்பிரதேசம் முதலில் பிரிக்கப்படும்வரை இப்படித்தான் இருந்தது. லத்தீன் குலங்களிடையே நிலத்தில் ஒரு பகுதி குலத்திடமும், ஒரு பகுதி கணத்திடமும், ஒரு பகுதி அன்று தனிப்பட்ட குடும்பங்களாக அனேகமாய் இருக்கமுடியாத குடும்பங்களிடமும் உடைமையாக இருந்தது. தனித்தனி நபர்களுக்கு நிலத்தை முதலில் வழங்கியது ரோமுலஸ் என்பவர்தான் என்று கூறப்படுகிறது—தலைக்குச் சுமார் ஒரு ஹெக்டேர் (இரண்டு யூகரா) நிலம் தரப்பட்டது. இருந்தபோதிலும், அதற்குப் பின்னுலும் கணங்களின் உடைமையில் நிலம் இன்னும் இருந்துவருவதை நாம் பார்க்கிறோம்; அரசு நிலங்களைப் பற்றியோ சொல்லவே வேண்டாம்; குடியரசின் உள்நாட்டு வரலாறு முழுவதுமே அவற்றை மையமாகக் கொண்டே நிகழ்ந்தது.

6. பரஸ்பரம் உதவிசெய்வதும் பாதுகாப்பு அளிப்பதும் கண அங்கத்தினர்களின் கடமை. இதன் அற்ப மிச்சசொச்சங்களைத்தான் ஏடறிந்த வரலாறு அறிவிக்கிறது. ஆரம்பத்திலிருந்தே ரோமானிய அரசு மிகப்பலமான அதிகாரத்தை வெளிப்படுத்தியதனுல் தீங்குகளைப் போக்கும் கடமை அதன்மேல் விழுந்தது. ஆபியஸ் கிளாடியஸ் கைது செய்யப்பட்டபோது சொந்த விரோதிகள் உட்பட

அவனது கணம் முழுவதும் துக்கத்திலாழ்ந்தது. இரண்டாவது பூனிக் யுத்தத்தின்போது [1] கைது செய்யப்பட்ட தமது கணத்தினரைப் பணயத் தொகை கொடுத்து விடுவிக்க அந்தக் கணங்கள் எல்லாம் ஒன்றுபட்டன. இவ்விதம் செய்யக்கூடாது என்று செனெட் தடை செய்திருந்தது.

7. கணப் பெயரைத் தாங்குவதற்கு உரிமை. சக்கரவர்த்திகள் வந்துற்ற காலம்வரை இது அமுலிலிருந்தது. விடுதலை செய்யப்பட்ட அடிமைகள் தமது முந்தைய எஜமானர்களின் கணப் பெயர்களைத் தாங்கவும் வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டனர்; இருந்தாலும் அவர்களுக்கு அந்தக் கணத்தின் உரிமைகள் கிடையா.

8. கணத்தினுள் அன்னியர்களைச் சுவீகரித்துக் கொள்வதற்கு உரிமை. (செவ்விந்தியர்களிடையே இருப்பதுபோல்) ஒரு குடும்பத்தில் சுவீகரித்துக் கொள்வதின்மூலம் இது செய்யப்பட்டு, கணத்துக்குள் சுவீகரித்துக் கொள்வதைக் கொண்டுவந்து விட்டது.

9. தலைவர்களைத் தேர்ந்தெடுக்கவோ பதவியிலிருந்து நீக்கவோ உரிமையிருப்பதாக எங்குமே கூறப்படவில்லை. இருந்தாலும், ரோமாபுரி வாழ்ந்த முதல் காலப் பகுதியில் தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய அரசனிலிருந்து கீழாக, எல்லாப் பதவிகளும் தேர்தல் மூலமாகவோ நியமனம் மூலமாக

[1] **பூனிக் யுத்தங்கள்** — ரோமாபுரிக்கும் பூனிக்குகளுக்கும் இடையே நடந்தவை. பூனிக்குகள் என்றால் கார்தேஜ் மக்கள்; கார்தேஜ் வட ஆப்பிரிக்காவிலிருந்த பேனீஷியன் காலனி; கி.மு. 264-146 வரை யுத்தங்கள் நடந்தன.—**பதிப்பாசிரியர்கள்.**

வோ நிரப்பப்பட்டதனுலும் குரியாக்களும் தமது புரோகிதர்களைத் தேர்ந்தெடுத்ததினுலும் கணத் தலைவர்கள் (principes) விஷயத்திலும் அது இருந் தது என்று நாம் ஊகிக்க நியாயமுண்டு. ஒரே குடும் பத்திலிருந்து அபேட்சகர்களைப் பொறுக்குவது என்ற விதி எவ்வளவுதான் ஏற்கனவே நன்கு நிலை நாட்டப்பெற்றிருந்தபோதிலும் பரவாயில்லை.

ஒரு ரோமானிய கணத்தின் உரிமைகள் இப் படித்தான் இருந்தன. தந்தையுரிமைக்கு முழுக்க முழுக்க மாறியது என்ற ஒரு விலக்கு தவிர மற்றப் படி ஓர் இரோகுவாய் கணத்தின் உரிமைகள், கடமைகளை அவை அப்படியே உண்மையாகப் பிரதிபலிக்கும் பிரதிபிம்பமாகும். இங்கேயும் ''இரோகுவாய்கள் நன்கு தெரிகின்றனர்''.

ரோமானிய கண அமைப்பைப் பற்றி நமது பிரசித்தி பெற்ற வரலாற்றுசிரியர்களிடையேயும் கூடக் குழப்பம் இன்னும் இருக்கிறதைப் பின்வரும் உதாரணம் காட்டுகிறது: குடியரசுக் காலத்திலும் அகஸ்டஸ் காலத்திலும் இருந்த ரோமானியப் பெயர்களைப் பற்றிய ஆராய்ச்சியுரையில் (''ரோ மானிய ஆராய்ச்சிகள்'', பெர்லின், **1864**, தொ குதி I[1]) மாம்ஸென் பின்வருமாறு எழுதுகிருர்: ''கணத்தால் சுவீகரிக்கப்பட்ட நபர்களும் அதன் பராமரிப்பிலுள்ள நபர்களும் உட்பட, ஆனுல் அடி மைகள் மட்டும் விலக்கப்பட்டபடி, எல்லா ஆண் கண அங்கத்தினர்களும் கணப் பெயரைத் தாங்கி யிருப்பதோடல்லாமல் பெண்களும் அந்தப் பெய

---

[1] **Mommsen Th.**, "Römische Forschungen", Ausg. 2. Bd.I-II, Berlin 1864-78.—**பதிப்பாசிரியர்கள்.**

ரை வைத்துக் கொண்டுள்ளனர்... குலம் [Stamm] (இப்படித்தான் கணத்தை அவர் மொழிபெயர்க்கிறார்) என்பது ... ஒரு பொதுவான— யதார்த்தத்திலோ, ஊகிக்கப்பட்டோ, புனைந்துகொள்ளப்பட்டோ இருக்கிற — மூதாதையிடமிருந்து பெறப்பட்ட ஒரு சமூகம், அது பொதுவான சடங்குகள், இடுகாடுகள், வாரிசு உரிமை ஆகியவற்றால் ஒன்றுபடுத்தப்பட்டுள்ளது. சுயத்தில் சுதந்திரர்களாயுள்ள எல்லாத் தனி நபர்களும்—எனவே, பெண்களும் உள்ளிட்டு—அச்சமூகத்தில் பதிவு செய்யப்படலாம், பதிவு செய்யப்பட வேண்டும். மணமான பெண்ணின் கணப் பெயரை நிர்ணயிப்பது சிறிது சிரமமளிக்கிறது. தமது சொந்தக் கணத்தைச் சேர்ந்தவர்களைத் தவிர வேறு யாரையும் மணம் புரியக்கூடாது என்று தடுக்கப்பட்டிருந்தவரை இந்தக் கஷ்டம் இருக்கவில்லை; மேலும் வெகு காலம்வரை கணத்துக்கு உள்ளே மணம் புரிவதை விட வெளியே மணம் புரிவது பெண்களுக்கு எவ்வளவோ கஷ்டமாயிருந்தது என்பது நிதர்சனம். இந்த உரிமை, கணத்துக்கு வெளியே மணம் புரியும் உரிமை (gentis enuptio), ஒரு தனிப்பட்ட சலுகை நல்கவும் பரிசாகவும் ஆறாவது நூற்றாண்டில் வழங்கப்பட்டது.... ஆனால் எங்கெல்லாம் இப்படி வெளியில் மணம் நடந்ததோ, அங்கெல்லாம் ஆதிகாலத்தில் பெண்கள் தமது கணவன்மார்களின் குலத்துக்கு மாற்றப்பட்டிருக்க வேண்டும். பழைய மதவகைப்பட்ட மணத்தின் மூலமாகப் பெண் தனது கணவனின் சட்டபூர்வமான, சடங்கு ஒழுங்குள்ள சமூகத்தில் முழுக்கச் சேர்ந்தவளாகித்

தனது சமூகத்தை விட்டுவிலகினுள்; இதைப்போல் நிச்சயமான உண்மை வேறெதுவுமில்லை. மணமான பெண் தனது கண அங்கத்தினர்களைப் பொறுத்த வரையில் தனக்குரிய செயல்பூர்வமானதும் செயலற்றதுமான வாரிசு உரிமைகளை இழக்கிருள், ஆனுல் தனது தகப்பனுரின், தனது குழந்தைகளின், அவனுடைய கண அங்கத்தினர்களின் வாரிசுக் குழுவில் நுழைகிருள்; இது யாருக்குத்தான் தெரியாது? மேலும், கணவன் அவளைத் தனது குழந்தையாகச் சுவீகரித்து அவளைத் தன் குடும்பத்துக்குள் கொண்டு வந்தால் அவனது கணத்திலிருந்து அவள் எப்படிப் பிரிந்திருக்கமுடியும்?'' (9-11ம் பக்கங்கள்.)

இப்படியாக, ஒரு குறிப்பிட்ட கணத்தைச் சேர்ந்த ரோமானியப் பெண்கள் ஆதியில் தமது கணத்திற்கு **உள்ளேதான்** மணம் புரிய உரிமை பெற்றிருந்தனர் என்று மாம்ஸென் அடித்துப் பேசுகிருர். ஆகவே, அவர் கருத்துப்படி, ரோமானிய கணம் சகோத்திர கணமேயாகும், விகோத்திர கணமல்ல. இந்த அபிப்பிராயம் மற்றெல்லா மக்கள் சமூகங்களின் அனுபவத்துக்கும் முரண்பட்டிருக்கிறது; அது லிவி எழுதிய நூலில் (நூல் 39, அத்தியாயம் 19) சர்ச்சையிலிருக்கிற ஒரு பகுதியை,—அந்த ஒரே பகுதியை மட்டும் என்று சொல்லாவிட்டாலும் கூட—பிரதானமாக ஆதாரமாகக் கொண்டிருக்கிறது. அந்த நூல் பகுதியின்படி, ரோம் ஸ்தாபித்த பிறகு 586 ஆண்டுகள் கழித்து —அதாவது கி. மு. 186ல்—செனெட் பின்வருமாறு தீர்ப்பளித்து உத்தரவிட்டது: "uti Feceniae Hispallae datio, deminutio, gentis enuptio, tutoris optio item esset quasi ei

vir testamento dedisset; utique ei ingenuo nubere liceret, neu quid eiqui eam duxisset, ob id fraudi ignominiaeve esset", — அதாவது, பெஸீனியா ஹிஸ்பால்லா தனது சொத்தை ஆர்ஜிதம் செய்துவிட உரிமை உண்டு, அதைக் குறைக்க உரிமையுண்டு, கணத்துக்கு வெளியே மணம் புரிய உரிமையுண்டு, ஒரு போஷகனைப் பொறுக்கிக்கொள்ள உரிமையுண்டு; தனது (இறந்துபோன) கணவன் பத்திரம்மூலம் இந்த உரிமையை அளித்ததுபோல் அவள் இப்படி நடந்து கொள்ளலாம்; அவள் ஒரு சுதந்திர நபரை மணம் புரிய அனுமதிக்கப்படவேண்டும்; மேலும், அவளை மணம் புரியும் ஆணுக்கு இதனால் கெட்ட நடத்தைப் பழியும் அவமதிப்பும் வந்தடைந்ததாகாது.

இங்கே, விடுதலைபெற்ற பெஸீனியா கணத்துக்கு வெளியே மணம் புரிந்துகொள்ள அனுமதிக்கப்பட்டாள் என்பதில் சந்தேகமேயில்லை. மேலும், இதன்படி, அவளது கணவன் தான் இறந்தபிறகு கணத்துக்கு வெளியே மணம் புரிந்துகொள்கிற உரிமையைப் பத்திர வாயிலாக அவளுக்கு வழங்க உரிமையுள்ளவன் என்பதும் அதேபோல் ஐயத்திற்கிடமற்றது. ஆனால் எந்தக் கணத்துக்கு வெளியே?

மாம்ஸென் ஊகித்துக் கொள்கிறபடி ஒரு பெண் தனது கணத்துக்குள்ளே தான் மணம் புரிந்தாகவேண்டுமென்றால் மணமானபிறகு அவள் இந்தக் கணத்துக்குள்ளேயே தங்கினாள் என்றாகும். ஆனால், முதலாவதாக, அது ஒரு சகோத்திர கணம் என்ற வாதம் நிரூபிக்கப்படவேண்டியதாயுள்ளது. இரண்டாவதாக, அந்தப் பெண் கணத்துக்குள்ளேயே மணம் புரிந்தாகவேண்டியதாயிருந்தால்,

ஆனும் அதே மாதிரி செய்யவேண்டியவன்தான்; இல்லாவிட்டால் அவனுக்கு என்றைக்கும் மனைவி கிடைக்கவே மாட்டாள். அப்பொழுது நாம் எட்டுகிற நிலை என்னவென்றால், தன்னாலேயே அனுபவிக்கப்பெறாதிருக்கிற ஓர் உரிமையை ஆண் தன் மனைவிக்குப் பத்திரவாயிலாகத் தரமுடியும் என்பதுதான். இது சட்டவகைப்பட்ட ஓர் அபத்தமாகும். மாம்ஸென் இதை உணர்கிறார்; எனவே பின்வருமாறு ஹேஷ்யம் செய்து கொள்கிறார்: ''கணத்துக்கு வெளியே மணம் செய்துகொள்வது என்பது அதிகாரமளிக்கப்பட்ட நபரின் ஒப்புதலை மட்டுமின்றி, கணத்தின் எல்லா அங்கத்தினர்களின் ஒப்புதலையும் பெற வேண்டுமென்று சட்டத்தில் பெரும்பாலும் கோரப்பட்டிருந்திருக்கும்.'' (10ம் பக்கம், குறிப்பு.) முதலில், இது ஒரு தைரியமிக்க ஊகம்; இரண்டாவதாக, நூல் பகுதியின் தெளிவான சொல்லுக்கு இது முரணானது: **கணவனுக்குப் பதிலாக** செனெட் அவளுக்கு இந்த உரிமையை வழங்குகிறது. கணவன் கொடுக்கமுடிந்திருப்பதற்கு மேலாகவோ குறைவாகவோ அது ஒன்றும் கொடுக்கவில்லை. ஆனால் அது தருவது ஒரு **பரிபூர்ண** உரிமை; அதில் வில்லங்கம் எதுவும் கிடையாது. எனவே அவள் அதை உபயோகித்தால் அதனால் அவளுடைய புதிய கணவன் நஷ்டமெதுவும் அடையக்கூடாது. இந்த உரிமையை அவள் பயன்படுத்துவதினால் அவளுக்கு எந்த அசௌகரியமும் ஏற்படாவண்ணம் பார்த்துக் கொள்ளுமாறு நிகழ்கால, எதிர்கால கான்சல்களுக்கும் பிரேடர்களுக்கும் செனெட் உத்தரவு கூட விதிக்கிறது. ஆகவே, மாம்ஸெனின் ஹேஷ்யம்

அறவே அனுமதிக்கமுடியாதது என்றுதான் தோன்றுகிறது.

மேலும்: இன்னொரு கணத்தைச் சேர்ந்த ஆணை ஒரு பெண் மணந்தாள் என்றும், இருந்தாலும் அவள் தன் கணத்துக்குள்ளேயே தங்கிவிட்டாள் என்றும் வைத்துக்கொள்வோம். மேலே மேற்கோள் காட்டிய நூல் பகுதியின்படி, அப்போது அவள் தன் சொந்த கணத்துக்கு வெளியே மணப்பதை அவள் கணவன் அனுமதிக்கும் உரிமை பெற்றவனாகிறான். அதாவது, தான் சேராத ஒரு கணத்தின் விவகாரங்கள் சம்பந்தமாக ஏற்பாடுகள் செய்வதற்கு அவனுக்கு உரிமையுண்டு. இது முற்றிலும் நியாயமற்ற விஷயம்; எனவே இதைப்பற்றி மேலும் நாம் பேசவேண்டாம்.

அந்தப் பெண் தனது முதல் திருமணத்தில் இன்னொரு கணத்தைச் சேர்ந்த ஆணை மணந்தாள், அதன் காரணமாக, வேறு கஷ்டமெதுவுமின்றி, தனது கணவனின் கணத்தில் அங்கம் வகித்தாள் என்று நாம் ஊகிப்பதைத்தவிர வேறில்லை. இவ்விதச் சந்தர்ப்பங்களில் மாம்ஸேனே இதை ஒப்புக்கொள்கிறார். அப்பொழுது விஷயம் முழுவதும் சுயமாகவே விளக்கம் தருகிறது. தனது கல்யாணத்தால் அந்தப் பெண் தனது பழைய கணத்திலிருந்து பிரிக்கப்பட்டு, கணவனின் கண ஸ்தாபனத்துக்குள் சுவீகரிக்கப்பட்டு, அந்தப் புதிய கணத்தில் ஒரு விசேஷ நிலையை வகிக்கிறாள். இப்பொழுது அவள் ஒரு கண அங்கத்தினள், ஆனால் இரத்தத்தால் உறவு கொண்டவள் அல்ல; அவள் சுவீகரிக்கப்பட்ட முறையானது மணத்தின்மூலமாக அவள் புகுந்திருக்கும் கணத்துக்குள்ளேயே மணம் புரிந்துகொள்வதற்குத் தடையே

இல்லாதவாறு தொடக்கத்திலிருந்தே விலக்கிவைக்கிறது. மேலும் கணத்தின் மணவகுப்புக்குள் அவள் சுவீகரிக்கப் பட்டிருக்கிருள்; கணவன் இறக்கும் போது அவனது சொத்தில் ஒரு பகுதியை, அதாவது கணத்தின் சக அங்கத்தினனுக்குரிய ஒரு பகுதிச் சொத்தை, அவள் பெறுகிருள். இந்தச் சொத்து கணத்துள்ளேதான் தங்கவேண்டும், தனது முதல் கணவனின் கணத்துக்குள்ளேதான் அவள் மணக்கவேண்டும், வேறு கணத்துள் மணக்கக்கூடாது என்பதைவிட இயற்கையானது எது? இருந்தாலும், விலக்கு அளிக்கப்படவேண்டுமென்று சொன்னுல், அந்தச் சொத்தை விட்டுச் சென்ற முதற்கணவனைக் காட்டிலும் அதைச் செய்ய அதிகாரமளிப்பதற்கு வேறு யாருக்குத் தகுதியுண்டு? தனது சொத்தில் ஒரு பகுதியை அவளுக்கு ஆர்ஜிதம் செய்து அதே சமயத்தில் திருமணத்தின்மூலம், அல்லது திருமணத்தின்விளைவாக, அந்தச் சொத்தை இன்னொரு கணத்துக்கு மாற்றிவிடுவதற்கும் அவளுக்கு அனுமதி தந்தபோது அந்தச் சொத்துக்கு இன்னும் அவன் சொந்தக்காரனுகவே இருந்தான். எனவே உண்மையிலே அவன் தனது சொத்தைத்தான் பைசல் செய்திருக்கிருன். அந்தப் பெண்ணுக்கும் அவளது கணவனின் கணத்துக்கும் இடையேயுள்ள உறவைப் பொறுத்தவரை கணவன்தான் தனது சுதந்திரமான சித்தத்தின் செயலின்படி - - திருமணத்தின்படி— தனது கணத்துக்குள் அவளைப் புகுத்திஞன். எனவே, இன்ஞெரு திருமணத்தின்மூலமாக இந்தக் கணத்தைவிட்டுச் செல்வதற்கு அவளுக்கு அதிகாரமளிப்பதற்கும் அவனே தான் சரியான நபர் என்றும் இயற்கையாகப் படுகிறது. சுருங்கச் சொன்னுல், சகோத்திரவகைப்பட்ட

ரோமானிய கணம் என்ற விநோதமான கருத்தோட்டத்தைக் கைவிட்டு, அது ஆரம்பத்தில் விகோத்திர கணமாகவே இருந்ததாக மார்கனோடு சேர்ந்து நாமும் கருத முற்படுகிற அதே வினாடியில் விஷயம் எளிதாகவும் வெளிப்படையானதாகவும் புலப்படும்.

கடைசியாக, இன்னோர் அபிப்பிராயமும் இருக்கிறது; அதற்கு ஆதரவாளர்கள் நிறையப் பேர் கிடைத்திருக்கிறார்கள்; அதாவது, லிவியினுடைய நூலில் இருக்கும் அந்தப் பகுதிக்குள்ள ஒரே அர்த்தம் பின்வருமாறு என்பது: ''விடுதலையடைந்த அடிமைப் பெண்கள் (libertae) விசேஷ அனுமதியில்லாமல் கணத்துக்கு வெளியே (e gente enubere) மணக்கக்கூடாது, அல்லது குடும்ப உரிமைகளை கடுகளவேனும் இழக்கிறதோடு (capitis deminutio minima) சம்பந்தப்பட்டதாய், கண ஸ்தாபனத்திலிருந்து விலகிச் செல்வதில் முடியக் கூடியதான எந்த ஒரு நடவடிக்கையையும் அவள் (liberta) எடுக்கக் கூடாது''. (லாங்கே எழுதிய ''ரோமானியப் புராதன விஷயங்கள்'', பெர்லின் 1856, தொகுதி I[1], 195ம் பக்கம்; இதில் லிவியிலிருந்து நாம் எடுத்துக் கொண்ட பகுதியைப் பற்றி, ஹுஷ்கேயைப் பற்றிப் பேசுகிறபோது, அபிப்பிராயம் தெரிவிக்கப்படுகிறது.) இந்த ஊகம் சரியானால் அந்த நூல் பகுதி சுதந்திர ரோமானியப் பெண்களின் அந்தஸ்து பற்றி நிரூபிப்பது இன்னும் குறைவு, மேலும் கணத்துக்குள்ளேயே அவர்கள் மணக்கக் கடமைப்பட்டவர்கள் என்று பேசுவதற்கு ஆதாரம் இன்னும் குறைவு.

[1] **Lange L.**, "Römische Alterthümer", Bd. I-III, Berlin 1856-71.— **பதிப்பாசிரியர்கள்.**

'Enuptio gentis' என்ற சொற்றொடர் இந்த ஒரு நூல் பகுதியில் தான் வருகிறது; ரோமானிய இலக்கியம் முழுவதிலும் வேறெங்கும் இது காணப் படவில்லை. 'Enubere' என்ற சொல்—வெளியே மணப்பது—அதே லிவியின் நூலிலேயே மூன்று முறைதான் வருகிறது, அதுவும் கணத்தைக் குறிப் பிட்டுச் சொல்லப்பட்டதாயில்லை. ரோமானியப் பெண்கள் தமது கணத்துக்குள்ளே தான் மணக்க அனுமதிக்கப்பட்டார்கள் என்கிற விசித்திரமான கருத்து இருந்து வருவதற்கு இந்த ஒரு நூற்பகுதியே காரணமாகும். ஆனால் அதைக் கொஞ்சமேனும் நிலைநிறுத்தமுடியாது; ஏனெனில், ஒன்று, அந்தப் பகுதி விடுதலை பெற்ற அடிமைப் பெண்களின் மீதுள்ள விசேஷக் கட்டுத்திட்டங்களைக் குறிப்பதாக இருக்கவேண்டும், அப்படியானால் அது பிறவிலேயே சுதந்திரம் பெற்ற பெண்கள் (ingenuae) விஷயத்தில் எதையும் ருசுப்பிக்கவில்லை; அல்லது அது பிறவியிலேயே சுதந்திரம் பெற்ற பெண்களுக்கும் பொருந்தியதாயிருக்க வேண்டும்; அப்படியானால் பொது விதியாகவே பெண்கள் கணத்துக்கு வெளியேதான் மணந்து கொண்டிருந்தார்கள் என்பதையும், திருமணத்தின் மூலமாகத் தமது கணவனின் கணத்திற்கு மாற்றப்பட்டார்கள் என்பதையும் தான் அது ருசுப்பிக்கிறது. எனவே அது மாம்ஸெனுக்கு எதிராகவும், மார்கனுக்கு ஆதரவாகவும் பேசுகிறது.

ரோமாபுரி ஸ்தாபிதமாகிக் கிட்டத்தட்ட முந்நூறு ஆண்டுகளுக்குப்பிறகு கணத்தின் பந்தங்கள் இன்னும் வெகு பலமாக இருந்ததினால் பேபியன்

களின் பாட்ரிஷியன் கணம் செனெட்டின் அனுமதி பெற்று அண்டை நகரமாகிய வெயிமீது தானுகவே ஒரு படையெடுப்பை நடத்த முடிந்தது. முந்நூற்று ஆறு பேபியன்கள் வெளியே புறப்பட்டுச்சென்று மறைவுத் தாக்குதலால் கொல்லப்பட்டார்கள் என்று சொல்லப்படுகிறது. வீட்டில் விட்டுவந்திருந்த ஒரு பையன் கணத்தைப் பெருக்கினுன்.

நாம் சொன்னபடி, பத்து கணங்கள் ஒரு பிராட்ரியை அமைத்தன; இங்கு அது குரியா என்று அழைக்கப்பட்டது; கிரேக்க பிராட்ரியைவிட முக்கிய அலுவல்கள் அதற்கு வழங்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு குரியாவுக்கும் சொந்த மதச்சடங்குகளும் புனிதச் சின்னங்களும் பூசாரிகளும் உண்டு. பூசாரிகள் ஒரு கூட்டமாக ரோமானிய பூசாரிச் சங்கங்களில் ஒன்ருக அமைந்திருந்தனர். பத்து குரியாக்கள் கொண்டது ஒரு குலம்; அதற்கு ஆதியில் பெரும்பாலும் ஒரு தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவன் — யுத்தத் தலைவனுகவும் உயர்தர பூசாரியாகவும்—இருந்திருக்கிருன்; மற்ற லத்தீன் குலங்களைப்போலவே இப்படி இருந்திருக்கலாம். அந்த மூன்று குலங்களும் சேர்ந்து ரோமானிய மக்கள் சமூகமாக— 'populus Romanus' —அமைந்திருந்தார்கள்.

ஆக, ஒரு கணத்தில் அங்கத்தினர்களாக இருப்பவர்கள்தான்— ஆகவே ஒரு குரியாவிலும் குலத்திலும் சேர்ந்திருப்பவர்கள்தான்—ரோமானிய மக்கள் சமூகத்தைச் சேர்ந்தவர்களாயிருக்க முடியும். இந்த மக்கள் சமூகத்தின் முதல் அமைப்புமுறை பின்வருமாறு: பொது விவகாரங்களை செனெட் நடத்திவந்தது; அது முந்நூறு கணத் தலைவர்

களைக் கொண்டதாயமைந்திருந்தது— இதை நீபூர் என்பவர்தான் முதன் முதலில் சரியாகச் சொன்னார்; கணங்களில் முதியவர்கள் என்ற வகையில் அவர்கள் தந்தையர்கள்—'patres'—என்றும் ஸ்தாபன வகையில் செனெட் (முதியவர்களின் கவுன்சில்; 'senex' என்றால் முதிய, வயதான என்று பொருள்) என்றும் அழைக்கப்பட்டார்கள். இங்கேயும் ஒவ்வொரு கணத்திலும் ஒரே குடும்பத்திலிருந்து நபர்களைப் பொறுக்கும் வழக்கமானது முதலில் வந்த பரம்பரைப் பிரபுத்துவத்தை உண்டாக்கிவைத்தது. இந்தக் குடும்பங்கள் தம்மைப் பாட்ரிஷியன்கள் என்று அழைத்துக் கொண்டன, செனெட் பதவிகளும் மற்ற எல்லாப் பதவிகளும் தமக்குமட்டுமே உரிமை என்று கோரின. காலப்போக்கில் இந்தக் கோரிக்கைளை மக்கள் அனுமதித்தார்கள், ஆக அவை ஒரு யதார்த்த உரிமையாகிவிட்டன; இந்த உண்மை, முதலில் அமைந்த செனெட்டர்களுக்கும் அவர்களின் சந்ததியாருக்கும் பாட்ரிஷியன் என்ற பட்டமும் அதற்குரிய சலுகை நலன்களும் ரோமுலஸ் வழங்கினான் என்கிற கட்டுக் கதையில் வெளிப்படுகிறது. அதீனிய 'boulê' என்பதைப்போலவே இந்த செனெட்டும் பல விவகாரங்களில் முடிவு கட்டவும் மிக முக்கியமான நடவடிக்கைகளைப்பற்றி, குறிப்பாகப் புதிய சட்டங்களைப்பற்றிப் பூர்வாங்க விவாதங்களை நடத்தவும் அதிகாரம் பெற்றிருந்தது. இவற்றைப் பற்றி மக்கள் சபைதான் முடிவு செய்தது; அதன் பெயர் 'comitia curiata' (குரியாக்களின் கூட்டம்). கூடியிருக்கும் மக்கள் குரியா முறையில் வைக்கப்பட்டனர், ஒவ்வொரு குரியாவிலும் அவர்கள் பெரும்பாலும் கணரீதியில்

வைக்கப்பட்டிருக்கலாம்; பிரச்சினைகளைப் பற்றி முடிவு செய்யும்போது முப்பது குரியாக்களில் ஒவ்வொன்றுக்கும் ஒரு வோட்டு இருந்தது. குரியாக்களின் கூட்டம் சட்டங்களை நிறைவேற்றியது அல்லது நிராகரித்தது, (அரசன் எனப்படுகிற) 'Rex' உள்பட எல்லா உயர்தர அதிகாரிகளையும் தேர்ந்தெடுத்தது, யுத்தப்பிரகடனம் செய்தது (சமாதானம் செய்துகொள்வதுமட்டும் செனெட் அலுவலாகும்), சுப்ரீம் கோர்ட் என்ற வகையில், சம்பந்தப்பட்ட தரப்பினர் விண்ணப்பித்துக் கொள்ளும்போது, ரோமானியப் பிரஜைகளுக்கு மரணதண்டனை விதிக்கத்தக்க எல்லா வழக்குகளையும் பற்றி முடிவு செய்தது. கடைசியாக, செனெட்டுக்கும் மக்கள் சபைக்கும் பக்கத்தில் 'Rex' நின்ருன். இவன் கிரேக்க பஸீலியஸ் போன்றவனேதான். மாம்ஸென் காட்டுகிறமாதிரி[1] அப்படியொன்றும் கிட்டத்தட்ட

---

[1] லத்தீன் சொல்லாகிய 'rex' என்பது கெல்டிக்-ஐரிஷ் மொழியிலுள்ள 'righ' [குலத் தலைவன்] என்பதற்கும் கோதிக் மொழியிலுள்ள 'reiks' என்பதற்கும் சமமாகும். நமது 'Fürst' (ஆங்கிலத்தில் 'first', டேனிஷ் மொழியில் 'förste') போலவே இது ஆதியில் கணத் தலைவனையோ அன்றிக் குலத் தலைவனையோ குறித்தது என்ற விஷயம், பின்னல் வந்த அரசனுக்கு, ஒரு மக்கள் சமூகத்தின் ராணுவத் தலைவனுக்கு, 'thiudans' என்ற விசேஷச் சொல்லை கோத்கள் நான்காம் நூற்ருண்டிலேயே பிரயோகித்து வந்தார்கள் என்பதிலிருந்து ருசுவாகிறது. உல்பிலா மொழிபெயர்த்துள்ள பைபிளில் ஆர்டக்ஸெர்க்ஸெஸும் ஹீராடும் 'reiks' என்று என்றைக்கும் அழைக்கப்படவில்லை, 'thiudans' என்றுதான் அழைக்கப்பட்டார்கள்; சக்கரவர்த்தி டிபேரியஸின்

சர்வாதிக்கம் வகிக்கிற அரசன் அல்ல. 'Rex' எனப்பட்டவனும் ராணுவ தளபதியாயும், உயர்தர பூசாரியாயும், சில நீதிமன்றங்களின் தலைமை அதிகாரியாயும் இருந்தான். அவனுக்கு சிவில் அலுவல்கள் கிடையா; ராணுவ தளபதி என்ற வகையில் கட்டுப்பாட்டு அதிகாரத்தின் விளைவாக வந்து சேர்ந்ததைத்தவிர, நீதிமன்றத் தலைவன் என்ற வகையில் தீர்ப்பை நிறைவேற்றவேண்டிய அதிகாரத்தின் விளைவாக வந்து சேர்ந்ததைத் தவிர, பிரஜைகளின் உயிர், சுதந்திரம், சொத்து விஷயங்களில் அவனுக்கு எந்த அதிகாரமும் இல்லை. 'Rex' பதவி பரம்பரையாய் வருவதல்ல; மாறாக, பெரும்பாலும் தனக்கு முந்தியவனின் நியமனத்தின் பேரில் குரியாக்களின் கூட்டத்தால் முதலில் தேர்ந்தெடுக்கப்பட்டு, பிறகு மரியாதைகளோடு இரண்டாவது கூட்டத்தால் பதவியில் அமர்த்தப் பட்டான். அவனைப் பதவியிலிருந்து விலக்கவும் முடிந்தது என்பதற்கு டார்க்வினியஸ் சுபெர்பஸ்ஸுக்கு ஏற்பட்ட கதி ருசுவாகும்.

மாவீரர் சகாப்தத்தைச் சேர்ந்த கிரேக்கர்களைப்போலவே, அரசர்கள் என்றழைக்கப்பட்டவர்களின் காலத்தைச் சேர்ந்த ரோமானியர்கள் ஒரு ராணுவ ஜனநாயகத்தில் வாழ்ந்தனர்; அது கணங்

இராஜ்ஜியமும் 'reiki' என்னுமல் 'thiudinassus' என்றுதான் அழைக்கப்பட்டது. கோதிக் மொழியிலுள்ள 'thiudans' அல்லது அரசன் என்று தவறாக மொழிபெயர்க்கிற பெயரில், 'Thiudareiks, Theodorich' — அதாவது 'Dietrich'—இரண்டு பெயர்களும் ஒன்றாகவே கலந்தோடுகின்றன. **(எங்கெல்ஸ் குறிப்பு.)**

களையும் பிராட்ரிகளையும் குலங்களையும் ஆதார மாகக் கொண்டிருந்தது; அவற்றினின்றுதான் அது வளர்ச்சி பெற்றது. குரியாக்களும், குலங்களும் ஓரளவுக்குச் செயற்கையாயமைந்த அமைப்புகளா யினும் ஆதியில் அவை முளைத்தெழுந்த சமுதாயத் தின் உண்மையான இயற்கையான மாதிரிகளைப் பின் பற்றி வார்த்தெடுக்கப்பட்டவை; அச்சமுதாயம் இன்னும் இவற்றை எல்லாப் பக்கங்களிலும் சூழ்ந் திருந்தது. மேலும், இயற்கையாய் வளர்ந்த பாட் ரிஷியப் பிரபுத்துவம் ஏற்கனவே பலம் பெற்ற போதிலும், 'Rex'கள் படிப்படியாகத் தமது அதிகாரங்களை விரியச்செய்ய முயன்று வந்தபோதி லும்—இவை அரசியல் சட்டத்தின் ஆதிபூர்வமான, அடிப்படையான தன்மையை மாற்றவில்லை; இது ஒன்றுதான் முக்கியமானதுங்கூட.

இதற்கிடையே, ரோமாபுரியின் ஜனத்தொகை யும் ரோமானிய நிலப்பரப்பைச் சேர்ந்த ஜனத் தொகையும், நாடு பிடிப்புமூலம் விரிவாகி, ஓரளவுக் குக் குடிபுகுதலின் வழியாகவும் ஓரளவுக்குஅடிமைப் படுத்தப்பட்ட, பெரும்பாலும் லத்தீன் மாவட்டங் களின் வாசிகளாலும் அதிகரித்தன. இந்தப் புதிய வாசிகள் எல்லோரும் (தற்சமயத்துக்கு முழு உரிமை யற்ற பிரஜைகளைப் பற்றிய பிரச்சினையை இங்கே விட்டு வைக்கிறோம்) பழைய கணங்கள், குரியாக்கள், குலங்களுக்கு வெளியே இருந்தார்கள்; எனவே அவர் கள் முறையான ரோமானிய மக்களையே, 'populus Romanus' என்பதை, சேர்ந்தவர்களல்ல. அவர்கள் தனிப் பட்ட வகையில் சுதந்திரமானவர்களே; நிலமும் சொந்தத்தில் வைத்துக் கொள்ளமுடியும், வரியும்

செலுத்தியாக வேண்டும், ராணுவச் சேவைக்கும் போகவேண்டியவர்களே. ஆனால் அவர்கள் எந்தப் பதவிக்கும் வரத்தகுதியற்றவர்கள்; குரியாக்களின் கூட்டத்தில் பங்கெடுக்கவோ, வசியப்படுத்தப்பட்ட அரசு நிலங்களை வினியோகிப்பதில் பங்கெடுக்கவோ முடியாது. அவர்கள் எல்லாப் பொது உரிமைகளிலிருந்தும் விலக்கப்பட்ட பிளெப்ஸ் என அமைந்தார்கள்; இடையறாது பெருகிக்கொண்டிருந்த எண்ணிக்கை, ராணுவப் பயிற்சி, ஆயுதப்பலம் ஆகியவற்றின் விளைவாக, அவர்கள் பழைய 'populus' என்பதற்கு— இந்த 'populus' தன் எண்ணிக்கை பெருகாதபடி தன் அணிகளில் வெளியார் புக இடமின்றி அடைத்துவிட்டிருந்தது — ஓர் ஆபத்தாக ஆனார்கள். மேலும் 'populus' உக்கும் பிளெப்ஸுக்கும் இடையே நிலம் ஓரளவுக்குச் சமமாகவே பிரிக்கப்பட்டிருந்ததாகத் தெரிகிறது; ஆனால், இன்னும் மிகக் கணிசமானதாக வளர்ச்சிபெறாத வியாபாரச் செல்வமும் தொழிற்செல்வமும் பிரதானமாகப் பிளெப்ஸ் கையிலேயே இருந்திருக்கக்கூடும்.

கட்டுக்கதையாய் வந்துள்ள ரோமாபுரியின் தொடக்க வரலாறு முழுவதும் ஒரே இருள் சூழப்பட்டதாய் இருக்கிறது. வியாக்கியானம் பண்ணுவதற்காகப் பகுத்தறிவு-அனுபவஞான வகைப்பட்ட முயற்சிகளினாலும், பின்னால் வந்த சட்டத் துறையில் பயிற்சிபெற்ற ஆசிரியர்கள் (அவர்களின் நூல்கள் நமக்கு மூலாதார விஷயங்களைத் தருவனவாய்ப் பயன்படுகின்றன) தந்துள்ள செய்திகளினாலும் இவ்விருள் மேலும் அதிகமாகிவிட்டிருக்கிறது. இவ்விருளின் விளைவாகப் பழைய கணமுறைக்கு முற்றுப்

புள்ளி வைத்த புரட்சியின் காலம், போக்கு, காரணங்கள் பற்றித் திட்டமாக எதையும் சொல்வதற்கு முடியாது. பிளெப்ஸுக்கும் 'populus' உக்குமிடையே இருந்த மோதல்கள் தான் அதற்குக் காரணங்களாயிருந்தன என்பது ஒன்று தான் நமக்கு நிச்சயமாகத் தெரிந்திருப்பது.

புதிய அரசியல் சட்டம் செர்வியஸ் துல்லியஸ் அரசனால் செய்யப்பட்டது என்று கூறப்படுகிறது; அது கிரேக்க மாதிரியில், குறிப்பாக சொலான் அரசியல் சட்டத்தின் மாதிரியில், அமைந்திருந்தது; அது ஒரு புதிய மக்கள் சபையை உண்டாக்கியது; 'populus' ஆனாலும் சரி, பிளெபியன்களாயினும் சரி, ராணுவச் சேவை புரிபவர்களெல்லோரும் அதில் சேர்க்கப்பட்டனர், ராணுவச் சேவை புரியாதவர்கள் விலக்கப்பட்டனர். ராணுவச் சேவைக்குச் செல்லவேண்டியிருக்கும் ஆண் ஜனத்தொகை முழுவதும் ஆறு வகுப்புகளாக, செல்வத்தின் அடிப்படையில், பிரிக்கப்பட்டது. முதல் ஐந்து வகுப்புகளிலும் குறைந்தபட்ச சொத்து வகைப்பட்ட யோக்கிய தாம்சங்கள் பின்வருமாறு இருந்தன: முதல் வகுப்பு—1,00,000 அஸ்ஸுகள்[1]; 2ம் வகுப்பு — 75,000 அஸ்ஸுகள்; 3ம் வகுப்பு—50,000 அஸ்ஸுகள்; 4ம் வகுப்பு—25,000 அஸ்ஸுகள்; 5ம் வகுப்பு—11,000 அஸ்ஸுகள்; இவை, துரோ தி லா மால் சொல்கிறபடி, முறையே சுமார் 14,000, 10,500, 7,000, 3,600, 1,570 மார்க்குகளுக்குச் சமமாகும். அதைவிடக் குறைவாக வைத்துக் கொண்டிருந்தவர்கள்

[1] அஸ்—பழைய ரோமானிய நாணயம்.—பதிப்பாசிரியர்கள்.

பாட்டாளிகள் என்ற ஆறுவது வகுப்பைச் சேர்ந்தவர்கள்; ராணுவச் சேவை, வரிகள் ஆகியவற்றிலிருந்து அவர்கள் விலக்களிக்கப்பட்டிருந்தனர். சென்தூரியாக்களின் அசெம்பிளி ('Comitia centuriata') என்ற புது அசெம்பிளியில் பிரஜைகள் போர் வீரர்களின் அணி வரிசை போல் அணிவகுக்கப் பெற்றிருந்தனர்; அதாவது நூறு பேர் கொண்ட சென்தூரியாக்களாகத் திரட்டப் பட்டிருந்தனர்; அவற்றில் ஒவ்வொரு சென்தூரியாவுக்கும் ஒரு வோட்டு இருந்தது. முதல் வகுப்பினர் 80 சென்தூரியாக்களையும், இரண்டாம் வகுப்பினர் 22 சென்தூரியாக்களையும், மூன்றும் வகுப்பினர் 20 சென்தூரியாக்களையும், நான்காம் வகுப்பினர் 22 சென்தூரியாக்களையும், ஐந்தாம் வகுப்பினர் 30 சென்தூரியாக்களையும், ஒழுங்குமுறைக்காக ஆறும் வகுப்பினர் ஒரு சென்தூரியாவையும் அணிதிரட்டித் தந்தனர். இவற்றோடு கூடுதலாக, மிகச் செல்வந்தர்களான குதிரைப் படையினரின் 18 சென்தூரியாக்களும் இருந்தன; ஆக மொத்தம் 193. பெரும்பான்மைக்குத் தேவை 97 வோட்டுகள்; ஆனல் குதிரைப்படையினரும் முதல் வகுப்பினரும் மட்டுமே சேர்ந்தால் 98 வோட்டுகள் ஆகின்றன; எனவே அவர்களே பெரும்பான்மையாகின்றனர்; அவர்கள் ஒன்றுபட்டிருக்கும் போது மற்ற வகுப்பினரைக் கேளாமல் செல்லத்தக்க முடிவுகள் எடுக்கப்பட்டு வந்தன.

முன்பு குரியாக்களின் கூட்டம் பெற்றிருந்த அரசியல் அதிகாரங்கள் அனைத்தும் இப்போது

சென்தூரியாக்களின் இந்தப் புதிய சபையிடம் வந்துசேர்ந்தன (பெயரளவில் இருந்த சிலஅதிகாரங்கள் மட்டும் இல்லை); ஆகவே, இதனுல் குரியாக்களும், அவற்றில் இருந்த கணங்களும், ஆதென்ஸின் விஷயத்தில் நடந்ததுபோல், கேவலம் தனிப்பட்ட, மதசம்பந்தப்பட்ட சங்கங்களின் நிலைக்குத் தாழ்த்தப் பட்டனர்; இந்நிலையில் அவை இன்னும் வெகு காலத்துக்கு உறக்க வாழ்வு வாழ்ந்து கொண்டிருந்தன; குரியாக்களின் கூட்டமோ விரைவில் மறைந்து போயிற்று. மூன்று பழைய கணங்களையும் அரசிலிருந்து விலக்குவதற்காகப் பிரதேசரீதியிலமைந்த நான்கு குலங்கள் புகுத்தப்பட்டன; ஒவ்வொரு குலமும் நகரத்தின் நான்கில் ஒரு பகுதியில் வசித்தது, அவற்றிற்குச் சில அரசியல் உரிமைகளும் வழங்கப் பட்டன.

ஆக, ரோமாபுரியில் கூட, இராஜ்ஜியம் என்று சொல்லப்பட்டது ஒழிக்கப்படுவதற்கு முன்பே, இரத்த உறவுகளின் அடிப்படையில் இருந்த பழைய சமுதாய அமைப்பு ஒழிக்கப்பட்டுப் போயிற்று; அதனிடத்தில், பிரதேசப்பிரிவையும், செல்வ அந்தஸ்து வேறுபாடுகளையும் அடிப்படையாகக் கொண்ட ஒரு புதிய அமைப்புமுறை, உண்மையான அரசு அமைப்பு முறை, வந்து சேர்ந்தது. இங்கே ராணுவச் சேவை செய்ய வேண்டியதாயிருக்கிற பிரஜைகளைக் கொண்டதாய்ப் பொது அதிகாரம் அமைந்திருந்தது; அந்தஅதிகாரம் அடிமைகளுக்கு எதிராகமட்டுமன்றி, பாட்டாளிகள் எனப்பட்டோருக்கும் எதிராகத் திருப்பப் பட்டிருந்தது; இவர்கள் ராணுவச்

சேவையிலிருந்தும், ஆயுதம் ஏந்துவதிலிருந்தும் விலக்கி வைக்கப்பட்டிருந்தனர்.

உண்மையான அரசு அதிகாரத்தை ஆக்கிரமித்திருந்த டார்க்விலியஸ் சுபெர்பஸ் என்ற கடைசி அரசன் துரத்தப்பட்ட பிறகும் அரசன் ஸ்தானத்தில், இரண்டு ராணுவ தளபதிகள் (கான்சல்கள்) சம அதிகாரங்களோடு (இரோகுவாய்களிடையே இருப்பது போல்) நியமிக்கப்பட்ட பிறகும் இந்தப் புதிய அமைப்புமுறை மேலும் வளர்க்கப்பட்டதேயொழிய வேறில்லை. இந்தப் புதிய அமைப்புமுறைக்குள், பதவிகளுக்கு வருவதற்காகவும் அரசு நிலங்களில் பங்கு பெறுவதற்காகவும் பாட்ரிஷியன்களுக்கும் பிளெபியன்களுக்குமிடையே நடந்த போராட்டத்தைக் கொண்டதாயிருந்த ரோமானியக் குடியரசின் வரலாறு முழுவதும் இயங்கியது. கடைசியில் பாட்ரிஷியன் பிரபுக்கள் பெரிய நிலச்சொந்தக்காரர்களின், செல்வர்களின் வர்க்கத்தில் கலந்து விட்டனர். அவர்கள் ராணுவச் சேவையால் சீரழிந்து போன விவசாயிகளின் நிலங்களையெல்லாம் படிப்படியாக உறிஞ்சிவிட்டனர், இப்படி உண்டாக்கப்பட்ட பிரம்மாண்டமான புதிய விளைநிலங்களை அடிமைகளின் உதவிகொண்டு சாகுபடி செய்தார்கள், இத்தாலியின் ஜனத்தொகையைக் குறைத்தார்கள்; அதன்வழியாக சக்கரவர்த்தி ஆட்சிக்குமட்டுமன்றி, அதன்பின் வந்த ஜெர்மானிய அநாகரிகக் கூட்டங்களுக்கும் வழி திறந்துவிட்டனர்.

## VII

## கெல்டுகளிலும் ஜெர்மானியர்களிலும் கணம்

பல்வகைப்பட்ட காட்டுமிராண்டி நிலை மக்கள் சமூகங்களிலும் அநாகரிக நிலை மக்கள் சமூகங்களிலும் கிட்டத்தட்டத் தூய வடிவத்தில் இன்னும் காணப்படுகிற கண ஸ்தாபனங்களைப்பற்றிச் சொல்வதற்கு இங்கே இடமின்மை நம்மைத் தடுக்கிறது; ஆசியாவைச் சேர்ந்த நாகரிக நிலை நாடுகளின் பண்டைக்கால வரலாற்றில் காணப்படுகிற இப்படிப்பட்ட ஸ்தாபனங்களின் அடையாளக்குறிகள் விஷயத்திலும் அப்படியே. இது அல்லது அது எங்கணுமே காணக்கிடக்கிறது. சில உதாரணங்கள் போதுமானவையாயிருக்கக்கூடும்: கணத்தை அடையாளங் கண்டுகொள்வதற்குமுன்பே அதைத் தவருகப் புரிந்துகொள்ள ஆகப் பெரிய முயற்சிசெய்த மாக்லென்ஞன் அதைச் சுட்டிக்காட்டி அதன் முக்கிய வடிவமைப்பை மொத்தத்தில் சரியாக வர்ணித்தார். கால்மிக்குகள், சிர்காஸியார்கள், சமோயெத்துகள் இடையேயும் வார்லிகள், மகார்கள், மணிபுரிகள் என்ற மூன்று இந்திய மக்கள்சமூகங்களிடையேயும் இருந்த இந்த ஸ்தாபனத்தைப்பற்றி அவர் எழுதியிருக்கிருர். சமீபத்தில் மக்ஸீம் கவலேவ்ஸ்கியும் வர்ணித்துள்ளார்; ப்ஷாவ்கள், ஹேவ்ஸுர்கள், ஸ்வானேடியர்கள், இன்னும் இதர காக்கேஷிய குலங்களிடையே அவர் அதைக் கண்டுபிடித்தார். இங்கே கெல்டுகளுக்குள்ளும், ஜெர்மானியர்களுக்குள்ளும் கணங்கள் இருந்தது பற்றிச் சுருக்கமாகக் குறிப்புகள் தருவதோடு நிறுத்திக் கொள்ளலாம்.

நம் காலம் வரைக்கும் எட்டியிருக்கிற பழமைமிக்க கெல்டிக் சட்டங்கள், கணங்கள் இன்னும் நிறைவான வீரியத்துடன் இருப்பதையே காட்டுகின்றன. அயர்லாந்தில், மக்கள் மனத்தில் குறைந்தபட்சம் உள்ளுணர்வாகவாவது, ஆங்கிலேயர்கள் அதை உடைத்தெறிந்தபிறகும், இன்னும் அது உயிரோடிருக்கிறது. சென்ற நூற்றுண்டின் மத்தியில் ஸ்காட்லாந்தில் அது முழு மலர்ச்சியுடன் இருந்து வந்தது; இங்கேயும் கூட ஆங்கிலேயர்களின் ஆயுதங்கள், சட்டங்கள், நீதிமன்றங்கள் ஆகியவைற்றிற்குத்தான் அது கீழ்ப்படிந்தது.

ஆங்கிலேய நாடுபிடிப்புக்குப் பல நூற்றுண்டுகளுக்கு முன்னுல், 11வது நூற்றுண்டுக்குப்பின் செல்லாத, பழைய வெல்ஷ் சட்டங்கள் முழுக் கிராமங்களில்—விதி விலக்குகளாகவும், முன்பு எங்கும் நிலவியிருந்த ஒரு வழக்கத்தின் மிச்சசொச்சங்களாகவும் இருந்தபோதிலும்— பொது விளைநில விவசாயம் இருந்ததைக் காட்டுகின்றன. ஒவ்வொரு குடும்பத்துக்கும் சொந்தச் சாகுபடிக்கென்று ஐந்து ஏக்கர் பூமி இருந்தது; அதே சமயத்தில் வேறெரு நிலப்பகுதியும் பொதுவிலே சாகுபடி செய்யப்பட்டு அதன் பலன் பகிர்ந்து கொள்ளப்பட்டது. அயர்லாந்து, ஸ்காட்லாந்து உதாரணங்களோடு வைத்துப் பார்க்கையில் இந்தக் கிராமச் சமூகங்கள் கணங்களையும் கணங்களின் துணைப்பிரிவுகளையும் பிரதிநிதித்துவப்படுத்துகின்றன என்பதில் ஒரு சந்தேகமும் இருக்க முடியாது. நேரமின்மையால் (எனது குறிப்புக்கள் 1869லிருந்துள்ளன) நான் மேற்கொள்ள முடியாமலிருக்கிற வெல்ஷ் சட்டங்கள் பற்றிய மறு விசாரணை இதை

நேரடியாக உறுதிப்படுத்தாது போகலாம். ஆனால் வெல்ஷ் மூலாதாரங்களும் ஐரிஷ் மூலாதாரங்களும் உண்மையிலேயே நிரூபிக்கிற விஷயம் என்னவெனில், கெல்டுகளிடையே இணைக் குடும்பம் பதினோராவது நூற்றாண்டில் ஒருதார மணமுறைக்கு இன்னும் விட்டுக்கொடாமலே இருந்தது என்பதுதான். வேல்ஸில், திருமணம் என்பது ஏழாண்டுகள் கழிவதற்கு முன் ரத்து செய்யப்படக் கூடியதாக அல்லது ரத்து செய்ய அறிவிப்புத் தரத்தக்கதாய் இருந்தது. ஏழாண்டுகள் பூர்த்தியாவதற்கு இன்னும் மூன்றே இரவுகள்தான் பாக்கி என்றிருந்தபோதிலும் கூட மணமான ஜோடி பிரிந்துபோகமுடியும், அப்போது அவர்களின் சொத்து அவர்களிடையே பிரிக்கப்பட்டது; பெண் பிரித்துவைப்பாள், ஆண் அதில் ஒன்றைத் தேர்ந்துகொள்வான். சில வேடிக்கையான விதிகளின்படி மேஜை, நாற்காலி வகையறாக்கள் பிரிக்கப்பட்டன. மணத்தை ஆண் ரத்து செய்துவிட்டால் அவன் பெண்ணின் சீதனத்தையும் இதர சில சாமான்களையும் திருப்பிக் கொடுத்துவிடவேண்டும்; பெண் ரத்து செய்ய விரும்பினால் அவள் பங்குக்குக் குறைவாகக் கிடைக்கும். குழந்தைகளில் இரண்டு கணவனுக்கும், ஒன்று—அதாவது நடுக்குழந்தை— மனைவிக்கும் தரப்பட்டன. மணரத்துக்குப்பிறகு, பெண் மீண்டும் மணம் புரிந்து, புதுக்கணவனின் கட்டிலில் ஒரு காலை வைத்திருந்த நிலையிலும், முதல் கணவன் வந்து அவளை அழைத்துக் கொண்டுபோக வந்தால் அவள் அவனைப் பின் தொடர்வதுதான் கடமையாகும். ஆனால் இருவர் ஏழு வருடங்களுக்குக் கூடி வாழ்ந்தால் கல்யாணச்

சடங்குகள் எதுவுமின்றியே கணவன், மனைவி என்று கருதப்பட்டனர். மணம் புரியுமுன் பெண்கள் கற்பில் இருக்க வேண்டிய கட்டாயம் கிடையாது; அப்படிக் கோரப்பட்டதும் கிடையாது; இவ்விஷயத்தை நடத்திவைத்த விதிமுறைகள் மிகமிகக் கண்டிப்பற்றவை, பூர்ஷ்வா ஒழுக்க முறைகள் அனைத்திற்கும் எதிரானவை. ஒரு பெண் சோரம் போனால் அவளது கணவனுக்கு அவளை அடிக்க உரிமையுண்டு—தண்டனை பெறாமல் அவளை அடிப்பதற்குரிய உரிமை பெற்ற மூன்று சந்தர்ப்பங்களில் இது ஒன்று. ஆனால் அதன்பிறகு அவன் வேறெவ்விதப் பரிகாரமும் கோர முடியாது, ஏனெனில் ''ஒரே ஒரு குற்றத்துக்குப் பரிகாரம் செய்யப்படவேண்டும், அல்லது பழிவாங்கப்பட வேண்டும், ஆனால் இரண்டும் அமுலாக்கப் படமுடியாது''. சொத்துப் பிரிவின் போது தனக்குரிய உரிமைகளுக்குப் பாதகம் ஏற்படாமல் மணரத்துக்குப் பெண் உரிமை பெற்றதின் காரணங்கள் மிகமிக மாறுபாடான தன்மை கொண்டவைகளாகும். ஆணின் வாய்நாற்றம் ஒரு போதிய காரணமாயிருந்தது. முதல் இரவு உரிமை மீட்சிக்காகக் குலத்தலைவனுக்கோ அன்றி அரசனுக்கோ தர வேண்டிய பணம் (இது 'gobr merch' எனப்பட்டது. மத்தியகாலப் பெயரான 'marcheta' என்பதும் 'marquette') என்ற பிரெஞ்சுச் சொல்லும் இதனடியாகப் பிறந்தவை) சட்டத்தொகுப்பில் முக்கிய பாகம் வகிக்கிறது. மக்கள் சபைகளில் பெண்களுக்கு வோட்டளிக்க உரிமையிருந்தது. இத்துடன், இம்மாதிரியான நிலைமைகள் அயர்லாந்திலும் இருந்தன

வென்று காட்டப்பெற்றுள்ளது என்பதையும், கால வரம்புள்ள மணங்களும் அங்கேயும் வழக்கமாயிருந் துள்ளன என்பதையும், வீட்டுவேலை செய்ததற்குச் சம்பளம் உண்டு என்கிற அளவுக்குப் பிரிகையில் பெண்களுக்குத் தாராளமான, நன்கு வரையறுக்கப் பட்ட சலுகை நலன்கள் உறுதி செய்யப்பட்டிருந் தன என்பதையும், பிற மனைவியரின் பக்கத்திலேயே ''முதல் மனைவி'' என்பவளும் இருந்து வந்தாள் என்பதையும், இறந்தவனின் சொத்தைப் பிரிவினை செய்கையில் ஒழுக்க முறையாகப் பிறந்த குழந்தை களுக்கும் ஒழுக்கக்கேடாகப் பிறந்த குழந்தைகளுக் கும் இடையே வேறுபாடு காட்டப்படவில்லை என் பதையும் சேர்த்துவைத்துப்பாருங்கள்; அப்போது இணைக் குடும்பத்தைப் பற்றிய ஒரு சித்திரம் நமக் குக் கிடைக்கிறது, அத்துடன் ஒப்புநோக்கும்போது வட அமெரிக்காவில் செல்லத்தக்கதாயிருந்த மண வடிவம் கண்டிப்புள்ளது என்று தோன்றும். ஆனால், சீஸர் காலத்தில் குழு மணத்தில் வாழ்ந்து கொண் டிருந்த ஒரு மக்கள் சமூகத்திற்குப் பதினோராம் நூற்றாண்டில் இது வியப்பான விஷயமல்ல.

அயர்லாந்தில் கணம் ('sept', குலம் என்பது 'clainne', கிளான் என்று அழைக்கப்பட்டது) இருந்ததாகவும், அதை வர்ணித்தும், பண்டையச் சட்ட நூல்கள் எழுதியுள்ளன; அவை மட்டு மன்றி, பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஆங் கிலேயச் சட்ட நிபுணர்களும் அதை ஊர்ஜிதம் செய்தும் வர்ணித்தும் இருக்கிறார்கள்; கிளான் நிலங்களை ஆங்கிலேய அரசனின் சொந்தப் பிரதேசங்

களாக மாற்றுவதற்காக அவர்கள் அனுப்பப்பட்டார்கள். இக்காலம் வரை நிலம், தலைவர்கள் அதை ஏற்கனவே தமது தனிப்பட்ட நிலப்பரப்பாக மாற்றிவிட்டிருந்த இடங்களில் தவிர, கிளானின் அல்லது கணத்தின் பொதுச் சொத்தாக இருந்து வந்தது. ஒரு கண அங்கத்தினன் இறந்து, அதன் வழியாய் ஒரு குடும்பம் கலைக்கப்படும் போது, அந்தக் கணத் தலைவன் (ஆங்கிலேயச் சட்ட நிபுணர்கள் அவனை 'caput cognationis' என்று அழைக்கிறார்கள்) கணத்தின் நிலம் முழுவதையும் மற்றக் குடும்பங்களிடையே பங்கு பிரித்துத் தந்தான். ஜெர்மனியில் அமுலாகியவை போன்ற விதிகளின் படியே இந்தப் பங்குப் பிரிவினை பொதுவாக நடந்திருக்க வேண்டும். 'Rundale' எனப்படுகிறவற்றில் விளைநிலங்கள் பொதுவில் வைக்கப்பட்ட சில கிராமங்களை நாம் இன்னும் காணமுடியும்; நாற்பது-ஐம்பது ஆண்டுகளுக்கு முன் அவை நிறையவே இருந்தன. ஒவ்வொரு விவசாயியும்—அதாவது, கணத்தின் பொதுச் சொத்தாக இருந்து இப்போது ஆங்கிலேயரால் கைப்பற்றப்பட்ட அந்த நிலத்தின் தனித்தனிக் குத்தகைதாரன்— தனது பங்கு நிலத்துக்குக் குத்தகை செலுத்துகிறான்; ஆனால், சாகுபடிக்குரிய நிலங்கள், புல் தரைப்பிரதேசம் எல்லாம் ஒன்றாக்கப்பட்டு இடத்துக்கும் தரத்துக்கும் தக்கமுறையில் துண்டுகளாகப் பிரித்துத் தரப் படுகின்றன; 'Gewanne' என்று அவற்றை மோசெல் நதிப் பிரதேசத்தில் சொல்கிறார்கள்—ஒவ்வொரு 'Gewanne' என்பதிலும் ஒவ்வொருவருக்கும் பங்கு கிடைக்கிறது. சதுப்பு நில

மும் மேய்ச்சல் நிலங்களும் பொதுவில் பயன்படுத் தப்படுகின்றன. ஐம்பது ஆண்டுகளுக்குமுன்பு கூட மறு பங்குப் பிரிவினை எப்பொழுதோ ஒரு தடவை யாகவும், சில சமயங்களில் வருடாவருடமாக வும் நடந்து வந்தது. இப்படிப்பட்ட 'rundale' வகைக் கிராமத்தின் நிலப்படம் ஜெர்மனியின் மோ செல் நதிப்பிரதேசங்களிலுள்ள அல்லது ஹோஹ் வால்டிலுள்ள விவசாயக் குடும்பங்களின் சமூகம் போலவே காணப்படுகிறது. கணங்களும் 'factions'[1] என்பவற்றில் பிழைத்துவருகின்றன. சுத்த அபத்த மான, அர்த்தமற்ற வேறுபாடுகளின் அடிப்படையில் எழுந்ததாய்த் தோன்றுகிற, ஆங்கிலேயர்களுக்கு அற வே புரிந்துகொள்ள முடியாததாயிருக்கிற கட்சிகளை ஐரிஷ் விவசாயிகள் அடிக்கடி நிறுவுகிறார்கள். இந் தக் கட்சிகளின் ஒரே நோக்கம் ஒருவரையொருவர் நொய்யப் புடைக்கும் பொது விளையாட்டின் பொ ருட்டுத் திரள்வதற்கு என்றே தோன்றுகிறது. உடைத் தெறியப்பட்ட கணங்களின் செயற்கை அவதாரங் களே, பின்வந்த பர்த்திகளே, அவை; பரம்பரை யாய் வந்தடைந்த கண உள்ளுணர்வின் தொடர்ச் சியை அலாதியான முறையில் அவை வெளிப்படுத்து கின்றன. இன்னொன்று: சில இடங்களில் ஒரே கணத் தின் அங்கத்தினர்கள் அநேகமாகப் பழைய பிர தேசத்திலேயே ஒன்றாய்க் கூடி வாழ்கின்றனர். உதாரணமாக, **1830-1840** ஆண்டுகளில் மொனு கான் பிரதேச வாசிகளில் மிகப் பெரும்பாலோர் நான்கே நான்கு குடும்பப் பெயர்களைத்தான் கொண்

[1] **'கட்சிகள்'.—பதிப்பாசிரியர்கள்.**

டிருந்தனர்; அதாவது நான்கு கணங்களிலிருந்து, கிளான்களிலிருந்து சந்ததியராய் வந்தவர்கள்.[1]

[1] அயர்லாந்தில் நான் சில நாட்கள் கழித்த போது, கணக்காலத்திய கருத்தோட்டங்களிலே அங்குள்ள கிராம மக்கள் எப்படி இன்னும் வாழ்ந்து வருகிறார்கள் என்பதை மீண்டும் உணர்ந்தேன். விவசாயி நிலப்பிரபு வின் குத்தகைதாரனாகத்தான் இருக்கிறான். அந்த நிலப் பிரபுவை ஒரு மாதிரியான கிளான் தலைவனாகவே விவ சாயி இன்னும் கருதுகிறான்; அவன் எல்லோருடைய நன்மைக்காக வேளாண்மையை மேற்பார்வையிடுகிறான் என் றும், குத்தகைவடிவத்தில் கப்பம் வாங்குவதற்குரிய உரிமை அவனுக்கு உண்டு என்றும், ஆனால் அதோடு கூடத் தேவைப் படுகிறபோது விவசாயிக்கு அவன் உதவியாகவேண்டும் என் றும் கருதுகிறான். அதேபோல் சௌகரியமாய் வாழ்கிற ஒவ் வொருவரும், ஏழ்மையான நிலையிலுள்ளோர் துன்பப்படும் காலங்களில் அவர்களுக்கு உதவவேண்டியது கடமை என்றும் கருதப்படுகிறது. இவ்வித உதவி ஈகையல்ல; ஏழை கண அங்கத்தினன் தன் உரிமைப்படி பணம் படைத்த தனது சக கண அங்கத்தினனிடமிருந்து அல்லது கிளான் தலைவனிட மிருந்து பெறுவது அது. ஐரிஷ் விவசாயிகளின் மனத்தில் பூர்ஷ்வாச் சொத்து பற்றிய நவீனக் கருத்துக்களைப் பதிய வைப்பது அசாத்தியம் என்று அரசியல் பொருளாதார ஆசிரி யர்களும் சட்ட நிபுணர்களும் ஏன் புகார்செய்கிறார்கள் என் பதை இது விளக்குகிறது. உரிமைகள் மட்டும் பெற்று, கட மைகளே இல்லாத சொத்து ஒன்றிருக்கமுடியும் என்பது அவ்விவசாயிகளின் சிந்தனைக்கு அப்பாற்பட்ட விஷயமாகும். பல ஐரிஷ்காரர்கள் இப்படிப்பட்ட அப்பாவித்தனமான கணக் கருத்தோட்டங்களோடு திடீரென்று இங்கிலாந்தின், அமெரிக் காவின் மாநகரங்களில், முற்றிலும் மாறுபட்ட ஒழுக்க, சட்ட அளவுகோல்களுடன் இருக்கிற மக்களிடையே தள்ளப் படுகின்றனர்; அங்கே அவர்கள் ஒழுக்கம், நீதி பற்றிய தமது அபிப்பிராயங்களிலே குழம்பிப் போய், அறவே பிடி யற்றுப்போய், கூட்டம் கூட்டமாக மனமுறிவுக்கு இரையாகித்

ஸ்காட்லாந்தில் கண அமைப்பின் வீழ்ச்சி 1745ன் கலகத்தை ஒடுக்கிய காலத்திலிருந்து தொடங்குகிறது. இந்த அமைப்பில் ஸ்காட்லாந்து கிளான் சுரூராக எந்தக் கண்ணியைப் பிரதிநிதித்துவப்படுத்துகிறது என்ற விஷயம் விசாரிக்கப்பட வேண்டியிருக்கிறது. அது ஒரு கண்ணி என்பதில் சந்தேகமில்லை. வால்டர் ஸ்காட்டின் நாவல்கள் ஸ்காட்லாந்தின் குன்றுப் பிரதேசங்களைச் சேர்ந்த கிளானைப் பளிச்சென்று நம் கண் முன்னுல் கொண்டுவந்து நிறுத்துகின்றன. மார்கன் சொல்கிறபடி, அது "ஸ்தாபன அமைப்பிலும் சரி, உணர்ச்சியிலும் சரி, கணத்தின் மிகச் சிறந்த மாதிரியாகும்; அதன் அங்கத்தினர்களின்மீது கணவாழ்க்கைக்கு இருந்த சக்திக்கும் அது ஓர் அசாதாரணமான உதாரணமாகும்.... அவர்களுடைய பகைமைகள், ரத்தப் பழி வாங்குதல், கணரீதியில் அங்கங்கே வசித்தல், நிலங்களைப் பொதுவில் பயன்படுத்தல், கிளான் அங்கத்தினன் தலைவனிடமும் மற்ற அங்கத்தினர்களிடமும் காட்டும் விசுவாசம்—இவற்றில் கண சமுதாயத்தின் வழக்கமான, விடாப்பிடியான குணும்சங்களைக் காண்கிறேம்.... வம்ச பரம்பரை ஆண் வழியிலிருந்தது; ஆண்களின் குழந்தைகள் கிளானின் அங்கத்தினர்களாகவே இருந்தனர்; அதன் பெண் அங்கத்தினர்களின் குழந்தைகளும் முறையே அவரவர்களின் தகப்பனுரின் கிளான்களைச் சேர்ந்தவையாயிருந்தன". ஸ்காட்லாந்தில் முன்பு தாயுரிமை அமுலிலிருந்தது; இதைப் பிக்டுகளின் அரச

---

தீரவேண்டிய நிலைக்கு வருபவர்களாவதில் வியப்பில்லை. **(நான்காம் பதிப்புக்கு எங்கெல்ஸ் குறிப்பு.)**

குடும்பம் ருசுப்பிக்கிறது; பீட் என்பவன் சொல்கிற படி, இந்த அரசகுடும்பத்தில் வாரிசுரிமை பெண் வழியேதான் இருந்தது. மேலும் மத்திய காலம் வரை ஸ்காட்லாந்து மக்களிடையேயும், வேல்ஸ் மக்களிடையேயும் பூனலுவா குடும்பத்தின் அடை-யாளங்கள் இருந்தன: முதல் இரவு உரிமை இதைக் காட்டுகிறது; முந்திய பொதுக் கணவன்மார்களின் கடைசிப் பிரதிநிதியான கிளான் தலைவனே அல்லது அரசனே அவ்வுரிமை ஈடு செலுத்தி மீட்கப் படாவிட்டால் ஒவ்வொரு மணமகளிடமும் இவ்வுரிமையைக் கோரலாம்.

* * *

மக்கள் சமூகங்கள் இடம்பெயர்ந்து சென்ற காலம் வரைக்கும் ஜெர்மானியர்கள் கணங்களில் திரண்டு அமைந்திருந்தார்கள் என்பது விவாதத்திற் கிடமற்ற உண்மையாகும். டான்யூப், ரைன், விஸ்லா நதிகளுக்கும் வடக்கத்திய கடல்களுக்கும் இடையே யுள்ள நிலப்பரப்பில் கிறிஸ்தவ சகாப்தம் தொடங் குவதற்குச் சில நூற்றாண்டுகளுக்குமுன்னால் அவர் கள் குடிதங்கினார்கள் என்பது வெளிப்படை; கிம்பிரி களும் டியூடானிகளும் இடம்பெயர்ந்து செல்வதில் இன்னும் முழுசாக ஈடுபட்டிருந்தார்கள்; மேலும், சுயேவிகளோ சீஸர் காலம்வரை குடிதங்கவில்லை. அவர்கள் கணங்களாகவும் இரத்த உறவுமுறைக் குழுக்களிலும் (gentibus cognationibusque) அமைந்து குடிதங்கினார்கள் என்று சீஸர் திட்டமாகக் கூறுகிறார். ஜூலியா கணத்தைச் சேர்ந்த ஒருவர் வாயிலிருந்து வரும் 'gentibus' என்ற சொல்லுக்கு ஒரு திட்டமான

அர்த்தம் உண்டு, அந்த அர்த்தத்தைத் தவருகப் புரிந்துகொள்ளவே முடியாது. இது எல்லா ஜெர்மானியர்களுக்குமே பொருந்தும்; வெல்லப்பட்ட ரோமானிய மாகாணங்களிலும் கணரீதியில்தான் குடியேற்றம் நடந்தேறியாகத் தோன்றுகிறது. டான்யூப் நதிக்குத் தெற்கேயுள்ள நிலப்பரப்பில் கணரீதியில் தான் (genealogiae) மக்கள் குடிதங்கிஞர்கள் என்பதை ''அலமானியச் சட்டம்'' உறுதி படுத்துகிறது; 'genealogia' என்ற சொல் பின்னல் மார்க் அல்லது கிராமச் சமூகம் என்ற சொற்கள் வழங்கிய அர்த்தத்திலே தான் உபயோகப்படுத்தப் பட்டது. இந்த 'genealogiae' என்பவை பெரிய குடும்பச் சமூகங்களே, அவற்றிடையே நிலம் பங்கிடப் பட்டிருந்தது, அவற்றினிடையேயிருந்துதான் கிராமச் சமூகங்கள் பின்னல் வளர்ந்தன என்ற கருத்தைச் சமீபத்தில் கவலேவ்ஸ்கிய் வெளியிட்டார். 'Fara' என்பதற்கும் இது சரியாயிருக்கலாம்; ''அலமானியச் சட்டத்''தில் 'genealogia' என்று குறிக்கப்படுகிறதைத் தான் அல்லது அநேகமாக அதைத்தான் புர்குண்டியர்களும், லாங்கோபார்டுகளும்—கோதிக் குலமும் ஹெர்மோனியன் அல்லது மேல் ஜெர்மன் குலமும் —'fara' என்ற சொல்லால் குறித்தனர். உண்மையிலே இது கணத்தைக் குறிக்கிறதா அல்லது குடும்பச் சமூகத்தைக் குறிக்கிறதா என்ற விஷயம் பரிசீலனை செய்வதற்குரியதாகும்.

கணம் என்பதற்கு ஜெர்மானியர்கள் எல்லோரிடமும் ஒரு பொதுவான சொல் இருந்ததா, இருந்தால் அது என்ன சொல் என்ற விஷயத்தை மொழி

பற்றிய தஸ்தாவேஜுகள் சந்தேகத்திலேயே விட்டு வைக்கின்றன. சொல்லிலக்கணத்தின்படி, கிரேக்கச் சொல் 'genos', லத்தீன் சொல் 'gens' ஆகிய இரண்டும் கோதிக் சொல் 'kuni', மத்திய, மேல் ஜெர்மன் சொல் 'künne' இரண்டுடனும் பொருந்துகின்றன, அதே அர்த்தத்தில்தான் பிரயோகிக்கப்படுகின்றன. ''பெண்'' என்ற சொல்லும் ஒரே வேர்ச் சொல்லிலிருந்து—கிரேக்க மொழியில் 'gynê', ஸ்லாவ் மொழியில் 'žena', கோதிக் மொழியில் 'qvino', பண்டைய நோர்ஸ் மொழியில் 'kona, kuna'— பெறப்படுகிறதைக் கொண்டு தாயுரிமைக் காலத்துக்கு நாம் மீண்டும் கொண்டு போகப்படுகிறோம். முன்னே சொன்னபடி, புர்குண்டியர்கள், லாங்கோபார்டுகள் மத்தியில் 'fara' என்ற சொல் வழங்கக் காண்கிறோம்; கிரிம் என்பவர் அதை 'fisan' —பெற்றெடுப்பது— என்ற ஓர் உத்தேச வேர்ச் சொல்லிலிருந்து பெறுகிறார். அதைவிட வெளிப்படையான 'faran, fahren' — திரிதல், திரும்ப வருதல் — என்ற வேர்ச் சொல்லிலிருந்து அதை அடையாளங்கண்டுகொள்ளவே நான் விரும்புவேன்; இந்தச் சொல் நாடோடியாகத் திரிந்து வாழும் மக்களின் திட்டமான ஒரு பகுதியை—இது உறவினர்களைக் கொண்டது என்று அநேகமாகச் சொல்லாமலே தெரிந்துகொள்ளலாம்— குறிப்பிடுகிறது; முதலில் கிழக்கிலும் பிறகு மேற்கிலும் பல நூற்றாண்டுகளாகச் சுற்றித்திரிந்த தன் போக்கிலே கண சமூகத்துக்கும் இந்தச் சொல் படிப்படியாகப் பொருந்துவதாயிற்று. மேலும் கோதிக் மொழியில் 'sibja', ஆங்கிலோ-சாக்ஸன் மொழியில் 'sib',

பழைய மேல் ஜெர்மன் மொழியில் 'sippia', 'sippa', 'Sippe' (இரத்த உறவினர்கள்) என்ற சொற்களும் உள்ளன. பன்மையைக் குறிக்கும் 'sifjar' என்ற சொல் (உறவினர்கள்) தான் பண்டைய நோர்ஸ் மொழியிலுள்ளது; ஒருமையில் வரும் சொல் 'Sif' என்ற ஒரு பெண் தெய்வத்தை மட்டுமே குறிக்கிறது. கடைசியாக, ஹில்டெ பிராண்ட் பாடலில் இன்னொரு சொல் வருகிறது. அப்பாடலில் ஹாதுபிராண்ட் என்பவனை ஹில்டெ பிராண்ட "மக்களிடையேயுள்ள ஆண்களில் உனது தகப்பனார் யார்.... நீ எந்தக் கணத்தைச் சேர்ந்த வன்?" ("eddo huêlîhhes **cnuosles** du sîs") என்று கேட்கிறான். கணம் என்பதற்கு ஜெர்மன் மொழியில் பொதுவான சொல் ஒன்று இருந்ததென்றால் அது கோதிக் 'kuni' என்ற சொல்லாக இருந்திருக்கக் கூடும்; இதர உறவுள்ள மொழிகளிலுள்ள சொல் லோடு ஒன்றாக அது தெரிவதினால்மட்டுமல்ல இதைக் குறிப்பது; கணத்தின் அல்லது குலத்தின் தலைவனை ஆதியில் குறித்த 'kuning', அரசன், என்ற சொல்லும் அதிலிருந்துதான் பெறப்படுகிறது என்ற உண்மையும் அதைக் குறிக்கிறது. 'Sibja', 'Sippe' என்ற சொற்கள் நம் கவனத்திற்கு வர லாயக்கற்றவையாகத் தெரிகின்றன; குறைந் தபட்சம் பழைய நோர்ஸ் மொழியில், 'sifjar' என்ற சொல் இரத்த உறவினர்களை மட்டுமன்றித் திருமணவழியாக வந்த உறவினர்களையும் குறித்தது; எனவே அது குறைந்தபட்சம் **இரண்டு கணங்களின்** அங்கத்தினர்களைக் கொண்டதாயுள்ளது; எனவே

'sif' என்ற சொல் கணம் என்பதைக் குறிப்பதற் கான சொல்லாக இருக்கமுடியாது.

மெக்ஸிகோ மக்கள், கிரேக்க மக்களிடையே இருந்தது போலவே ஜெர்மானியர்களிடையிலும் குதிரை வீரர்களும் சரி, ஆப்பு போன்று அமைந்த காலாட்படையினரும் போர் செய்வதற்குக் கணரீதி யில்தான் குழுக் குழுவாக நிறுத்தப்பட்டனர். குடும் பங்களாகவும், இரத்த உறவினர்களாகவும் நிறுத் தப்பட்டதாக டாஸிடஸ் சொல்கிறபோது, அவர் அந்தத் திட்டமில்லாத சொற்களை உபயோகிப்பதை விளக்குவது எது? அவர் காலத்தில் ரோமாபுரியில் வெகுகாலமாகக் கணம் என்பது உயிரற்ற ஸ்தாபன மாயிருந்தது என்பது தான்.

டாஸிடஸ் நூலில் நிர்ணயமான அர்த்தமுக் கியத்துவம் பெற்ற பகுதியுண்டு; அதில் அவர் சொல் வதாவது: தாயின் சகோதரன் தனது மருமகனைத் தன் மகனாகவே கருதுகிறான்; தாய் மாமனுக்கும் மருமகனுக்குமிடையிலுள்ள இரத்த உறவு, தகப் பன் மகன் உறவைவிடப் புனிதமானது, நெருக் கமானது என்று சிலர் சொல்கின்றனர்; ஆக, ஜாமீன் நபர்கள் கோரப்படும் போது யாருக்காக ஜாமீன் கோரப்படுகிறதோ, அவனது மகனைவிட அவ னது சகோதரியின் மகனை ஜாமீனுக்கு ஒப்படைப் பது நல்லது என்று கருதப்படுகிறது. தாயுரிமை வெகு காலத்துக்குத் தப்பிப் பிழைத்திருந்திருக் கிறதை — ஆக, ஓர் ஆதிகணத்தை — இங்கே பார்க்கிறோம்; அது ஏதோ ஜெர்மானியர்களையே குறிப்பாக வேறுபடுத்திக் காட்டுகிற ஒரு பொரு

ளாக வர்ணிக்கவும் படுகிறது.[1] தான் நிறை வேற்ற எடுத்துக்கொண்ட பொறுப்புக்கு ஜாமீனுக இவ்விதக் கணத்தின் அங்கத்தினன் ஒருவன் தன் மகனையே கொடுத்துத் தகப்பனின் நம்பிக்கை மோசடியால் மகன் பலியாக நேர்ந்தால் அதைப் பற்றித் தகப்பன் ஒருவனே கவலைப்படவேண் டியவன். ஆனுல், ஒரு சகோதரியின் மகன் பலியாக்

---

[1] தாய்மாமனுக்கும் மருமகனுக்கும் இடையேயுள்ள உற வின் விசேஷமான நெருங்கிய தன்மையை—பல மக்கள் சமூகங் களிலே காணப்படும் தாயுரிமையின் ஒரு மிச்சசொச்சமே இது —மாவீரர் சகாப்தத்தைச் சேர்ந்த புராணங்களில்தான் கிரேக் கர்கள் அறிந்திருக்கிறுர்கள். டியாடோரஸ், (IV, 34), மிலி யாகர், தெஸ்டியஸின் குமாரர்களைக் கொல்கிறுன்; அவர்கள் அவனது தாயான ஆல்தேயாவின் சகோதரர்களாவர். இதை ஒரு மிகப்பாபகரமான குற்றமாகக் கருதுவதால் அவள் அவனை— தனது சொந்த மகனை—சபிக்கிறுள், அவன் சாகவேண்டும் என்று பிரார்த்திக்கிறுள். ''தெய்வங்கள் அவளது விருப்பத் தை நிறைவேற்றின, மிலியாகரின் வாழ்க்கையை முடித்தன'' என்று சொல்லப்படுகிறது. அதே ஆசிரியர் சொல்கிறபடி (டியாடோரஸ், IV, 44) ஹெறாக்லஸ் தலைமையில் சென்ற ஆர்கோனுட்டுகள் திராகியாவில் இறங்கினுர்கள், அவர்கள் அங்கே பீனியஸ் என்பவன் தனது இரண்டாவது மனைவியின் தூண்டுதலின்பேரில் முதல் மனைவியின்மூலம் பெற்ற தன் இரு புதல்வர்களையும் மோசமாக நடத்தி வருவதைக் கண்டார் கள்; முதல் மனைவி அவனுல் தள்ளிவைக்கப்பட்டவள். அவள் பெயர் கிளியோபாட்ரா போரியாட். ஆனுல் ஆர்கோ னுட்டுகளிலும் சில போரியாட்டுகள் இருக்கின்றனர்; அவர்கள் கிளியோபாட்ராவின் சகோதரர்கள், எனவே அந்தப் புதல்வர்களுக்கு அவர்கள் தாய்மாமன் முறையாக வேண்டும். எனவே, உடனே மருமக்களின் உதவிக்குச் சென்று, விடுதலை செய்து, அவர்களின் காவலாளிகளைக் கொல்கிறுர்கள். [எங்கெல்ஸ் குறிப்பு.]

கப்படும்பொழுது மிகப் புனிதமான கண விதி மீறப்பட்டதாகிறது. அந்தச் சிறுவனையோ அல்லது வாலிபனையோ பாதுகாப்பதற்கு மற்றவர்களைவிடக் கடமைப்பட்டிருக்கிற அடுத்த இரத்த உறவினன்தான் அவனது மரணத்துக்குப் பொறுப்பு; ஒன்று, அவன் அந்தச் சிறுவனை ஜாமீனுக்குத் தந்திருக்கக்கூடாது; அல்லது ஒப்பந்தத்தை நிறைவேற்றியிருக்கவேண்டும். ஜெர்மானியர்களிடையே கண ஸ்தாபனங்களுக்கு நமக்கு வேறெந்த அடையாளக்குறிகளும் இல்லாமற்போனாலும் இந்த நூல் பகுதி ஒன்றே அதற்கும் போதுமான ருசுவாகும்.

இதைவிட நிர்ணயமான ருசு—அது 800 ஆண்டுகள் கழித்து வருகிற காரணத்தால் நிர்ணயமானது என்கிறோம்—"Völuspà" என்கிற பண்டைய நோர்ஸ் பாடலில் தெய்வங்களின் அந்திக்காலம், உலகத்தின் முடிவுபற்றி வருகிற ஒரு வாசகப் பகுதியேயாகும். "பெண்ஞானி கண்ட மனக் காட்சி" என்ற இதில்—கிறிஸ்தவ மதத்தின் அம்சங்கள் இதில் இழையோடியிருக்கின்றன என்று பாங்க், புக்கே என்பவர்கள் காட்டியிருக்கிறார்கள்—ஊழி விபத்துக்குமுன் எங்கும் நிறைந்த ஒழுக்கக்கேடும் ஊழலும் கவ்விய காலப்பகுதியைப் பற்றிய வர்ணனையில் இது காணப்படுகிறது: —

Broedhr munu berjask ok at bönum verdask,
munu **systrungar** sifjum spilla.

"சகோதரர்கள் தமகுள்ளே சண்டையிட்டுக்கொள்வார்கள், ஒருவரையொருவர் கொன்று கொள்வார்கள்; மேலும், **சகோதரிகளின் குழந்தைகள்**

இரத்த உறவு முறையின் பிணைப்புகளை முறித் தெறிவார்கள்.'' 'Systrungar' என்பதற்குத் தா யின் சகோதரியின் மகன் என்று அர்த்தம்; கவிஞரின் கண்ணில், அப்படிப்பட்டவர்கள் இரத்த உறவை நிராகரிப்பது சகோதரக் கொலைக் குற்றத்தைவிடக் கொடிய குற்றமாகும். தாய் தரப்பைச் சேர்ந்த இரத்த உறவை வலியுறுத்துகிற 'systrungar' சொல்லில் அதன் உச்சி இருக்கிறது. 'Syskina-börn' என்ற சொல்லோ (சகோதர சகோதரிகளின் குழந்தைகள்) 'syskina-synir' என்ற சொல்லோ (சகோதர சகோதரிகளின் புதல்வர்கள்) கையாளப் பட்டிருந்தால் இரண்டாவது வரி முதல் வரியிலிருந்து மேல் ஸ்தாயிக்கு எட்டுவதாயமைந்திருக்காது, பதிலாகக் கீழ் ஸ்தாயிக்கு இறங்குவதாக இருக்கும். எனவே, "Völuspâ" இயற்றப்பட்ட வைக்கிங்கு கள் காலத்திலும் ஸ்காண்டிநேவியாவில் தாயுரிமை பற்றிய நினைவு அழிக்கப்படாமலே யிருந்தது.

மற்றப்படி, டாஸிடஸ் காலத்தில், குறைந்த பட்சம் ஜெர்மானியர்களிடையேயாவது— அவர் களைப் பற்றித்தான் அவருக்கு அதிகமாகத் தெரி யும்— ஏற்கனவே தாயுரிமை தந்தையுரிமைக்கு வழி விட்டுவிட்டது; குழந்தைகள் தகப்பனாரின் வாரிசு களே; குழந்தைகள் இன்றேல் சகோதரர்களும் தாய் தந்தையர்வழி வந்த மாமன்மார்கள் வாரிசுகள். தாயின் சகோதரனை வாரிசுரிமைக்குள் அனுமதிப் பது மேற்சொன்ன வழக்கத்தைப் பாதுகாத்தலோடு சம்பந்தப்பட்டதாகும்; மேலும், எவ்வளவு அண் மையில்தான் ஜெர்மானியர்களிடையே தந்தையுரி மை அக்காலத்தில் வந்திருந்தது என்பதையும் அது

ருகப்பிக்கிறது. வெகு நேரத்துக்குப்பின், மத்திய காலத்திலும், தாயுரிமையின் அடையாளச் சின்னங்களை நாம் பார்க்கிறோம். இந்தக் காலப்பகுதியில் குறிப்பாகப் பண்ணையடிமைகளிடையே தந்தைமை இன்னும் ஐயத்திற்கிடமானதாகவே இருந்து வந்தது; மேலும், ஓடிப்போன அடிமை நகரத்திலிருந்து திருப்பியனுப்பப்படவேண்டுமென்று ஒரு நிலப்பிரபு கோருகிறபொழுது, அவன் பண்ணையடிமையா இல்லையா என்பதை நிலைநாட்ட அவனது தாய் தரப்பிலிருந்துமட்டுமே வந்த அதி நெருங்கிய இரத்த உறவினர்களின் பிரதிக்ஞைகள் அவசியமாயின; உதாரணமாக, ஔக்ஸ்பர்க், பாசெல், கைஸர்ஸ்லாடர்ன் ஆகிய இடங்களில். (மோரர் எழுதிய "நகர அமைப்பு முறை", I, 381ம் பக்கம்.)[1]

அன்று நசிக்கத் தொடங்கியிருந்த தாயுரிமை அடையாளச் சின்னம் இன்னொன்று பெண்ணினத்திடம் ஜெர்மானியர்கள் வைத்திருந்த மதிப்புத்தான். ரோமானியக் கண்ணோட்டத்தின் படி இதை விளக்குவதே கடினம். ஜெர்மானியர்களோடு செய்து கொண்ட ஒப்பந்தங்களை நிறைவேற்றச் செய்வதற்கு உத்தரவாதமாக உயர்குடும்பங்களைச் சேர்ந்த இளம் பெண்கள்தான் நம்பத் தகுந்த பணயக் கைதிகளாவார்கள் என்று கருதப்பட்டனர். தமது மனைவியரும் புதல்வியரும் சிறைப்பிடிக்கப்பட்டு அடிமைமுறையில் தள்ளப்படுவார்களோ என்ற பயங்கரமான சிந்தனைபோல் போரில்

[1] **Maurer G. L.**, "Geschichte der Städteverfassung in Deutschland", Bd. I-IV, Erlangen, 1869-1871.—**பதிப்பாசிரியர்கள்.**

அவர்களுக்குத் தைரியத்தை யூட்டிய சிந்தனை வேறொன்றும் இல்லை. பெண் புனிதமானவள், ஓரளவுக்கு எதிர்காலத்தை யறிந்துசொல்கிற ஞானி என்று கருதினர்; அதிமுக்கியமான விவகாரங்களில் அவளுடைய புத்திமதியைக் கேட்டனர். லீப் நதி மேலிருந்த வெலீடா என்கிற புருக்டேரியன் பூசாரிணி தான் படேவிய எழுச்சி முழுவதையும் இயக்கும் சக்தியாக இருந்தாள்; இந்த எழுச்சியில், ஜெர்மானியர்களுக்கும் பெல்ஜியர்களுக்கும் தலைமை வகித்த சிவிலிஸ் கோலில் ரோமானிய ஆட்சியின் அஸ்திவாரங்களையே குலுக்கினான். வீட்டில் பெண்கள் மறுக்கக் கூடாத ஆட்சி செலுத்தினர் என்று தெரிகிறது. அவர்களும் கிழவர்களும் குழந்தைகளும் தான் எல்லா வீட்டு வேலைகளையும் செய்ய வேண்டியிருந்தது, ஏனெனில் ஆண்கள் வேட்டையாடச் சென்றார்கள், குடித்தார்கள், சோம்பித் திரிந்தார்கள் என்று டாஸிடஸ் கூறுகிறார். ஆனால், நிலங்களைப் பயிர் செய்தது யார் என்று அவர் சொல்லவில்லை. அடிமைகள் கொடுக்க வேண்டிய தொகைகளைத் தான் கொடுத்துவந்தார்கள், கட்டாய உழைப்பு எதுவும் அவர்கள் செய்யவில்லை என்று அவரே தெளிவாகக் கூறியிருக்கிறார், எனவே, தேவையான வேளாண்மைத் தொழில் எவ்வளவுதான் கொஞ்சமாயிருந்தாலும் அதை வயது வந்த ஆண்களில் பெரும்பகுதியினர்தான் செய்தனர் என்று அறியக் கூடும்.

மேலே சொன்னபடி, மணவடிவமோ ஒருதார மணத்தைப்போலப் படிப்படியாக ஆகிக் கொண்டிருந்த இணைக் குடும்பமேயாகும். கண்டிப்புள்ள

ஒருதார மணம் இன்னும் இல்லை; ஏனெனில், பல தார மணம் பிரபுக்களுக்கு அனுமதிக்கப்பட்டிருந்தது. (கெல்டுகள் மாதிரியின்றி) மொத்தத்தில் பெண்கள் கண்டிப்பாகக் கற்பில் இருக்க வேண்டுமென்று வற்புறுத்தினர். ஜெர்மானியர்களின் மண உறவிலிருந்த முறிக்க முடியாத தன்மையைப்பற்றி டாஸிடஸ் உருக்கமாகப் பேசுகிறார். பெண் சோரம் போவது ஒன்றைத்தான் அவர் மண ரத்துக்குக் காரணமாகக் காட்டுகிறார். ஆனால் இங்கே அவரது அறிக்கையில் பல பள்ளங்கள் உள்ளன; மேலும், ஒழுக்கங்கெட்ட ரோமானியர்களுக்கு ஒழுக்கத்தின் ஆதர்சத்தைக் காட்ட அது வெளிப்படையாக முயல்கிறது. இதுமட்டும் உறுதி: காடுகளில் வசித்த ஜெர்மானியர்கள் அப்படி அருமையான ஒழுக்கக் கொழுந்துகளாக இருந்தார்களென்றால், அவர்களை மற்றச் சராசரி ஐரோப்பியர்களின் தரத்துக்கு இறக்கிவிடுவதற்கு வெளியுலகோடு சிறிது தொடர்புமட்டுமே போதுமாயிருந்தது. ரோமானிய வாழ்க்கையின் சுழலிலே கண்டிப்புள்ள ஒழுக்க முறையின் கடைசி அடையாளக்குறி ஜெர்மானிய மொழியை விட விரைவாக மறைந்து போயிற்று. தூர் நகரத்து கிரிகோரியைப் படித்தால் போதும். நாகரிக முலாம் பூசிய சிற்றின்ப வாழ்க்கை ரோமாபுரியிலிருந்ததைப்போல் ஜெர்மானியின் ஆதிகாலக் காடுகளில் இருக்கமுடியவில்லை என்பது சொல்லாமலே விளங்கும். ஆக, இந்த அம்சத்திலும் ரோமானியர் உலகைவிட ஜெர்மானியர்கள் மேலானவர்களாகவே இருந்தனர்; ஆனால் அதற்காக எந்த மக்கள் சமூகத்திடமும் மொத்தத்தில் நிலவியிராத காம

விஷயக் கட்டுப்பாட்டை அவர்களிடம் இருந்து தாகக் கற்பிக்கவேண்டியதில்லை.

தனது தகப்பனார், உறவினர்களின் பகைமை களையும் சரி, நட்புகளையும் சரி, அடுத்த தலைமுறை சுவீகரிக்க வேண்டிய கடமையும் கண அமைப்பி லிருந்துதான் தோன்றியது; மீட்புப்பணம் என்பதும், அதாவது கொலை புரிந்ததற்கோ, காயப்படுத்தியதற் கோ ரத்தப் பழி வாங்குவதற்குப் பதிலாகப் பிராயச் சித்தம் செய்யும் ரீதியிலே செலுத்தும் தொகையும், அதேபோலத்தான். ஒரு தலைமுறைக்குமுன்பு இந்த மீட்புப்பணம் என்பது ஓர் அலாதி ஜெர்மன் ஏற் பாடு என்று கருதப்பட்டது. கண அமைப்பிலிருந்து தோன்றியிருந்த இரத்தப் பழியின் இந்த மென் மையான வடிவத்தை நூற்றுக்கணக்கான மக்கள் சமூகங்கள் கையாண்டுவந்தார்கள் என்று அதற்குப் பின் ருசுப்பிக்கப்பட்டுள்ளது. விருந்தோம்பல் என்ற கடமையைப்போல் அதுவும் உதாரணமாக அமெ ரிக்க இந்தியர்களிடம் காணப்படுகிறது. விருந்தோம் பல் நடத்திய விதத்தைப்பற்றி டாஸிடஸ் தரும் வர்ணனை (''ஜெர்மானியா'', அத்தியாயம் 21) விபரங்களில்கூட இந்தியர்கள் சம்பந்தமாக மார் கன் தந்த வர்ணனையோடு ஒன்றாக இருக்கிறது.

டாஸிடஸ் காலத்தைச் சேர்ந்த ஜெர்மானி யர்கள் ஏற்கனவே விளைநிலங்களை இறுதியாகப் பங்கு போட்டுவிட்டிருந்தார்களா இல்லையா, அது சம்பந் தப்பட்ட நூல் பகுதிகளை எப்படி வியாக்கியானம் செய்வது என்பது பற்றி நடந்த சூடேறிய இடை யறாத சர்ச்சை இப்போது பழைய சங்கதியாகிவிட் டது. எல்லா மக்கள் சமூகங்களிலும் விளைநிலங்கள்

கணங்களினுல் பொதுவில் சாகுபடி செய்யப்பட்டன என்றும், பின்னுல் பொதுவுடைமைக் குடும்பச் சமூகங்களினுல் பொதுவில் சாகுபடி செய்யப்பட்டன என்றும்—இந்த வழக்கத்தை சுயேவிகளிடையே சீஸரும் கண்டார்—பின்னுல் அந்த நிலம் தனித்தனி குடும்பங்களிடையே பங்கு பிரிக்கப்பட்டும், அவ்வப்பொழுது மறுபடியும் பங்கு பிரிக்கப்பட்டும் வந்தது என்றும், அவ்வப்பொழுது நடக்கும் இந்த மறு பங்குபிரிவினை இன்றைய நாள் வரை ஜெர்மனியின் சில பாகங்களில் பதனமாக வைத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது என்றும் நிலை நாட்டியபிறகு அதைப்பற்றி மேலும் நாம் மூச்சை வீணடிக்கவேண்டாம். நூற்றைம்பது ஆண்டுகளில் ஜெர்மானியர்கள் பொதுச் சாகுபடியிலிருந்து—சீஸர் சுயேவிகளிடம் கற்பித்ததுபோன்றது; அவர்களிடம் பிரிவு பிரிவாகப் பிரிந்த சாகுபடியோ, தனிப்பட்ட சாகுபடியோ எதுவும் கிடையாது என்று அவர் கூறுகிறுர்—டாஸிடஸ் காலத்தில் வருடாந்தரம் நிலத்தை மறுவினியோகம் செய்வதோடு கூடிய தனிப்பட்ட சாகுபடிக்கு வந்து சேர்ந்தார்கள் என்ருல், அது நிச்சயமாகப் போதிய முன்னேற்றம்தான்; அந்தக் கட்டத்திலிருந்து அவ்வளவு குறுகிய காலத்தில், வெளித்தலையீடு எதுவுமின்றி, நிலத்தில் பூர்ண மான தனியுடைமை என்ற நிலைக்கு மாறிச்செல்வது என்பது சாத்தியமே அல்ல. எனவே டாஸிடஸ் நூலில் பின்வருமாறு அவரே அநேகமாகச் சொல்வதைத்தான் நான் படிக்கமுடியும்: ஆண்டுதோறும் அவர்கள் விளைநிலத்தை மாற்றுகிறுர்கள் (அல்லது மறு பங்கீடு செய்கிறுர்கள்); அதிலே போதுமான

பொதுநிலமும் மிஞ்சுகிறது. விவசாயத்துக்கும் நிலத்தைப் பயன்படுத்தலுக்கும் உரிய அந்தக் கட்டம் அக்காலத்திய ஜெர்மானியர்களின் கண முறைக்கு முற்றிலும் சரியாக இருந்தது.

மேலேயுள்ள பாராவை, முந்திய பதிப்புகளில் உள்ளதுபோலவே, அப்படியே விட்டுவைக்கிறேன். இதற்கிடையே இந்தப் பிரச்சினை இன்னோர் அம்சத்தைப் பெற்றுவிட்டிருக்கிறது. தந்தைவழிக் குடும்பச் சமூகம் சர்வவியாபகமாக இல்லாவிட்டாலும் பரவலாக இருந்தது, தாயுரிமைவகைப்பட்ட பொதுவுடைமைக் குடும்பத்துக்கும் நவீனகாலத்திய தனிப்பட்ட குடும்பத்துக்கும் இடையே இணைப்புக் கண்ணியாக அது இருந்தது என்று கவலேவ்ஸ்கிய் நிரூபித்துக்காட்டியிருப்பதினால் (மேலே 44ம் பக்கம் பார்க்க[1]) இப்போது பிரச்சினை நிலம் பொதுச் சொத்தாக இருந்ததா தனிச்சொத்தாக இருந்ததா என்பதல்ல— இப்படித்தான் மோரர் தொடங்கி, வெயிட்ஸ் வரை பிரச்சினை இருந்தது—பொதுச் சொத்து என்ன **வடிவம்** கொண்டது என்பதுதான். சீஸர் காலத்தில் சுயேவிகள் நிலத்தைப் பொதுவில் சொந்தமாகக் கொண்டிருந்தார்கள் என்பதோடல்லாமல் பொதுக் கணக்கில் நிலத்தைப் பொதுவில் சாகுபடி செய்தும் வந்தார்கள் என்பதில் சந்தேகம் எதுவும் இல்லை. அவர்களுடைய பொருளாதார மூல அமைப்பு, கணமா, அல்லது குடும்பச் சமூக

[1] எங்கெல்ஸ் குறிப்பிடுகிற பக்கம் நான்காவது ஜெர்மன் பதிப்பிலுள்ள பக்கமாகும். இந்நூலின் 129-130 பக்கங்களைப் பார்க்க.—**பதிப்பாசிரியர்கள்.**

மா, அல்லது ஓர் இடைத்தரப் பொதுவுடைமை வகைப்பட்ட இரத்த உறவுக் குழுவா, அல்லது வெவ்வேறான ஸ்தல பூமி நிலைமைகளின் விளைவாக இந்த மூன்று குழுக்களுமே இருந்து வந்தனவா என்ற கேள்விகள் இன்னும் வெகு காலம் வரைக்கும் சர்ச்சைக்குரிய விஷயங்களாகவே இருந்து வரும். டாஸிடஸ் வர்ணித்திருக்கிற நிலைமைகள் மார்க் அல்லது கிராமச் சமூகங்களைப் பற்றிக் கூறுவதாயில்லை. பதிலாகக் குடும்பச் சமூகங்களைப் பற்றித் தான் கூறுவதாயுள்ளது; குடும்பச் சமூகங்கள்தான் வெகு காலத்திற்குப் பின் ஜனத்தொகையின் பெருக்கத்தின் காரணமாக, கிராமச் சமூகமாக வளர்ந்தன என்று கவலேவ்ஸ்கிய் சாதிக்கிறார்.

எனவே ரோமானியர்கள் காலத்தில் தாங்கள் வசித்திருந்த பிரதேசங்களிலுள்ள ஜெர்மானியக் குடியிருப்புக்களும், பின்னால் ரோமானியர்களிடமிருந்து கைப்பற்றிக் கொண்ட பிரதேசங்களிலுள்ள ஜெர்மானியக் குடியிருப்புக்களும் கிராமங்களாக இருந்திருக்கா; அவை பல தலைமுறைகளைக் கொண்ட பெரும் குடும்பச் சமூகங்களாகத்தான் இருந்திருக்க வேண்டும்; அவை அதற்கேற்றாற் போல் பெரும் நிலப்பரப்பில் சாகுபடி செய்து, சுற்றிலுமுள்ள களர் நிலத்தை ஒரு பொது மார்க்காக அண்டைவீட்டாருடன் சேர்ந்து பயன்படுத்தியிருக்கின்றன. அப்படியானால் பயிர் நிலத்தை மறு பிரிவினை செய்வதுபற்றி டாஸிடஸ் நூலில் கூறுகிற பகுதி விவசாய விஞ்ஞானம் பற்றிய அர்த்தத்தைத்தான் பெறும்; அதாவது வருடாவருடம் சமூகம் வேறு வேறு நிலங்களைப் பயிர் செய்து வந்தது, முந்திய ஆண்டில் பயிர்

செய்த நிலம் தரிசாகக் கிடக்க விடப்பட்டது அல்லது அடியோடு கைவிடப்பட்டது என்றாகும். ஜனத்தொகை நெருக்கமின்மை காரணமாய்க் கையிருப்பில் போதிய நிலமிருந்திருக்கும், அதனால் நிலத் தகராறுகளே தேவையில்லை என்ற நிலை ஏற்பட்டிருக்கும். நூற்றாண்டுகள் பல கழிந்தபிறகுதான், அன்றைய உற்பத்தி நிலைமைகளில் பொதுச் சாகுபடி சாத்தியமற்றுப் போகிற அளவுக்குக் குடும்ப அங்கத்தினர்களின் தொகை பெருகி விட்ட பிறகுதான் குடும்பச் சமூகங்கள் கலைந்தன என்று சொல்லப்படலாம். முன்பு பொதுச் சொத்தாயிருந்த விளைநிலங்களும் புல்வெளி நிலங்களும் இப்போது அமைந்திருந்த தனித்தனிக் குடும்பங்களிடையே, நன்கு தெரிந்த முறையில், முதலில் அவ்வப்பொழுதும் பிறகு இறுதியாகவும், பிரித்துத்தரப்பட்டன; ஆனால் காடுகளும், மேய்ச்சல் நிலங்களும், நீர்நிலைகளும் பொதுச் சொத்தாகவே இருந்து வந்தன.

ருஷ்யாவைப் பொறுத்தமட்டில், இந்த வளர்ச்சிப் போக்கு வரலாற்று ரீதியிலே முழுக்க ருசுப்பிக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. ஜெர்மனியும் இரண்டாம்பட்சமாக ஜெர்மானிய இன நாடுகளும் சம்பந்தப்பட்டமட்டில், கிராமச் சமூகங்களை டாஸிடஸ் காலத்துக்கு அடையாளங் கண்டு பிடித்துச் செல்கிற முந்திய கருத்தைவிட. இந்தக் கருத்து, பல அம்சங்களில், மூலாதார விஷயங்களுக்குச் சிறந்த வியாக்கியானம் தருகிறது, சங்கடங்களுக்குச் சுலுவான விடையும் தருகிறது என்பதை மறுக்க முடியாது. மிகப் பழைய தஸ்தாவேஜுகள்,

உதாரணமாக "Codex Laureshamensis"[1], கிராம மார்க் சமூகத்தைக் கொண்டு விளக்குவதைவிடக் குடும்பச் சமூகத்தைக் கொண்டு விளக்குவது சுலபம். இன்னொரு புறத்தில், அது புதிய சங்கடங்களையும் விடை காண வேண்டிய புதிய பிரச்சினைகளையும் முன்வைத்திருக்கிறது. இங்கே மேற்கொண்டு பரிசீலனை செய்தால்தான் விஷயங்களுக்குத் தீர்வு கிடைக்கும். என்றாலும், ஜெர்மனியிலும் ஸ்கான்டிநேவியாவிலும் இங்கிலாந்திலும் குடும்பச் சமூகம் என்பது ஓர் இடைநிலைக் கட்டமாகவும் பெரும்பாலும் இருந்திருக்கலாம் என்பதை நான் மறுக்க முடியாது.

சீஸர் காலத்தில் ஓரளவுக்குத்தான் ஜெர்மானியர்கள் குடிதங்கி வாழத் தொடங்கியிருந்தார்கள், ஓரளவுக்கு அப்படி வாழ வகை தேடிக்கொண்டும் இருந்தார்கள்; ஆனால் டாஸிடஸ் காலத்தில் அவர்கள் ஏற்கனவே ஒரு நூற்றாண்டாகக் குடியமைந்து கொண்டிருந்தார்கள்; அதனால் வாழ்க்கைச் சாதனங்களின் உற்பத்தியில் முன்னேற்றம் கண்டது நன்கு தெரிந்தது. அவர்கள் கட்டையாலான வீடுகளில் வசித்தனர்; உடுத்திய துணியோ ஆதிகாலக் காட்டு வகையைச் சேர்ந்ததாகவே இன்னும் இருந்தது, அதாவது முரட்டுக் கம்பளிப் போர்வைகளும் மிருகத் தோல்களும்; பெண்களுக்கும் பிரபுக்களுக்கும் சணல் உள்ளணிகளும் இருந்தன. அவர்கள் பால், இறைச்சி, காட்டுக் கனி வகைகள்—இன்னும், பிளினி கூடுதலாகச் சொல்வதுபோல், 'ஓட்' தானியக்

[1] Codex Laureshamensis—லோர்ஷ் நகரத்தின் நில ரிஜிஸ்தர்.
—பதிப்பாசிரியர்கள்.

கூழும் (அயர்லாந்திலும் ஸ்காட்லாந்திலும் இது கெல்டுகளின் தேசிய உணவாக இன்றுவரை இருந்து வருகிறது) — உண்டு வாழ்ந்தனர். அவர்களின் செல்வம் கால்நடைகள்தான்; அவையும் கீழ்த்தர ஜாதியைச் சேர்ந்தவை— மாடுகள் சிறியவையாகவும், அவலட்சணமாயும், கொம்பில்லாமலும் இருந்தன; குதிரைகளோ சிறிய மட்டக்குதிரைகளே, வேகமாகவும் ஓடா. பணம்—ரோமானிய நாணயங்கள் மட்டுமே— உபயோகித்தது அற்பசொற்பமே, எப்பொழுதாவது உபயோகித்தார்கள். தங்கச் சாமான்கள், வெள்ளிச் சாமான்கள் அவர்கள் செய்யவில்லை; அந்த உலோகங்களுக்கு எவ்வித மதிப்பும் தரவில்லை. இரும்பு கிடைத்தது சொற்பமே; குறைந்தபட்சம் ரைன், டான்யூப் நதிக்கரைகளிலுள்ள குலங்களிடையே அநேகமாக இரும்பு முழுவதும் இறக்குமதியானதே, வெட்டியெடுத்ததல்ல. ரூனிக் வரிவடிவம் (கிரேக்க, லத்தீன் எழுத்துக்களைப் பின்பற்றியது) ஓர் இரகசிய பரிபாஷைபோல், மத மாந்திரீகங்களுக்காக மட்டுமே உபயோகிக்கப்பட்டது. நரபலி இன்னும் வழக்கமாயிருந்தது. சுருங்கச் சொன்னால், அநாகரிக நிலையின் இடைக்கட்டத்திலிருந்து நிலைக்கட்டத்துக்கு அப்பொழுதுதான் வந்து கொண்டிருந்த மக்களே அவர்கள். ரோமானியர்களுடன் நேரடியாகத் தொடர்பு கள் கொண்டிருந்த குலங்களுக்கு ரோமானியத் தொழிற்பண்டங்களை இறக்குமதி செய்துகொள்வது வசதியாயிருந்தது, அதனால் அவை சொந்தத்தில் உலோகத் தொழிலையோ துணி நெசவுத் தொழிலையோ வளர்க்காதபடி தடுக்கப்பட்டன; ஆனால் வட-

கிழக்கில், பால்டிக் பிரதேசத்திலிருந்த குலங்கள் இந்தத் தொழில்களை வளர்த்தன என்பதில் கொஞ்சமும் சந்தேகமில்லை. ஷ்லேஸ்விக் சதுப்பு நிலங்களில் கண்டெடுத்த கவச அணிகளும்—ஒரு நீண்ட இரும்பு வாள், கவசம், வெள்ளியாலாகிய தலைக் காப்பணி, முதலியன—அவற்றுடன் 2வது நூற்றாண்டின் கடைசிப் பகுதியைச் சேர்ந்த ரோமானிய நாணயங்களும் மக்கள் சமூகங்களின் குடியேற்றங்களால் பரவச் செய்யப்பட்ட ஜெர்மன் உலோகச் சாமான்களும், ரோமானிய அசல்களிலிருந்து நகலெடுக்கப்பட்டவை கூட, அலாதிப்போக்கான ஒரு சிறந்த வேலைப்பாட்டைக் காட்டுகின்றன. ஜெர்மானியர்கள், நாகரிக ரோமானிய சாம்ராஜ்ஜியத்துக்குக் குடியேறியதினால் இந்தச் சுதேசித் தொழில் இங்கிலாந்து தவிர்த்த மற்ற இடங்களிலெல்லாம் நசித்துப் போயிற்று. இந்தத் தொழில் எப்படி ஒரே சீரில் தோன்றி வளர்ந்தது என்பதை வெண்கல ஜிகினுக்கள் காட்டுகின்றன. புர்குண்டியிலும், ருமேனியாவிலும், அஸோவ் கடல் ஓரத்திலும் கண்டெடுத்த மாதிரிப் பொருட்கள் பிரிட்டிஷ், சுவீடிஷ் பொருட்களை உற்பத்தி செய்த அதே தொழிற்கூடத்தில்தான் செய்யப்பட்டிருக்கக் கூடும். அதே சமயம் அவை ஜெர்மனியில் உற்பத்தி செய்யப்பட்டவை என்பதில் ஐயமில்லை.

அவர்களுடைய ஆட்சி அமைப்பு அநாகரிக நிலையின் தலைக்கட்டத்துக்குப் பொருத்தமானதாகவே இருந்தது. டாஸிடஸ் கூறுகிறபடி, எங்குமே தலைவர்களின் (principes) கவுன்சில் இருந்தது; இது சிறிது முக்கியமுள்ள விவகாரங்களைப் பற்றி

முடிவு செய்தது; மக்கள் சபையின் முடிவுக்காக முக்கிய விவகாரங்களைத் தயாரித்துக் கொடுத்தது. அநாகரிக நிலையின் கடைக்கட்டத்தில், குறைந்தபட்சம் நமக்குத் தெரிந்த இடங்களில், அமெரிக்கர்களிடையில் இருந்தமாதிரி, இந்த மக்கள் சபைகள் கணத்தில் மட்டுமே கூட்டப்பட்டன, குலத்திலோ அல்லது குலங்களின் கூட்டுக்குழுவிலோ நடைபெறவில்லை. கவுன்சில் தலைவர்கள் (principes) ராணுவத் தலைவர்களிடமிருந்து (duces) திட்டமாக வேறுபடுத்திக் காட்டப்பட்டனர் — இரோகுவாய்கள் இடையே இருந்தமாதிரியே தான். கவுன்சில் தலைவர்கள் ஏற்கனவே ஓரளவுக்குக் கால்நடை, தானியம், முதலானவற்றைக் கௌரவ வெகுமானப் பொருட்களாகத் தம் குலத்தவரிடமிருந்து பெற்று வாழ்ந்தனர். அமெரிக்காவில் இருந்தமாதிரி அவர்கள் பொதுவாக ஒரேயொரு குடும்பத்திலிருந்து தான் தேர்ந்தெடுக்கப் பட்டனர். கிரீஸிலும் ரோமாபுரியிலும் நடந்தமாதிரி, தந்தையுரிமைக்கு மாறிய நிலை தேர்வுப் பதவிகள் பரம்பரைப் பதவிகளாகப் படிப்படியாக மாறியதற்கு உதவியது; இது ஒவ்வொரு கணத்திலும் ஒரு பிரபுத்துவக் குடும்பத்தை உண்டாக்கியது. இந்தப் பழைய குலவகைப் பிரபுத்துவம் எனப்பட்டது, மக்கள் சமூகங்கள் குடிபெயரும் காலத்திலோ அல்லது அதற்குச் சிறிது பின்னரோ பெரும்பாலும் மறைந்தொழிந்தது. பிறப்புபற்றிக் கவலைப்படாமல், தகுதி ஒன்றுக்காகவே, ராணுவத் தலைவர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள். அவர்களுக்கு அதிகாரம் சிறிது, தம் சொந்த உதாரணத்தைக் கொண்டு அவர்கள்

அதைச் செலுத்த வேண்டியிருந்தது. டாஸிடஸ் வெளிப்படையாகவே சொல்கிற படி, ராணுவத்தில் கட்டுப்பாட்டு அதிகாரம் புரோகிதர்களிடம் இருந்தது. மக்கள் சபை தான் உண்மையான அதிகாரம். அரசனே குலத் தலைவனே தலைமை வகித்தான்; மக்கள் முடிவெடுத்தார்கள்; முணுமுணுப்பு எதிர்ப்பைக் குறித்தது; கோஷங்களும் ஆயுதங்களின் ஒலிகளும் ஒப்புதலைக் குறித்தன. மக்கள் சபையேதான் நீதிமன்றமும். இங்கே புகார்கள் கொண்டு வரப்பட்டு முடிவு செய்யப்பட்டன, மரணதண்டனைகள் விதிக்கப்பட்டன. கோழைத்தனம், துரோகம், இயற்கைக்கு விரோதமான துர்ப்பழக்கங்கள் ஆகியவற்றிற்கே மரணதண்டனை விதிக்கப்பட்டது. கணங்களும் மற்றத் துணைப்பிரிவுகளும் கூட்டமாகக் கூடித்தான் தீர்ப்பளித்தன, அவற்றிற்குத் தலைவனே தலைமை வகித்தான்; எல்லா ஆதி ஜெர்மன் நீதிமன்றங்களிலும் இருந்ததுபோல், அத்தலைவன் நடவடிக்கைகளை நடத்திக்கொடுப்பவனும் கேள்வி போடுபவனும் மட்டுமே இருக்கமுடிந்தது; ஜெர்மானியர்களிடையே என்றும் எங்கணும் சமூகம் முழுவதும் சேர்ந்தே தீர்ப்பைச் சொல்லும்.

குலங்களின் கூட்டமைப்புகள் ஸீஸர் காலத்திலிருந்து ஏற்பட்டன. அவற்றில் சில ஏற்கனவே அரசர்களைக் கொண்டிருந்தன. தலைமை ராணுவத் தளபதி யதேச்சாதிகாரத்தைப் பெற விரும்பத் தொடங்கினன்— கிரேக்கர்கள், ரோமானியர்களிடையே நடந்த மாதிரி; சில சமயங்களில் அதைப் பெறுவதில் வெற்றியும் அடைந்தான். வெற்றிகரமாக ஆட்சியைக் கைப்பற்றியவர்கள் எப்படியும் சர்வாதிகாரம்

பெற்ற ஆட்சியாளர்களாயிருக்க வில்லை; இருந்த போதிலும், கண முறையின் விலங்குகளை அவர்கள் உடைக்கத் தொடங்கினார்கள். விடுதலை செய்யப் பட்ட அடிமைகள், எந்தக் கணத்திலும் அங்கத்தினர் களாக இருக்கமுடியாதகாரணத்தால், பொதுவாகத் தாழ்வான நிலையிலேயே இருந்தனர்; இருந்தா லும் அநேக தடவை புதிய அரசர்களுக்கு வேண் டியவர்கள் என்ற வகையில் அவர்களுக்குப் பதவி யும், செல்வமும், பட்டங்களும் கிடைத்தன. ரோ மானிய சாம்ராஜ்ஜியம் வெல்லப்பட்டபின் பெரிய நாடுகளுக்கு அரசர்களாக ஆகிவிட்ட ராணுவத் தலைவர்களின் விஷயத்திலும் இப்படியே நடந்தது. பிராங்கு மக்கள் மத்தியில், அரசனின் அடிமை களும் விடுதலை பெற்றவர்களும் முதலில் ராஜசபை யிலும் பிறகு அரசிலும் முக்கியப் பாத்திரம் வகித் தனர்; புதிய பிரபுத்துவத்தின் பெரும்பகுதியினர் அவர்களின் சந்ததியராக வந்தவர்களே.

அரசவம்சம் தோன்றுவதற்குச் சாதகமாகக் குறிப்பாக ஒரு ஸ்தாபனம் இருந்தது; அது தான் சொந்தப் படை எனப்படுவது. சொந்தத்தில் போர்களை நடத்தும்நோக்கத்திற்காகக் கணத் திற்குப் பக்கத்திலேயே தனிப்பட்ட ஸ்தாபனங் களை நிறுவுவது அமெரிக்கச் செவ்விந்தியர்க ளிடையே எப்படி ஏற்பட்டிருந்தது என்பதை நாம் ஏற்கனவே பார்த்தோம். ஜெர்மானியர்களிடை யே இந்தத் தனிப்பட்ட ஸ்தாபனங்கள் நிரந்தர மான ஸ்தாபனங்களாக வளர்ந்து விட்டிருந்தன. புகழ் பெற்ற ராணுவத் தளபதி, தன்னைச் சுற்றி யுத்தக் கொள்ளைக்கு ஆசைப்படும் இளம்

போர்வீரர்களின் கூட்டத்தைச் சேர்த்துக் கொண்டிருந்தான்; அவர்களுக்கு அவனும், அவனுக்கு அவர்களும் விசுவாசம் செலுத்தப் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டிருந்தனர். அவர்களுக்கு அவன் உணவளித்தான், வெகுமானங்கள் அளித்தான். ஒரு மெய்க் காப்பாளர் படையும் சிறு படையெடுப்புகளுக்கு உடனடியாகச் செயலில் இறங்கக்கூடிய பொதுவான போர்ப்படையும் பெரும் யுத்தங்கள் நடத்துவதற்குப் பயிற்சிபெற்ற அதிகாரிகளின் குழு ஒன்று என்ற கிரமத்தில் தரவாரிப் பதவிகளின் அடிப் படையில் அவர்களை அணி திரட்டினன். இந்தச் சொந்தப் படைகள் பலவீனமானவையாகத்தான் இருந்திருக்க வேண்டும்; உதாரணமாக, இத்தாலியில் ஓடோவாகரின் பக்கத்தில் அவை அப்படித்தான் இருந்தன என்று பின்னல் ருசுவாகியுள்ளது; இருந்தபோதிலும், பழைய மக்கள் சுதந்திரத்தின் நசிவுக்கு அவை கருவாகப் பயன்பட்டன, மக்கள் சமூகங்கள் குடிபெயர்ந்த காலத்திலும் அதற்குப் பின்னரும் அவை அப்படித் தான் விளங்கின என்று ருசுவாயிற்று. இதற்குக் காரணம், முதலாவதாக, அரசனின் அதிகாரம் எழுவதற்கு அவை சாதகமான நிலைமையை உண்டாக்கித்தந்தன; இரண்டாவதாக, டாஸிடஸ் குறிப்பிட்டபடி, தொடர்ச்சியான போர்களாலும் கொள்ளையடிக்கும் படையெடுப்புக் களாலும் தான் அவைகளை ஒன்ருகத் திரட்டி வைத்திருக்கமுடியும். கொள்ளைதான் பிரதானக் குறியாயிற்று. தலைவனுக்குச் சுற்றுப்புறத்தில் செய்வதற்கு ஒன்றும் இல்லாதுபோய்விட்டால், பிற நாடுகளின் மீது தனது படைகளை நடத்திச்சென்முன்; அங்கே போர்

1*

இருக்கும், கொள்ளையடிக்க வாய்ப்பும் இருக்கும். ரோமானியக் கொடியின்கீழ் ஜெர்மானியர்களுடன் பெரும் எண்ணிக்கையில் போரிட்ட ஜெர்மன் துணைப்படைகளில் ஓரளவுக்கு இப்படிப்பட்ட சொந்தப் படைகள் இருந்தன. ஜெர்மானியர்களுக்கு அவமானமும் பழியும் கொணர்ந்த கூலி ராணுவ முறையின் முதல் வித்துக்கள் அவை. ரோமானிய சாம்ராஜ்ஜியத்தை வென்ற பிறகு அரசர்களின் இந்தச் சொந்தப் படைகள் சுதந்திரமற்ற ரோமானிய சேவகர்களுடனும் அடிமைகளுடனும் சேர்ந்து கொண்டு பின்னால் வந்த பிரபுத்துவத்தின் இரண்டாவது பிரதானப் பகுதியாக அமைந்தனர்.

ஆக, பொதுவாகச் சொன்னால், மக்கள் சமூகங்களாக இணைந்த ஜெர்மானியக் குலங்கள் மாவீரர் சகாப்தத்தில் கிரேக்கர்களிடையேயும், அரசர்கள் எனப்பட்டோரின் காலத்தைச் சேர்ந்த ரோமானியர்களிடையேயும் வளர்ந்திருந்த அதே ஆட்சி முறையைத்தான் கொண்டிருந்தனர்: அதாவது மக்கள் சபைகள், கணத் தலைவர்களின் கவுன்சில்கள், ஏற்கனவே உண்மையான அரச அதிகாரத்துக்கு ஆசைப்பட்டுக் கொண்டிருந்த ராணுவத் தலைவர்கள்—என. கண அமைப்பினால் உண்டாக்கமுடிந்த தலைசிறந்த வளர்ச்சிபெற்ற ஆட்சி முறை இதுதான்; அநாகரிக நிலையின் தலைக்கட்டத்தின் ஆட்சி முறைக்கு இதுவே ஆதர்சம் ஆகும். எந்த வரம்புக்குள் இந்த ஆட்சி முறை போதுமானதாயிருந்ததோ, அதைக் கடந்து சமூகம் மேலே சென்றதுமே கண அமைப்பு முற்றுப்பெற்றுவிட்டது; அது உடைந்து போய் அதனிடத்தில் அரசு வந்துசேர்ந்தது.

## VIII

## ஜெர்மானியர்களிடையே அரசு அமைதல்

டாஸிடஸ் கூறுகிற படி ஜெர்மானியர்கள் எண்ணிக்கையில் மிகுந்திருந்தார்கள். வெவ்வேறு ஜெர்மன் மக்கள் சமூகங்களின் தொகையைப்பற்றி சீஸர் ஒரு குத்துமதிப்பான கணக்குத் தந்திருக்கிறார். ரைன் நதியின் இடதுகரையில் தோன்றிய உஸிபெதான்கள், தெங்தெரான்களின் எண்ணிக்கை 1,80,000 — பெண்கள், குழந்தைகள் உள்பட — என்று சீஸர் கூறுகிறார். ஆக, ஒரே மக்கள் சமூகத்தில் சுமார் ஒரு லட்சம் பேர்,[1] இரோகுவாய்களின் மிகச் செழிப்பான காலத்தில், பெரிய ஏரிகளிலிருந்து ஓஹையோ-பொடோமாக் வரையுள்ள நாடெங்கிலும் அவர்கள் பீதியை உண்டாக்கிக் கொண்டிருந்த போது, அவர்களின் தொகை 20,000 கூட இருக்கவில்லை; இந்த எண்ணிக்கையோடு ஒப்பிட்டால் ஜெர்மானியர்களின் தொகை கணிசமான அளவுக்குப் பெரியதே. ரைன் பிரதேசத்தில் வாழ்ந்த தனித்தனி மக்கள் சமூகங்களைப் பற்றிச் செய்திகளிலிருந்து

---

[1] கோல் நாட்டின் கெல்டுகள் குறித்து டியாடோரஸ் நூலில் வரும் ஒரு பகுதி இந்தத் தொகையை ஊர்ஜிதம் செய்கிறது: ''கோலில் சமநிலையற்ற பலத்துடன் பல மக்கள் சமூகங்கள் வாழ்கின்றன; அவற்றில் மிகப் பெரியதின் தொகை 2 லட்சம், மிகச்சிறியதின் தொகை 50 ஆயிரம்'' (டியாடோரஸ் ஸிகூலஸ், V,25.). எனவே சராசரித் தொகை 1,25,000. தனித்தனியான கோல் நாட்டின் மக்கள் சமூகங்கள் மற்றவற்றைவிட அதிக வளர்ச்சி பெற்றிருந்தன, எனவே அவர்கள் ஜெர்மானியர்களைவிட அதிக எண்ணிக்கையில் இருந்திருக்க வேண்டும். [எங்கெல்ஸ் குறிப்பு.]

நமக்கு மற்றவர்களைப் பற்றித் தெரிந்ததைவிட அதிக மாகத் தெரியும்; அவற்றை ஒரு குழுவாக ஒரு, நிலப் படத்தில் நாம் திரட்டி நிறுத்தி முயன்று பார்ப்போ மானுல், அவை சராசரி ஒரு பிரஷ்ய நிர்வாக மாவட் டத்தின் விஸ்தீரணமுள்ள நிலப்பகுதியை, அதா வது சுமார் 10 ஆயிரம் சதுர கிலோமீட்டர் அல்லது 182 பூகோளச் சதுர மைல் பிரதேசத்தை, நிரப் பிக் கொள்ளும் என்று தெரியும். ரோமானியர் களின் 'Germania Magna'[1] என்பது விஸ்லா நதி வரைக்கும் எட்டுகிறது; அது 5 லட்சம் சதுர கிலோ மீட்டர்கள்தான். எந்த ஒரு மக்கள் சமூகத்துக்கும் சராசரி 1 லட்சம் என்று கணக்குப் போட்டா லும், 'Germania Magna'வின் மொத்த ஜனத்தொகை 50 லட்சம் என்ருகும்; ஒரு சதுர கிலோமீட்டருக்கு 10 நபர்கள், அல்லது ஒரு பூகோளச் சதுர மைலுக்கு 550 நபர்கள் என்பது இன்றைய நிலைமைகளோடு ஒப்பிடும்போது மிகச் சொற்பமே; என்ருலும், அநா கரிக நிலையிலுள்ள மக்கள் சமூகங்களின் குழுவுக்கு இது ஒரு பெரும் தொகைதான். ஆனுல் அன்று வாழ்ந்து வந்த ஜெர்மானியர்கள் அனைவரும் இவ் வெண்ணிக்கையில் அடங்கவில்லை. கோதிக் மூலத் திலிருந்து வந்த ஜெர்மானியர்களான பஸ்தார்னி யான்கள், பியூகினியர்கள், இன்னும் மற்றவர்கள் டான்யூப் நதியின் முகத்துவாரத்தை எட்டும் வரைக் கும் கர்பாத்திய மலைகளின் சாரல் நெடுக வாழ்ந்து வந்தனர் என்பது நமக்குத் தெரியும்; ஜெர்மானி யர்களின் ஐந்தாவது பிரதான குலம் என்று பிளினி

[1] பெரிய ஜெர்மனி.—பதிப்பாசிரியர்கள்.

அவர்களை வர்ணிக்குமளவுக்கு அவர்களின் எண்ணிக்கை இருந்தது. கி. மு. 180ல் அவர்கள் ஏற்கனவே பெர்ஸியஸ் என்கிற மாஸிடோனிய அரசனின் கூலிப் படைகளாகச் சேவை புரிந்து வந்தார்கள்; மேலும் அகஸ்டஸ் ஆட்சியின் ஆரம்ப ஆண்டுகளில் ஆட்ரியஞேபிளின் பக்கம்வரை வெகு தூரத்துக்கு வழி செய்துகொண்டு போய்க்கொண்டிருந்தார்கள். அவர்களின் தொகை பத்து லட்சம்தான் என்று நாம் வைத்துக் கொண்டால், அப்போது கிறிஸ்து சகாப்தம் தொடங்கும் போது, ஜெர்மானியர்களின் தொகை அநேகமாக 60 லட்சத்துக்குக் குறைவாயிராது.

ஜெர்மனியில் குடிதங்கியபிறகு ஜனத்தொகை மிக வேகமாகப் பெருகியிருக்கவேண்டும். மேலே குறிப்பிட்ட தொழில் முன்னேற்றமே இதை நிரூபிக்கப் போதுமானது. ஷ்லெஸ்விக் சதுப்பு நிலத்தில் கண்டெடுத்த பொருட்கள்—அவற்றோடு கண்டெடுக்கப்பட்ட ரோமானிய நாணயங்களைக் கொண்டு பார்க்கும்போது—மூன்றாம் நூற்றாண்டிலிருந்து வந்தவை. எனவே அக்காலத்தில் பால்டிக் பிரதேசத்தில் உலோகத் தொழிலும் துணி நெசவுத் தொழிலும் ஏற்கனவே நன்கு வளர்ந்திருந்தன; ரோமானிய சாம்ராஜ்ஜியத்துடன் சுறுசுறுப்பாக வியாபாரம் நடந்துகொண்டிருந்தது; அதிகப் பணம் படைத்தவர்கள் ஓரளவுக்குச் சொகுசான வாழ்க்கை அனுபவித்தார்கள்—இவை எல்லாம் பெருகிய ஜனத்தொகையின் நெருக்கத்துக்குச் சான்றுகளாகும். இக்காலத்தில், ரைன் நதி, ரோமானியக் கொத்தளங்கள், டான்யூப் ஆகியவற்றின் வட கடலிலிருந்து கருங்கடல்வரை நீண்ட எல்லை நெடுகிலும்

ஜெர்மானியர்கள் பொதுவான தாக்குதலைத் தொடங்கினர்கள். பெருகிக்கொண்டேயிருந்த ஜனத்தொகை வெளியே விஸ்தரிக்க முயன்றதற்கான சான்று இது. போர் நடந்த மூன்று நூற்றாண்டுகளில் (ஸ்காண்டிநேவிய கோத்துகளும் புர்குண்டியர்களும் தவிர) கோதிக் மக்கள் சமூகங்களின் பிரதானத் தொகுதி தென்கிழக்கு நோக்கி நகர்ந்து பரந்த தாக்குதல் முனையின் இடதுசாரியாக அமைந்தது; மேல் ஜெர்மானியர்கள் (ஹெர்மினோனியர்கள்) மேல் டான்யூப் பகுதியிலுள்ள இந்த முனையின் நடுபாகத்தில் முன்னேறிச் சென்றார்கள்; மேலும், இன்று பிராங்குகள் என்றழைக்கப்படுகிற இஸ்டெவோனியர்கள், வலதுசாரியில், ரைன் ஓரமாக முன்சென்றார்கள்; இங்கிலாந்தை வெல்வது இங்கெவோனியர்களின் பொறுப்பாயிற்று. ஐந்தாவது நூற்றாண்டின் இறுதியில் களைத்துச் சோர்ந்து, வலிவிழந்து, நாதியற்றுக் கிடந்த ரோமானிய சாம்ராஜ்ஜியம் படையெடுத்து வரும் ஜெர்மானியர்களைத் தடுக்கத் திறனற்றிருந்தது.

முந்திய அத்தியாயங்களில் பண்டைக்கால கிரேக்க, ரோமானிய நாகரிகத்தின் தொட்டிலின் பக்கம் நின்றிருந்தோம். இப்போது நாம் அதன் சமாதியருகே நிற்கிறோம். ரோமானிய உலக அதிகாரத்தின் சமமட்டமாக்கும் இழைப்புளி பல நூற்றாண்டுகளாக எல்லா மத்திய தரைக்கடல் நாடுகளையும் இழைத்து நிரவிவந்தது. எங்கெல்லாம் கிரேக்க மொழி எதிர்க்கவில்லையோ, அங்கெல்லாம் எல்லா தேசிய மொழிகளும் விலகி ஒரு கொச்சை லத்தீன் மொழி வந்துற்றது. தேசிய இன வேறுபாடு

கள் எவையும் இப்போதில்லை; கோல்கள், இபெரியர் கள், லிகூரியர்கள், நோரிகர்கள் என்று யாருமில்லை —எல்லோரும் ரோமானியர்களாகிவிட்டனர். ரோமானிய நிர்வாகமும் ரோமானியச் சட்டமும் எங்கணுமே பழைய குலக் குழுக்கூட்டுக்களைக் கலைத்து விட்டன, அதன்மூலம் ஸ்தல, தேசீய சுய வெளியீட்டின் கடைசி மிச்சசொச்சங்களை நசுக்கிவிட்டன. புதிதாகப் புனைந்துகொண்ட ரோமானிய முறை இந்த நஷ்டத்தை ஈடுசெய்யமுடியவில்லை; அது எந்த ஒரு தேசீய இனத்தையும் புலப்படுத்தவில்லை; தேசீய இனத்தன்மையற்ற நிலையைத்தான் புலப்படுத்தியது. புதிய தேசங்கள் அமைவதற்குரிய அம்சங்கள் எங்கு பார்த்தாலும் இருந்தன. பல்வேறு மாகாணங்களின் லத்தீன் ஸ்தல மொழிகள் மேலும் மேலும் வேறுபட்டுவந்தன; இத்தாலியையும், கோலையும், ஸ்பெயினையும், ஆப்பிரிக்காவையும் சுதந்திரமான பிரதேசங்களாக ஒரு காலத்தில் செய்துவைத்திருந்த இயற்கை எல்லைகள் இன்னும் இருந்துவரத்தான் செய்தன, மேலும் செல்வாக்குச் செலுத்தியும் வந்தன. இருந்தாலும் இந்த அம்சங்களைப் புதுப்புது தேசங்களாக இணைப்பதற்கு முடிந்த சக்தி எங்குமே இருக்கவில்லை; வளர்ச்சி பெறும் திறனோ அல்லது எதிர்க்கும் சக்தியோ இருப்பதைக் காட்டும் அற்ப அறிகுறி கூட எங்கும் இல்லை; சிருஷ்டி சக்தியைப்பற்றியோ பேச வேண்டாம். இந்தப் பிரம்மாண்டமான நிலப்பரப்பிலிருந்த மிகப்பெரிய மனிதக் கூட்டத்தை ரோமானிய அரசு என்ற பந்தம் ஒன்றுதான் ஒன்றுகத் திரட்டி வைத்திருந்தது. இந்த அரசு, காலாகாலத்தில் அவர்களின் பரமவைரியாக, அவர்களை ஒடுக்கு

வதாக ஆகிவிட்டது. ரோமாபுரியை மாகாணங்கள் சீரழித்திருந்தன; ரோமாபுரியே இதர மாகாண நகரங்களைப் போல மாகாண நகரமாகி விட்டது; அதற்குச் சலுகையுரிமைகள் இருந்தன, ஆனால் அது இப்போது ஆளவில்லை; உலக சாம்ராஜ்ஜியத்தின் மையமாக இப்போது இல்லை; சக்கரவர்த்திகளின், உபசக்கரவர்த்திகளின் இருப்பிடமாயும் கூட அது இப்போதில்லை; அவர்கள் கான்ஸ்டான்டிநோபிளிலும், டிரிவ்ஸிலும், மிலானிலும் இருந்தார்கள். ரோமானிய அரசு தன் பிரஜைகளைச் சுரண்டுவதற்காக மட்டுமே அமையப் பெற்ற பிரம்மாண்டமான, சிக்கல் மிகுந்த இயந்திரமாகி விட்டது; வரிகளும், அரசுக்குரிய சேவகங்களும், எல்லாவிதக் கட்டாய வசூல்களும் மக்களை மேலும் மேலும் வறுமையில் ஆழ்த்தின. பிராக்யூரேட்டர்கள், வரி வசூலிப்பவர்கள், போர்வீரர்கள் ஆகியோரின் பணம் பறிக்கும் நடவடிக்கைகள் இந்தச் சுமையைச் சகிக்க முடியாததாக்கின. உலக ஆதிக்கம் கொண்ட ரோமானிய அரசு உண்டாக்கி வைத்த நிலைமை இதுதான்; உள்நாட்டில் ஒழுங்கை நிலைநிறுத்துவதையும் வெளிப்புறத்திலுள்ள அநாகரிகர்களிடமிருந்து பாதுகாப்பு அளிப்பதையும் தான் அது தனது வாழ்வுரிமைக்கு அஸ்திவாரமாகக் கொண்டிருந்தது. ஆனால் அது ஏற்படுத்திய ஒழுங்கு படுமோசமான ஒழுங்கின்மையைவிட மோசமாயிருந்தது; பிரஜைகளை எந்த அநாகரிகர்களிடமிருந்து பாதுகாப்பதாக அது நடித்ததோ, அந்த அநாகரிகர்களை விமோசனமளிப்பவர்களெனப் பிரஜைகள் வாழ்த்திவரவேற்றார்கள்.

அதே அளவுக்குச் சமூகநிலைமைகளும் படுமோசமாயிருந்தன. குடியரசின் கடைசி ஆண்டுகளிலிருந்தே ரோமானிய ஆட்சி, வசப்படுத்தப்பட்ட மாகாணங்களை ஈவிரக்கமின்றிச் சுரண்டுவதை ஆதாரமாகக் கொண்டிருந்தது. இந்தச் சுரண்டலைச் சக்கரவர்த்திகள் ஒழிக்கவில்லை, அதற்குப் பதிலாக அதை முறைப்படுத்தி வைத்தார்கள். சாம்ராஜ்ஜியம் சீரழியச் சீரழிய வரிகளும் கட்டாயச் சேவகங்களும் மேலே மேலே போயின, அதிகாரிகள் மக்களை மேலும் மேலும் வெட்கங்கெட்ட முறையில் கொள்ளையடிக்கவும் பயமுறுத்திப் பிடுங்கவும் செய்தார்கள். முழு முழு மக்கள் சமூகங்கள்மேல் ஆதிக்கம் செலுத்துவதிலேயே குறியாயிருந்த ரோமானியர்கள் வாணிபத்தையோ, தொழிலையோ எப்பொழுதுமே தங்கள் காரியமாகக் கொண்டிருந்ததில்லை. கந்துவட்டி முறையில் தான் அவர்கள் தங்களுக்கு முந்தியவர்கள், பிந்தியவர்கள் எல்லோரையும் மிஞ்சியிருந்தனர். அவர்கள் வந்தபோது இருந்து அப்புறமும் தானாகவே நிலைத்திருந்த வாணிபமும் அதிகாரிகளின் பிடுங்கல் வசூல்களால் நாசப்படுத்தப்பட்டது. அதிலிருந்து தப்பிப் பிழைத்த வாணிபம் சாம்ராஜ்ஜியத்தின் கிழக்கிலுள்ள கிரேக்கப் பகுதியில் தொடர்ந்து நடந்தது, ஆனால் இது நமது ஆராய்ச்சிக்கு அப்பாற்பட்ட விஷயம். சர்வவியாபகமான ஏழ்மை; வாணிபம், கைத்தொழில்கள், கலைகள் ஆகியவற்றின் நலிவு; ஜனத்தொகையின் குறைவு; நகரங்களின் சீரழிவு; விவசாயம் கீழ்நிலைக்கு இறங்கிய பின்னிட்டமை; இதுதான் ரோமானிய உலகப் பேராதிக்கத்தின் இறுதி விளைவாகும்.

விவசாயம் என்பதுதான் பண்டைக்காலம் முழுவதிலும் நிர்ணயமான உற்பத்திக் கிளையாகும்; அது முன்னைவிட இப்போது அதிக நிர்ணயமானதாகிவிட்டது. இத்தாலியில், குடியரசு முடிந்த காலத்திலிருந்து அநேகமாக நிலப்பரப்பு முழுவதையும் அணைத்துக் கொண்டிருந்த பிரம்மாண்டமான எஸ்டேட்டுகளின் தொகுப்புகள் (லாடிபூண்டியாக்கள் என்பவை) இரு வழிகளில் பயன்படுத்தப்பட்டன; ஒரு வழி: மேய்ச்சல் நிலங்களாக—இவற்றிலிருந்து மக்கள் வெளியேற்றப்பட்டு ஆடுகளும் மாடுகளும் வைக்கப்பட்டன, அவற்றைக் கவனித்துக்கொள்ள ஒரு சில அடிமைகளே தேவைப்பட்டார்கள்; இன்னொரு வழி: கிராமாந்திர எஸ்டேட்டுகளாக—இவற்றில் தொகை தொகையாக அடிமைகளைக் கொண்டு பழத் தோட்டங்கள் பெரும் அளவில் போடப்பட்டன, சொந்தக்காரர்களின் சொகுசுத் தேவைகளை ஓரளவுக்குப் பூர்த்தி செய்வதற்காகவும், நகரச் சந்தைகளில் ஓரளவுக்கு விற்பதற்காகவும். பெரும் மேய்ச்சல் பூமிகள் பேணப்பட்டன, அநேகமாக விரிவாக்கவும் பட்டன. ஆனல் கிராமாந்திர எஸ்டேட்டுகளும், அவற்றில் நடந்த பழத் தோட்டக்கலையும் நசித்தன; இதற்குக் காரணம் அவற்றின் சொந்தக்காரர்கள் ஏழ்மைப்பட்டுப் போனதும், நகரங்கள் சீரழிந்து போனதும்தான். அடிமை உழைப்பின் அடிப்படையில் அமைந்த பெருமளவு லாடிபூண்டியாக்களின் பொருளாதாரம் இப்போது லாபகரமாயில்லாது போயிற்று. ஆனல் அன்று அதுதான் பெருமளவு விவசாயத்திற்குரிய வடிவமாக இருக்கச் சாத்தியமாயிருந்தது. சிறு அளவு சாகுபடி என்ற வடிவம்

ஒன்றே லாபகரமானதாக மீண்டும் ஆயிற்று. எஸ்டேட்டுக்குப்பின் எஸ்டேட்டாகப் பிரிக்கப்பட்டு, சிறு சிறு துண்டுகளாகப் பரம்பரைக் குத்தகைதாரர்களிடம் குத்தகைக்கு விடப்பட்டன, அவர்கள் ஒரு குறிப்பிட்ட தொகையைச் செலுத்தி வந்தனர்; அல்லது பார்ட்டியாரி [partiarii] என்பவர்களிடம்—இவர்களைக் குத்தகைத்தாரர்கள் என்பதை விடப் பண்ணை மானேஜர்கள் என்று சொல்லலாம் — தரப்பட்டன; அவர்கள் தமது உழைப்புக்காக வருடாந்தர விளைச்சலில் ஆறில் ஒரு பங்கோ அல்லது ஒன்பதில் ஒரு பங்கோகூடப் பெற்றுவந்தார்கள். ஆனால், கொலானி [coloni] என்பவர்களிடம் தான் இந்த நிலத்துண்டுகள் பிரதானமாக வினியோகிக்கப்பட்டன; அவர்கள் வருடாவருடம் ஒரு குறிப்பிட்ட தொகையைச் செலுத்தி வந்தார்கள், நிலத்தோடு இணைக்கப்பட்டிருந்தார்கள், நிலத் துண்டுகளோடு சேர்த்து அவர்களையும் விற்கமுடியும். இவர்கள் அடிமைகள் அல்ல; அதே சமயத்தில் சுதந்திர புருஷர்களும் அல்ல. அவர்கள் சுதந்திரமான பிரஜைகளை மணக்கமுடியாது; தமக்குள்ளேயே மணந்துகொள்வதும் செல்லத்தக்க திருமணமாகக் கருதப்படாமல், அடிமைகள் விஷயத்தில் இருந்தது போல கேவலம் வைப்புமுறையாகவே (contubernium) கருதப்பட்டது. அவர்கள் மத்தியகாலப் பண்ணையடிமைகளுக்கு முன்னோடிகளாவர்.

பண்டைக்கால அடிமைமுறை வழக்கொழிந்து போயிற்று; கிராமப்புறத்தில் பெருமளவு விவசாயத்திலோ நகரங்களில் செய்பொருள் தொழிற்சாலைகளிலோ அது மதிக்கத்தக்க லாபம் எதுவும் தர

வில்லை—அதன் பொருட்களுக்குரிய சந்தை மறைந்து போய்விட்டது. சாம்ராஜ்ஜியத்தின் செழிப்பு மிகுந்த காலங்களில் இருந்த பிரம்மாண்டமான உற்பத்தி இப்போது சிறு அளவு விவசாயம், சிறு கைத்தொழில்கள் அளவுக்குத் தாழ்த்தப்பட்டுவிட்டது; அவற்றில் எண்ணிக்கை நிறைந்த அடிமைகள் இருக்கத் தேவையில்லை; பணக்காரர்களின் வீட்டு அடிமைகளுக்கும் சொகுசுப் பொருட்களின் உற்பத்தியில் ஈடுபட்டிருந்த அடிமைகளுக்கும் மட்டுமே சமுதாயத்தில் இடம் தரப்பட்டது. ஆனால், எல்லா உற்பத்தி வகைப்பட்ட வேலையும் சுதந்திர ரோமானியர்கள்—ஒவ்வொருவனும் இப்போது சுதந்திரமுள்ள ரோமானியனே—தம் மதிப்புக்கு லாயக்கற்ற அடிமை உழைப்பாகவே கருதும் அளவுக்கு நசிவுத் தசையிலிருந்த அடிமைமுறை போதிய வீரியம் பெற்றிருந்தது. அதன் காரணமாக ஒரு பக்கத்தில், தேவைப்படாத அடிமைகளின் எண்ணிக்கை பெருகியது, அவர்கள் ஒரு சுமையாகிவிடவே விடுதலை செய்யப்பட்டுவிட்டார்கள்; இன்னொரு பக்கத்தில் கொலானி எனப்படுவோரின் தொகையும் பஞ்சைகளாகிவிட்ட சுதந்திர புருஷர்களின் (அமெரிக்காவிலிருக்கிற மாஜி அடிமை மாகாணங்களிலிருக்கும் 'poor whites'[1] போன்றவர்கள் இவர்கள்) தொகையும் பெருகியது. பண்டைக்கால அடிமைமுறையின் இந்தப் படிப்படியான நசிவுக்குக் கிறிஸ்தவ மதம் பொறுப்பாளியே அல்ல. ரோமானிய சாம்ராஜ்ஜியத்தில் பல நூற்றுண்டுகளாக அடிமை முறை தந்த பலன்களில்

[1] ஏழை வெள்ளை நிறத்தவர்கள். — **பதிப்பாசிரியர்கள்.**

அது பங்கு பெற்றுக்கொண்டுவந்தது; பின்னுல் கிறிஸ்தவர்கள் செய்த அடிமை வியாபாரத்தை—வடக்கே ஜெர்மானியர்களோ, மத்திய தரைக்கடற் பிரதேசத்தில் வெனிஷியர்களோ நடத்திவந்த அடிமை வியாபாரத்தை—நடுக்க அது ஒன்றுமே செய்யவில்லை; அதற்கும் பிந்திய வருடங்களைச் சேர்ந்த நீக்ரோ அடிமை வியாபாரத்தைத் தடுக்கவும் அது ஒன்றும் செய்யவில்லை.[1] அடிமை முறை லாபகரமாயில்லை, எனவே அழிந்துபோயிற்று. இருந்தாலும் செத்துவந்த அடிமைமுறை, சுதந்திர புருஷர்கள் செய்த உற்பத்திவகைப்பட்ட வேலையையும் ஈனத்தனமானது என்று சூடு போட்டதின் வழியாகத் தனக்குப்பின் தன் விஷக்கொடுக்கை விட்டுச்சென்றது. இந்த வழியடைத்தான் சந்தில்தான் ரோமானிய உலகம் வந்து அகப்பட்டுக்கொண்டது; பொருளாதாரரீதியிலே அடிமைமுறை சாத்தியமற்றுவிட்டது; ஆனுல் சுதந்திர புருஷர்களின் வேலையோ ஒரு தார்மீக ஒழுக்கத்தடையின்கீழ் இருந்தது. சமுதாய ரீதியான உற்பத்திக்கு ஆதாரவடிவமாக முந்தியது இப்போது இருக்கமுடியாது, பிந்தியதோ இன்னும் அப்படி அமைய முடியாததாயிருந்தது. இங்கே ஒரு பூர்ணமான புரட்சிதான் உதவமுடியும்.

[1] கிரிமோனு பிஷப் லியூட்பிராண்ட் கூறுகிறபடி, பத்தாவது நூற்றுண்டில் வெர்தூனில் (அதாவது, புனிதமான ஜெர்மன் சாம்ராஜ்ஜியத்தில்) உள்ள பிரதான தொழில், அலிகளை உண்டாக்கித்தருவதே; மூர்களின் அந்தப்புரங்களுக்காக ஸ்பெயினுக்குப் பெரும் லாபத்துக்கு அந்த அலிகள் ஏற்றுமதி செய்யப்பட்டார்கள். (எங்கெல்ஸ் குறிப்பு.)

மாகாணங்களின் நிலைமையும் இதே போலத் தான். நம்மிடம் இருக்கும் செய்திகளில் மிகப்பெரும் பாலும் கோல் பற்றியவைதான். கொலானிகளுக் குப் பக்கத்திலேயே சுதந்திரமுள்ள சிறு விவசாயி களும் இன்னும் இருந்து வந்தனர். அதிகாரிகள், நீதி பதிகள், கந்துவட்டிக்காரர்கள் ஆகியோரின் மிருகத் தனமான பிடுங்கல் வசூல்களிலிருந்து தற்காத்துக் கொள்ளும்பொருட்டு அவர்கள் அதிகாரம் வகித்த நபர்களின் பாதுகாப்பிலும் போஷணையிலும் தங்களை வைத்துக் கொண்டனர். தனித்தனியாக மட்டு மல்ல, முழு சமூகங்களாக இப்படிச் செய்தனர்; நாலாவது நூற்றாண்டைச் சேர்ந்த சக்கரவர்த்தி கள் இந்தப் பழக்கத்தைத் தடைசெய்ய அடிக்கடி உத்தரவுகள் விதிக்கும் அளவுக்கு இது இருந்தது. இந்தப் பாதுகாப்பைத் தேடிவந்தவர்களுக்கு இத ஞல் என்ன உதவி கிடைத்தது? பாதுகாப்பு கொடுப் பவன் அவர்களுடைய நிலத்தைத் தன் பெயருக்கு மாற்றச் செய்து, அதற்குப் பிரதியாக, வாழ்நாள் முழுவதும் அனுபோக பாத்தியத்தை அவர்களுக்கு உறுதிப்படுத்தினன். இது ஒரு மோசடி; இதைப் புனித சர்ச்சு, ஞாபகத்தில் வைத்திருந்து, ஆண்ட வனுக்கு இன்னும் மேன்மை பெருகும் பொருட் டும் தனது நில உடைமைகளை மேலும் விரிவாக்கிக் கொள்ளும்பொருட்டும் ஒன்பதாவது, பத்தாவது நூற் ருண்டுகளில் தாராளமாகக் கையாண்டது. ஆனல், அந்தக் காலத்தில், அதாவது 475ம் ஆண்டு வாக்கில், மார்சேய் பிஷப் சால்வியானஸ் என்பவர் இப்படிப் பட்ட கொள்ளையை இன்னும் ஆவேசமாகக் கண்டித் துக்கொண்டிருந்தார்; ரோமானிய அதிகாரிகளின்

ஒடுக்குமுறையும் பெரும் நிலப்பிரபுக்களின் ஒடுக்கு முறையும் சகிக்கமுடியாதபடியாகி விட்டதால் பல ''ரோமானியர்கள்'' ஏற்கனவே அநாகரிகர்கள் கைப்பற்றியிருந்த ஜில்லாக்களுக்கு ஓடிப்போய்விட்டனர் என்றும், அங்கு குடிதங்கிவிட்ட ரோமானியப் பிரஜைகள் மீண்டும் ரோமானிய ஆட்சிக்குள் அகப்பட்டுக்கொள்வோமோ என்று பயந்தது போல் வேறெதைப் பற்றியும் பயப்படவில்லையென்றும் அவர் கூறுகிறார். ஏழைப் பெற்றோர்கள் அந்நாட்களில் அடிக்கடி தமது குழந்தைகளை அடிமைகளாக விற்றுவந்தார்கள்; இந்த வழக்கத்தைத் தடை செய்த ஒரு விதியே இதற்குச் சான்றாகும்.

ரோமானியர்களைத் தமது சொந்த அரசிலிருந்து விடுதலை செய்வதற்குப் பிரதியாக ஜெர்மன் அநாகரிகர்கள் மொத்த நிலத்தில் மூன்றில் இரண்டு பங்கைத் தமதாக்கிக்கொண்டு, தம்மிடையே பங்கு போட்டுக்கொண்டார்கள். இந்தப் பங்கீடு கண அமைப்புக்கேற்ற வகையில் செய்யப்பட்டது; நாடு பிடித்தவர்களின் தொகை சார்புக் கணக்கிலே சிறியதுதான்; எனவே பங்கு போடப்படாமல் பெரிய நிலப்பரப்புக்கள் எஞ்சின; அவற்றில் ஒரு பகுதி மக்கள் சமூகம் முழுவதின் உடைமையாகவும், இன்னொரு பகுதி தனிப்பட்ட குலங்களின் அல்லது கணங்களின் உடைமையாகவும் இருந்தன. ஒவ்வொரு கணத்திலும் விளைநிலங்களும் மேய்ச்சல் நிலங்களும் தனித்தனிக் குடும்பங்களிடையே சீட்டுக் குலுக்கிப் போட்டு சம பங்குகளாக வினியோகிக்கப்பட்டன. அக்காலத்தில் அடிக்கடி மறுபங்கீடுகள் நடந்தனவா என்பது நமக்குத் தெரியாது. எப்படியாயினும்,

ரோமானிய மாகாணங்களில் இந்த நடைமுறை சீக்கிரத்தில் கைவிடப்பட்டது; தனிப்பட்ட நிலப்பகுதிகள் பிறருக்குக் கொடுக்கப்படக் கூடிய தனிச் சொத்தாக, அதாவது அலோடியமாக, ஆயின. காடுகளும் மேய்ச்சல் நிலங்களும் பொது உபயோகத்துக்கெனப் பிரிக்கப்படாமலே இருந்து வந்தன; இவற்றை உபயோகிப்பதையும் பங்கு பிரிக்கப் பட்ட நிலத்தில் சாகுபடி செய்யும் முறையையும் பண்டைய வழக்கமும் சமூகம் முழுவதின் தீர்மானங்களும் நியமப்படுத்தி வந்தன. கிராமத்தில் கணம் எவ்வளவுக் கெவ்வளவு நீடித்த காலம் வாழ்ந்ததோ, காலப் போக்கில் ஜெர்மானியர்களும் ரோமானியர்களும் எவ்வளவுக் கெவ்வளவு மேலும் மேலும் ஒன்ருய்க் கலந்தார்களோ, அவ்வளவுக் கவ்வளவு தொடர்புகளின் இரத்த உறவுத் தன்மை பிரதேச உறவுகளின் முன்னே பின்வாங்கிவந்தது. மார்க் சமூகத்தில் கணம் புகுந்து மறைந்துவிட்டது; இருந்தாலும், சமூகத்தில் அங்கத்தினர்களின் ஆதி இரத்த உறவு முறையின் அடையாளங்கள் போதிய அளவுக்குக் காணப்பட்டன. இப்படித்தான், குறைந்தபட்சம் மார்க் சமூகங்கள் பாதுகாக்கப்பட்டு வந்த நாடுகளிலெல்லாம்—பிரான்சின் வடக்குப்பகுதி, இங்கிலாந்து, ஜெர்மனி, ஸ்கான்திநேவியா ஆகிய இடங்களில்—கண அமைப்பு ஒரு பிரதேச அமைப்பாகக் கண்ணுக்குத் தெரியாதபடியே மாற்றப்பட்டு அதன்வழியாக அரசுடன் அது பொருத்தப்படுவது சாத்தியமாயிற்று. இருந்தாலும், கண அமைப்பு முழுவதையும் வேறுபடுத்திக்காட்டுகிற இயற்கையான ஜனநாயகத்

தன்மையை அது தன்னுள்ளே நீடித்துவைத்துக்கொண்டுதானிருந்தது; ஆக, அதன் சீரழிவின் போதுகூட—பிற்காலத்தில் பலவந்தமாக இச்சீரழிவு அதன்மீது சுமத்தப்பட்டது—கண முறையின் ஒரு பகுதியை அது பாதுகாத்து, நவீன காலங்களில் கூட ஒடுக்கப்பட்ட மக்கள் உபயோகிப்பதற்குத் தயாராயிருக்கிற ஓர் ஆயுதத்தை விட்டுச்சென்றது.

கணத்தினுள்ளே இரத்த உறவு விரைவாக மறைவதற்குக் காரணம், நாடுபிடிப்பின் விளைவாகக் குலத்திலும் மக்கள் சமூகம் முழுவதிலும் இருந்த அதன் உறுப்புக்கள் கூடச் சீரழிந்துபோனதேயாகும். அடிமைப்படுத்தப்பட்ட மக்கள்மீது ஆட்சி செலுத்துவது என்பது கண அமைப்போடு பொருந்திவரக்கூடியதல்ல. அதைப் பெரும் அளவில் இங்கே நாம் காண்கிறோம். ரோமானிய மாகாணங்களுக்கு எஜமானர்களாகிய ஜெர்மானிய மக்கள் சமூகங்கள் தமது நாடுபிடிப்பை உருவாக்கவேண்டியிருந்தது; ஆனால் ரோமானிய மக்கள் தொகுதியைக் கண ஸ்தாபனங்களில் புகுத்திக் கலந்துவிடவோ அவற்றின் உதவியைக் கொண்டு அவர்களின்மீது ஆட்சி செலுத்தவோ முடியவில்லை. முதலில் பெரிதும் தொடர்ந்து செயலாற்றி வந்த ரோமானிய ஸ்தல நிர்வாக ஸ்தாபனங்களுக்குத் தலைமையில் ரோமானிய அரசுக்குப் பர்த்தியாக ஒன்றை வைத்தாகவேண்டியிருந்தது; இந்தப் பர்த்தி இன்னோர் அரசாகத்தான் இருந்திருக்கமுடியும். ஆக, கண முறையின் உறுப்புக்கள் அரசின் உறுப்புக்களாக உருமாறித் தீரவேண்டியதாயிற்று; சூழ்நிலைமைகளின் நிர்ப்பந்தத்தால் இதை மிக விரைவாகச் செய்யவேண்டியதாயிற்று. ஆனால்

நாடுவென்றுவரும் மக்கள் சமூகத்தின் முதல் பிரதிநிதி ராணுவ தளபதியே. வெற்றி கொள்ளப்பட்ட பிரதேசத்தின் உள்நாட்டு, வெளிநாட்டுப் பாதுகாப்பு அவனது அதிகாரத்தைப் பலப்படுத்தும்படி கோரியது. ராணுவத் தலைமையை அரசனின் ஆட்சியாக மாற்றுவதற்குரிய தருணம் வந்துவிட்டது. அது செய்யப்பட்டது.

பிராங்குகளின் ராஜ்ஜியத்தை எடுத்துக்கொள்வோம். இங்கே, ரோமானிய அரசின் விரிந்த நிலப் பரப்புக்கள் மட்டுமல்லாமல், சிறிய பெரிய ஜில்லாச் சமூகங்களுக்கும் மார்க் சமூகங்களுக்கும் கொடுக்கப்படாதிருந்த மிகப்பெரிய நிலங்கள் அனைத்தும், குறிப்பாக எல்லாப் பெரிய காடுகளும், வெற்றிவாகை சூடிய சாலியன் மக்கள் சமூகத்தின் கையில், அவர்களின் வில்லங்கமற்ற உடைமையாக வந்துசேர்ந்தன. பிராங்குகளின் அரசன்—சாதாரண ராணுவத் தளபதியாக இருந்தவன் அசல் அரசனாக மாற்றப்பட்டு விட்டான்—செய்த முதல் வேலை, மக்களின் சொத்தாக இருந்த இதை அரசனின் உடைமையாக மாற்றியது தான், மக்களிடமிருந்து திருடித் தனது சொந்தப் படைகளுக்கு மானியமாகக் கொடுத்தான். இந்தப் படைகள் ஆதியில் அவனது சொந்த ராணுவச் சேவகர்களையும் ராணுவத்தின் பிற துணைத் தளபதிகளையும் கொண்டிருந்தன; விரைவிலே ரோமானியர்களை, அதாவது ரோமானிய மயமாக்கப்பட்ட கோல்களை, தன்னுள் கொண்டு பெருகின; அவர்கள் வெகு சீக்கிரத்திலே அவனுக்கு இன்றியமையாதவர்களாகி விட்டார்கள்; காரணம் அவர்களின் எழுத்தறிவு, கல்வி, ரோமன் பேச்சு மொழியிலும் இலக்கிய

லத்தின் மொழியிலும் பழக்கம், நாட்டின் சட்டத்தைப் பற்றிய அறிவு ஆகியவை இருந்ததுதான்; இவர்களோடு மட்டுமின்றி அடிமைகளும், பண்ணையடிமைகளும், விடுதலை செய்யப்பட்டவர்களும் சேர்த்துக்கொள்ளப்பட்டு அந்தப் படைகள் பெருகின. இந்த அடிமைகளும், பண்ணையடிமைகளும், விடுதலை செய்யப்பட்டவர்களும் அவனது தர்பாராக அமைந்தவர்கள், அவர்களிடையே யிருந்துதான் அவன் தனது அன்புக்குப் பாத்திரமானவர்களைத் தேர்ந்தெடுத்துக்கொள்வான். அவர்கள் அனைவருக்கும் பொது நிலத்தின் பகுதிகள் தரப்பட்டன; முதலில் மானியங்களாகவும் பின்னல் பெனெபிசியாக்களாகவும்[1] — ஆதியில் அரசன் உயிரோடிருக்கும் காலம் வரைக்கும் கொடுப்பதே பெருவழக்கு—வழங்கப்பட்டன. ஆக, மக்களுக்குப் பாதகம் செய்து ஒரு புதிய பிரபுத்துவம் ஏற்பட அஸ்திவாரம் போடப்பட்டது.

இது மட்டுமல்ல, இன்னும் இருக்கிறது. விரிந்து கிடந்த ராஜ்ஜியத்தைப் பழைய கண அமைப்பின் வழிமுறைகளைக் கொண்டு ஆளமுடியவில்லை. தலைவர்களின் கவுன்சில் வெகு காலமாகவே வழக்கொழிந்ததாக ஆகிவிடாமற்போயிருப்பினும், கூடியிருக்க முடியாது. சீக்கிரத்தில் அதனிடத்தில் அரசனின் நிரந்தரப் பரிவாரம் அமர்த்தப்பட்டது. பழைய மக்கள் சபை வெளி வேஷத்துக்காகப் பாது

[1] பெனெபிசியாக்கள் (benefices) — பிராங்கு மன்னர்கள் தமது படைகளுக்கும் வெகுமானமாகக் கொடுத்த நில மானியங்களாகும்.—பதிப்பாசிரியர்கள்.

காக்கப்பட்டுத்தான் வந்தது; எனினும் அது மே லும் மேலும் ராணுவத்தின் துணைத்தளபதிகளையும் புதிதாகக் கிளம்பி வருகிற பிரபுக்களையும் கொண்ட சபையாகவே வைக்கப்பட்டது. பிராங்கு மக்கள் சமூ கத்தின் திரளாகிய சுதந்திரமுள்ள, நிலமுள்ள விவ சாயிகள் இடையருத உள்நாட்டுப் போர்களாலும் நாடுபிடிப்புப் போர்களாலும்— பிந்தியவை குறிப் பாக ஷார்ல்மான்கீழ் நடந்தன— களைத்து, வறியவர் களாயிருந்தனர்; குடியரசின் கடைசிக் காலப்பகுதி யில் ரோமானிய விவசாயிகள் ஆனதுபோல. இந்த பிராங்கு விவசாயிகள் தான் முன்பு ராணுவம் முழுவ திலும் இருந்தனர்; பிராங்குகளின் நிலப்பகுதிகள் வசப்படுத்தப்பட்டபின்னர் அந்த ராணுவத்தின் வயி ரமாக இருந்தனர்; இவர்கள் ஒன்பதாவது நூற்ருண் டின் தொடக்கத்தில் மிகவும் ஏழ்மைப்படுத்தப்பட்டு விட்டதால் அவர்களில் ஐந்தில் ஒருவன் மட்டுமே யுத்த ஆயுதங்களைக் கஷ்டப்பட்டுக் கொடுக்க முடிந்தது. முந்தைய ராணுவம் சுதந்திரமுள்ள விவசாயிகளைக் கொண்டு அமைந்தது, அதை அரசன் நேரடியாகத் திரட்டிச் செலுத்தினன்; அது போய் அதனிடத்தில் புதிதாய்க் கிளம்பிய பிரபுக்களின் சேவகர்களைக் கொண்டு அமைந்த ராணுவம் வந்து சேர்ந்தது. இந்தச் சேவகர்களில் சார்புள்ள விவசாயி களும் இருந்தனர்; அரசனைத்தவிர வேறு யாரை யும் அங்கீகரிக்காது முன்பிருந்த விவசாயிகளின் சந் ததிகள் இவர்கள்; அதற்கும் முன்னுல் அவர்களின் விவசாயி மூதாதையர்கள் அரசனைக்கூட எஜமானனுக அங்கீகரித்ததில்லை, அவர்களுக்கு எஜமானனே கிடை யாது. ஷார்ல்மான் அரசனின் சந்ததியார்களின்கீழ்,

உள்நாட்டுப் போர்களாலும், அரச அதிகாரத்தின் பலவீனத்தாலும், அதன் விளைவாக, அவ்வதிகாரத்தைக் கைப்பற்றப் பிரபுக்களால் செய்யப்பட்ட முயற்சிகளாலும், கடைசியில் நார்மனியர்களின் உட்புகுதல்களாலும் பிராங்கு விவசாயிகளின் நசிவு பூர்த்தியாக்கப்பட்டது. அதிகாரத்தைக் கைப்பற்ற முயற்சி செய்த பிரபுக்களின் தொகையில் ஷார்ல் மான் நியமித்த ஜில்லாக்களின் கவுன்டுகளும் சேர்ந்து கொண்டனர். அவர்கள் தமது பதவிகளைப் பரம் பரைப் பதவிகளாக ஆக்கிக்கொள்ளத் துடித்தார்கள். ஷார்ல்மான் இறந்து ஐம்பதாண்டுகள் கழிந்தபின் பிராங்கிஷ் ராஜ்ஜியம் நானூறு ஆண்டுகளுக்குமுன் ரோமானிய சாம்ராஜ்ஜியம் பிராங்குகளின் காலடியில் நாதியற்றுக் கிடந்தமாதிரியே நார்மனியர்களின் காலடியில் நாதியற்றுக் கிடந்தது.

வெளித் துறையில் பலவீனம் மட்டுமல்ல, உள் நாட்டுத் துறையில் சமுதாய ஒழுங்கும், அல்லது ஒழுங்கின்மையும், கிட்டத்தட்ட நானூறு ஆண்டுகளுக்கு முன் ரோமானிய சாம்ராஜ்ஜியத்தில் இருந்த மாதிரி தான் இருந்தன. சுதந்திரமுள்ள பிராங்கிஷ் விவசாயிகள் தமக்கு முந்திவந்த ரோமானிய கொலானி இருந்த நிலைக்கு ஒத்தமாதிரியான நிலையிலேயே இருந்தார்கள். போரினாலும் கொள்ளையாலும் நசித்துப்போய் அவர்கள் புதிய பிரபுக்களையோ திருச்சபையோ பாதுகாப்புக்காக அண்டவேண்டியிருந்தது; ஏனெனில் அவர்களைப் பாதுகாக்க முடியாத அளவுக்கு அரச அதிகாரம் பலவீனப்பட்டிருந்தது. ஆனால் இந்தப் பாதுகாப்புக்காக இவர்கள் மிகவும் நஷ்டப்படவேண்டியிருந்தது. தங்களுக்கு முன்வந்த

கோலிக் விவசாயிகள் மாதிரியே தமது நிலத்தின் உடைமையைத் தமது போஷகர்களுக்குக் கைமாற்றித்தரவேண்டியிருந்தது; பிறகு வெவ்வேருன, மாறி வந்த வடிவங்களில் குத்தகைதாரர்களாய் அதே நிலங்களைத் திரும்பப்பெற்ருர்கள், ஆனல் சேவகம் செய்யவேண்டும், பாக்கிகளைச் செலுத்தவேண்டும் என்ற நிபந்தனையின்பேரில்தான் எப்போதும் பெற்ருர்கள். இப்படிப்பட்ட பராதீனத்தில் தள்ளப்பட்டாயிற்ரு இல்லையோ, அவர்கள் தமது சொந்தச் சுதந்திரத்தைப் படிப்படியாக இழந்தனர். சில தலைமுறைகள் சென்றபிறகு பெரும்பாலோர் பண்ணையடிமைகளாயினர். சுதந்திரமுள்ள விவசாயிகளின் வருப்பு எவ்வளவு விரைவாகத் தாழ்நிலைக்குத் தள்ளப்பட்டது என்பதை இர்மிருன் குறிக்கும் சான் ஜெர்மென் தி ப்ரே மடத்தின்—அது முன்பு பாரிஸுக்கு வெளியேயும், இப்போது பாரிஸுக்குள்ளேயும் இருக்கிறது— நில தஸ்தாவேஜுகள் புலப்படுத்துகின்றன. ஷார்ல்மான் வாழ்ந்த காலத்திலேயே, சுற்றிலுமுள்ள நாட்டுப்புறமெங்கும் பரந்துகிடந்த இந்த மடத்தின் எஸ்டேட்டுகளில் 2,788 குடும்பங்கள் இருந்தன; அநேகமாக எல்லாமே ஜெர்மன் பெயர்களைத் தாங்கிய பிராங்குகளே; அவற்றில் கொலானி 2,080; லிட்கள் 35; அடிமைகள் 220; சுதந்திர விவசாயிகள் 8 மட்டுமே! விவசாயிகளின் நிலத்தைப் போஷகன் தன் பெயருக்கு மாற்றிக்கொண்டு அவர்களுக்கு அதை வாழ்நாள் முழுவதும் பயன்படுத்தும்படி கொடுக்கும் இந்த வழக்கத்தை, சால்வியானஸ் ஆண்டவனுக்கு விரோதமானது என்று கண்டித்த அதே வழக்கத்தை, விவசாயிகளுடன் விவகாரங்கள் வைத்துக்

கொண்டதில் சர்ச்சும் இப்போது சர்வவியாபகமாகப் பின்பற்றியது. நிலப்பிரபுத்துவப் பண்ணையடிமைச் சேவகம் இப்போது மேலும் மேலும் வழக்கமாகிவந்தது; அது ரோமானிய ஆங்காரிகள் — அரசுக்குச் செலுத்துகிற கட்டாயச் சேவகங்கள் — ஆதாரமாகக் கொண்டிருந்தது மட்டுமல்ல; ஜெர்மன் மார்க்கின் அங்கத்தினர்கள் பாலங்களும் சாலைகளும் அமைப்பது, இன்னும் மற்றப் பொதுக் காரியங்கள் ஆகியவற்றில் சேவகங்கள் புரிந்ததையும் உதாரணமாகக் கொண்டிருந்தது. இப்படியாக, நானூறு ஆண்டுகள் கழிந்தபின்பு மக்களின் திரள் புறப்பட்ட இடத்துக்கே திரும்பிவந்துசேர்ந்ததுபோலத் தோன்றியது.

இருந்தபோதிலும், இது இரு விஷயங்களைத் தான் ருசுப்பித்தது: முதலாவது, சீரழிந்துவருகிற ரோமானிய சாம்ராஜ்ஜியத்தில் சமுதாயப் படிவுகளின் அமைப்பும் சொத்து விநியோக அமைப்பும் அன்று விவசாயம், தொழிலில் இருந்த உற்பத்திக் கட்டத்துக்கு முழுதும் பொருத்தமானதாகவே இருந்தன, எனவே அவை தவிர்க்கமுடியாதவை; இரண்டாவது, இந்த உற்பத்திக் கட்டம் பின்வந்த நானூறு ஆண்டுகளின் போக்கிலே பொருட்படுத்தத்தக்க அளவுக்கு இறங்கவோ ஏறவோ இல்லை, எனவே அது அவசியமாகவே அதே சொத்து விநியோக அமைப்பையும் அதே வர்க்கப் பிரிவையும்தான் உண்டாக்கிவைத்தது. ரோமானிய சாம்ராஜ்ஜியத்தின் கடைசி நூற்றாண்டுகளில் நாட்டுப்புறத்தின்மீது நகரம் பெற்றிருந்த மேலாதிக்க நிலையை இழந்துவிட்டது; ஜெர்மன் ஆட்சியின் தொடக்க நூற்றாண்டுகளிலும் அதைத் திரும்பப் பெறவில்லை. விவசாயமும்

தொழிலும் மிகக் கீழான கட்டத்தில் இருந்திருந் தாலே இது சாத்தியமாயிருக்கும். இப்படிப்பட்ட பொது நிலைமைகள் அவசியமாகவே ஆளும் உரிமை கொண்ட பெரிய நிலச்சொந்தக்காரர்களையும் பராதீனத்திலுள்ள சிறு விவசாயிகளையும் தோற்றுவிக் கின்றன. அடிமை உழைப்பைக் கொண்டு நடந்த ரோமானிய லாடிபூண்டியாக்களின் பொருளாதாரத்தை யோ அல்லது பண்ணையடிமை உழைப்பைக் கொண்டு நடந்த புதிதான பெரும் அளவு விவசாயத்தை யோ இப்படிப்பட்ட சமுதாயத்தோடு ஒட்டுச் சேர்க்க முடியாது என்பதை ஷார்ல்மான் தனது புகழ்பெற்ற சொந்த எஸ்டேட்டுகளில் மிகவிரிவாக நடத்திய பரிசோதனைகளே ருசுப்பிக்கின்றன; அநேகமாய் இருந்த இடம் தெரியாமலே போய்விட்டன அவை. இந்தப் பரிசோதனைகளை மடங்கள் மட்டுமே தொடர்ந்து நடத்தின, அவற்றிற்குமட்டுமே அவை பலன் தருவன வாக இருந்தன; ஆனால் மடங்கள் என்பவை பிரம்மச் சரியத்தின் அடிப்படையில் எழுந்த, இயற்கைக்கு விரோதமான சமுதாய ஸ்தாபனங்களாகும். விதி விலக்கான செய்கைகளை அவை செய்யமுடியும், அத ஞல் தான் அவை விதிவிலக்குகளாகவும் இருந்து தீர வேண்டியதாயின.

இருப்பினும், இந்த நானூறு ஆண்டுகளில் முன் னேற்றம் ஏற்படத்தான் செய்தது. தொடக்கத்தி லிருந்த கிட்டத்தட்ட அதே பிரதானமான வர்க்கங் களைத்தான் முடிவிலும் காண்கிறோம் என்றாலும் இவ் வர்க்கங்களில் அமைந்த மக்கள் மாறிவிட்டிருக்கி றார்கள். பண்டைக்கால அடிமைமுறை மறைந்து விட்டது; வேலை செய்வது அடிமைத்தனம் என்று

வெறுத்த பிச்சைக்காரத் தனத்திலாழ்ந்த ஏழைச் சுதந்திர புருஷர்களும் மறைந்துவிட்டார்கள். ரோமானிய கொலானஸுக்கும் புதிய பண்ணையடிமைக்கும் மத்தியிலே சுதந்திரமுள்ள பிராங்கிஷ் விவசாயி இருந்திருந்தான். நசிக்க இருந்த ரோமானிய உலகின் ''கவைக்குதவாத நினைவுக் கதைகளும் வெட்டிச் சண்டைகளும்'' செத்துச் சமாதியிலடங்கிவிட்டன. ஒன்பதாவது நூற்றுண்டைச் சேர்ந்த சமுதாய வர்க்கங்கள் உருப்பெற்றது சீரழிந்து வரும் நாகரிகம் என்ற சதுப்பு நிலத்தில் அல்ல, ஒரு புதிய நாகரிகத்தின் பிரசவவேதனையிலேயே. புதிதாக வந்த தலைமுறை, எஜமானர்களாயினும் சரி வேலைக்காரர்களாயினும் சரி, அதன் ரோமானிய மூதாதையர்களுடன் ஒப்பிடும் போது அசல் மனிதர்களைக் கொண்ட தலைமுறையாகும். பலம் வாய்ந்த நிலப்பிரபுக்கள், சேவகம் புரியும் விவசாயிகள் என்ற உறவு ரோமில் பண்டைக்கால உலகின் தவிர்க்க முடியாத நசிவின் வடிவமாக இருந்தது; அது இப்போது இங்கே ஒரு புதிய வளர்ச்சிக்கான தொடக்கப் புள்ளியாக அமைந்தது. மேலும், இந்த நானூறு ஆண்டுகள் எதையும் சிருஷ்டித்ததாகத் தோன்றுமற்போனுலும் கூட அவை ஒரு மாபெரும் பொருளை—நவீன காலத்திய தேசீய இனங்களை—விட்டுச் சென்றன. அதாவது மேற்கு ஐரோப்பிய மனிதகுலத்தை உருமாற்றியும் அணிமாற்றியும் நடக்கவிருக்கும் வரலாற்றுக்காகத் தயார் செய்து சென்றன. உண்மையிலே, ஜெர்மானியர்கள் ஐரோப்பாவில் புத்துயிர் பாய்ச்சினுர்கள்; அதனுல் தான், ஜெர்மன் காலப்பகுதியில் அரசுகள் கலந்து போனமை நோர்ஸ்-சாரஸன்

ஆதீனத்தில் போய் முடிவு பெருமல் பெனெபிசியாக்கள், போஷகம் ஆகியவற்றில் வளர்ந்து நிலப்பிரபுத்துவ முறையில் போய்முடிந்தது, மேலும் ஜனத்தொகையும் பிரம்மாண்டமாகப் பெருகியது; இரு நூற்றுண்டுகளுக்குப்பின்னுல் நடந்த புனிதப் போர்களின் காரணமாக ஏற்பட்ட இரத்தப் பெருக்கும் கூடப் பாதகம் ஏற்படுத்தமுடியாதபடி தாங்கிக் கொள்ளும் அளவுக்கு அது பெருகிவிட்டிருந்தது.

செத்துக் கொண்டிருந்த ஐரோப்பாவுக்குப் புதிய வீரியத்தை எந்த மந்திர சக்தியைக் கொண்டு ஜெர்மானியர்கள் புகட்டினர்கள்? இனவெறிபிடித்த நமது வரலாற்ருசிரியர்கள் கூறுவதுபோல் ஜெர்மன் இனத்தின் உடன் பிறந்த மந்திர சக்தியா? கிடையவே கிடையாது. குறிப்பாக அக்காலத்தில் ஜெர்மானியர்கள் மிகத் திறன் பெற்ற ஆரிய குலத்தினர் என்பது உண்மையே; வீரியத்துடன் வளர்ச்சிபெற்று வந்த போக்கில் முழுக்கச் சென்று கொண்டிருந்தனர். இருந்தாலும் ஐரோப்பாவுக்குப் புத்துயிர் ஊட்டியது அவர்களின் குறிப்பான இன குணங்கள் அல்ல, அவர்களுடைய அநாகரிக நிலேயும் அவர்களுடைய கண முறையுமேயாகும்.

அவர்களுடைய தனிப்பட்ட செயல் திறன், தைரியம், சுதந்திர வேட்கை, பொதுக் காரியங்கள் அனைத்தையும் சொந்தக் காரியங்களாகக் கருதும் ஜனநாயக உள்ளுணர்வு, சுருங்கச் சொன்னுல் ரோமானியர்கள் இழந்து விட்டிருந்த குணங்கள், ரோமானிய உலகு என்ற சகதியிலிருந்து புதிய அரசுகளேயும் புதிய தேசீய இனங்களேயும் தோற்று

விக்கச் சக்தி பெற்ற குணங்கள்— இவையாவும் அநாகரிகர்களின் தலைக்கட்டத்தின் அடையாளச் சிறப்பியல்புகளைத் தவிர, அவர்களின் கண முறையின் பலன்கள் தவிர, வேறென்ன?

அவர்கள் ஒருதார மணத்தின் பண்டைய வடிவத்தை உருமாற்றிவிட்டார்கள் என்றால், குடும்பத்தில் ஆணின் ஆட்சியை மிருதப்படுத்தினார்கள் என்றால், சாஸ்திரீய உலகம் அறிந்திருந்ததைவிட உயர்தரமான நிலையைப் பெண்களுக்கு அளித்தார்கள் என்றால், அவர்கள் அப்படிச் செய்யமுடிந்ததற்குக் காரணம் அவர்களுடைய அநாகரிக நிலை, அவர்களுடைய கண வழக்கங்கள், தாயுரிமைக் காலத்தின் உயிர்ப்புள்ள பரம்பரைச் சொத்தைத்தவிர வேறென்ன?

குறைந்தபட்சம் ஜெர்மனி, வடக்கு பிரான்ஸ், இங்கிலாந்து ஆகிய மிக முக்கியமான மூன்று நாடுகளில், மார்க் சமூகங்கள் என்ற வடிவில் உண்மையான கண முறையின் ஒரு துண்டைப் பாதுகாத்து நிலப் பிரபுத்துவ அரசில் கொண்டுபோய்ப் புகுத்தி, அதன் வழியாக ஒடுக்கப்பட்ட வர்க்கமாகிய விவசாயிகளுக்கு, மத்திய காலப் பண்ணையடிமை முறையின் மிகக் கடுமையான நிலைமைகளிலும் கூட, பண்டைக் கால அடிமைகளுக்கோ நவீன காலத்தியப் பாட்டாளி வர்க்கத்துக்கோ தயாராகக் கையில் கிடைக்கப் பெறாது போய்விட்ட ஸ்தல ஒருமைப்பாட்டையும் எதிர்ப்புச்சாதனங்களையும் அவர்களால் தரமுடிந்தது என்றால், அதற்குக் காரணம் அவர்களின் அநாகரிக நிலை, கண ரீதியில் குடிதங்கும் பிரத்தியேகமான அநாகரிக வழிதவிர வேறென்ன?

கடைசியாக, சொந்த நாட்டில் கையாண்டு வந்த

சார்பு நிலையின் மிதமான வடிவத்தை அவர்கள் வளர்த்துச் சர்வவியாபகமாகப் புகுத்தினர்கள்; அது ரோமானிய சாம்ராஜ்ஜியத்திலும் அடிமைமுறையை மேலும் மேலும் அப்புறப்படுத்தி அதனிடத்தில் அமர்ந்துவிட்டது; இந்த வடிவம் ஒடுக்கப்பட்ட மக்களுக்கு **வர்க்கரீதியிலே** படிப்படியாக விடுதலை பெறுவதற்குரிய சாதனத்தைத் தந்தது (fournit aux cultivateurs des moyens d'affranchissement **collectif et progressif**)—இதை முதலில் வலியுறுத்திக்காட்டியவர் பூரியே தான்; எனவே இது அடிமை முறையைவிட எவ்வளவோ மேலானது; அடிமை முறை என்பது இடைக்கட்டம் எதுவுமின்றி, ஒரு தனி நபர் உடனடியாக விடுதலை பெறுவதைத்தான் அனுமதிக்கிறது (வெற்றிகரமான புரட்சியின்வழியாக அடிமைமுறை ஒழிந்ததாகப் பண்டைய காலம் அறிந்ததில்லை); ஆனல் மத்திய காலத்திய பண்ணையடிமைகளோ படிப்படியாக வர்க்கரீதியிலே தமது விடுதலையைச் சாதித்துக்கொண்டார்கள்; அநாகரிக நிலை தவிர வேறென்ன இதற்குக் காரணம்? அநாகரிக நிலையின் காரண விசேஷத்தால் தான் அவர்கள் முழு அடிமை முறைக்கு—பண்டைக்கால உழைப்பு அடிமை முறை என்ற வடிவத்திலோ அல்லது கிழக்கத்திய நாடுகளைச் சேர்ந்த வீட்டு அடிமை முறை என்ற வடிவத்திலோ, முழு அடிமை முறைக்கு—இன்னும் வந்து சேராமலிருந்தார்கள்.

ரோமானிய உலகில் ஜெர்மானியர்கள் புகுத்திய வீரியமுள்ள, உயிரூட்டுகிறதனைத்தும் அநாகரிக நிலை என்பதுதான். உண்மையிலே, செத்துவரும் ஒரு நாகரிகத்தின் மரணவேதனையில் கஷ்டப்படும் உல

கத்துக்குப் புத்துயிர் அளிக்கச் சக்தி படைத்தவர்கள் அநாகரிகர்கள் மட்டுமேயாவர். மேலும், மக்கள் சமூகங்கள் குடிபெயர்வதற்கு முன்னால் எந்த அநாகரிக நிலையின் தலைக்கட்டத்தை நோக்கி ஜெர்மானியர்கள் முன்சென்றார்களோ, எந்த அநாகரிக நிலையின் தலைக்கட்டத்தில் ஜெர்மானியர் உழைத்து மேலுக்கு வந்தார்களோ, அதுவே இந்த இயக்கப் போக்குக்கு மிகவும் சாதகமானதாக இருந்தது. எல்லாவற்றையும் இது விளக்கிவைக்கிறது.

## IX

### அநாகரிக நிலையும் நாகரிக நிலையும்

தனித்தனியான மாபெரும் உதாரணங்களாகிய கிரேக்க, ரோமானிய, ஜெர்மானிய உதாரணங்களிலே கண முறை கலைந்து மறைந்துபோனதை அடையாளம் கண்டு சொன்னோம். முடிவாக, அநாகரிக நிலையின் தலைக்கட்டத்தில் ஏற்கனவே சமுதாயத்தின் கண அமைப்பைப் பலவீனப்படுத்தி வந்து, நாகரிக நிலை தோன்றியதும் முழுவதாக ஒழித்தும் விட்ட பொதுவான பொருளாதார நிலைமைகளை நாம் பரிசீலிப்போம். இதற்கு மார்கனின் நூல் தேவைப்படுகிற மாதிரி மார்க்ஸின் ''மூலதன''மும் தேவைப்படும்.

கணம் என்பது, காட்டுமிராண்டி நிலையின் இடைக்கட்டத்தில் தோன்றி அதன் தலைக்கட்டத்தில் வளர்ந்து — நமக்குக் கிடைத்துள்ள மூலாதாரங்களால் நாம் முடிவெடுக்கமுடிந்த அளவுக்கு — அநாகரிக நிலையின் கடைக்கட்டத்தில் தனது முழு வளர்ச்சி நிலையை எட்டியது. இந்நிலையிலிருந்து நமது பரிசீலனையைத் தொடங்குவோம்.

இந்தக் கட்டத்தில்—இதற்கு அமெரிக்க இந்தியர்கள் நமக்கு உதாரணமாக விளங்கவேண்டும்—கண அமைப்பு முழு வளர்ச்சி பெற்றிருந்ததைக் காண்கிறோம். சில கணங்களாக, பெரும்பாலும் இரு கணங்களாக, ஒரு குலம் பிரிக்கப்பட்டிருந்தது. ஜனத்தொகை பெருகியதோடு இந்த ஆதி கணங்கள் பல சேய்க் கணங்களாகப் பிரிந்தன; இவற்றுடன் சார்புபடுத்திப்பார்க்கையில் தாய்க்கணம் ஒரு பிராட்ரியாகத் தோற்றமளித்தது; குலமும் கூடச் சில குலங்களாகப் பிரிந்தது, அவற்றில் ஒவ்வொன்றிலும், மிகப் பெரும்பாலும், அதே கணங்களையேதான் மீண்டும் காண்கிறோம். குறைந்தபட்சம் சில சந்தர்ப்பங்களிலாவது, இரத்த உறவுமுறையுள்ள குலங்களை ஒரு குலக்குழுக்கூட்டு ஒன்றுபடுத்தியிருந்தது. எந்தச் சமுதாய நிலைமைகளிலிருந்து தோன்றியதோ, அவற்றிற்கு முற்றிலும் பொருத்தமாக இந்த எளிய ஸ்தாபன அமைப்பு இருந்தது. அது இயற்கையாகத் தோன்றிய ஒரு குழு அமைப்புதவிர வேறில்லை; இவ்வழியில் திரட்டப்பட்டிருந்த ஒரு சமுதாயத்தில் எழக்கூடிய எல்லா உள் சச்சரவுகளையும் சமனப்படுத்துவதற்கும் அதனால் முடிந்தது. வெளியாருடன் ஏற்பட்ட சச்சரவுகள் போர்மூலம் தீர்க்கப்பட்டன; போரில் ஒரு குலம் அடியோடு அழியுமே தவிர அடிமைப்படுவதில் போய் முடியாது. கண அமைப்பின் பெருமையும் அதே சமயத்தில் அதன் வரம்புக்குட்பட்ட தன்மையும் எதுவெனில் அதில் ஆளுவோர், ஆளப்படுவோர் என்பவர்க்கு இடமேயில்லாதிருந்ததுதான். உள் விவகாரங்களில் உரிமைகளுக்கும் கடமைகளுக்கும் இடையே இன்னும் வேறுபாடு ஏற்பட

வில்லை. பொது விவகாரங்களில் பங்கெடுப்பதும், இரத்தப் பழி வாங்குதலும், தீமைக்குப் பரிகாரம் செய்வதும் உரிமையா அல்லது கடமையா என்ற கேள்வி செவ்விந்தியனை எதிர்கொண்டதேயில்லை. உண்பதும், உறங்குவதும், வேட்டையாடுவதும் கடமையா அல்லது உரிமையா என்ற கேள்விபோல அதுவும் அவனுக்கு அபத்தமான கேள்வியாகப் பட்டிருக்கும். எந்தக் குலமும் கணமும் பல்வேறு வர்க்கங்களாகப் பிரியமுடியாது. இது, இந்நிலைமைகளின் பொருளாதார அடிப்படையை ஆராய்வதில் நம்மைக் கொண்டுபோய்விடுகிறது.

ஜனத்தொகை மிகவும் நெரிசலற்றது. குலம் வாழும் இருப்பிடத்தில்தான் நெரிசல் இருந்தது; விரிந்த வேட்டைக் காடுகளால் அது சூழப்பட்டிருந்தது, இவற்றிற்கப்பால் பாதுகாப்பு தரும் 'நடு நிலை' க் காடு மற்றக் குலங்களினின்று அதைப் பிரித்து வைத்திருந்தது. உழைப்புப் பிரிவினை என்பது இயற்கையிலே வந்த எளிய வெளிப்பாடுதான். இது ஆண் பெண் மத்தியில் மட்டுமே இருந்தது. ஆண்கள் போர் செய்தார்கள், வேட்டையாடினார்கள், மீன் பிடித்தார்கள், உணவுக்குரிய மூலப்பொருட்களையும் அத்தொழில்களுக்கெல்லாம் வேண்டிய கருவிகளையும் படைத்தார்கள். பெண்கள் வீட்டைக் கவனித்துக்கொண்டார்கள், உணவும் துணியும் தயாரித்தார்கள்; சமைத்தார்கள், நெய்தார்கள், துணி தைத்தார்கள். அந்தந்தச் செயல்துறையில் அவன் எஜமான், அவள் எஜமானி; காட்டில் ஆண், வீட்டில் பெண். அவரவர்கள் செய்த, உபயோகித்த கருவிகள் அவரவர்களுக்கே சொந்தம்; போராயுதங்கள், வில்லம்புகள்,

மீன் பிடிக்கும் சாதனங்கள் ஆண்களுக்கு; வீட்டுப் பொருட்கள் பெண்களுக்கு. சில, அடிக்கடி அநேக, குடும்பங்களைக் கொண்டதாய்ப்[1] பொதுவுடைமை ரீதியிலே குடும்ப நிர்வாகம் இருந்தது. பொது விலே உற்பத்தி செய்து பயன்படுத்தப்பட்டவை யெல்லாம் பொதுச் சொத்தாக இருந்தன: வீடு, தோட்டம், நீண்ட மரக்கலம் ஆகியன. ஆக, இங்கு, இங்கேமட்டுந்தான், ''தன் உழைப்பினுல் சம்பாதித்த சொத்து'' என்பதை நாம் பார்க்கிறோம்; சட்ட நிபுணர்களும் பொருளாதார ஆசிரியர்களும் இதைத் தான் நாகரிக சமுதாயத்துக்குப் பொய்யாகக் கற் பித்துவிட்டிருக்கிறார்கள்; இந்த இறுதியான, பொய் மை நிறைந்த சட்டச் சாக்குப்போக்கின்மீதுதான் நவீனகால முதலாளித்துவச் சொத்து ஆதாரப்பட்டு நிற்கிறது.

ஆனல் எல்லா இடங்களிலும் இந்தக் கட்டத் தில் மனிதன் இருக்கவில்லை. வீட்டுக்குக் கொண்டு வந்து பழக்கி, கட்டுக்குள்ளே விருத்தியடையத் தக்க மிருகங்களை ஆசியாவில் மனிதன் கண்டான். காட்டெருமையை வேட்டையாட வேண்டியிருந் தது; வீட்டுப் பசு ஆண்டுதோறும் கன்று ஈன்றது, பாலும் தந்தது. மிகவும் முன்னேறியிருந்த சில குலங்

[1] குறிப்பாக அமெரிக்காவின் வடமேற்குக் கடற்கரை யில் அப்படி இருந்தது — பான்கிராப்ட் நூலைப் பார்க்க. ராணி சார்லட் தீவுகளைச் சேர்ந்த ஹெய்தாக்களிடையே சில குடும்பச் சமூகங்கள் 700 பேர் வரைக்கும் ஒரே கூரை யின் கீழ் திரட்டிவைத்திருக்கின்றன; நூட்காக்களிடையே ஒரே கூரையின்கீழ் குலங்கள் முழுசு முழுசாக வாழ்ந்தன. [எங்கெல்ஸ் குறிப்பு.]

கள்— ஆரியர்கள், செமைட்டுகள், துரானியர்கள் கூட இருக்கலாம்—காட்டு மிருகங்களை வீட்டில் வைத்துப்பழக்குவதையும், பின்னல் கால்நடைகளை வளர்த்துக் கவனித்துக்கொள்வதையும் தமது பிரதானத் தொழிலாகக் கொண்டன. அநாகரிகர்களின் பொதுவான ஜனத்திரளிலிருந்து கால்நடை வளர்க்கும் குலங்கள் வேருகப் பிரிந்துபோயின; **இது தான் சமுதாயரீதியில் ஏற்பட்ட முதல் மாபெரும் வேலைப் பிரிவினையாகும்.** கால்நடை வளர்த்த இந்தக் குலங்கள் மற்ற அநாகரிகர்களை விட அதிகமான உணவுப் பொருட்களை உற்பத்தி செய்தது மட்டுமல்ல, அதிக வகைப்பட்ட பொருட்களையும் உற்பத்தி செய்தன. அவர்களிடம் பால், பாலால் செய்த பொருட்கள், இறைச்சி ஆகியவை மற்றவர்களைவிட அதிகமாக இருந்தன என்பதோடல்லாமல், தோல்கள், கம்பளிரோமம், ஆட்டுரோமம், நூல்கள், துணிமணிகள் ஆகியவையும் இருந்தன; கச்சாப்பொருட்களின் தொகை அதிகரித்ததனுல் இவை முன்னைவிட அதிகமாகப் பொதுவான உபயோகத்துக்குக் கொண்டுவரப்பட்டன. முதன் முதலாக, இது முறையான பண்டமாற்றத்தைச் சாத்தியமாக்கியது. அதற்கு முந்திய கட்டங்களில் பண்டமாற்றம் அப்போதைக்கப்போது தான் நடக்க முடிந்தது; ஆயுதங்களையும் கருவிகளையும் படைப்பதில் அசாதாரணமான திறமை தாற்காலிக வேலைப் பிரிவினைக்குக் கொண்டுசென்றிருக்கலாம். இப்படித்தான், கற்காலத்தின் பிந்தைய பகுதியைச் சேர்ந்த கற்கருவிகளைச் செய்வதற்குரிய தொழிற்கூடங்களின் சந்தேகத்துக்கிடமற்ற மீதமிச்சங்கள் பல இடங்களில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. அந்தத் தொழிற்

கூடங்களில் தமது திறனை வளர்த்துக் கொண்ட கம்மியர்கள் இந்திய கண சமூகங்களைச் சேர்ந்த நிரந்தரக் கைத் தொழில்காரர்கள் இன்னும் செய்து வருவதைப் போல, மிகப் பெரும்பாலும் சமூகத்துக்காக வேலை செய்தார்கள். எப்படி இருப்பினும், அந்தக் கட்டத்தில் குலத்தினுள் பண்ட மாற்றம் நடைபெறுவதைத் தவிர வேறெந்தப் பண்ட மாற்றமும் தோன்றி யிருக்க முடியாது, அதுவும் கூட — குலத்தினுள்ளே பண்டமாற்றம் நடப்பதும் கூட — விதிவிலக்கான சங்கதியே. ஆனால், கால்நடை வளர்க்கும் குலங்கள் உருத்திரண்டுவிட்டபிறகு பல் வேறு குலங்களிலுள்ள அங்கத்தினர்களிடையே பண்டமாற்றம் நடப்பதற்கும், அது வளர்ந்து ஒரு முறையான ஏற்பாடாகக் கெட்டிப்படுவதற்கும் உரிய எல்லாச் சாதகமான நிலைமைகளும் இங்கே இருக்கக் காண்கிறோம். ஆதியில், குலத்துக்குக் குலம் தத்தம் கணத் தலைவர்களின் மூலமாகப் பண்டமாற்றம் செய்து வந்தது. ஆனால், கால்நடை மந்தைகளைத் தனிச் சொத்தாக மாற்றத் தொடங்கிய போது தனித்தனி நபர்களிடையே பண்டமாற்றம் நடப்பது வரவர அதிகமாக மேலோங்கிப்போய்க் கடைசியிலே ஒரேயொரு பண்டமாற்ற வடிவமாக ஆகிவிட்டது. கால்நடை வளர்த்த குலங்கள் அண்டைய மக்களிடம் பண்டமாற்றத்துக்குத் தந்த முக்கியமான பொருள் கால்நடைகள்தாம். கால்நடை என்ற சரக்கே மற்றெல்லாச் சரக்குகளையும் மதிப்பிடுவதற்குரிய சரக்காக ஆயிற்று; மற்றச் சரக்குகளுக்கு மாற்றுப் பண்டமாக எங்கும் அட்டியின்றி அது பெற்றுக்கொள்ளப்பட்டது—சுருங்கச் சொன்னல், பணத்

தின் பணியை அது மேற்கொண்டுவிட்டது, ஏற்கன வே இந்தக் கட்டத்தில் அது பணம் மாதிரியே பயன் பட்டு வந்தது. சரக்குப் பரிவர்த்தனையின் துவக் கத்திலேயே பணம் என்கிற சரக்கு வேண்டும் என்ற கோரிக்கை அவசியகரமாகவும் வேகமாகவும் எழுந்தது.

கடைக்கட்டத்திலிருக்கிற ஆசிய அநாகரிகர் களுக்குக் காய்கறித் தோட்டக்கலை அநேகமாகத் தெரிந்திருக்காது; மிகச் சமீபமாகக் குறிப்பதென்றால், அதன் இடைக்கட்டத்தில் தான், வயல் விவசாயத் துக்கு முன்னோடியாக, அது அவர்களிடையே தோன் றியது. நீண்ட கடுமையான பனி காலத்திற்கு கால் நடைத் தீவனச் சேகரம் செய்து கொள்ளாமல் கால்நடை வளர்க்கும் வாழ்க்கையைத் துரானிய பீடபூமியின் பருவ நிலைமை அனுமதிக்காது. எனவே, புல் வளர்ப்பதும் தானியங்களைப் பயிரிடுவதும் இங்கே இன்றியமையாதவையாயின. கருங்கடலுக்கு வடக்கேயுள்ள ஸ்தெப்பிப் பிரதேசங்களிலும் இதே நிலைமை தான். முதலில் கால்நடைகளுக்காகத் தான் தானியம் பயிரிடப்பட்டது, ஆனால் விரைவில் மனிதனுக்கும் உணவு ஆயிற்று. பயிர்செய்த நிலம் குலத்தின் நிலமாகவே இன்னும் இருந்து வந்தது; அது முதலில் கணத்துக்குத் தரப்பட்டது, பின்னால், அந்தக் கணம் தன் முறைக்கு அதைக் குடும்பச் சமூகங் களிடையே உபயோகத்திற்காக விநியோகம் செய் தது, கடைசியிலே தனி நபர்களுக்கு விநியோகம் செய்தது; இவர்களுக்குச் சில உடைமை உரிமைகள் இருந்திருக்கலாம், அதற்கு மேலில்லை.

இந்தக் கட்டத்தின் தொழில்துறைச் சாதனை

களில் இரண்டு குறிப்பாக முக்கியமானவை. முதலாவது, நெசவுத் தறி; இரண்டாவது, உலோகச் சத்தை உருக்கி உலோகச் சாமான்களை உருவாக்குவது. செம்பு, தகரம், அவற்றின் கலவையாகிய வெண்கலம் முக்கியமுள்ளவை; வெண்கலத்தால் பயனுள்ள கருவிகளும் ஆயுதங்களும் செய்யப்பட்டன. இருந்தாலும் அது கற்கருவிகளை அகற்றிவிட முடியவில்லை. இரும்புதான் அதைச் செய்யமுடிந்திருக்கும், ஆனால் அதை உற்பத்தி செய்வதுபற்றி யாருக்கும் தெரியாது. தங்கமும் வெள்ளியும் நகையணிகளுக்காக, அலங்காரத்துக்காக, பயன்படத் தொடங்கின; செம்பு, வெண்கலத்தைவிட அவை ஏற்கனவே அதிக விலைமதிப்புள்ளவையாக இருந்திருக்கவேண்டும்.

ஆடு மாடுகளை வளர்ப்பது, விவசாயம் செய்வது, வீட்டில் செய்யும் கைத்தொழில்கள் ஆகிய எல்லாத் துறைகளிலும் உற்பத்தி பெருகியது; இதனால் மனிதனின் உழைப்புச் சக்தி தனது ஜீவனோபாயத்துக்கு வேண்டியதைவிட அதிகமாகவே உற்பத்தி செய்ய முடிந்தது. அதே சமயத்தில், அந்தந்தக் கணத்தின் ஒவ்வோர் அங்கத்தினனும், அல்லது குடும்பச் சமூகத்தின் அங்கத்தினனும், அல்லது தனிக் குடும்பத்தின் ஒவ்வோர் அங்கத்தினனும் அன்றாடம் செய்துவந்த வேலையின் அளவு இதனால் அதிகமாகிக் கொண்டே வந்தது. இன்னும் அதிகமான உழைப்புச் சக்தி விரும்பத்தக்கதாயிற்று. யுத்தம் இந்த அதிக உழைப்புச் சக்தியை அளித்தது. யுத்தத்தில் பிடிபட்டவர்கள் எல்லோரும் அடிமைகளாக்கப் பட்டார்கள். ஆகவே, அன்றிருந்த பொதுவான வரலாற்று நிலைமைகளில், முதல் மாபெரும்

சமுதாய வேலைப் பிரிவினை உழைப்பின் உற்பத்தித் திறனை அதிகப்படுத்தி, அதனால் பொருட்செல்வத்தை அதிகப்படுத்தி, உற்பத்தித் துறைகளையும் விரிவுபடுத்தி, அதன் பின்னே அவசியத்தேவையாக அடிமை முறையையும் இழுத்துக் கொண்டு வந்து சேர்ந்தது. ஆக, முதல் மாபெரும் சமுதாய வேலைப் பிரிவினையிலிருந்து முதன்முதலாகச் சமுதாயத்தின் மாபெரும் வர்க்கப் பிரிவினை தோன்றியது: எஜமானர்கள் அடிமைகள், சுரண்டுகிறவர்கள் சுரண்டப்படுபவர்கள் என்று இரண்டு வர்க்கங்கள் உண்டாயின.

கால்நடை மந்தைகள் குலத்தின் அல்லது கணத்தின் பொதுச் சொத்தாயிருந்தது போய் தனிப்பட்ட குடும்பத் தலைவர்களின் சொத்தாக எப்படி எப்போது மாற்றப்பட்டன என்பது இன்று வரைக்கும் நமக்குத் தெரியாது. ஆனால், மொத்தத்தில், அது இந்தக் கட்டத்தில் தான் நிகழ்ந்திருக்கவேண்டும். மந்தைகளும் இதர புதிய செல்வப்பொருட்களும் குடும்பத்தில் ஒரு புரட்சியை உண்டாக்கின. ஜீவனோபாயத்துக்கு வழி தேடுவது எப்போதும் ஆணின் வேலையாக இருந்து வந்தது, எனவே அதற்குரிய சாதனங்களை அவன்தான் உற்பத்தி செய்தான், அச்சாதனங்களும் அவனுடைய சொத்தாயிருந்தன. கால்நடை மந்தைகள் என்பவை ஜீவனோபாயத்திற்குரிய புதிய சாதனம்; அவற்றை ஆதியில் பழகிப் பின்பு பராமரித்தது ஆண் செய்த வேலையே. எனவே, கால்நடைகள் அவனுக்கே சொந்தம்; அவற்றிற்குப் பரிவர்த்தனையாகப் பெற்ற சரக்குகளும் அடிமைகளும் அவனுக்கே சொந்தம். உற்பத்தியிலிருந்து இப்போது கிடைத்த மிச்சம் அல்லது உபரி

எல்லாம் ஆணுக்குரியதாயிற்று; அதை அனுபவிப்பதில் தான் பெண் பங்குகொண்டாள்; அதன் உடைமையில் அவளுக்குப் பங்கில்லை. ''காட்டுமிராண்டித்தனமான'' போர்வீரனும் வேட்டைக்காரனும் வீட்டில் இரண்டாம் ஸ்தானத்தை வகித்துப் பெண்ணுக்கு முதலிடம் தருவதில் திருப்தியடைந்திருந்தார்கள். ''மென்மையடைந்த'' ஆட்டிடையனோ, தனது செல்வத்தைக் காட்டி, முதலிடத்தை முண்டியடித்துப் பிடித்துக்கொண்டு பெண்ணை இரண்டாம் ஸ்தானத்துக்குத் தள்ளிவிட்டான். அவளால் புகார் செய்யவும் முடியவில்லை. குடும்பத்தில் இருந்த வேலைப் பிரிவினை கணவன் மனைவிக்கிடையே சொத்து விநியோகித்ததை முறைப்படுத்திவைத்திருந்தது. இந்த வேலைப் பிரிவினை மாறாமலே தானிருந்தது; என்றாலும் இது முந்தியக் குடும்ப உறவு முறையைத் தலைகீழாக்கிவிட்டது; காரணம் குடும்பத்துக்கு வெளியே யிருக்கிற வேலைப் பிரிவினை மாறிவிட்டதுதான். வீட்டு வேலைகள் செய்வதோடு நின்றுகொள்ளவேண்டிய நிலை முன்பு வீட்டில் தலைமை ஸ்தானத்தில் பெண் இருக்கக் காரணமாயிருந்தது; அதே காரணம் இப்போது வீட்டில் ஆணுக்குத் தலைமை ஸ்தானத்தை உறுதிப்படுத்தியது. ஜீவனோபாயத்துக்காக ஆண் செய்த வேலையோடு ஒப்பிடும்போது பெண் செய்த வீட்டு வேலை அதன் அர்த்தமுக்கியத்துவத்தை இழந்துவிட்டது; ஆணின் வேலைதான் எல்லாம்; பெண்ணின் வேலை ஓர் அற்பப் பங்குதான். சமுதாயரீதியில் உற்பத்திவகைப்பட்ட வேலையில் ஈடுபடுவதிலிருந்து விலக்கப்பட்டு, பெண்கள் தனிப்பட்ட வீட்டு வேலைகளைச் செய்வதோடு நிறுத்தப்பட்டுவரும் வரை

பெண்கள் விடுதலை பெறுவதோ, ஆண்களோடு சரி நிகராக ஆவதோ சாத்தியமில்லை என்பதை ஏற்கன வே இங்கு காண்கிறோம். பெரிய சமுதாய அளவில் உற்பத்தியில் பெண்கள் பங்கு கொள்ளும்படி வசதியளிக்கும்போதுதான், வீட்டு வேலைகளை அற்பமாகக் கவனிக்கவேண்டியதாயிருக்கும் என்ற நிலை ஏற்படும்போதுதான் பெண்களின் விடுதலை சாத்தியப்படும். இது நவீனகாலத்திய பெருமளவுத் தொழிலின் விளைவாகவே சாத்தியமாயிற்று. இந்தத் தொழில், பெண்கள் பெருந்தொகையாக உற்பத்தியில் ஈடுபட வசதியளிக்கிறது. அது மட்டுமல்ல, இவ்வாறு பெண்கள் ஈடுபடுவது அதற்குத் தேவைப்படவும் செய்கிறது; மேலும் தனிப்பட்ட வீட்டு வேலையையும் கூட ஒரு பொதுத் தொழிலாக மாற்றிவிட அது முயல்கிறது.

வீட்டில் ஆண் நடைமுறையில் தலைமையைச் சாதித்தது அவனது யதேச்சாதிகாரத்துக்கு இருந்த கடைசித் தடையையும் வீழ்த்திவிட்டது. தாயுரிமையை ஒழித்தது, தந்தையுரிமையைப் புகுத்தியது, இணைக் குடும்ப முறையிலிருந்து படிப்படியாக ஒருதார மணத்துக்கு மாறியது ஆகியவைமூலமாக இந்த யதேச்சாதிகாரம் ஊர்ஜிதம் செய்யப்பட்டு நிரந்தரமாக்கப்பட்டது. இது பழைய கண அமைப்பில் பிளவு உண்டாக்கியது; தனிப்பட்ட குடும்பம் ஒரு சக்தியாகிக் கணத்திற்கு எதிராக அபாயகரமாகக் கிளம்பியது.

இதற்கு அடுத்த படி நம்மை அநாகரிக நிலையின் தலைக் கட்டத்துக்குக் கொண்டு வந்து விடுகிறது; இந்தக் காலப்பகுதியில் எல்லா நாகரிக மக்கள்

சமூகங்களும் தமது மாவீரர் சகாப்தத்தைக் கடந்து சென்றன; இரும்பு வாளின் காலக்கட்டம் இது; அதோடு இரும்புக் கலப்பை, கோடாலியின் காலக் கட்டமும் இதுவே. இரும்பு மனிதனுக்குச் சேவை புரியத் தொடங்கியது. வரலாற்றில் புரட்சிகரமான பாத்திரம் வகித்த கச்சாப் பொருட்களில் கடைசியில் வந்தது, அதிமுக்கியமானது, இதுவே; கடைசியானது — அதாவது, உருளைக்கிழங்கை நாம் விலக்காகக் கொண்டால். இரும்பு, வயல் விவசாயத்தை முன்னிலும் பெருமளவில் நடத்துவதையும் விரிந்த காட்டுப் பிரதேசங்களைச் சாகுபடிக்காகத் தரிசாக்குவதையும் சாத்தியப்படுத்தியது; எந்தக் கல்லும் அப்போது அறிந்துள்ள எந்த உலோகமும் எதிர் நிற்கமுடியாத அளவுக்குக் கடினமும் கூர்மையும் பெற்ற கருவிகளை அது தொழில் செய்வோனுக்குத் தந்தது. இவையெல்லாம் படிப்படியாகத்தான் நடந்தன; முதன்முதலில் உண்டாக்கிய இரும்பு அடிக்கடி வெண்கலத்தைவிட மென்மையாகவிருந்தது. இப்படியாக, கல்லாயுதங்கள் மெள்ள மெள்ளத்தான் மறைந்தன; ஹில்தெபிராண்ட் பாட்டில் கல்கோடாலிகள் போரில் உபயோகிக்கப்பட்டதுமட்டுமல்ல; 1066ம் ஆண்டில் ஹேஸ்டிங்ஸ் போரிலும் அவை உபயோகிக்கப்பட்டன. ஆனால், இப்போது முன்னேற்றம் தடுக்கமுடியாததாகி விட்டது, முன்னைவிடக் குறுக்கீடுகள் குறைவு, வேகமும் அதிகம். கல்லாலோ செங்கல்லாலோ கட்டப்பட்ட வீடுகள், கொத்தளமும், துவார வரிசைகளும் அமைந்த கற்சுவர்கள் சூழ்ந்த நகரம் குலத்தின் அல்லது குலக்குழுக் கூட்டின் இருப்பிடமாயிற்று. கட்டிடக் கலை

யில் வேகமான முன்னேற்றத்தை இது குறித்தது; அதே பொழுதில் ஆபத்து அதிகரித்ததற்கும் பாது காப்பின் அவசியத்துக்கும் இது அறிகுறியாகும். செல்வம் வேகமாகப் பெருகிற்று; ஆனால் அது தனி நபர்களின் செல்வமே. துணி நெசவு, உலோகச் சாமான்கள் செய்வது மென்மேலும் தனித்தன்மை பெற்று வந்த இதர தொழில்களும் செய்பொருட் களைப் படைப்பதில் மேலும் மேலும் வகைவேறு பாட்டையும், கலைச்சிறப்புள்ள வேலைப்பாட்டை யும் வெளிப்படுத்தின. விவசாயம் இப்போது தானி யங்களையும், அவரை வகையறாவைச் சேர்ந்த செடி களையும், கனிகளையும் தந்ததோடல்லாமல் எண்ணெ யும் ஒயினும் தந்தது; அவற்றைத் தயாரிப்பதை இப் போது கற்றுக்கொண்டாகிவிட்டது. இனிமேல் இந்தப் பல்வேறு வேலைகளை ஒரு தனி நபர் செய்வதென்பது சாத்தியமற்று விட்டது; **இரண்டாவது மாபெரும் வேலைப் பிரிவினை** ஏற்பட்டது; விவசாயத்திலிருந்து கைத்தொழில்கள் பிரிந்து போயின. உற்பத்திப் பெருக்கம் தொடர்ந்து அதிகமாகி அத்துடன் உழைப்பின் உற்பத்தித் திறனும் அதிகமானதால் மனித உழைப்புச் சக்தியின் மதிப்பு உயர்ந்தது. முந் திய காலப்பகுதியில் ஆரம்பதசையிலும், இங்குமங் குமாகவும் நிலவிவந்த அடிமை முறை இப்போது சமுதாய அமைப்பின் ஒரு முக்கியமான பகுதியாகி விட்டது. அடிமைகள் வெறும் உதவியாளர்களாக இருந்தது போய், வயல்களிலும் தொழிற்கூடங்களி லும் வேலை செய்வதற்குக் கூட்டங் கூட்டமாக நிர்ப்பந்தமாக அனுப்பப்பட்டார்கள். விவசாயம், கைத்தொழில் என்று இரண்டு மாபெரும் கிளைகள்

உற்பத்தியில் பிரிவினை ஏற்பட்டதிலிருந்து நேரடியாகப் பண்டமாற்றத்துக்காக உற்பத்தி செய்யும் முறை, அதாவது சரக்கு உற்பத்திமுறை, பிறந்தது; அத்துடன் வியாபாரமும் கூடவே வந்துசேர்ந்தது; உள்நாட்டில் மட்டுமல்ல, குலத்தின் எல்லையோரங்களில் மட்டுமல்ல, கடல்தாண்டிய நாடுகளிலும் வந்துற்றது. இவையெல்லாம் இன்னும் வளர்ச்சி பெறுமலே தான் இருந்து வந்தன; சர்வ வியாபகமான பணச்சரக்கு எனத் தங்கமும் வெள்ளியும் முதன்மை பெற்றன, இருந்தாலும் நாணயங்கள் அச்சிடப்பெறவில்லை, எடையை வைத்துத்தான் அவை பரிவர்த்தனை செய்யப்பட்டன.

சுதந்திர மனிதன், அடிமை என்பதோடு பணக்காரன், ஏழை என்று வேறுபாடும் கூடிக்கொண்டது—புதிய வேலைப் பிரிவினையோடு கூடவே வர்க்கங்களாகச் சமுதாயம் புதிதாகப் பிரிவினையடைந்தது. பல்வேறு குடும்பத்தலைவர்களின் செல்வத்தில் ஏற்பட்ட வேறுபாடுகள், இன்னும் பாதுகாக்கப்பட்டு வந்திருந்த பொதுவுடைமைக் குடும்பச் சமூகங்களையெல்லாம் உடைந்துபோகச் செய்துவிட்டன; இது சமூகக் கணக்கில் நிலத்தைப் பொதுவில் பயிரிடுவதை முடித்து முடிவு கட்டிவிட்டது. பயிர்நிலங்கள் பல குடும்பங்களின் உபயோகத்திற்கென்று, முதலில் ஒரு குறிப்பிட்ட காலத்துக்கும், பின்னல் சாசுவதமாகவும், கொடுக்கப்பட்டுவிட்டன. இதில் முழுத் தனியுடைமைக்கு மாறிப் போனது இணைக் குடும்ப முறையிலிருந்து ஒருதார மணமுறைக்கு மாறிப் போனதோடு கூடவே படிப்படியாக நடந்தேறியது.

தனிப்பட்ட குடும்பம் சமுதாயத்தின் பொருளாதார மூலக்கூறு ஆயிற்று.

ஜனத்தொகையின் அபிவிருத்தி அதிகமாகி உள்ளும் வெளியும் இன்னும் நெருக்கமாக ஒன்றுபட வேண்டியது அவசியமாக்கி விட்டது. எங்குமே, இரத்த உறவு முறையுள்ள குலங்கள் குழுக்கூட்டாகச் சேர்வதும், பிறகு விரைவிலே அவை கலக்க வேண்டியதும், அதற்கும் பிறகு, தனித்தனிக் குலப் பிரதேசங்கள் மக்கள் சமூகத்தின் ஒரே பிரதேசமாகக் கலக்கவேண்டியதும் அவசியமாயின. மக்கள் சமூகத்தின் ராணுவ தளபதி — 'Rex', பஸீலியஸ், 'thiudans' — இன்றியமையாத, நிரந்தரமான அதிகாரியாகி விட்டான். இன்னும் இல்லாமலே இருந்த இடங்களிலெல்லாம் மக்கள் சபைகள் நிறுவப் பெற்றன. ராணுவ தளபதி, கவுன்சில், மக்கள் சபை ஆகியவை கண முறை மாறிவந்து சேர்ந்திருந்த ராணுவ ஜனநாயகத்தின் உறுப்புக்களாக ஆயின. ராணுவ ஜனநாயகம் என்று சொன்னதற்குக் காரணம் யுத்தமும் யுத்தத்துக்காகத் திரட்டுவதும் தயாரிப்பதும் மக்கள் சமூகத்தின் வாழ்க்கையின் முறையான வேலைகளாகிவிட்டதே. அண்டை மக்களின் செல்வம், அதைச் சேர்ப்பதை வாழ்க்கையின் முக்கிய நோக்கங்களில் ஒன்றாகக் கருதத் தொடங்கிவிட்ட மக்கள் சமூகங்களின் பேராசையைக் கிளறிவிட்டது. இந்த மக்கள் அநாகரிகர்கள்; உற்பத்திவகைப்பட்ட வேலை செய்வதைவிடக் கொள்ளையடிப்பது சுலபமானதாயும் அதிக மதிப்புள்ளதாயும் அவர்களுக்குத் தோன்றியது. ஆக்கிரமித்ததற்காகப் பழி வாங்குவதற்கும் அல்லது போதாமல் போய்விட்ட பிரதேசத்தை விரி

வாக்குவதற்கும் முன்பெல்லாம் போர் செய்தார்கள். அது இப்போது கொள்ளையடிப்பதற்கென்றே நடத்தப்பட்டது, அதுவே ஒரு முறையான தொழிலாகி விட்டது. அரண் செய்யப்பட்ட நகரங்களைச்சுற்றிலும் பெரிய பெரிய சுவர்கள் எழுப்பியது சும்மா விளையாட்டுக்காக அல்ல; அவற்றின் விரிந்த அகழிகள் கண முறையின் சமாதிகளாகும்; அவற்றின் கொத்தளங்கள் நாகரிக நிலையை எட்டித்தொட்டுக் கொண்டிருந்தன. உள்நாட்டு விவகாரங்களும் இதேமாதிரி மாறுதலடைந்தன. கொள்ளைக்காரத்தனமான யுத்தங்கள் ராணுவத் தளபதியின் அதிகாரத்தைப் பெருக்கின; துணைத் தளபதிகளின் அதிகாரத்தையும் பெருக்கின. குறிப்பாகத் தந்தையுரிமையைப் புகுத்தியபிறகு, ஒரேயொரு குடும்பத்திலிருந்து பதவிக்கு வழக்கமாகத் தேர்ந்தெடுக்கப்படுவதென்பது படிப்படியாக ஒரு பரம்பரை வாரிசுரிமையாகிவிட்டது; இது முதலில் சகித்துக்கொள்ளப்பட்டு, பிறகு உரிமையாகக் கொண்டாடப்பட்டு, கடைசியில் பறிக்கப்பட்டது. பரம்பரை அரச வம்சம், பரம்பரைப் பிரபுத்துவம் ஆகியவற்றிற்கு அஸ்திவாரம் போடப்பட்டது. இவ்விதமாகக் கண முறையின் உறுப்புக்கள் மக்கள் சமூகத்திடமிருந்தும், கணத்திடமிருந்தும், பிராட்ரியிலிருந்தும், குலத்திலிருந்தும் வேரோடு பிடுங்கப்பட்டன; கண அமைப்பு முழுவதும் அதன் எதிர்மறையாக மாற்றப்பட்டது: சொந்த விவகாரங்களைச் சுதந்திரமாக நிர்வகிப்பதற்குரிய குலங்களின் ஸ்தாபனம் என்பது போய் அண்டை அயலார்களைக் கொள்ளையடித்து ஒடுக்குவதற்குரிய ஸ்தாபனமாக அது மாறிவிட்டது. அதன்

உறுப்புக்கள் மக்கள் சித்தத்தை நிறைவேற்றும் சாதனங்களாக இருந்ததுபோய்ச் சொந்த மக்களை யே ஒடுக்கி ஆட்சி செலுத்துவதற்கான சார்பற்ற உறுப்புக்களாகிவிட்டன. செல்வத்தின்பால் ஏற்பட்ட பேராசை கண அங்கத்தினர்களைப் பணக்காரன் என்றும் ஏழை என்றும் பிரிக்காதிருந்தால் இது ஏற்பட்டிருக்கமுடியாது; ''கணத்திற்குள் சொத்து வேறுபாடுகள் பொது நலனைக் கண அங்கத்தினர் களிடையேயுள்ள விரோதமாக மாற்றுமலிருந் திருந்தால்'' (மார்க்ஸ்) இது ஏற்பட்டிருக்கமுடி யாது; அடிமை முறையின் வளர்ச்சி, வாழ்க்கைக்காக வேலை செய்வதை அடிமைத்தனமானதென்றும் கொள்ளையடிப்பதை விட ஈனத்தமானதென்றும் ஏற்கனவே பழிக்கத் தொடங்கியிராவிட்டால் இது ஏற்பட்டிருக்க முடியாது.

* * *

இது நம்மை நாகரிக நிலையின் வாயிற்படிக்குக் கொண்டுவந்துவிடுகிறது. வேலைப் பிரிவினையில் மே லும் முன்னேற்றம் கண்டதே இதைத் தொடங்கி வைக்கிறது. அநாகரிக நிலையின் கடைக்கட்டத்தி லிருக்கையில் மனிதர்கள் தமது நேரடித் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ளத்தான் உற்பத்தி செய்து வந்தனர். ஏதோ தற்செயலாகத் தேவைக்கு மே லாக ஏதாவது மிஞ்சினுல் எப்போதாவது விட்டு விட்டு அவர்கள் சரக்குப் பரிவர்த்தனை செய்து வந் தனர்; அவ்வளவுதான். அநாகரிக நிலையின் இடைக் கட்டத்தில் கால்நடை வளர்க்கும் மக்கள் சமூகங்கள், கால்நடைகளிலே ஒரு சொத்து வடிவத்தைப் பெற்

றிருந்தன; இந்தச் சொத்து, போதுமான கால்நடை மந்தைகளும் இருக்கும்போது, தேவைகளுக்கு மேலாகவே மிச்சத்தை முறையாகக் கொடுத்து வந்தது என்று பார்க்கிறோம்; மேலும் கால்நடை வளர்க்கும் மக்கள் சமூகங்களுக்கும் மந்தைகள் அற்ற பிற்பட்ட குலங்களுக்கும் இடையே வேலைப் பிரிவினையிருந்ததையும் பார்க்கிறோம்; ஆக, அக்கம்பக்கம் உற்பத்தியில் இரண்டு கட்டங்கள் இருந்தன, இது முறையான பரிவர்த்தனைக்குரிய நிலைமைகளை உண்டாக்கித்தந்தது. அநாகரிக நிலையின் தலைக்கட்டம் விவசாயத்துக்கும் கைத்தொழில்களுக்கும் இடையே மேலும் வேலைப் பிரிவினையைத் தோற்றுவித்தது. விசேஷமாகப் பரிவர்த்தனைக்காகவென்றே, சரக்குகளில் மேலும் மேலும் அதிகமான பகுதியை உற்பத்தி செய்யும் நிலைமை ஏற்பட்டது. இதனால் தனித்தனி உற்பத்தியாளர்களிடையே பரிவர்த்தனை நடப்பது சமுதாயத்துக்கு ஜீவாதாரமான தேவை என்றாகி விட்டது. நிலைபெற்று விட்ட இந்த வேலைப் பிரிவினைகளையெல்லாம் நாகரிக நிலை பலப்படுத்திப் பெருக்கிவிட்டது; குறிப்பாக, நகரத்திற்கும் கிராமத்திற்கும் இடையேயிருந்த வேறுபாட்டைத் தீவிரப்படுத்தி (பண்டைக்காலத்தில் நாட்டுப்புறத்தின் மீது நகரம் பொருளாதாரத் தலைமை வகித்த மாதிரியாகவோ, அன்றி மத்திய காலத்தில் நகரத்தின் மீது நாட்டுப்புறம் தலைமை வகித்த மாதிரியோ) இந்த வேலைப் பிரிவினைகளைப் பலப்படுத்திப் பெருக்கியது. அத்துடன் அது தனக்கென்றே அலாதியான வகையில் நிர்ணயமான முக்கியத்துவம் வாய்ந்த ஒரு மூன்று

வது வேலைப் பிரிவினையையும் கூடச் சேர்த்துவிட்டது. உற்பத்தியிலே பங்கெடுக்காமல், உற்பத்தி செய்யப்பட்ட பொருட்களைப் பரிவர்த்தனை செய்வதில் மட்டும் ஈடுபடும் ஒரு வர்க்கத்தை அது சிருஷ்டித்தது. அதுதான் **வியாபாரிகள்** எனப்பட்டோர். வர்க்கங்கள் தோன்றுவதற்குரிய முந்திய போக்குகள் எல்லாம் உற்பத்தியோடு மட்டுமே முழுக்க முழுக்கத் தொடர்பு கொண்டிருந்தன; உற்பத்தியில் ஈடுபட்டிருந்தவர்களை அவை நிர்வாகிகள், வேலை செய்பவர்கள் என்றோ பெரும் அளவு உற்பத்தியாளர்கள், சிறு அளவு உற்பத்தியாளர்கள் என்றோ பிரித்தன. இங்கே முதல் தடவையாக ஒரு வர்க்கம் தோன்றுகிறது; அது உற்பத்தியில் எந்தப் பங்கும் கொள்ளாமலே உற்பத்தியின் நிர்வாகம் முழுவதையும் பறித்துக் கொள்கிறது; பொருளாதார ரீதியில் தன் ஆட்சிக்கு உற்பத்தியாளர்களைப் பணியவைக்கவும் செய்கிறது. சமுதாயத்தின் எந்த இரண்டு உற்பத்தியாளர்களிடையேயும் தன்னை யொரு இன்றியமையாத இடைத்தட்டுக்காரனாக்கிக்கொண்டு இருவரையும் அவ்வர்க்கம் சுரண்டுகிறது. பரிவர்த்தனையிலிருக்கும் கஷ்டமும் ஆபத்தும் உற்பத்தியாளருக்கு இல்லாதபடி காப்பதாகச் சாக்குச் சொல்லிக்கொண்டும், அவர்களின் செய்பொருட்களுக்குத் தூரச் சந்தைகளைப் பிடித்துத்தருவதாகச் சாக்குச் சொல்லிக்கொண்டும் அதன்வழியாகச் சமுதாயத்தின் அதி உபயோககரமான வர்க்கமாக ஆகிறதாகச் சாக்குச் சொல்லிக்கொண்டும் புல்லுருவிகளைக் கொண்ட ஒரு வர்க்கம் கிளம்புகிறது; இவர்கள் வாஸ்தவத்தில்

சமுதாய ஒட்டுண்ணிகள்; உண்மையில் மிக அற்பச் சேவைகளுக்கு வெகுமானமாக இவர்கள் உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் நடக்கும் உற்பத்தியின் சிறந்த பகுதியைத் தடவிக்கொண்டு போய்விடுகிறார்கள், பிரம்மாண்டமான செல்வத்தையும் அதற்கேற்ற சமுதாயச் செல்வாக்கையும் விரைவாகக் குவிக்கிறார்கள்; அதே காரணத்துக்காக, நாகரிக நிலையின் காலகட்டத்தில் அவர்கள் புதிய புதிய கௌரவங்களைப் பெற்றுக்கொண்டேயிருக்கவும், உற்பத்தியின்மீது மேலும் மேலும் பிடிப்பைப் பெறவும் விதிக்கப்பெற்றுள்ளனர்; கடைசியிலே அவர்கள் சொந்தத்தில் ஒரு பொருளைச் சிருஷ்டித்துவிடுகிறார்கள்; அதுதான், திரும்பத் திரும்ப நிகழ்கிற வியாபார நெருக்கடிகள் என்பது.

நாம் விவாதித்துக்கொண்டிருக்கிற வளர்ச்சிக் கட்டத்தில், தான் செய்யவிருக்கும் பெரிய பெரிய விஷயங்களைப்பற்றி இந்த இளம் வியாபாரி வர்க்கத்துக்குச் சூசகமாகக் கூடத் தெரியாதிருந்தது. ஆனால் அது உருப்பெற்றது, தன்னை இன்றியமையாததாக ஆக்கிக்கொண்டது, அது போதும். அத்துடன் **உலோகப் பணம்**—அதாவது நாணயங்கள்—உபயோகத்திற்கு வந்தது; இத்துடன், உற்பத்தியிலீடுபடாதவன் உற்பத்தியாளன் மீதும் அவன் செய்பொருள்களின் மீதும் ஆட்சி செலுத்துவதற்கு ஒரு புதிய சாதனமும் வந்துசேர்ந்தது. சரக்குகளுக்கெல்லாம் சரக்காக, மற்றச் சரக்குகளையெல்லாம் தன்னுள் மறைத்துக் கொண்டிருக்கிற ஒரு சரக்கு கண்டுபிடிக்கப்பட்டுவிட்டது; விரும்பத்தக்க எந்தப் பொருளாகவும் தேவைப்படு

கிற எந்தப் பொருளாகவும் தன்னை உருமாற்றிக் கொள்ளும் தாயத்து கண்டுபிடிக்கப்பட்டுவிட்டது. யாரிடம் அது இருந்ததோ, அவனே உற்பத்தி உலகை ஆண்டான். மற்றவர்களைக்காட்டிலும் மேலாக யாரிடம் அது இருந்தது? வியாபாரியிடம். அவனிடம் பணத்தொழுகை பத்திரமாக இருந்தது. எல்லாச் சரக்குகளும், எனவே எல்லாச் சரக்கு உற்பத்தியாளர்களும் பணத்தின் முன்னே விழுந்துமண்டியிடவேண்டுமென்று தெளிவாக்கிவிடவும் அவன் ஏற்பாடு செய்தான். செல்வத்தின் அவதாரமாக இருக்கும் இத்துடன் ஒப்புநோக்கும்போது மற்றச் செல்வ வடிவங்கள் எல்லாம் வெறும் நிழல்களே என்று நடைமுறையில் அவன் நிரூபித்துக்காட்டினான். வாலிபப் பருவத்தில் பணம் இவ்வளவு புராதனப் பண்பாட்டின்மையோடும் பலாத்காரத்தோடும் தனது சக்தியை வெளிக்காட்டிக்கொண்டதுபோல் பின்னால் என்றைக்கும் காட்டிக்கொண்டதில்லை. பணத்திற்காகச் சரக்குகளை விற்பது ஏற்பட்டபிறகு பணத்தைக் கடனாகக் கொடுப்பது வந்து சேர்ந்தது, வட்டியும் கந்துவட்டிமுறையும் அத்துடன் வந்தன. பண்டைக்கால ஆதென்ஸ், ரோமாபுரி ஆகியவைகளைச் சேர்ந்த சட்டத் தொகுப்புகள் கடனாளிகளைக் கந்துவட்டிக்காரர்களின் காலடியில் ஈவிரக்கமின்றி நாதியற்ற நிலையில் தள்ளியதுபோல் பின்னால் வந்த எந்தச் சட்டத் தொகுப்பும் செய்ததில்லை—அவ்விரு சட்டத் தொகுப்புக்களும் தன்னியல்பாய் — அதாவது வழக்கத்தில் தோன்றிய சட்டமாக — உண்டான பொருட்களே,

பொருளாதார நிர்பந்தத்தைத் தவிர வேறெதனு லும் அவை எழவில்லை.

சரக்குகள் வடிவில் செல்வம், அடிமைகள் வடி வில் செல்வம், பண வடிவில் செல்வம் என்பவற் றோடு நில வடிவத்திலும் செல்வம் தோன்றியது. ஆதியில் கணமோ குலமோ தனி நபர்களுக்கு வழங்கியிருந்த நிலத்துண்டுகளுக்கான உரிமை இப் போது நன்கு நிலைப் பெற்றுப் போய் விட்ட தால் இந்த நிலத்துண்டுகள் அவர்களுடைய பரம்பரைச் சொத்தாய்விட்டன. அந்தக் காலத் துக்குக் கொஞ்சம் முன்பு அவர்கள் மிகவும் முயற்சி செய்து கொண்டிருந்தது எதற்கு? தமது நிலத்துண்டுகளின் மீது கண சமூகத்திற்கு இருந்த உரிமையிலிருந்து விடுதலை பெற வேண்டும் என் பதற்குத் தான். அந்த உரிமை அவர்களுக்கு விலங் காகிவிட்டது. இவ்விலங்கிலிருந்து அவர்கள் விடு விக்கப்பட்டனர்—அதோடு புதிய நிலச்சொத்தி லிருந்தும் விடுவிக்கப்பட்டனர். பூர்ணமான, சுதந் திரமான நிலவுடைமை என்பதற்குக் கட்டுதளை எது வுமில்லாத, விலங்கமெதுவுமில்லாத உடைமை சாத்தியம் என்ற பொருள்மட்டுமல்ல, அதைப் பிறருக்குக் கொடுப்பதற்குள்ள உரிமை என்ற பொருளும் அதில் அடங்கும். நிலம் கணத்துக்குச் சொந்தமாகவிருந்து வந்தவரை அப்படிப் பிறருக் குக் கொடுப்பதற்குரிய சாத்தியப்பாடு இருக்க வில்லை. ஆனால், புதிய நிலச்சொந்தக்காரன் கணத் தின், குலத்தின் தலையாய உரிமையின் விலங்கு களை உதறியெறிந்து விட்டபிறகு அதோடு தன்னை நிலத்துடன் இதுவரை பிரிக்கமுடியாதபடி பிணைத்து

வைத்திருந்த பந்தத்தையும் அவன் அறுத்துவிட்டான். இதன் அர்த்தம் என்ன வென்பதை நிலத்தில் தனியுடைமை ஏற்பட்ட போது அதே காலத்தில் அத்துடன் உண்டாக்கப்பட்ட பணம் அவனுக்குத் தெளிவுபடுத்தி வைத்தது. நிலம் இப்போது ஒரு சரக்கு ஆகலாம்; அது விற்கப்படலாம், அடைமானம் வைக்கப்படலாம். நிலத் தனிச்சொத்துடைமை புகுத்தப்பட்டதோ இல்லையோ, உடனே நில அடைமானமும் கண்டுபிடிக்கப்பட்டது (ஆதென்ஸைப் பார்க்க). ஒருதார மண முறையின் பின்னே பொது மகளிர் முறையும் விபசாரமும் தொத்திக் கொண்டுவந்த மாதிரியே, இப்போதிருந்து அடைமானமும் நிலவுடைமையோடு தொத்திக்கொண்டுவிட்டது. சுதந்திரமான, பூர்ணமான, பிறருக்குக் கொடுக்கக்கூடிய நிலவுடைமை வேண்டுமென்று கூச்சல் போட்டீர்கள் அல்லவா? இதோ பாருங்கள், கிடைத்துவிட்டது! ஜோர்ஜ் தாந்தேன், "tu l'as voulu".[1]

இவ்வாறாக, வாணிபப் பெருக்கம், பணம், கந்துவட்டி, நிலச்சொத்து, நில அடைமானம் ஆகியவற்றைத் தொடர்ந்து ஒரு சிறு வர்க்கத்தின் கையில் செல்வம் குவிந்து மையப்படுத்தப்படுவது விரைவாக நடந்தது; இது ஒரு பக்கம். இன்னொரு பக்கத்தில் ஜனங்கள் மேலும் மேலும் ஏழ்மையில் தள்ளப்பட்டு, வறியோர்கள் திரள் திரளாகப்

---

1 மோலியரின் ஹாஸ்ய நாடகம் "ஜோர்ஜ் தாந்தேன்" என்பதில் வரும் வாக்கியம். இதன் பொருள், "நீங்கள் வேண்டுமென்றீர்களே, ஜோர்ஜ் தாந்தேன்!" என்பதாகும். —**பதிப்பாசிரியர்கள்.**

பெருகினர். பணம்படைத்த புதிய பிரபுத்துவம்—பழைய குலப் பிரபுத்துவத்துடன் ஆரம்பத்திலிருந்து இணைந்துபோயிரா இடங்களில்— அந்தப் பழைய குலப்பிரபுத்துவத்தை நிரந்தரமாகப் பின் நிலைக்குத் தள்ளிவிட்டது (ஆதென்ஸில், ரோமாபுரியில், ஜெர்மானியர்களிடையில்). சுதந்திரமான மனிதர்களைச் செல்வத்தின் அடிப்படையில் வர்க்கங்களாகச் செய்த பிரிவினையோடுகூடவே, குறிப்பாக கிரீஸில், அடிமைகளின் எண்ணிக்கை பிரம்மாண்டமான அளவுக்குப் பெருகியது[1]; சமுதாயம் முழுவதின் மேல்கட்டுமானம் இவர்களின் கட்டாய உழைப்பின் அடிப்படையில் நிறுவப்பட்டு மேலெழுந்தது.

இந்தச் சமுதாயப் புரட்சியின்விளைவாகக் கணமுறை என்ன ஆயிற்று என்று இப்போது பார்ப்போம். தனது உதவியின்றியே வளர்ந்து விட்ட புதிய அம்சங்களின் எதிரே அது சக்தியற்றுக் கிடந்தது. ஒரு கணத்தின் அல்லது குலத்தின் அங்கத்தினர்கள் ஒரே பிரதேசத்தில் ஒன்றுகக் கூடி வாழ்ந்திருக்கவேண்டும், அவர்கள் மட்டுமே அதன் வாசிகள் என்ற நிபந்தனையின்மீதே அந்தக்

[1] ஆதென்ஸில் அடிமைகளின் தொகைக்கு மேலே 117 பக்கம் பார்க்க. கோரிந்தில், அந்நகரத்தின் உச்சநிலையில் அது 4,60,000 ஆக இருந்தது, எஜினுவில் 4,70,000. இரண்டிலும் சுதந்திரமான நகரவாசிகளைவிடப் பத்து மடங்கு அதிகமாக அடிமைகள் இருந்தார்கள். (எங்கெல்ஸ் குறிப்பு.)

நான்காவது ஜெர்மன் பதிப்பின் பக்கத்தை எங்கெல்ஸ் தருகிருர். இந்த நூலில் 265-266 பக்கங்களைப் பார்க்க. —பதிப்பாசிரியர்கள்.

கணமுறை சார்ந்திருந்தது. ஆனால் இது எப்போதோ போய்விட்டது. கணங்களும் குலங்களும் எங்குமே ஒன்றாகக் கலந்துவிட்டன; எங்கு பார்த்தாலும் அடிமைகளும், சார்பாளர்களும், அந்நியர்களும் பிரஜைகளிடையே வாழ்ந்துவந்தனர். ஓரேயிடத்தில் குடியிருக்கும் நிலை, அநாகரிக நிலையின் இடைக்கட்டத்தின் முடிவின்போது கிடைக்கப்பெற்றதாகும்; அதற்கு ஜன இயக்கத்தாலும் வீடு மாற்றங்களாலும் அடிக்கடி குறுக்கீடுகள் ஏற்பட்டன; வாணிபம், வேலைமாற்றம், நிலமாற்றம் எல்லாம் அவற்றைப் பொறுத்தவையாயிருந்தன. கண ஸ்தாபனத்தின் அங்கத்தினர்கள் தமது பொது விவகாரங்களைக் கவனிப்பதற்காக இப்போது கூட முடியவில்லை. மதச் சடங்குகள் போன்ற சில்லறை விஷயங்கள்தான் பின்பற்றப்பட்டு வந்தன; அதுவும் அசட்டையாக. எந்தத் தேவைகளுக்காகவும் நலன்களுக்காகவும் கண உறுப்புக்கள் நியமிக்கப்பெற்றும் கவனிக்கத் தகுதியாக்கப்பட்டும் இருந்தனவோ அந்தத் தேவைகள், நலன்களோடு கூடுதலாகப் புதிய தேவைகளும் நலன்களும் கிளம்பின; தனது ஜீவனோபாயத்துக்கு ஒருவன் சம்பாதிக்கும் நிலைமைகளிலும், அதனால் சமுதாயக் கட்டுக்கோப்பில் உண்டாக்கப்பட்ட மாறுதல்களிலும் ஏற்பட்ட புரட்சியின் விளைவாக இந்தப் புதிய தேவைகளும் நலன்களும் கிளம்பின. இவை பழைய கண அமைப்புக்குப் புறம்பானவை மட்டுமல்ல; அதை அவை ஒவ்வொரு வகையிலும் குறுக்கிட்டுத் தடுத்தன. வேலைப் பிரிவினையால் உண்டான தொழில் செய்வோரின் குழுக்களிடையேயுள்ள நலன்கள், நாட்டுப்புறத்

துக்கு எதிர்மறையாக உள்ள நகரங்களின் விசேஷத் தேவைகள் ஆகியவற்றிற்குப் புது உறுப்புக்கள் வேண்டியிருந்தன. ஆனால் இந்தக் குழுக்களில் ஒவ்வொன்றும் வெவ்வேறு கணங்கள், பிராட்ரிகள், குலங்களிலிருந்து வந்த மக்களைக் கொண்டிருந்தது; அவர்களில் அந்நியர்களும் உண்டு. எனவே புதிய உறுப்புக்கள் கண முறைக்கு வெளியே தான், அதோடுகூடத் தான், அதே சமயம் அதற்கு எதிராக வேதான் உருப்பெற்றெழுவது அவசியமாயிற்று. மேலும், பணக்காரர்களையும் ஏழைகளையும், கந்து வட்டிக்காரர்களையும், கடனாளிகளையும் ஒரே கணத்திலும் குலத்திலும் பிணைத்துவிட்டதின் மூலம் ஒவ்வொரு கண ஸ்தாபனத்திலும் நலன்களிடையே யுள்ள சச்சரவு தம்மை வெளிப்படுத்திக்கொண்டு உச்ச நிலையை எட்டியது. அப்புறம் புதிய பிரஜைகளின் திரள் வேறு இருந்தது; இவர்கள் கண ஸ்தாபனங்களுக்கு அந்நியர்கள்; ரோமாபுரியில் நடந்ததுபோல், இவர்கள் நாட்டில் ஒரு சக்தியாக முடியும்; மேலும் ரத்த உறவுமுறையுள்ள கணங்களாலும் குலங்களாலும் உள் கிரகிக்கமுடியாத அளவுக்கு எண்ணிக்கையில் அதிகமாயிருந்தனர். இந்த ஜனத்திரள்களின் எதிரே கண ஸ்தாபனங்கள் பிறரை விலக்கிவைக்கிற, சலுகையுரிமைகள் கொண்ட ஸ்தாபனங்களாக நின்றன: ஆதியில் இயற்கையாக வளர்ந்த ஜனநாயகம் இப்போது வெறுக்கத்தக்கதொரு பிரபுத்துவ முறையாக மாறி விட்டது. கடைசியாக, உள்விரோதங்களை அறிந்திராத ஒரு சமுதாயத்தினுள்ளே யிருந்து கண முறை தோன்றிவளர்ந்தது, அப்படிப்பட்ட

சமுதாயத்துக்கு மட்டுமே அது பொருத்தமாகும். பொதுஜன அபிப்பிராயம் தவிர வேறொரு நிர்ப்பந்த அதிகாரமும் அதனிடம் இருந்ததில்லை. ஆனால் இப்போதோ ஒரு சமுதாயம் தோன்றியிருக்கிறது; அது தனது பொருளாதார வாழ்வு நிலைமைகள் அனைத்தின் காரணமாகச் சுதந்திர மனிதர்களாகவும் அடிமைகளாகவும், சுரண்டுகிற பணக்காரர்களாகவும் சுரண்டப்படுகிற ஏழைகளாகவும் பிளவுபட வேண்டியிருந்தது; இந்த விரோதங்களை அதனால் சமரசப்படுத்தமுடியாதிருந்ததுமட்டுமல்ல, அவற்றை மேலும் மேலும் அது தீவிரப்படுத்தவேண்டியிருந்தது. ஒன்று: இந்த வர்க்கங்கள் ஒன்றோடொன்று இடையறாது பகிரங்கமாகப் போராடிக் கொண்டிருக்கும் நிலையில் இச்சமுதாயம் இருக்கமுடியும்; அல்லது: அது ஒரு மூன்றாவது சக்தியின் ஆட்சியின்கீழ் இருக்கமுடியும்; அந்தச் சக்தி, ஒன்றோடொன்று போராடிக் கொண்டிருக்கிற வர்க்கங்களுக்குமேலே நிற்பதாக வெளிக்குக் காட்டிக்கொண்டு, அவற்றின் பகிரங்கமான சண்டையை ஒடுக்கி, அதிகமாகப் போனால், பொருளாதாரத் துறையில் மட்டும், சட்டவடிவம் என்று சொல்லிக்கொள்ளப்படுகிற ரீதியில், வர்க்கப் போராட்டத்தை அனுமதிக்கும். கண முறையின் காலம் கடந்துபோய்விட்டது. வேலைப் பிரிவினையும் அதனால் சமுதாயம் வர்க்கங்களாகப் பிரிந்து போன விளைவும் அந்தக் கண முறையை உடைத்தெறிந்துவிட்டன. அதனிடத்தில் அரசு வந்து சேர்ந்தது.

* * *

கண முறையின் அழிவுக்குவியலின் மீது எழுப்பப்பட்ட அரசின் மூன்று பிரதான வடிவங்களைத் தனித்தனியே ஒவ்வொன்ருக எடுத்துக்கொண்டு நாம் மேலே விவாதித்தோம். அதிதூய்மையான, அதிசாஸ்திரீயகரமான வடிவம் ஆதென்ஸ். இங்கே, கணச்சமுதாயத்திற்குள்ளே வளர்ந்த வர்க்க விரோதங்களிலிருந்து நேரடியாகவும் பிரதானமாகவும் அரசு தோன்றியது. ரோமாபுரியில் கணச்சமுதாயம், மற்றவர்களை விலக்கிவைக்கிற பிரபுத்துவமாக ஆகிவிட்டது; எண்ணிக்கையில் நிறைய இருந்த பிளெப்ஸ் மத்தியிலே, அதற்கு வெளியே, நின்றுகொண்டிருந்தது; பிளெப்ஸுக்கோ உரிமைகள் ஒன்றும் இல்லை, கடமைகள் மட்டுமே உண்டு. பிளெப்ஸின் வெற்றி பழைய கணமுறையை உடைத்தெறிந்தது; அதன் அழிவுக்குவியலின் மேல் அரசைக் கட்டியது; அவ்வரசில் கணப் பிரபுத்துவமும் பிளெப்ஸும் ஒருங்கேமுழுவதாக உள்கிரகிக்கப்பட்டுப்போயின. கடைசியாக, ரோமானிய சாம்ராஜ்ஜியத்தைத் தோற்கடித்த ஜெர்மானியர்களிடையே, விரிவான அந்நிய நிலப்பரப்புக்களை வென்று வசமாக்கிக்கொண்டதின் நேரடி விளைவாக அரசு தோன்றியது; அந்த நிலப்பரப்புக்களைக் கண முறையினுல் ஆள்வதற்கு வகையில்லை. இந்த நாடுபிடிப்புக்குப் பழைய ஜனத்தொகையோடு கடுமையான போர் புரியவேண்டிய அவசியம் ஏற்படவில்லை, மேலும் முன்னேற்றம் கொண்ட வேலைப் பிரிவினைக்கும் அவசியம் ஏற்படவில்லை; தோல்வி கண்டவர்களும் வெற்றி பெற்றவர்களும் அநேகமாக ஒரே பொருளாதார வளர்ச்சிக்கட்டத்தில் இருந்தார்

கள், சமுதாயத்தின் பொருளாதார அடிப்படை முன்புபோல் அப்படியேதான் இருந்தது. இந்தக் காரணங்களினுல் எல்லாம் கண முறை ஒரு மாறு பட்ட, பிரதேசரீதியான வடிவத்தில், மார்க் ஸ்தாபனம் என்ற வடிவத்தில், பல நூற்றுண்டு களுக்கு நீடித்திருக்க முடிந்தது; பிற்காலத்தில் வந்த பிரபுக்கள் குடும்பங்களிலும் பாட்ரிஷியன் குடும்பங்களிலும் டித்மார்ஷென் விவசாயிக் குடும் பங்களைப்[1] போன்ற விவசாயிக் குடும்பங்களிலும் அது பலவீனமடைந்த வடிவத்தில் தனக்குத்தா னே புத்துயிரூட்டிக் கொண்டிருக்கமுடிந்தது.

ஆகவே, அரசு என்பது வெளியேயிருந்து சமு தாயத்தின்மீது திணிக்கப்பட்ட ஒரு சக்தியல்ல; ஹெகல் சாதிப்பதுபோல் அது ''தார்மீகக் கருத்தின் யதார்த்தம்'' அல்ல, ''பகுத்தறிவின் பிரதிபிம்பம், யதார்த்தம்'' அல்ல. ஒரு குறிப்பிட்ட வளர்ச்சிக் கட் டத்தை எட்டிய சமுதாயத்தின் விளைபொருள் அது. இந்தச் சமுதாயம் தன்னுடையே தீர்வு காணமுடி யாத ஒரு முரண்பாட்டில் சிக்கிக்கொண்டுவிட்டது என்றும், சமரசப்படுத்தமுடியாத விரோதங்களாகப் பிளவுபட்டு விட்டது, அவற்றைப் போக்கிவிடும் சக்தி தனக்கில்லை என்றும் ஒப்புக்கொள்வதே அது.

[1] கணத்தின் தன்மை குறித்துக் கிட்டதட்ட சரியான கருத்து கொண்டிருந்த முதல் வரலாற்ருசிரியர் நீபூர் என்ப வரே. இதற்குக் காரணம், டித்மார்ஷென் குடும்பங்களைப் பற்றி அவருக்கிருந்த ஞானத்தின் விசேஷமே. ஆனுல், அவர் செய்த தவறுகளுக்கும் அவையே தான் காரணம்; அவற்றி லிருந்து அவர் பிந்தியவகையில் தவறுகளைப் பிரதியெடுத்தார். [எங்கெல்ஸின் குறிப்பு.]

ஆனல் இந்தப் பகைமைகள், எதிர்மறையான பொருளாதார நலன்களைக் கொண்டிருக்கும் வர்க்கங்கள், ஒரு வீணன சண்டையிலே தங்களையும் சமுதாயத்தையும் அழித்துவிடாமல் செய்யலாம் என்பதற்காக, சமுதாயத்துக்கு மேலாக நின்று கொண்டிருப்பதாக வெளிக்காட்டிக்கொள்கிற ஒரு சக்தி அவசியப்பட்டது; அதன் நோக்கம் சண்டையின் கடுமையைத் தணிப்பது, ''ஒழுங்கு'' என்ற வரம்புக்குள் அதைக் கட்டுப்படுத்துவது. சமுதாயத்திலிருந்து தோன்றிய, சமுதாயத்திற்கு மேலாகத் தன்னை உயர்த்திவைத்துக்கொண்டு, சமுதாயத்திலிருந்து மேலும் மேலும் தன்னை வேருகப் பிரித்துக்கொண்டு செல்லும் இந்தச் சக்தியே அரசு என்பது.

பழைய கண ஸ்தாபனத்துக்கு மாறுபட்ட லட்சணத்திலே முதலில் இந்த அரசு தனது பிரஜைகளைப் **பிரதேசங்களின்படி** பிரித்துவைக்கிறது. நாம் பார்த்தபடி, இரத்த உறவுகளின்மீது கட்டப்பட்டு ஒன்ருக்கிவைக்கப்பட்டிருந்த கண ஸ்தாபனங்கள் தேவைக்குப் போதாதவையாகிவிட்டன; பெரும்பாலும் இதற்குக் காரணம், அங்கத்தினர்கள் ஒரு குறிப்பிட்ட பிரதேசத்துடன் ஒட்டிக்கொண்டிருந்து தீர வேண்டியவர்களே என்ற பந்தம் என்றே அறுந்துவிட்டிருந்தது. பிரதேசம் அப்படியேதான் இருந்தது, மக்கள்தான் அங்கேயும் இங்கேயும் வந்துபோய்க் கொண்டிருந்தார்கள். எனவே, பிரதேசப்படி பிரிப்பது என்பது தொடக்க ஏற்பாடாகக் கொள்ளப்பட்டது, எங்கெல்லாம் பிரஜைகள் குடித்தங்கிஞர்களோ, அங்கு அவர்கள்

தமது பொது உரிமைகளையும் கடமைகளையும் ஆற்ற அனுமதிக்கப்பட்டார்கள்—எந்தக் கணம், எந்தக் குலம் என்று பார்க்கப்படவில்லை. இடத்தின் படி பிரஜைகளைத் திரட்டியமைப்பது என்ற இந்தக் குணும்சம் எல்லா அரசுகளுக்கும் பொதுவாக உண்டு; அதனுல்தான் அது நமக்கு இயற்கையாகப் படுகிறது; ஆனுல் ஆதென்ஸிலும் ரோமாபுரியிலும் கணங்களின்படி திரட்டிவைக்கிற பழைய ஸ்தாபனத்தை அகற்றி அதனிடத்தில் இது அமர்வதற்கு முன் எவ்வளவு நீடித்த கடுமையான போராட்டம் நடத்தவேண்டியதாயிற்று என்று நாம் பார்த்தோம்.

இரண்டாவதாக, ஆயுதமேந்திய படையாகத் தம்மைத் திரட்டிக் கொண்டிருக்கிற மக்களோடு இப்போது நேரடியாக ஒன்றியிராத பொது அதிகாரத்தை நிலைநிறுத்துவது. வர்க்கங்களாகப் பிளவு ஏற்பட்டுப் போனபிறகு, சுயமாகவே இயங்குகிற மக்களின் ஆயுதமேந்திய ஸ்தாபனம் என்பது சாத்தியமற்றுப் போயிற்று என்ற காரணத்தால் இந்த விசேஷமான பொது அதிகாரம் அவசியமாயிற்று. அடிமைகளும் ஜனத்தொகையைச் சேர்ந்தவர்களே; 90 ஆயிரம் ஆதென்ஸ் பிரஜைகள் சலுகையுரிமை கொண்ட வர்க்கமாக 365 ஆயிரம் அடிமைகளுக்கெதிரே இருந்தார்கள். அதினிய ஜனநாயகத்தின் மக்கள் படை என்பது பிரபுத்துவ வகைப்பட்ட பொது அதிகாரம் ஆகும்; அது அடிமைகளுக்கு எதிராகச் செலுத்தப்பட்டது, அடிமைகளைக் கட்டுக்குள் வைத்திருந்தது. இருந்தாலும், மக்களையும் கட்டுக்குள் வைப்பதற்காகப்போலீஸ் படையும் அவசியமாயிற்று—இதை நாம் மேலே சொல்லி

யுள்ளோம். இந்தப் பொது அதிகாரம் ஒவ்வோர் அரசிலும் உண்டு; அதில் அடங்குவது ஆயுதமேந்திய ஆட்கள் மட்டுமல்ல, அதற்குவேண்டிய பொருள் வகைப்பட்ட உப கருவிகளும் கூட, அதாவது சிறைக் கூடங்கள், பலாத்காரம் செய்கிற பலவகை ஸ்தாபனங்கள்; இவற்றை எல்லாம் பற்றிக் கண சமுதாயத்துக்கு ஒன்றுமே தெரியாது. வர்க்கவிரோதங்கள் இன்னும் வளராமலே இருந்து வருகிற சமுதாயங்களிலும், எங்கோ மூலையில் ஒதுங்கிக்கிடக்கிற இடங்களிலும்—இப்படித்தான் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் சில சமயம் சில பிரதேசங்களில் இருந்தன—இந்தப் பொது அதிகாரம் பொருட்படுத்தத் தேவையற்றதாக, மிகமிகச் சொற்பமாக இருக்கலாம். என்றாலும், அரசுக்குள் வர்க்க விரோதங்கள் மேலும் மேலும் கடுமையாகி வரும் அளவுக்கு, அண்டையிலுள்ள அரசுகள் மேலும் விரிவும் ஜனத்தொகைப் பெருக்கமும் அடைந்து வரும் அளவுக்கு, பொது அதிகாரமும் மேலும் மேலும் பலம் பெறுகிறது. இக்கால ஐரோப்பாவை நாம் பார்த்தால் போதும்; இங்கே, முழுச் சமுதாயத்தையும், அரசையும் கூட, விழுங்கிவிடப் பயமுறுத்திக் கொண்டிருக்கும் அளவுக்கு வர்க்கப் போராட்டமும் நாடுபிடிப்பில் நிலவும் போட்டியும் பொது அதிகாரத்தை உயர்த்திவிட்டிருக்கின்றன.

இந்தப் பொது அதிகாரத்தை நிலைநிறுத்துவதற்குப் பிரஜைகளிடமிருந்து கட்டணங்கள் வசூலிப்பது அவசியப்பட்டது — அவைதான் **வரிகள்.** கண சமுதாயத்தில் இவைபற்றி ஒன்றுமே தெரியாது; நாமோ போதிய அளவுக்குத் தெரிந்துவைத்

துள்ளோம். நாகரிகம் முன்னேற முன்னேற, இவ் வரிகள் பற்றுமல் போகின்றன; அரசு எதிர்காலத்தை வைத்துப் பணம் வாங்குகிறது, கடன் வாங்குகிறது, அரசாங்கக் கடன்கள் உண்டாக்குகின்றது. இவற்றைப் பற்றியும் பழைய ஐரோப்பா இரண்டொரு விஷயங்கள் சொல்லமுடியும்.

பொது அதிகாரத்தையும், வரி விதிக்கும் உரிமையையும் கொண்ட அதிகாரிகள், சமுதாயத்தின் உறுப்புக்கள் என்ற நிலையில், சமுதாயத்துக்கு மேலே நிற்கிறுர்கள். கண முறையின் உறுப்புக்களுக்குக் காட்டப்பட்டு வந்த சுயேச்சையான, சுயமான மதிப்பு கிடைக்கிறதாயிருந்தாலும் அது இவர்களுக்குத் திருப்தி அளிக்கவில்லை. சமுதாயத்திலிருந்து வேறுபட்டுப்போய்க் கொண்டிருக்கிற அதிகாரத்தின் வாகனங்கள் இவர்கள்; ஆகையால், அசாதாரணமான சட்டங்களைக் கொண்டு இவர்களுக்கு மதிப்பு அளிக்கும்படி நிர்ப்பந்திக்கவேண்டும்; இந்தச் சட்டங்களின் பிரகாரம் இவர்கள் விசேஷமான புனிதத்தன்மையையும் மீறக்கூடாத தன்மையையும் அனுபவிக்கின்றனர். கணச் சமுதாயத்தின் சகல உறுப்புக்களுக்கும் இருக்கிற மொத்த அதிகாரத்தைவிட நாகரிக அரசில் மிக அற்பப் போலீஸ்காரனுக்கு அதிக ''அதிகாரம்'' உண்டு; என்றுலும், அதி வலிமைபிடித்த சிற்றரசனுயினும் சரி, நாகரிக நிலைக் காலத்திய அதியுன்னதமான அரசுக் கலைஞனுயினும் சரி, ராணுவத் தளபதியாயினும் சரி, மிகத்தாழ்மையுள்ள கணத்தலைவனுக்கும் அந்தக் கணம் காட்டுகிற கட்டாயமற்ற, எதிர்ப்பற்ற மதிப்பைக் கண்டு பொறுமைப்படக்

கூடும். இவன் சமுதாயத்தின் மத்தியிலே நிற்கிறான்; அவர்களெல்லோரும் சமுதாயத்திற்கு வெளியே, மேலே இருக்கிற எதையோ பிரதிநிதித்துவப்படுத்த முயல்வதற்கு நிர்பந்தப்படுத்தப்படுகிறார்கள்.

வர்க்க விரோதங்களைக் கட்டுக்குள் வைக்க வேண்டியதின் அவசியத்திலிருந்து அரசு தோன்றியமையாலும், அந்த சமயத்தில், அவ்வர்க்கங்களுக்கிடையே நடந்து வந்த மோதல்களின் மத்தியிலிருந்தே தோன்றியமையாலும் அது, பொது விதியாகவே, ஆக மிகவும் வலிமைவாய்ந்த, பொருளாதாரவகையில் ஆதிக்கம் செலுத்தும் வர்க்கத்தின் அரசாக ஆகிறது; அந்த வர்க்கம், அரசின் மூலமாக, அரசியலிலும் ஆதிக்கம் செலுத்தும் வர்க்கமாக ஆகிறது; இந்த வழியிலே ஒடுக்கப்பட்ட வர்க்கத்தை ஒடுக்கிவைத்துச் சுரண்டிக் கொண்டிருப்பதற்கு அது புதிய சாதனங்களைப் பெறுகிறது. இப்படித்தான் பண்டைக்காலத்திய அரசு, எல்லாவற்றிற்கும் மேலாக, அடிமைகளை ஒடுக்கிவைப்பதற்கு அமைந்த ஆண்டைமாரின் அரசாக இருந்தது; அதே போலத்தான் நிலப்பிரபுத்துவ அரசு என்பதும் விவசாயப் பண்ணையடிமைகளையும் நிலப்பிரபுக்களுக்கு உழைப்பவர்களையும் ஒடுக்கிவைத்திருப்பதற்கமைந்த பிரபு வம்சத்தினரின் அரசாக இருந்தது; அதே போலத்தான், நவீனகாலப் பிரதிநிதித்துவ அரசும் கூலியுழைப்பை மூலதனம் சுரண்டுவதற்கு அமைந்த கருவியாகும். இருந்தாலும், விதிவிலக்கு என்ற வகையில், சில காலப்பகுதிகள் அமைவதுண்டு; அவற்றில் சண்டையிடும் வர்க்கங்கள் பரஸ்பரம் சம பலத்தை அநேகமாகப் பெறு

வதினால், வெளிப் பார்வைக்கு மத்தியஸ்தமாக வந்துசேருகிற அரசு அதிகாரம் சிறிது காலத்திற்கு அவற்றினின்றும் ஓரளவுக்குச் சுதந்திரம் பெற்று வருகிறது. 17வது, 18வது நூற்றாண்டுகளைச் சேர்ந்த யதேச்சாதிகார முடியரசு என்பது இப்படிப்பட்டது தான்; பிரபு வம்சத்தினருக்கும் பூர்ஷ்வா வர்க்கத்தினருக்கும் இடையே அது சமநிலையை ஏற்படுத்தி வைத்துக் கொண்டிருந்தது; முதல் பிரெஞ்சு சாம்ராஜ்ஜியத்தின், இன்னும் குறிப்பாக இரண்டாவது பிரெஞ்சு சாம்ராஜ்ஜியத்தின் போனபார்டிஸமும் அப்படித்தான்; அது பூர்ஷ்வா வர்க்கத்துக்கு எதிராகப் பாட்டாளி வர்க்கத்தையும், பாட்டாளி வர்க்கத்திற்கு எதிராக பூர்ஷ்வா வர்க்கத்தையும் போட்டி போட விட்டுக் கொண்டிருந்தது. இவ்விதமான செயலுக்கு மிகச் சமீபத்திய உதாரணம் பிஸ்மார்க் தேசீய இனத்தின் புதிய ஜெர்மன் சாம்ராஜ்ஜியமாகும்; அதில் ஆளுவோரும் ஆளப்படுவோரும் ஒருங்கே கோமாளிகளாகத் தோற்றமளிக்கிறார்கள்; இங்கே முதலாளிகளும் தொழிலாளிகளும் ஒருவருக்கொருவர் சமமாக நிறுத்தப்படுகின்றனர், இரு சாராரும் சமமாகச் சுரண்டப்படுகின்றனர் — ஏழ்மைப் பட்டுள்ள பிரஷ்ய மாகாண ஜங்கர்களின் நன்மைக்காக.

மேலும், வரலாற்றிலமைந்த அரசுகள் மிகப் பெரும்பாலானவற்றில் பிரஜைகளின் உரிமைகள் அவரவர்களுடைய செல்வத்திற்கேற்றபடி பங்கு படுத்தப்படுகின்றன; ஆக, அரசு என்பது உடைமை வர்க்கத்தின் ஸ்தாபனம், உடைமையற்ற வர்க்கத்திடமிருந்து அதைப் பாதுகாக்கவே அது

இருக்கிறது என்ற உண்மையை இது நேரடியாக வெளியிடுகிறது. சொத்துக்குத்தக்கபடி செய்திருந்த அதீனிய, ரோமானிய வகுப்பமைப்பிலும் இப்படித் தான் இருந்தது. மத்தியகால நிலப்பிரபுத்துவ அரசி லும் இப்படியேதான் இருந்தது; அதில், எவ்வளவு நிலம் யார் யாருக்குச் சொந்தமாயிருந்ததோ, அவ் வளவுக்கு அவனுக்கு அரசியல் அதிகாரம் பொருத் தமாக அமைந்திருந்தது. நவீனகாலத்தியப் பிரதி நிதித்துவ அரசுகளின் வோட்டுரிமை யோக்கிய தாம்சங்களிலும் அதைப் பார்க்கலாம். இருந்த போதிலும், சொத்து வேறுபாடுகளுக்குள்ள இந்த அரசியல் அங்கீகாரம் முக்கியமேயல்ல. மாருக, அரசு வளர்ச்சியின் கீழ்க்கட்டத்தையே இது குறிக்கிறது. அரசின் உச்சவடிவம் ஜனநாயகக் குடியரசு என்பது; அது நமது நவீனச் சமுதாய நிலைமைகளின்கீழ் மேலும் மேலும் தவிர்க்க முடி யாத ஒன்ருக ஆகிக் கொண்டிருக்கிறது; பாட் டாளி வர்க்கத்துக்கும் பூர்ஷ்வா வர்க்கத்துக்கும் கடைசி நிர்ணயமான போரை இந்த அரசு வடி வத்திற்குள்ளேதான் நடத்தி முடிக்கமுடியும்; — இந்த ஜனநாயகக் குடியரசுக்கு அதிகாரபூர்வமாக சொத்து வேறுபாடுகளைப்பற்றி இன்னும் ஒன்று மே தெரியாது. இந்தக் குடியரசில் செல்வம் தனது அதிகாரத்தை மறைமுகமாகச் செலுத்து கிறது, இருந்தாலும் முன்னைவிட நிச்சயமாகச் செலுத்துகிறது. ஒரு பக்கத்தில், அதிகாரிகளை நே ரடியாக லஞ்ச ஊழலுக்குட்படுத்துவது — இதற்கு அமெரிக்கா சாஸ்திரீய உதாரணமாக விளங்குகி றது; இன்னொரு பக்கத்தில், அரசாங்கத்துக்கும்

பங்கு மார்க்கெட்டுக்குமிடையே ஒப்பந்தம் என்ற வடிவத்தில்; அரசாங்கக் கடன் அதிகமாக ஆக, பங்கு மார்க்கெட்டைத் தமது மையமாகக் கொண்டு போக்குவரத்துமட்டுமின்றி உற்பத்தியையே, தமது கையில் ஜாயின்ட் ஸ்டாக் கம்பெனிகள் குவித்துக்கொள்வது அதிகமாக ஆக, இப்படி ஒப்பந்தம் செய்துகொள்வது மேலும் மேலும் சுலபமாகிறது. கடைசியாக வந்திருக்கிற பிரெஞ்சுக் குடியரசும் அமெரிக்கக் குடியரசும் இதற்கு மனத்தில் பதியத்தக்க உதாரணமாகும்; இத்துறையில் நமது பழைய அண்ணைத்தை சுவிட்ஸர்லாந்தும் தனது பங்கைச் செலுத்தியிருக்கிறது. அரசாங்கத்துக்கும் பங்கு மார்க்கெட்டுக்குமிடையே இந்தச் சகோதர ஒப்பந்தம் ஏற்படுவதற்கு ஒரு ஜனநாயகக் குடியரசு தேவையில்லை என்பதை இங்கிலாந்து ருசுப்பிக்கிறது, புதிய ஜெர்மன் சாம்ராஜ்ஜியமும் நிரூபிக்கிறது; ஜெர்மன் சாம்ராஜ்ஜியத்தில் சர்வஜன வோட்டுரிமையால் அதிகாரமாக உயர்ந்தது பிஸ்மார்க்கா, பிளைஹ்ரோடரா என்று யாராலும் சொல்லமுடியாது. கடைசியாக, உடைமை வர்க்கம் சர்வஜன வோட்டுரிமைமூலமாக நேரடியாக ஆட்சி செய்கிறது. ஆகவே, ஒடுக்கப்பட்ட வர்க்கம், இங்கே பாட்டாளி வர்க்கம், தன்னைத் தானே விடுவித்துக் கொள்ளப் பக்குவம் பெறாதிருக்கிறவரையில், அது அதன் பெரும்பான்மையான தொகையில் இப்போதைய சமுதாய அமைப்பு ஒன்றுதான் சாத்தியமானது என்று கருதிக் கொண்டிருக்கும்; அரசியல் ரீதியிலே, முதலாளி வர்க்கத்தின் வாலாக, அதன் தீவிர இடதுசாரி அணியாக,

அமைந்திருக்கும். இருந்தாலும் இந்த வர்க்கம் தன் சுய விடுதலைக்குப் பக்குவம் அடைகிற அளவுக்குத் தன்னை ஒரு கட்சியாக அமைத்துக்கொள்கிறது, முதலாளிகளின் பிரதிநிதிகளையல்லாது தனது சொந்தப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கிறது. இப்படியாகச் சர்வஜன வோட்டுரிமை என்பது தொழிலாளி வர்க்கத்தின் பக்குவத்தை அளவெடுக்கும் ஒரு கருவியேயாகும். தற்கால அரசில், அது அதற்கு மேலாக ஒன்றும் இருக்க முடியாது, என்றைக்கும் இருக்காது; ஆனால் அது போதும். எந்த நாளில் சர்வஜன வோட்டுரிமை என்ற உஷ்ணமானி தொழிலாளர்களிடையே கொதிநிலையைக் குறிக்கிறதோ, அந்நாளில் என்ன செய்யவேண்டும் என்று தொழிலாளிகளும் முதலாளிகளும் நிச்சயமாகத் தெரிந்துவைத்திருப்பார்கள்.

எனவே, அரசு அநாதிகாலத்திலிருந்து இருந்து வந்ததல்ல. அது இல்லாதபடியே சமுதாயங்கள் இருந்து வந்துள்ளன. அவற்றிற்கு அரசு பற்றியோ அரசு அதிகாரம் பற்றியோ ஒன்றுமே தெரியாது. பொருளாதார வளர்ச்சியின் ஒரு குறிப்பிட்ட கட்டத்தில்—சமுதாயம் வர்க்கங்களாகப் பிளவுபடுவதுடன் இது அவசியகரமாகப் பிணைக்கப்பட்டிருந்தது— இந்தப் பிளவின் காரணமாக அரசு அவசியமாகிவிட்டது. உற்பத்தி வளர்ச்சியில் இந்த வர்க்கங்கள் இருக்க அவசியமில்லை என்று ஆகிற தோடுமட்டுமின்றி அவை உற்பத்திக்கு நேரடியான தடையாகவும் ஆகிவிடப்போகிற ஒரு கட்டத்தை இப்போது நாம் விரைவாக எட்டிவருகிறோம்; முன் கட்டத்தில் தவிர்க்கமுடியாதபடி வர்க்கங்கள் எப்

படி உதித்தனவோ, அதேபோல் தவிர்க்கமுடியாத படி அவை வீழ்ச்சியுறும். அவற்றுடன் அரசும் தவிர்க்க முடியாதபடி வீழ்ந்துபோகும். உற்பத்தியாளர்களின் சுதந்திரமான, சமமான சங்கம் என்ற அடிப்படையில் உற்பத்தியை ஸ்தாபனரீதியாக நடத்தப் போகிற சமுதாயம், அரசு யந்திரம் முழுவதையும் அது அப்போது இருக்கவேண்டிய இடத்தில், அதாவது தொல்பொருள் மியூசியத்தில், கைராட்டை, வெண்கலக் கோடாலி ஆகியவற்றின் பக்கத்தில் கொண்டுபோய் வைத்துவிடும்.

*       *       *

ஆக, மேலே சொன்னதிலிருந்து, நாகரிகம் என்பது சமுதாய வளர்ச்சியின் ஒரு கட்டம்; அக்கட்டத்தில் வேலைப் பிரிவினை, அதன் விளைவாகத் தனி நபர்களிடையே நடக்கும் பரிவர்த்தனை, அவ்விரண்டையும் இணைக்கும் சரக்கு உற்பத்தி ஆகியவை முழு மலர்ச்சி பெற்று இதுவரை இருந்து வந்திருக்கும் சமுதாயத்தைப் புரட்சிகரமாக மாற்றுகின்றன.

சமுதாயத்தின் முந்திய கட்டங்களிலெல்லாம் உற்பத்தி கூட்டுமுறையில் இருந்தது; அதேபோல் சிறிய அல்லது பெரிய பொதுவுடைமைச் சமூகங்களுக்குள் செய்பொருட்களை நேரடியாக விநியோகிப்பதின் வழியாக அனுபோகம் நடந்தது. இந்தப் பொது உற்பத்தி மிக மிகக் குறுகிய வரம்புகளுக்குள் நடந்து வந்தது; ஆனால் அதன் சக அம்சமாகவே உற்பத்தியாளர்களும் தமது உற்பத்திச் செய்முறைக்கும் செய்பொருளுக்கும் எஜமானர்

களாக இருந்தனர். செய்பொருளின் கதி என்ன வாயிற்று என்று அவர்களுக்குத் தெரியும்; அதை அவர்கள் அனுபவித்தார்கள், அவர்கள் கையை விட்டு அது போகவில்லை; இவ்வடிப்படையில் உற்பத்தி நடந்து கொண்டிருந்தவரை, அது உற்பத்தியாளர்களின் கட்டு மீறி வளரமுடியவில்லை; ஆதலால், நாகரிகத்தில் முறையாக, தவிர்க்கமுடியாததாக, நடந்து வருகிறது போல, அவர்களுக்கு எதிராக விரோதமான பைசாச சக்திகளை அது தோற்றுவிக்க முடியவில்லை.

ஆனால், மெள்ள மெள்ள, இந்த உற்பத்திச் செய்முறையில் வேலைப் பிரிவினை வந்து புகுந்தது. அது உற்பத்தியின் கூட்டுத்தன்மையையும் அனுபவிப்பதின் கூட்டுத்தன்மையையும் பலவீனப்படுத்தியது. தனி நபர்கள் எடுத்து அனுபவிப்பதையே அது பொது வழக்கான விதியாகச் செய்தது; அத்துடன் தனி நபர்களிடையே பரிவர்த்தனை நடப்பதைத் தோற்றுவித்தது—இது எப்படி ஏற்பட்டது என்பதை நாம் மேலே பரிசீலித்தோம். படிப்படியாக, சரக்குகளின் உற்பத்தியே மேலோங்கிய வடிவமாக ஆகியது.

சரக்குகளின் உற்பத்தியோடு, அதாவது சொந்த அனுபவத்திற்கல்லாமல் பரிவர்த்தனைக்காக உற்பத்தி செய்வது என்பதோடு அவசியகரமாகச் செய்பொருட்கள் கைக்குக் கை மாறிப்போகின்றன. பரிவர்த்தனையின் போது உற்பத்தியாளன் தனது செய்பொருளைக் கொடுத்து வருகிறான்; பிறகு அது என்னுகிறது என்பது அவனுக்குத் தெரியாது. பணமும், அத்துடன் கூடவே வியாபாரியும், உற்பத்தி

யாளர்களிடையே இடைத்தட்டாக வந்தவுடனே பரிவர்த்தனையின் செய்முறை இன்னும் சிக்கலாகிவிடுகிறது, செய்பொருளின் கடைசிக் கதி என்னவென்பது இன்னும் நிச்சயமற்றதாகிவிடுகிறது. வியாபாரிகளின் எண்ணிக்கையோ அதிகம்; ஒருவன் என்ன செய்கிறான் என்பது இன்னொருவனுக்குத் தெரியாது. சரக்குகள் இப்போது கைக்குக் கை மாறிப்போவது மட்டுமல்ல, சந்தைக்குச் சந்தை மாறிப்போகின்றன. உற்பத்தியாளர்கள் தமது சொந்த வாழ்க்கை நிலைமைகளின் மொத்த உற்பத்தியின்மேல் கட்டுப்பாட்டை இழந்துவிட்டார்கள்; வியாபாரிகளும் அதைப் பெறவில்லை. செய்பொருட்களும் உற்பத்தியும் இப்போது தற்செயலின் கைப்பாவைகளாகிவிட்டன.

இருந்தாலும், தற்செயல் என்பது பரஸ்பர உறவின் ஒரு துருவமேயாகும்; அதன் மற்றொரு துருவத்துக்குத் தேவை என்று பேர். இயற்கையிலும் தற்செயல் ஆட்சி செலுத்துவதாகத்தான் தோன்றுகிறது; அந்த இயற்கையில் ஒவ்வொரு துறையிலும் இந்தத் தற்செயலினூடே உள்ளார்ந்த தேவையும் முறையான போக்கும் எப்படித் தம்மை அழுத்திக்காட்டிக் கொள்கின்றன என்பதை நாம் வெகு காலத்துக்கு முன்பே எடுத்துக்காட்டியுள்ளோம். இயற்கைக்குச் சரியாயிருப்பது சமுதாயத்துக்கும் சரிதான். ஒரு சமுதாய நடவடிக்கை, சமுதாய இயக்கப்போக்குகளின் ஒரு வரிசை எவ்வளவுக்கெவ்வளவு உணர்வுள்ள கட்டுப்பாட்டுக்கு அடங்காதபடி வலிமைபெற்றுவிடுகிறதோ, மனிதனால் எட்டிப்பிடிக்கமுடியாதபடி மேலே போய்

விடுகிறதோ, நற்செயலின் கையில் சிக்கிவிட்டதாக எவ்வளவுக் கெவ்வளவு நமக்குத் தோன்றுகிறதோ, அவ்வளவுக் கவ்வளவு நற்செயலின் அலாதியான உள்ளார்ந்த விதிகள், இயற்கையான அவசியத்தின்படி, இந்தத் நற்செயலினூடே நம்மை வலியுறுத்திக் காட்டிக்கொள்கின்றன. இப்படிப்பட்ட விதிகள் உற்பத்தியின், சரக்குப் பரிவர்த்தனையின் நற்செயல் போக்குகளைக் கட்டுப்படுத்துகின்றன; இந்த விதிகள் தனி உற்பத்தியாளனுக்கும் பரிவர்த்தனைக் காரனுக்கும் எதிரே விரோதமான, தொடக்கத்தில் முன்னறிந்திராத சக்திகளாக நிற்கின்றன; அவற்றின் தன்மையை முதலில் கவனத்தோடு பரிசீலித்து நிச்சயப்படுத்திக்கொள்ளவேண்டும். சரக்கு உற்பத்தியின் இந்தப் பொருளாதார விதிகள் இந்த உற்பத்தி வடிவத்தின் பல வளர்ச்சிக் கட்டங்களில் திருத்தமாற்றம் பெறுகின்றன, என்றாலும் மொத்தத்தில் நாகரிகக் காலப்பகுதி முழுவதும் இந்த விதிகளின் மேலாதிக்கத்துக்கு உட்பட்டிருக்கிறது. இன்றைய நாள்வரை, செய்பொருள் தான் செய்வோரின் எஜமானனாக இருக்கிறது; இன்றைய நாள்வரை, சமுதாயத்தின் மொத்த உற்பத்தி கூட்டுமுறையில் சிந்தித்து உருவாக்கப்பட்ட திட்டத்தினால் முறைப்படுத்தப்படவில்லை; கண் மூடித்தனமான விதிகளால் முறைப்படுத்தப் படுகிறது; அவ்விதிகள் இயற்கையின் வெறிச் சக்தியோடு செயல் புரிகின்றன. கடைசியிலே கால முறைப்படி வருகிற வியாபார நெருக்கடி என்ற சூறுவளிகளில் செயல்படுகின்றன.

உற்பத்தியின் ஒப்பு நோக்கில் முந்தைய வளர்ச்

சிக் கட்டத்திலே, உற்பத்தியாளன் ஜீவனத் தேவைக்கு மேலாகவே கணிசமான அளவுக்கு அதிகமாக மனித உழைப்புச் சக்தியால் உற்பத்தி செய்யமுடிந்தது என்று நாம் மேலே பார்த்தோம்; மொத்தத்தில், இந்தக் கட்டம் வேலைப் பிரிவினை முதன் முதலாகத் தோன்றியதோடும் தனி நபர்களிடையே பரிவர்த்தனை முதன்முதலில் தோன்றியதோடும் பொருந்தி வந்தது எப்படி என்றும் பார்த்தோம். இப்போது, மனிதன் கூட ஒரு சரக்குதான் என்கிற ''பேருண்மையை''—மனித சக்தியையும் பரிவர்த்தனை செய்யலாம், உபயோகப்படுத்திக் கொள்ளலாம், அதற்கு வழி மனிதனை அடிமையாக்குவது என்கிற ''பேருண்மையை''—கண்டுபிடிப்பதற்கு வெகுகாலம் பிடிக்கவில்லை. பரிவர்த்தனையில் மனிதர்கள் இறங்கினார்களோ இல்லையோ, மனிதர்களே பரிவர்த்தனைக்கு ஆளாகிவிட்டார்கள். இயக்கி வந்தவன் இப்போது இயக்குவிக்கப்பட்டான்—மனிதன் விரும்பினாலும் சரி, விரும்பாவிட்டாலும் சரி.

அடிமைமுறை அதன் பூர்ணவளர்ச்சியை நாகரிகத்தில் அடைந்தது; இவ்வடிமைமுறையுடன் சமுதாயத்தில் முதன்முதலான மாபெரும் பிளவு—சுரண்டுகிற வர்க்கம், சுரண்டப்படுகிற வர்க்கம் என்று—உண்டாயிற்று. நாகரிகத்தின் காலப்பகுதி நெடுகிலும் இந்தப் பிளவு தொடர்ந்து வந்திருக்கிறது. அடிமைமுறை என்பது சுரண்டலின் முதல் வடிவம், பண்டைக்கால உலகிற்குரிய வடிவம் அது. அதைத் தொடர்ந்து மத்திய காலத்தில் பண்ணையடிமை முறை வந்தது, நவீனகாலத்தில் கூலியுழைப்பு வந்துசேர்ந்தது. இவைதான் அடிமைத்

தனத்தின் மூன்று மாபெரும் வடிவங்கள்; நாகரிகத்தின் மூன்று மாபெரும் சகாப்தங்களின் லட்சணும்சங்கள்; பகிரங்கமான அடிமை முறையும் பின்னர் வந்த மறைவான அடிமைமுறையும் நாகரிகத்தின் ஆப்த நண்பர்களாம்.

எந்தச் சரக்கு உற்பத்திக் கட்டத்துடன் நாகரிகம் ஆரம்பித்ததோ, அது பின்வரும் பொருளாதார அம்சங்களால் குறிக்கப்பட்டிருக்கிறது: 1) உலோகப் பணம்; அதன் வழியாகப் பண மூலதனம், வட்டி, கந்துவட்டிக்கடன் ஆகியவற்றைப் புகுத்தல்; 2) உற்பத்தியாளர்களிடையே வியாபாரிகள் இடைத்தரகர்களாக வேலை செய்தல்; 3) நிலத்தில் தனியுடைமை, நில அடைமானம் ஆகியவை தோன்றுதல்; 4) உற்பத்தியின் பிரதான வடிவமாக அடிமைமுறை நிலவுதல். நாகரிகத்துக்குப் பொருந்துவதாயும், அதோடு திட்டமாக நிலைப்பதாயும் இருக்கிற குடும்பவடிவம், ஒருதார மணமும் பெண்மீது ஆண் வகிக்கும் ஆதிக்கமும் சமுதாயத்தின் பொருளாதார மூலக்கூறாகத் தனிப்பட்ட குடும்பம் அமைவதுமேயாம். நாகரிகச் சமுதாயத்தை இறுகப் பிணைந்துவைத்திருக்கும் சக்தி அரசுதான்; எல்லாப் பொதுத்தன்மை கொண்ட காலப் பகுதிகளிலும் அது ஆளும் வர்க்கத்தின் அரசாகமட்டுமே இருந்துவந்துள்ளது, எல்லாச் சந்தர்ப்பங்களிலும் அது ஒடுக்கப்பட்ட, சுரண்டப்பட்ட வர்க்கத்தை அடிப்படுத்திவைப்பதற்கு ஏற்பட்ட இயந்திரமாகத்தான் சாராம்சத்தில் இருந்துவருகிறது. நாகரிகத்தின் மற்ற அடையாளக் குறிகள் பின்வருமாறு: ஒரு பக்கத்தில், சமூக உழைப்புப் பிரிவினை

முழுவதற்கும் அடிப்படையாக நகரத்துக்கும் நாட்டுப்புறத்துக்கும் இடையேயுள்ள வேறுபாட்டை நிலைக்கச் செய்தல்; இன்னொரு பக்கத்தில், உயில்களைப் புகுத்துதல், இவற்றின் வழியாகச் சொத்துக்குடையவன் இறந்துபோன பின்னும்கூடத் தனது சொத்தை இஷ்டப்படி விநியோகிக்க முடிகிறது. இந்த ஏற்பாடு பழைய கண முறைக்குப் பிரத்தியட்சமான அடியாகும்; அது, சொலான் வரும்வரைக்கும் ஆதென்ஸில் தெரியாதிருந்தது; ரோமாபுரியில் ரொம்பக் காலத்துக்கு முன்பே புகுத்தப்பட்டது, ஆனால் எப்போது என்று நமக்குத் தெரியாது.[1]

---

[1] லஸ்ஸால் எழுதிய "பெறப்பட்ட உரிமைகளின் அமைப்புமுறை" என்ற நூல், அதன் இரண்டாம் பகுதியில், ரோமானிய உயில்கள் ரோமாபுரியைப் போலப் பழைமையானவை, "உயில்கள் இருக்காதிருந்த காலம் ஒன்று" ரோமானிய வரலாற்றிலேயே என்றைக்கும் இருந்ததில்லை, ரோமுக்கு முந்திய காலத்தில் உயிர் நீத்தவரை வழிபடும் வழக்கத்திலிருந்து அந்த உயில்கள் தோன்றின என்ற கூற்றைச்சுற்றித்தான் வருகிறது. ஹெகலின் பழைய கருத்துப் பிரிவைச் சேர்ந்தவர் என்ற முறையில், ரோமானியர்களின் சமுதாய நிலைமைகளிலிருந்து ரோமானிய சட்டங்களைப் பெறாமல், சித்தத்தின் "சிந்தனைக்குட்பட்ட கருத்தோட்டத்திலிருந்து" பெறுகிறார் லஸ்ஸால்; இப்படித்தான் முழுவதும் வரலாற்று அடிப்படையற்ற இந்தக் கூற்றுக்கு வந்து சேர்ந்தார். ரோமானிய வாரிசு முறையில் சொத்து மாற்றம் வெறுமனே இரண்டாம்பட்சமான விஷயமே என்ற முடிவுக்கு இதே சிந்தனைக்குட்பட்ட கருத்தோட்டத்தைக் கொண்டு வந்து சேருகிற ஒரு புத்தகத்தில் இது ஆச்சரியப்படத்தக்கதில்லைதான். குறிப்பாக முந்திய காலத்தைச் சேர்ந்த ரோமானியச் சட்ட நிபுணர்களின் பிரமைகளை லஸ்ஸால் நம்புகிறது மட்டுமல்ல, அவர்களை மிஞ்சியும் விடுகிறார். (எங்கெல்ஸ் குறிப்பு.)

ஜெர்மானியர்களிடையே இதைப் புரோகிதன் புகுத்தினான்; எதற்காக எனில், சூதுவாதறியாத அப்பாவி ஜெர்மானியன் தனது சொத்தைத் தடையின்றிச் சர்ச்சுக்கு எழுதிவைத்து விட்டுப்போகட்டும் என்பதற்குத்தான்.

இந்தச் சமுதாய முறையை அடிப்படையாகக் கொண்டு பழைய கணச் சமுதாயத்தால் சமாளிக்க அறவே முடியாத சாதனைகளை நாகரிகம் சாதித்து விட்டது. ஆனால், மனிதனின் மிகவும் கீழ்மையான இயல்புணர்வுகளையும், உணர்ச்சி வெறிகளையும் தூண்டிவிட்டுத்தான் நாகரிகம் இச்சாதனைகளைச் சாதித்தது; மனிதனின் மற்ற எல்லாத் திறன்களும் பாதகம் அடையும் வண்ணம் அவற்றை வளர்த்துத் தான் அச்சாதனைகளைச் சாதித்தது. நாகரிகத்தின் தொடக்க நாள் முதல் இன்றைய நாள் வரை அப்பட்டமான பேராசைதான் அதை இயக்கும் சக்தியாக இருந்து வந்துள்ளது; செல்வம், மேலும் செல்வம், இன்னும் செல்வம், சமுதாயத்தின் செல்வம் அல்ல, இந்த இழிந்த தனி நபரின் செல்வம்; இது தான் நாகரிகத்தின் ஒரேயொரு நிர்ணயமான குறிக்கோளாகும். இந்தக் குறிக்கோளைச் சாதிக்க முயன்ற போது சமுதாயத்தில் விஞ்ஞானம் மேலும் மேலும் வளர்ச்சி அடைந்தது, மீண்டும் மீண்டும் கலை முழு மலர்ச்சி பெற்றது என்றால் அதற்கு ஒரே காரணம், அவை இல்லாமல் செல்வம் குவிப்பதில் இன்றையப் பூரணச் சாதனைகள் சாத்தியமாகி இரா என்பதுதான்.

ஒரு வர்க்கத்தை இன்னொரு வர்க்கம் சுரண்டுவது என்பது நாகரிகத்தின் அடிப்படையாதலால்,

அதன் வளர்ச்சி முழுவதும் ஓர் இடையருத முரண்பாட்டிலே இயங்கிச் செல்கின்றது. உற்பத்தியில் ஏற்படுகிற ஒவ்வொரு முன்னேற்றமும் அதே சமயத்தில் ஒடுக்கப்பட்ட வர்க்கத்தின், அதாவது பெரும்பாலான மக்களின், நிலைமையில் ஒரு பின்னடைவாகவும் இருக்கிறது. ஒருவனுக்கு வரப்பிரசாதமாக இருப்பது இன்னொருவனுக்குச் சாபக்கேடாக இருக்கிறது. ஒரு வர்க்கத்திற்குக் கிடைக்கிற புதிய விடுதலை என்பது எப்பொழுதும் இன்னொரு வர்க்கத்துக்குப் புதிய ஒடுக்குமுறை என்று பொருள் தருகிறது. இதற்கு மனதில் மிகமிகப் பதியவைக்கத்தக்க உதாரணம் இயந்திரங்களைப் புகுத்தியதிலிருந்து கிடைக்கிறது; அதன் விளைவு இன்று எல்லோரும் அறிந்ததே. மேலும், நாம் மேலே பார்த்தபடி, அநாகரிகர்களிடையே உரிமை கடமை என்று எதையும் வேறுபடுத்தமுடியாதிருக்கையில் நாகரிகம் இவ்விரண்டுக்கும் இருக்கிற வேறுபாட்டையும் எதிர்மறையையும் மகாமந்தபுத்தி படைத்தவனுக்கும் கூடத் தெரியும்படி தெளிவாக்குகிறது. எப்படி? ஒரு வர்க்கத்துக்கு அநேகமாக எல்லா உரிமைகளையும் வழங்கிவிட்டு, இன்னொரு வர்க்கத்துக்கு அநேகமாக எல்லாக் கடமைகளையும் வழங்குவதின் மூலமாக.

ஆனால், இது இப்படி இருக்கக்கூடாது. ஆளும் வர்க்கத்துக்கு நன்மையாக இருப்பது எந்தச் சமுதாயத்துடன் அது தன்னையும் ஒன்றாக்கிக் காட்டிக் கொள்கிறதோ, அந்தச் சமுதாயத்துக்கும் நன்மையாக இருக்கவேண்டும். எனவே, நாகரிகம் முன்னேற முன்னேற, மேலும் மேலும் தான் அவசியகர

மாகச் சிருஷ்டித்துவைக்கிற கேடுகளை அன்பு என்கிற போர்வையைக் கொண்டு மூடி மறைக்கவும், அவற்றை அலங்கரித்து முலாம்பூசிக்காட்டவும் அல்லது அவை இல்லவேயில்லை என்று மறுக்கவும், சுருங்கச் சொன்னால், சம்பிரதாய ஆஷாடபூதித்தனத்தைப் புகுத்துமாறு நிர்ப்பந்திக்கப்படுகிறது; முந்திய சமுதாய வடிவங்களில் இந்த ஆஷாடபூதித்தனம் என்னவென்று யாருக்கும் தெரியாது, நாகரிகத்தின் ஆதிக்காலக்கட்டங்களிலும் யாருக்கும் தெரியாது; முழுக்க முழுக்கச் சுரண்டப்பட்ட வர்க்கத்தின் நலனுக்காகத் தான் அதைச் சுரண்டும் வர்க்கம் சுரண்டுகிறது; இதைச் சுரண்டபடுகிற வர்க்கம் உணர்ந்து மெச்சத் தவறினால், இன்னும் கலவரம் செய்யவும் முனைந்தால், அதன்மூலம் சுரண்டுகிறவர்களாகிய உபகாரிகளிடம் அது மிகமிக ஈனத்தனமான நன்றிகெட்டதனத்தைத் தான் காட்டுகிறது என்ற பிரகடனத்தில் போய் முடிகிறது இந்தச் சம்பிரதாய ஆஷாடபூதித்தனம்.[1]

---

[1] நாகரிகத்தைப்பற்றி ஷார்ல் பூரியேயின் நூல்களில் விரவிக்கிடக்கிற தலைசிறந்த விமர்சனத்தை மார்கனுடையவும் என்னுடையவும் விமர்சனங்களுக்குப் பக்கத்தில் வைக்க ஆரம்பத்தில் நான் எண்ணியிருந்தேன். துரதிர்ஷ்டவசமாக, எனக்கு நேரமில்லை. ஒன்றை மட்டும் குறிப்பிட விரும்புகிறேன்: நாகரிகத்தின் பிரதான லட்சணம்சங்களாக ஒருதார மணமும் நிலவுடைமையும் இருக்கின்றன என்று பூரியே ஏற்கனவே கருதியிருந்தார்; அவற்றை அவர் ஏழைகளுக்கு எதிராகப் பணக்காரர்கள் நடத்தும் யுத்தமாகவும் வர்ணித்திருந்தார். ஏற்கனவே அவரது நூலில், குறைகளுள்ள எல்லாச் சமுதாயங்களிலும், சண்டையிட்டுக்கொள்ளும் நலன்களைப் படைத்துள்ள எல்லாச் சமுதாயங்களிலும் தனிப்பட்ட குடும்

இனி இப்போது, முடிவுரையாக, நாகரிகத்தின்மீது மார்கன் அளித்திருக்கும் தீர்ப்பு: ‘‘நாகரிகம் வந்துசேர்ந்ததிலிருந்து, செல்வத்தின் பெருக்கம் எவ்வளவோ பிரம்மாண்டமாக இருப்பதாலும், அதன் வடிவங்கள் எவ்வளவோ வேறுபட்டிருப்பதாலும், அதன் உபயோகம் எவ்வளவோ விரிவானதாயிருப்பதாலும், அதன் சொந்தக்காரர்களின் நலன் பொருட்டு நடக்கிற அதன் நிர்வாகம் எவ்வளவோ புத்திசாலித்தனமாக இருப்பதாலும், அச்செல்வம், மக்களைப் பொறுத்தமட்டிலும், கட்டுச் சமாளிக்க முடியாத ஒரு சக்தியாக ஆகிவிட்டுள்ளது. மனித மனம் தனது சொந்தச் சிருஷ்டியின் முன் தானே குழப்பமடைந்து நிற்கிறது. இருந்தபோதிலும் ஒரு காலம் வரத்தான் போகிறது: அப்போது மனித புத்தி சொத்தின்மீது ஆட்சிசெலுத்தும் நிலையை எட்டிவிடும், அரசு எந்தச் சொத்தைப் பாதுகாத்து வருகிறதோ, அந்தச் சொத்துடன் அதற்குள்ள உறவுகளை மனித அறிவு வரையறை செய்துவிடும்; அந்தச் சொத்தின் சொந்தக்காரர்களுக்குரிய கடமைகளையும் அவர்களுடைய உரிமைகளுக்குள்ள வரம்புகளையும் அது வரையறை செய்துவிடும். தனி நபர்களின் நலன்களைக்காட்டிலும் சமுதாயத்தின் நலன்களே அதிமுன்னதமானவை; அவை இரண்டும் நியாயமான, இணக்கமான உறவுக்குள் கொண்டுவரப்பட வேண்டும். முன்னேற்றம் என்பதுதான் சென்ற காலத்தின் விதியாக இருந்திருக்கிறது; முன்னேற்றம்

பங்கள்தான் (les familles incohérentes) பொருளாதார மூலக் கூறுகளாகும் என்ற உண்மையை அவர் ஆழ்ந்து உணர்ந்திருப்பதைக் காண்கிறோம். (எங்கெல்ஸ் குறிப்பு.)

என்பதுதான் எதிர்காலத்தின் விதியாயும் இருக்க வேண்டுமெனில், கேவலம் சொத்து தேடும் வாழ்க்கை மனிதகுலத்தின் இறுதியான தலைவிதி அல்ல. நாகரிகம் தொடங்கியதிலிருந்து கழிந்திருக்கிற காலம் இருக்கிறதே, அது சென்ற காலத்திலிருந்து மனிதன் வாழ்ந்திருந்த காலத்தில் ஒரு சிறு துண்டேயாகும்; பின்னால் வரப்போகும் யுகங்களின் ஒரு சிறு துண்டேயாகும். சமுதாயத்தின் மறைவு என்பது சொத்தையே குறிக்கோளாகவும் இலக்காகவும் கொண்டிருக்கும் ஒரு வாழ்க்கையின் முடிவு முனையாக ஆகத்தெரிகிறது; ஏனெனில் அப்படிப்பட்ட ஒரு வாழ்க்கை தன்னுள்ளேயே சுய நாசத்திற்குரிய அம்சங்களைக் கொண்டிருக்கிறது. அரசாங்கத்தில் ஜனநாயகம், சமுதாயத்தில் சகோதரத்தன்மை, உரிமைகளிலும் சலுகையுரிமைகளிலும் சமத்துவம், சர்வஜனக் கல்வி, இவை அடுத்து வரும் முன்னைவிட உயர்வான சமுதாயக்கட்டத்தை முன்னறிவிக்கின்றன; அனுபவமும் புத்தியும் அறிவும் அந்தச் சமுதாயக் கட்டத்தை நோக்கித்தான் உறுதியாகச் சென்று கொண்டிருக்கின்றன. **பண்டைக்கால கணங்கள் பெற்றிருந்த சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவை, அதைவிட ஓர் உயர்வான வடிவத்தில், மறு பிறப்புக் கொள்வதாகும் அது.**" *(மார்கன் எழுதிய, ''பண்டைக்கால சமுதாயம்'' என்ற நூல், 552ம் பக்கம்.)*

*1884 மார்ச்சு-ஜூன் மாதங்களில் ஜெர்மன் மொழியில் எங்கெல்ஸ் எழுதியது.*

*ஆதியில் ஒரு தனி பிரசுரமாக ஜூரிச்சில் 1884ல் வெளியிடப்பெற்றது.*

## பெயர்ப் பட்டியல்

## வாசக நேயர்களுக்கு

இந்த மொழிபெயர்ப்பைப் பற்றியும் இந்தப் புத்தகத்தின் தயாரிப்பைப் பற்றியும் வாசக நேயர்களின் கருத்தை அயல் மொழிப் பதிப்பகம் மகிழ்வுடன் வரவேற்கும்.

கடிதங்களைத் தயை செய்து, "Foreign Languages Publishing House 21, Zubovsky Boulevard, Moscow, U.S.S.R." என்ற முகவரிக்கு அனுப்புங்கள்.